# என்னவென்று நான் சொல்ல?...

பாகம் - 2

முத்துலட்சுமி ராகவன்



திருமகள் நிலையம்
சுகான்ஸ் அபார்ட்மெண்ட்ஸ்,
பழைய எண்: 28, புதுஎண்: 13, சிவப்பிரகாசம் சாலை,
தியாகராய நகர், சென்னை - 600 017.
தொலைபேசி: 24342899, 24327696
e-mail: enquiry@thirumagalnilayam.com

முதற் பதிப்பு : செப்டம்பர், 2011
உரிமை : ஆசிரியருக்கு

❖ Title : ENNAVENRU NAAN SOLLA PART-II
❖ By :- Muthulakshmi Raghavan
❖ First Edition : September, 2011
❖ Paper : Book Print 11.6
❖ Total No. of Pages : 432

விலை : 190/-

திருமகள் நிலையம்
சுகான்ஸ் அபார்ட்மெண்ட்ஸ்,
எண்: 13, சிவப்பிரகாசம் சாலை,
தியாகராய நகர், சென்னை - 600 017.
தொலைபேசி: 24342899, 24327696
e-mail: enquiry@thirumagalnilayam.com

Typesetting : RVK DESIGNERS,
Chennai - 2.
Mobile: 9710329866

Printed by மஞ்சு ஆப்செட்.



*என் பிரியத்துக்குரிய வாசக.. வாசகிகளே!*

என்னிடம் பலர் கேட்பார்கள்.. எப்படி உங்களால் மற்ற வேலைகளையும் கவனித்துக் கொண்டு நிறைய நாவல் களை எழுத முடிகிறது என்று.

அவர்களிடம் சொன்னதைத்தான் உங்களிடமும் நான் இப்போது சொல்கிறேன்.. எழுதுவது என்பது எனக்கு மிக.. மிக.. மிக.. பிடித்தமான ஒன்று. என் முன்னால் இனிப்பை யும்.. பழங்களையும்.. அழகிய புடவைகளையும்.. சிறப்பாக செய்யப்பட்ட நகைகளையும்.. பேப்பரையும், பேனாவை யும் வைத்தால்.. நான் அவற்றிலிருந்து பேப்பரையும் பேனாவையும்தான் எடுப்பேன். அந்த அளவுக்கு எழுதுவதை நான் விரும்புகிறேன்.

என் பத்தாவது வயதிலேயே நான் எழுத ஆரம்பித்து விட்டேன் என்றால் உங்களால் நம்ப முடிகிறதா? இதை நீங்கள் நம்பித்தான் ஆக வேண்டும்.. ஏனென்றால், என்னிடம் பொய்யில்லை.. நான் சொல்வதுதான் உண்மை.

என் பத்தாவது வயதில் நான் எழுதியது கதையல்ல.. கவிதை.. பொதுவாக காதல் தோல்வியில்தான் கவிதை ஊற்றெடுக்கும் என்று சொல்வார்கள். பத்து வயதில் காதல் வயப்பட்டிருக்க முடியாது என்பதை நான் சொல்லித்தான் நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டும் என்று இல்லை.

காதல் தோல்வி என்பது ஒருவித மன வலி. அந்த மனவலியை நெருங்கிய உறவின் கொடுமையான மரணம் கூடத் தரலாம்.

ஆமாம்.. என் பத்தாவது வயதில் அப்படியொரு கொடூரமான மரணம் என் உடன்பிறந்த அண்ணனுக்கு நேர்ந்தது. அப்படி அவன் கொலையுண்டு இறந்தபோது என் அண்ணனின் வயது பன்னிரண்டு.

குடும்பப் பகை என்றார்கள்.. எதையெதையோ சொன்னார்கள்.. எதுவும் எனக்குப் புரியவில்லை. விளங்கவில்லை. என் மனதில் பதிந்ததெல்லாம் என் தகப்பனாரின் பூர்வீக கிராமத்தில்.. கண்மாய் கரையை ஒட்டிய கருவேலங் காட்டுக்குள் அணிந்திருந்த வெள்ளை டிரவுசர்.. சட்டையை.. தன் குருதியில் நனைத்து சிகப்பு வண்ணமாக்கி செத்துக்கிடந்த என் அண்ணனின் சடலம்தான்.

முப்பத்திரண்டு கத்தி குத்துக்கள் என்றார்கள்.. கத்தியெடுத்து குத்திக் கொல்ல பன்னிரண்டு வயதுச் சிறுவனை தேர்ந்தெடுத்த அந்த ஆண்மையற்ற கொலைகாரனைப் பற்றித்தான் பத்து வயதில் என் முதல் கவிதையை எழுதினேன்..

*அவனும் ஓர் ஆண்தானோ...*
*பெண்ணாய் இருந்தவனோ...*
*பெற்றவரே சண்டையிட்டால்*
*பிள்ளையவன் என்ன செய்வான்..?*

- இதுவே அந்தக் கவிதை.. என் முதல் கவிதை. என் அண்ணன் இறந்த மே மாதம் இருபத்து ஆறாம் தேதியில் இன்று வரை நிறுத்தாமல் நினைவு நாள் கவிதைகளை எழுதி வருகிறேன். அந்த கவிதைகளையும்.. என் நினைவுகளையும் கொண்டு நான் எழுதிய நாவல்தான் 'நீங்காத நினைவுகள்..' என்ற நாவல்.

பத்து வயதில் கவிஞரான என்னை என் இருபத்து நான்காம் வயதில் கதாசிரியை ஆக என் கணவர் மாற்றினார்.

என் நெஞ்சில் நீங்காமல் நினைவிலிருக்கும்.. எனக்குப் பத்து வயதிலேயே கவிதையைக் கொடுத்த என் அண்ணன் ரா. சந்திரசேகரனுக்கு இந்த இரண்டாம் பாகத்தை சமர்ப்பிக்கிறேன்.

நட்புடன்,
முத்துலட்சுமி ராகவன்

# என்னவென்று நான் சொல்ல?...

52

*உன்னை சந்தித்தபின்தான்*
*என்னை சிந்திக்க ஆரம்பித்ததை..*
*என்னவென்று நான் சொல்ல..?*

ஸ்வேதா ஹாலில் நடந்த உரையாடலைக் கவனித்துக் கொண்டிருந்தது வெறும் இருபத்து நான்கு நிமிட நேரம்தான். அந்த நேரத்திற்குள் அவள் அந்த நால்வரின் மனநிலையை மிகச் சரியாக கணித்து விட்டாள்..

பவித்ரா, தினகரனைப் பார்க்கும் பார்வையிலேயே காதல் வழிந்தது. அவனுடன் பேசும்போது தடுமாறினாள். அவளது ஒவ்வொரு அசைவும் தினகரனின் மேல் அவளுக்கிருந்த அளவு கடந்த காதலை வெளிப்படுத்தியது.

தினகரன் என்றுமே அழகிய பெண்களை ரசிப்பவன். அவர்களோடு பேசிப் பழக அவனுக்கு மிகவும் பிடிக்கும். பவித்ரா அழகானவள் என்பதை ஸ்வேதா அளவு கடந்த பொறாமையோடு ஒப்புக்கொள்வாள். அப்படிப்பட்ட அழகியான பவித்ரா... நாணப் பார்வையோடு முன்னால் வந்து நின்றால் தினகரன் பார்க்காமல் விடுவானா? பேசாமல்தான் போவானா? மற்றபடி காதலுக்கும் அவனுக்கும் காததூரம் என்பது ஸ்வேதாவின் அபிப்பிராயம். அதற்கேற்ப தினகரன், பவித்ராவைப் பார்த்த பார்வையில் சுவராஸ்யம்தான் தென்பட்டது. காதல் துளிக்கூட இல்லை என்பதை ஸ்வேதா கவனிக்கத்தான் செய்தாள்.

மாலினிக்கு பவித்ராவுடன் எப்படி இவ்வளவு இறுக்க மான பிணைப்பு ஏற்பட்டது என்று மனதிற்குள் பொறாமை யுடன் நினைத்துக் கொண்டாள். மாலினிக்கும் பவித்ரா விற்கும் இடையே இருந்த நட்பினாலேயே மாலினி.. தினகரனுக்கும் பவித்ராவிற்கும் இடையே நடந்த பேச்சு வார்த்தையில் கலந்துகொள்ள வந்திருப்பாள் என்பது ஸ்வேதாவின் அனுமானம். ஆனால்.. மாலினியைக் கண்ட வுடன் பவித்ராவை மறந்து மாலினியின் மேல் தினகரன் பார்வையைப் படரவிட்டதுதான் அவளுக்கு எரிச்சலை ஊட்டியது. பவித்ராவையே மறக்கடிக்கும் வசீகரம் மாலினி யிடம் இருப்பதை ஸ்வேதாவினால் தாங்கிக் கொள்ள முடிய வில்லை. மாலினி, தினகரனை பார்த்த பார்வையில் காதல் இல்லை... நட்புத்தான் இருந்தது.

பிரபாகரன் என்னவோ தினகரனைத் தேடித்தான் அங்கு வந்தான். ஆனால், தினகரனுடன் மாலினி நின்று பேசிக் கொண்டிருந்ததை அவனால் தாங்கிக் கொள்ள முடியவில்லை என்பதை அப்பட்டமான கடுமையைக் காட்டிய அவனது முகம் ஸ்வேதாவிற்கு காட்டிக் கொடுத்து விட்டது. ஸ்வேதாவிற்கு பிரபாகரனைப் பற்றி மிக நன்றாகவே தெரியும்.. தன் உடைமையென்று அவன் நினைக் கும் எதன்மீதும் மற்றவர்களின் பார்வை படுவதை அவன் சகித்துக் கொள்ள மாட்டான். அந்த ஒரு காரணத்துக் காகவே அவனுக்குப் போய் மனைவியாக மாட்ட வேண் டுமா என்று ஸ்வேதா பல முறை யோசித்திருக்கிறாள்.. ஆனால்.. கோட்டையூர் ஜமீன் வமிசத்தில் கொடியை நாட்ட அவனுக்கு மனைவியாவதைத் தவிர வேறுவழி யில்லை என்ற ஒரே காரணத்திற்காக மட்டுமே அவனைத் துரத்திக் கொண்டிருந்தாள். மொட்டைமாடியில் தன்னோடு தனித்திருந்த காதலியையே அவ்வளவு கோபமாய் பிரபா கரன் பார்த்து வைத்ததுதான் மிகச் சாதகமான அம்சமாக ஸ்வேதாவிற்கு தோன்றிவிட்டது.



ஸ்வேதா அந்த நால்வரின் வாழ்வையும் அந்தக் கணத்தில் தன் கையில் எடுத்துக் கொண்டாள்.

எப்போதுமே போலீஸை விடத் திருடன்தான் அதிகப் புத்திசாலியாக இருப்பான். அவனுக்குத்தான் எந்த வழியில் போனால் எதை அடைய முடியும் என்ற ஆயிரம் குறுக்கு வழிகள் தெரிந்திருக்கும்.

அந்த வகையில் ஸ்வேதா அதிபுத்திசாலி! அவளுக்கு எங்கே அடித்தால்.. எங்கே வலிக்கும் என்ற நுட்பம் இப்போது தெரிந்துவிட்டிருந்தது.

அன்று இரவு முழுவதும் அவள் தூங்காமல் அந்த நால்வரைச் சுற்றியும் எப்படி வலை பின்னுவது என்ற யோசனையோடு இருந்தாள். விடிவதற்கும் மனதிற்குள் திட்டத்தை வகுத்தும் விட்டாள். எப்போதுமே அதிகாலை யில் எழுந்து கொள்ளும் பழக்கமில்லாத ஸ்வேதா அன்று அதிகாலையிலேயே விழித்துக் கொண்டு விட்டாள். லேசான கொட்டாவியோடு அறையை விட்டு வெளியே தலைநீட்டியவள்.. பொன்னியை அழைத்தாள்.

''என்னங்கம்மா...'' அவள் நின்ற இடத்திலிருந்தே கேள்வி கேட்டாள்.

'இவளுக்கிருக்கிற திமிரைப் பார்.. இதுவே அந்த சசியும் மாலினியும் கூப்பிட்டால் முப்பத்திரண்டு பல்லை யும் காட்டியபடி.. என்னங்கம்மான்னு நாலுகால் பாய்ச்சலில் போய் கேட்டிருப்பாள். ம்ஹூம்.. அவளுகதானே வேலை யாளுக்கு சரிசமமா தோள் மேல கை போட்டு பேசுவா ளுக.. என்னால் அது முடியுமா?' என்று முதலில் மனதிற்குள் எரிச்சல்பட்டு.. அடுத்த நொடியே சமாதானமும் சொல்லிக் கொண்ட ஸ்வேதா.

''காபி கொண்டு வா..'' என்றாள்.

''இப்போதான் மாடியிலிருந்த எல்லாருக்கும் காபி கொண்டு வந்தேன்..''

''எனக்கும் சேர்த்து கொண்டு வந்திருக்க வேண்டியது தானே..''

''அது எப்படிம்மா.. மத்தவங்க எல்லோரும் சேவல் கூவும்போதே எழுந்திருச்சு சேவலை விரட்டி விடற ஆளுக. நீங்க எப்போ எழுந்திருப்பீங்கங்கறது உங்களுக்கே தெரியாது. உங்களுக்குப் போய் விடியறப்பவே காபி கொண்டாந்தா என்னைச் சும்மாவா விடுவீங்க? ஆய்ஞ்சு விட மாட்டீங்க. ஏற்கெனவே உங்ககிட்ட இதுக்காக ஏராளமா திட்டு வாங்கி கட்டிக்கிட்டு இருக்கேன்.. அது போதாதா. புதுசா வேற வாங்கிக் கட்டிக்கணுமா?''

''உன்கிட்ட ஒரு வார்த்தை கேட்டால்.. நீயேன் ஒரு மணி நேரத்துக்கு மூச்சுவிடாமல் பதில் சொல்ற. போ... போய் உன் வேலையைப் பாரு..''

''அப்போ உங்களுக்கு காபி வேண்டாமா?''

'எப்படிக் கேட்கிறாள்?' ஸ்வேதா பல்லைக் கடித்துக் கொண்டே..

''ஏன்.. அது உன் வேலையில்லையா?'' என்று கேட்டாள்..

''ஏம்மா.. காலைலேயே என் வாயைப் பிடுங்கறீங்க. கீழே கைவேலை ஒண்ணைக் கொடுத்து பார்க்கச் சொல்லி பெரியம்மா சொன்னாங்க.. அதை விட்டுப்புட்டு மாடிக்கு வந்து உங்ககிட்ட மாட்டிக்கிட்டு முழிக்கறேன். உங்களுக்கு காபி கொண்டு வரணும்னா நான் என் கைவேலையை விட்டுப்புட்டு வரணும்..''

''அடேங்கப்பா.. அந்த வேலைதான் நீ செய்வாயா? வேறு வேலையைச் செய்ய மாட்டாயா?''



''நீங்கதானம்மா சொன்னீங்க..''

''என்ன சொன்னேன்?''

''என் வேலையை மட்டும் பார்க்கச் சொல்லிச் சொன்னீங்க..''

''இப்போ நீ என்ன சொல்ல வருகிற.. காபி கொண்டு வருவாயா மாட்டாயா?''

''பெரியம்மாகிட்ட ஒரு வார்த்தை சொல்லிவிட்டு கொண்டு வரேன்..''

நர்மதாவின் பேச்சை எடுத்ததுமே ஸ்வேதா கப்சிப் பென்று அமைதியாகி விட்டாள்.

''எனக்கு காபியே வேணாம் தாயி.. நீ கீழே போ..''

''எனக்கெதுக்கும்மா பொல்லாப்பு..''

''அடேங்கப்பா.. நீ பொல்லாப்பிற்கு பயந்தவள்தான்.. போ.. போ..''

'காலங்கார்த்தாலேயே இந்தம்மா கண்ணுல நான் படுவேனா.. அப்பவே மாலினியம்மா வாயைப் பார்க்காமல் நான் கீழே ஓடியிருக்கணும்..' மனதிற்குள் குமைந்தபடி பொன்னி அங்கிருந்த நகரப் போனாள்.

''என்ன வாய்க்குள் முணுமுணுக்கிற?'' என்று அதற்கும் ஸ்வேதா சண்டைக்கு வரவும்..

''எனக்கு பெரியம்மா அந்த மாதிரி எதையும் சொல்லித் தரலைம்மா... மனசில நினைச்சதை முகத்துக்கு நேரா பேசித்தான் எனக்குப் பழக்கம். வேணும்னா வாங்க.. பெரியம்மா கிட்ட இதைப் பற்றிக் கேட்கலாம்..'' என்று மிகப் பெரிய அஸ்திரத்தை பிரயோகித்தாள் பொன்னி.

'ஐயையோ.. அந்தக் கிழவி கிட்ட பஞ்சாயத்துக்குப் போனால் காலையிலேயே கதாகாலட்சேபத்தை ஆரம்பித்து

என்னை ராமாயணத்தை கேட்க வைச்சிடுமே....' ஸ்வேதா நடுநடுங்கிப் போனாள்

''சரி... சரி.. நீ போ. நான் தோட்டத்துக்குப் போக வேண்டும். அப்ப வந்து காபி குடிச்சுக்கறேன்..''

'ஒரு வாய் காபிக்கு இந்தப் பாடா..' என்று ஸ்வேதா அலுத்தக் கொண்டபோது..

'அஃது.. அந்த பயம் மனசில் இருக்கட்டும்.. எங்க பெரியம்மாவா.. கொக்கா.. யாரு கிட்ட..' என்ற பார்வை யோடு பொன்னி கீழே போய் விட்டாள்.

'இந்த வீட்டு வேலையாள்கள் என்னை மிரட்ட அந்த நர்மதா கிழவியின் பெயரைக் கண்டு வைத்திருக்கிறார் களே.. நான் வாயைத் திறந்தாலே.. பெரியம்மா அப்படிச் சொன்னாங்க.. பெரியம்மா இப்படிச் சொன்னாங்கன்னு சொல்லி என் வாயை அடைத்து விடுகிறாங்களே...'

ஸ்வேதாவிற்கு ஏன்தான் சீக்கிரம் விழித்தோமோ என்று இருந்தது. அந்த எரிச்சலோடு பால்கனியின் பக்கம் அவள் போனாள். அங்கே ஏற்கெனவே பிரபாகரன் நின்று கீழே பார்த்துக் கொண்டிருக்க.. யோசனையுடன் பின்வாங் கினாள்.

'இவன் எதைப் பார்க்கிறான்..' என்ற நினைவுடன் சந்தடியில்லாமல் அவளும் ஓரமாகப் போய் எட்டிப் பார்த் தாள்.

காலையிலேயே பிரபாகரன் கடுப்பாக நின்றுகொண் டிருந்ததற்கு காரணம் அவளுக்கும் புரிந்துவிட்டது.

கீழே தோட்டத்தில்... தினகரனும் மாலினியும் ரோஜாச் செடியின் பக்கத்தில் நின்று பேசிக் கொண்டிருந் தார்கள். தினகரன் கூறிய ஏதோ ஒன்றிற்கு மாலினி குலுங்கச் சிரித்துவிட்டு வீட்டை நோக்கி வந்து விட்டாள்.



அவள் போவதையே பார்த்துக் கொண்டிருந்த தினகரன் ஒரு ரோஜாவைக் கிள்ளி கையில் எடுத்துக் கொண்டு வீட்டை நோக்கி வந்தான்.

பிரபாகரன் கோபத்துடன் திரும்பினான். அவன் பார்வையில் ஸ்வேதா பட்டு விட்டாள். ஒன்றுமறியாதவள் போல்..

''தினா அத்தான் என்றுமில்லாமல் இன்றைக்குப் போய் பூவை கிள்ளிக் கொண்டு வருகிறாரே... யாருக்கும் கொடுக்கப் போகிறாரா பெரிய அத்தான்?'' என்று விழி விரிய வினவினாள்.

''என்னைக் கேட்டால் எனக்கென்ன தெரியும். போய் அவனிடமே கேளு..'' சுள்ளென்று எரிந்து விழுந்தான் பிரபாகரன்.

''அவரிடம் போய் நான் பேசுவதா? சரியாப் போச்சு போங்க.. அவருக்கு என்னிடம் பேசப் பிடிக்காதே. மாலினி யிடம் மட்டும்தான் அவருக்கு பேசப் பிடிக்கும்..'' அப்பாவி போல அடுத்த அம்பை எய்தாள் ஸ்வேதா..

''என்ன உளறுகிறாய்?''

''உளறல் இல்லை பெரியத்தான்.. நிஜம். அன்றைக்கு என்னடான்னா.. நான் அவர்கிட்டப் பேசப் போனேன்.. அவர் என்னிடம் முகம் கொடுத்து பேசவேயில்லை. கொஞ்ச நேரத்தில் பாருங்க.. மாலினி அங்கே வந்தாள். தினா அத்தான் அவள்கிட்ட சிரித்துச் சிரித்துப் பேச ஆரம்பித்து விட்டார்..''

அது உண்மையென்பதை பிரபாகரனும் அறிவான் என்பதால் அவன் முகம் கறுத்து விட்டது. அகை ஓரக்கண் ணால் பார்த்துக் கொண்டே ஸ்வேதா பேச்சைத் தொடர்ந் தாள்..

''நேற்றைக்குகூட அப்படித்தான்.. எனக்கு தண்ணீர் தாகமாக இருந்தது.. ரூமில் தண்ணீர் இல்லை. சரி.. ஹாலில் இருக்கிற ஃபிரிஜ்ஜில் தண்ணியைக் குடிக்கலாமுன்னு நினைத்து வந்தால்.. ஹாலில் பவித்ரா.. தினா அத்தானுடன் பேசிக்கொண்டிருந்தாள். அவர்களை டிஸ்டர்ப் பண்ண வேண்டாமுன்னு நான் யோசிச்சு ரூமுக்குள்ளயே நின்றுவிட்டேன்...''

'இவளாவது மத்தவங்களுக்கு தொந்தரவாக இருக்கக் கூடாதுன்னு நினைப்பதாவது.. ரூமுக்குள் ஒளிந்து நின்று வேவு பார்த்திருப்பாள்..' என்று நினைத்துக் கொண்டாலும்.. ஸ்வேதா சொல்வது உண்மை என்பதையும் சேர்த்தே நினைத்துக் கொண்டான் பிரபாகரன்.

அவன்தான் முதல் நாளிரவில்.. தினகரனும் மாலினியும் பேசிக் கொண்டிருந்ததைப் பார்த்தானே.

''பவி.. தினா அத்தானிடம் அவ்வளவு ஆசை ஆசையாய் பேசுகிறாள். தினா அத்தான் அவளிடம் சரியாகவே பேசவில்லை. அந்த நேரம் பார்த்து மாலினி அங்கே வந்தாள்.. உடனே தினா அத்தான் அவளிடம் கலகலன்னு பேச ஆரம்பிச்சுட்டார். பாவம்.. பவியின் முகத்தைப் பார்க்கவே சகிக்கவில்லை...''

இப்படியாவது பவித்ராவின் முகத்தைப் பார்க்கச் சகிக்கவில்லை என்று சொல்ல முடிந்ததே என்ற சந்தோஷம் ஸ்வேதாவிற்கு. ஆனால்.. பவித்ராவின் முகம் எப்படிப் போனால் எனக்கென்ன என்ற கடுப்புடன் பிரபாகரன் அவளை முறைக்க ஆரம்பிக்கவும், சுதாரித்துக் கொண்டு பேச்சை வளர்த்தாள்.

''மாலினி வந்தவுடன் பவித்ராவுக்கு ஏமாற்றமாய் போய்விட்டது போல பெரிய அத்தான்... அவள் பட்டென்று போய் விட்டாள். அவள் போய்விட்டதைக் கவனிக்காமல் தினா அத்தான் மாலினியிடம் கடலை போட்டுக் கொண்டிருந்தார். அவள் அவர் பேச்சை ரசித்து என்னமாய் சிரித்துக் கொண்டிருந்தாள் தெரியுமா?''



அதற்கு மேல் அந்தப் பேச்சைக் கேட்கப் பிடிக்காமல் பிரபாகரன் வீட்டுக்குள் செல்லத் திரும்பினான். ஸ்வேதா அவ்வளவு எளிதாக அவனைப் போக விட்டு விடுவாளா என்ன?

''இப்போது தினா அத்தான் கொண்டு வரும் ரோஜாப் பூவை யாருக்குக் கொடுப்பாருன்னு நினைக்கறீங்க பெரிய அத்தான்?'' என்று இமைகளை அறியாப் பெண்போல கேட்டாள் ஸ்வேதா.

53

*கொட்டி வைத்த மணி போன்ற*
*உன் பச்சரிசி சிரிப்பை..*
*என்னவென்று நான் சொல்ல...?*

பிரபாகரன் நின்று நிதானமாக ஸ்வேதாவையே தீர்க்கமாக பார்த்தான். ஊடுருவும் அவனது பார்வையைக் கண்டவளுக்கு முதுகுத்தண்டு ஜில்லிட்டது. ஆனாலும் எடுத்த காரியத்தை முடித்தாக வேண்டுமே. மாணிக்க வாசகம் அவளை அப்படித்தானே வளர்த்திருந்தார்.

அதனால் பிரபாகரனின் பார்வையின் பொருள் புரியாதவள் போல குழந்தையின் பாவனையை முகத்தில் கொண்டு வந்து,

''ஏன் அத்தான் அப்படிப் பார்க்கறீங்க?'' என்று கேட்டாள்.

பிரபாகரனுக்கு ஸ்வேதாவின் நோக்கம் தெளிவாகப் புரிந்தது. அவளைப் போல எத்தனை மனிதர்களை அவன் வாழ்க்கையில் தினம் தினம் சந்திக்கிறான். ஏன் அவனை யும் அவள் குணத்தையும்தான் அவன் நன்கு அறிவானே. எனவே..

''நிச்சயமாய் உனக்குக் கொடுப்பான்னு நான் நினைக் கலை..'' என்று முகத்தில் அடித்ததைப் போலச் சொல்லி விட்டு அங்கிருந்து போய் விட்டான்.

ஸ்வேதாவின் முகம் பயங்கரமாக மாறியது.

'போகிறாயா.. போ. உன்னைச் சுற்றியிருக்கும் கோபம் என்னும் நூலின் முனையை நான் பிடித்துவிட்டேன். அதைச் சிக்கலாக்கும் வித்தை எனக்கு கை வந்த கலை. நீயெல்லாம் என் சாகஸத்திற்கு முன்னால் சின்ன பப்பா..'

அதே நேரத்தில் பிரபாகரனும் ஸ்வேதாவைப் பற்றித் தான் நினைத்துக் கொண்டிருந்தான். ஒரு பெரிய தொழில் சாம்ராஜ்ஜியத்தை நிர்வகித்து கட்டிக் காத்துக் கொண்டிருப் பவனிடம் ஒரு ஜாலக்காரியின் சாகஸப் பேச்சு எடுபடும் என்று எப்படி அவள் நம்புகிறாள் என்று யோசித்துக் கொண் டிருந்தான்.

'இருந்தாலும்..' அவனது புருவங்கள் சுளித்தன.

'ஸ்வேதா சொல்வதில் உண்மை இருக்கிறதே.. நேற்றைக்கு ராத்திரி எப்படிப்பட்ட ராத்திரி... அந்த நினைவலைகளின் கனம் தாங்காமல் மனமும் உடலும் அவளைத் தேடித் தவிக்க.. அதிலிருந்து தப்பிக்கும் வழி தேடித்தானே நான் வேலையில் இறங்கினேன்... அதைப் பற்றிப் பேச தினாவைத் தேடிப் போனால்... இவள் எந்த விதப் பாதிப்பும் இல்லாமல் அவனோடு சிரித்துப் பேசிக் கொண்டிருக்கிறாளே... அது எப்படி அவளால் இயல்பாக இருக்க முடிந்தது. அவள் தூக்கமில்லாமல் தவித்துக்



கொண்டிருப்பாள் என்றுதானே நான் நினைத்திருந்தேன்..' அவன் மனம் முரண்டியது.

அவனுக்குத் தெரியாது.. முதல் நாள் இரவில் தூக்கம் வராமல் தவித்த மாலினி.. ஒரு தடவையாவது பிரபாகர னின் முகத்தைப் பார்த்து விட வேண்டும் என்ற ஆவலில் தான் அறையை விட்டு வெளியே வந்தாள் என்பது.

மாடி ஹாலில் பவித்ராவும் தினகரனும் பேசிக் கொண்டிருந்ததைக் கண்டதும் அவர்களைக் கடந்து போக முடியாமல் வேறுவழியின்றி அவர்களிடம் பேச்சுக் கொடுத்தபடி நின்றாள் என்பது..

பவித்ரா போனவுடன் அவளது காதலைப் பற்றி தினகரனிடம் சொல்வதற்காக மட்டும் அவள் தாமதிக்க வில்லை.. தினகரன் அந்த இடத்தை விட்டுப் போய்விட் டால்.. ஏதாவது ஒரு காரணத்தைச் சொல்லி பிரபாகரனை அறையை விட்டு வெளியே வரச் செய்து பார்த்துவிட வேண்டும் என்ற துடிப்புடன்தான் அவள் தாமதித்தாள் என்பது..

கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்ததைப் போல அவள் முகம் பார்க்கத் துடித்த பிரபாகரன்.. தானாகவே தினகரனைத் தேடிக் கொண்டு வந்தவுடன் முகமும் அகமும் மலர்ந்தவளாய் அவனையே கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டு நின்றிருந்தாள் என்பது..

இவை எதையும் அறியாத பிரபாகரன் தன்னைப் போன்ற மனத்துடிப்பு அவளுக்கும் ஏன் வரவில்லை என்ற மனத்தாங்கலுடன் குளியலறைக்குள் நுழைந்தான்.

காபியை நினைத்துக் கொண்ட ஸ்வேதா.. அதைக் குடிக்க சமையலறைக்குப் போகவேண்டிய தனது நிலை மையை நொந்துகொண்டே மாடிப்படிகளில் இறங்க லானாள். எதிரே தினகரன் கையில் ரோஜாவை வைத்துக்

கொண்டு படியேறினான். அவன் கையில் இருந்த ரோஜா வைப் பார்த்துக் கொண்டே..

''பூ யாருக்காக.. அத்தான்?'' என்று கேட்டாள்.

''இது எப்படி உனக்குத் தெரிந்தது..'' என்று ஆச்சரியப் பட்டான் அவன்.

''நான்தான் மாடியிலிருந்து உங்களைப் பார்த்துக் கொண்டிருந்தேனே...'' ஸ்வேதா எதற்கும் இருக்கட்டு மென்று சில்க் ஸ்மிதாவைப் போல ஒரு பார்வையை வீசி வைத்தாள்.

மற்ற நேரமாக இருந்திருந்தால் தினகரன் அவளின் பார்வையைக் கண்டு முகத்தைச் சுளித்திருப்பான். 'ஏன் இப்படிக் கண்றாவியாய் பார்த்து வைக்கிற ஸ்வேதா..' என்று நேரடியாகவே கேட்டிருப்பான்.

ஆனால்.. அப்போது அவன் இதமான மனநிலையில் இருந்தான். அதனால் இயல்பாக அவளைப் பார்த்து..

''மாடியிலிருந்து பார்க்கத்தானே முடியும்.. கேட்க முடியாதே...'' என்று சிரித்தான்..

தினகரன் அவளைப் பார்த்து சிரித்துவிட்டானா... அந்த அதிசயத்தை நம்ப முடியாமல் இமை கொட்டிய ஸ்வேதா.. தன் பரபரப்பை வெளிக் காட்டிக் கொள்ளாமல்,

''எதைக் கேட்கணும் தினா அத்தான்..'' என்று கொஞ்சினாள்..

''மாலினியின் கவிதையைத்தான்..'' தினகரனின் முகத்தில் ஒரு ரகசிய சந்தோஷம் பரவியிருந்தது.

''கவிதையா?'' கேட்கக் கூடாத வார்த்தையைக் கேட்டுவிட்டவளைப் போல ஸ்வேதா முகம் சுளித்தாள்.

அதைக் கவனிக்காமல் தினகரன் தன் போக்கில் சொல்லிக் கொண்டிருந்தான்.



''கவிதைதான் ஸ்வேதா.. நான் தோட்டத்தில் இந்தப் பூவை ரசித்துக் கொண்டு நின்றிருந்தேனா... அப்போது மாலினி அங்கு வந்தாள்..''

''ம்ம்ம்..''

''என் கையிலிருந்த இந்தப் பூ அப்போது செடியில் இருந்தது..''

''ம்ம்ம்..''

''பூவைப் பறிக்கப் போகிறீங்களா.. உங்க பெரிய அண்ணனிடம் சொல்லி விடவான்னு வம்புக்கு இழுத்தாள்..''

தினகரனிடம் பேசும்போதுகூட மாலினியின் மனதில் பிரபாகரனின் நினைவு இருந்ததை ஸ்வேதா கண்டுகொண் டாள்.

''அதுக்கென்ன இப்ப அத்தான்..''

''இன்னும் இருக்கு பொறுமையாய் கேளு...''

அவளையும் ஒரு ஜீவனாக நினைத்து தினகரன் அவளருகில் நின்று பேசுவதே பெரிய விஷயம் என்பதால் கிடைத்திருக்கும் வாய்ப்பை நழுவ விடும் மனமில்லாமல் கடனே என்று 'உம்..' என்று கொட்டினாள் ஸ்வேதா.

''ம்ம்ம்..''

''நான் விளையாட்டாய், பூ பறிக்கத்தானே இருக்கு.. வேறு யாருக்காக இருக்குன்னு அவளிடம் கேட்டேன்..''

''ம்ம்ம்..''

''அவள் உடனே என்ன கேட்டாள் தெரியுமா?''

''என்ன கேட்டாள்?''

''அப்போ.. அவள் என்னைப் பார்த்து.. 'பூ யாருக் காக'ன்னு கேட்கறீங்களான்னு கேட்டாள் ஸ்வேதா..''

இதை எதற்கு இத்தனை பரவசத்துடன் அவன் சொல் கிறான் என்று சத்தியமாக ஸ்வேதாவிற்குப் புரியவில்லை...

அவள் விசித்திரமாக தினகரனைப் பார்த்தபடி அதற்கும் 'உம்' போட்டாள்..

''உடனே அவள்.. 'பூ யாருக்காக' என்கிற தலைப்பில் ஒரு கவிதையைச் சொன்னாள் பாரு... அடடா.. அடா.. அடா..''

இதில் வியக்க என்ன இருக்கிறது என்று மனதிற்குள் எரிச்சல் பட்டாள் ஸ்வேதா.

''அது என்ன கவிதைன்னா...''

தினகரன் சொல்ல ஆரம்பிக்க.. இப்படி இவன் பேச்சுக் கொடுக்கிறானே என்ற சந்தோஷத்தில் மாட்டிக் கொண்டு விட்டோமே என்று தன்னைத்தானே நொந்து கொண்டு அவன் சொன்ன கவிதையைக் காது கொடுத்து கேட்க ஆரம்பித்தாள் ஸ்வேதா..,

*''கவிஞனுக்கு கவியளித்து..*
*காட்சிதரும் கவிப்பூவே?*
*மனம் கொண்டு மலர்ந்து நின்று*
*நீ மயங்குவது யாருக்காக..?*
*நீலக்கடல் ஓரத்திலே..*
*நித்தம் எழுந்து உலாவரும்*
*கதிரவனின் வரவுக்காக - உன்*
*கமலமுகம் மயங்கியதோ..?*
*இருள் சூழ்ந்த இரவில் வரும்*
*இதம் நிறைந்த வெண்ணிலவின்*
*வெண்மையொளி உனில் நிறைய*
*உன் அல்லி இதயம் விரும்பியதோ..?*
*ஆனால்.. மலர் விட்டு மலர் தாவும்*
*மாசு நிறைந்த வண்டிற்காக*
*ஏங்குகிறேன் என்று மட்டும்*
*என்னிடத்தில் சொல்லாதே....''*



எப்படித்தான் இவன் மாசு நிறைந்த வண்டைப் பற்றிக் கவிதையில் கேட்டும் அதை சட்டை செய்யாமல் பேசுகிறானோ என்று ஸ்வேதாவிற்கு ஆயாசமாக இருந்தது.

''பரவாயில்லையே.. மாசு நிறைந்த வண்டைப் பற்றி மாலினி பிட்டுப் பிட்டு வைத்திருக்கிறாளே..'' ஸ்வேதா வேண்டுமென்றே பாராட்டினாள்.

''இதுதான் உன்கிட்ட எனக்குப் பிடிக்காத விஷயம்..''

'என்கிட்ட இருக்கும் எந்த விஷயமும் உனக்குப் பிடிக் காதுன்னு எனக்குத் தெரியாதா.. போடா.. டேய்..'

''நான் பூவைப் பற்றிய கவிதையைச் சொன்னால் நீ வண்டைப் பற்றிப் பினாத்துகிறாயே.. டூ பேட்..''

'அதுசரி.. உனக்கானதை மட்டும் நீ எடுத்துக் கொள் வாய்.. ஆகாததை நான் சொன்னால் உனக்கு கடுப்பாகத் தான் இருக்கும்..'

''உன்னிடம் போய் நான் கவிதை சொல்ல வந்தேனே...''

'நான் கேட்டேனா..'

பேச்சு வண்டைப் பற்றிப் போய்விட்ட கோபத்தில் தினகரன் கையிலிருந்த பூ நழுவுவதை உணராதவனாக மாடியேறிப் போய் விட்டான்.

அந்தப் பூவை கையில் எடுத்துக் கொண்டு கீழே இறங்கினாள் ஸ்வேதா. சமையலறைக்குள் அவள் நுழை யும்போது காயத்ரியின் அறையிலிருந்து மாலினி வெளிப் பட.. சட்டென்ற யோசனை ஒன்று ஸ்வேதாவின் மூளை யில் உதயமானது.

அங்கே வேலையாக இருந்த பொன்னியை அழைக்கப்போனவள்.. வேண்டாமென்று மனதிற்குள் சொல்லிக் கொண்டாள்.

'பொன்னி புத்திசாலி... நான் பூவைக் கொடுத்தால் ஆயிரம் கேள்விகள் கேட்பாள்.. செந்தாமரை வெகுளி... இந்த விஷயத்திற்கு இவள்தான் லாயக்கு...'

''செந்தாமரை...''

''என்னாங்கம்மா..''

அந்தப் பக்கமாக சென்று கொண்டிருந்த செந்தாமரை நின்று பவ்யமாக ஸ்வேதாவைப் பார்த்தாள்..

''இது என்ன தெரியுதில்ல..''

''என்னாங்கம்மா.. இதை எனக்குத் தெரியாதா.. பூவு....''

''இது வெறும் பூ இல்லை செந்தாமரை...''

''அதுவும் எனக்குத் தெரியுமே.. ரோஜாப் பூ..''

''வெறும் ரோஜாப் பூ இல்லை...''

''இதென்னம்மா... அணுகுண்டை கையில் வைத்திருக்கிறதைப் போல இப்படி பீடிகை போடுகிறீங்க..''

''எனக்கில்லாதது எனக்கு அணுகுண்டு போலத்தான்..''

''புரியலைங்களே..''

''இந்தப் பூவைப் பார்த்தாயா செந்தாமரை..''

இவள் ஏன் அந்தப் பூவைப் பற்றி அவ்வளவு விளக்கிச் சொல்கிறாள் என்று புரியாத செந்தாமரை, அந்தப் பூவை உற்றுப் பார்த்தாள்.

''என்ன செய்யறே?''

''நீங்கதானேம்மா பூவைப் பார்க்கச் சொன்னீங்க..''

செந்தாமரை அப்பாவியாய் வினவ.. 'கிழிஞ்சுது போ..' என்று மனதிற்குள் நினைத்துக் கொண்டாள் ஸ்வேதா..

அது எப்படி.. ஒரு வீட்டிற்குள் அதிபுத்திசாலியான பொன்னியும் அடிமுட்டாளான செந்தாமரையும் வேலையாள்கள் என்ற பெயரில் ஒன்றுசேர்ந்தார்கள் என்று அந்த வீட்டிற்கு வந்த நாள் முதல் இந்த நாள் வரை ஸ்வேதா யோசித்துக் கொண்டுதான் இருந்தாள்..



வாழ்க்கை அறிமுகப்படுத்தும் விசித்திரங்களில் இதுவும் ஒன்றுபோல என்று தத்துவார்த்தமாக நினைக்க வேறு தொடங்கிவிட்ட ஸ்வேதா...

'ஸ்ஸ்... இப்பவே கண்ணைக் கட்டுதே...' என்று பெருமூச்சு விட்டபடி செந்தாமரையைப் பார்த்தாள்..

''இந்தப் பூ.. நம் வீட்டுத் தோட்டத்தில்.. மூலையில் இருக்கும் ரோஜாச் செடியில் இப்போதுதான் மலர்ந்ததாம்..''

''அப்படீங்களா...''

''என்ன அப்படீங்களான்னு ஆவலா கேட்கிற..''

''ஏன்ம்மா கேட்கக்கூடக் கூடாதா...''

செந்தாமரை மீண்டும் அப்பாவியாய் வினவ.. ஸ்வேதா தன் நாடகத்தை அரங்கேற்றத் துவங்கினாள்.




வேல் போன்ற விழிகள் கொண்டு
என்னை வேட்டையாடும் உந்தன் அழகை
என்னவென்று நான் சொல்ல..?

''இப்படித்தான் நானும் ஆவலாய் அப்படியான்னு கேட்டு வைத்தேன் செந்தாமரை..''

''யார்கிட்டம்மா?''

''வேற யார்கிட்ட.. என் அருமை அத்தைகிட்டதான்..''

''அவங்க உடனே இந்தப் பூவை உங்க கையில்

கொடுத்து தலையில் வைத்துக் கொள்ளச் சொன்னாங்களா?''

''நீ சொல்வதில் முக்கால்வாசி சரி.. கால்வாசி தப்பு..''

''என்னம்மா புதிர் போடுகிறீங்க.. நானே படிக்காத கழுதை... எனக்கென்ன விளங்கும்?''

'நீ மட்டும் படிக்கலை.. இந்தப் பொன்னியும்தான் படிக்கலை.. அவள் சக்கைப்போடு போடும்போது.. நீ மட்டும் ஏன் இப்படி வெள்ளந்தியாய் இருக்கிற செந்தாமரை?'

சமையலறைக்குள் அன்னபூரணியை அதட்டிக் கொண்டிருந்த பொன்னியைப் பார்த்தபடி நினைத்துக் கொண்டாள் ஸ்வேதா.

''அதாவது செந்தாமரை.. நான் அப்படியான்னு கேட்டவுடன் அத்தை இந்தப் பூவை என் கையில் கொடுத்ததென்னவோ உண்மைதான். அதனால நீ சொன்னதில் முக்கால்வாசி சரி. ஆனால், இந்தப் பூவை என்னைத் தலையில் வைத்துக் கொள்ளச் சொன்னாங்கன்னு சொன்னே பாரு.. அதுதான் தப்பு..''

''அப்புறம் எதுக்கு பெரியம்மா உங்க கையில பூவைக் கொடுத்தாங்க?''

''அது உனக்கும் தெரியுது... எனக்கும் தெரியுது.. அத்தைக்குத் தெரியலையே. இந்தப் பூவைக் கொண்டு போய் நான் மாலினியின் கையில் கொடுக்க வேண்டுமாம்..''

''எதுக்காம்?''

''அவள் தலையில் வைத்துக் கொள்ள வேண்டுமாம்..''

''அப்படீங்களாம்மா. கொடுங்க.. நான் உடனே போய் பெரியம்மா கொடுத்து விட்டாங்கன்னு மாலினியம்மாகிட்ட கொடுத்துடறேன்.. இன்றைக்குத்தான் இந்தப் பூ மலர்ந்துச்சா..''



அந்தப் பூவை உடனடியாக மாலினியிடம் சேர்த்து... அது அன்று காலையில்தான் மலர்ந்தது என்ற விவரத்தை சொல்லாவிட்டால் செந்தாமரைக்கு ஏந்த வேலையும் ஓடாது என்பதை புரிந்துகொண்டவளாக ஸ்வேதா நமட்டுச் சிரிப்புடன் செந்தாமரையிடம் பூவைக் கொடுத்தாள்.

ஓட்டமும் நடையுமாக சென்று கொண்டிருந்த செந்தாமரையை கோபத்துடன் வெறித்தாள் ஸ்வேதா..

அந்தப் பூவை ஸ்வேதா தலையில் வைத்துக் கொள்ள நர்மதா கொடுத்தாளா என்று வினவியது செந்தாமரைதான்.. அதை மாலினிக்காக கொடுத்தாள் என்று ஸ்வேதா புருடா விட்ட அடுத்த கணமே ஸ்வேதாவைப் பற்றிக் கொஞ்சம் கூட யோசிக்காமல் அந்தப் பூவை பிடுங்காத குறையாக வாங்கிக் கொண்டு எப்படி இவளால் ஓடமுடிகிறது என்று யோசித்தாள் ஸ்வேதா.

அந்த அளவுக்கு ஒரு வேலையாளிடம் அன்பையும் பாசத்தையும் மாலினி ஏற்படுத்தி வைத்திருக்கிறாளே என்று அவளுக்கு வயிற்றெரிச்சலாக இருந்தது..

குளிக்கப்போன பிரபாகரனோ.. செல்போனின் ஒலியைக் கேட்டு குளிக்காமல் அறையை விட்டு வெளியே வந்தான்.

''தினா.. இந்த போன்காலை அட்டெண்ட் பண்ணு..''

''என்ன அண்ணா...''

''நேற்றைக்கு நைட் நான் கேட்ட விவரம்தான்.. நீயே அவரிடம் விளக்கமாய் சொல்லி விடு...''

தினகரன், பிரபாகரன் நீட்டிய செல்போனை வாங்கி காதுக்கு கொடுத்தான். அவன் பேசிக் கொண்டிருக்கும் போது அவன் கையில் ரோஜாப் பூ இல்லாததை கவனித்தான் பிரபாகரன்.

'அந்தப் பூவை இவன் என்ன செய்தான்.. யாருக்குக் கொடுத்தான்?' என்ற கேள்வி அவன் மனதில் வண்டாகக் குடைந்தது.

தமையனின் மனப் போராட்டத்தை அறியாமல் போன் பேசி முடித்த தினகரன் போனை பிரபாகரனிடம் நீட்டினான்.

மாடிப்படியில் ஏறிக்கொண்டிருந்த மாலினியிடம் வாயெல்லாம் பல்லாக செந்தாமரை வந்து அந்த ரோஜாப் பூவை நீட்டினாள்.

''என்ன செந்தாமரை.. எனக்காக பூவெல்லாம் கொண்டு வந்து கொடுத்து ஐஸ் வைக்கிற.. என்ன விஷயம்?''

''போங்கம்மா.. இந்தப் பூவை பெரியம்மா கொடுத்து விட்டாங்க..''

''நிஜமாகவா?''

''ஆமாம்.. இது நம்ம வீட்டுத் தோட்டத்தில் இன்றைக்குத்தான் மலர்ந்துச்சாம்.. அந்தப் பூவை நீங்கதான் தலையில வைக்கணுமாம்..''

ஸ்வேதா, செந்தாமரையைப் பற்றிப் போட்ட கணக்கு மிகச் சரியானது என்பதை செந்தாமரை அந்தக் கணத்தில் நிரூபித்தாள்.

அந்தப் பூ ஸ்வேதாவின் கையிலிருந்து வந்தது என்பது மாலினிக்குத் தெரிந்திருந்தால் அதைத் தொட்டுக்கூடப் பார்த்திருக்க மாட்டாள். அதோடு.. அதன் பின்னணியில் இருக்கும் ஸ்வேதாவின் எண்ணம் என்ன என்று யோசிக்க ஆரம்பித்திருப்பாள்.

அதைப் பற்றித் தெரியாத மக்கு செந்தாமரை.. நர்மதா கொடுத்துவிட்டதாகச் சொல்லி அந்தப் பூவைக் கொடுத்ததும் ஆச்சரியமும் பரவசமுமாக அந்தப் பூவை ஆனந்தத்துடன் பெற்றுக் கொண்டாள்.



முதல் நாள் இரவு பிரபாகரனின் அணைப்பில் அடங்கிய பின்னால்.. அவன் வேறு.. தான் வேறு என்ற எண்ணமே மாலினியின் மனதில் தோன்றவில்லை. அவளது நாடி நரம்பெங்கும் அவனது நினைவே வியாபித்திருக்க.. மனதளவில் தன்னை பிரபாகரனின் மனைவியாகவே நினைக்க ஆரம்பித்திருந்தாள் மாலினி.

அவளுடைய பிரபாகரனைப் பெற்ற அன்னை.. அவளுக்காக அன்று பூத்த புது மலரை கொடுத்துவிட்டிருக்கிறாள் என்றதுமே.. என்னவோ அப்போதே நர்மதா, மாலினியைத் தன் மருமகளாக விரித்துக் கொண்டதைப் போல மகிழ்ந்து போய் விட்டாள் அவள்..

தினகரன் நீட்டிய போனை வாங்கிக் கொண்ட பிரபாகரனிடம்..

''என்ன அண்ணா?'' என்று வினவினான் தினகரன்.

''என்னடா?''

''என்னிடம் எதையோ நீங்கள் கேட்க நினைப்பதைப் போல இருக்கிறதே...''

'நினைப்பதையெல்லாம் கேட்டுவிட முடிகிறதா.. என்ன..' என்ற அலுப்புடன்

''ச்சு.. ஒன்றுமில்லைடா..'' என்றான் பிரபாகரன்.

தமையனை மரியாதையுடன் பார்த்துக் கொண்டிருந்த தினகரனின் விழிகள் திடீரென்று மின்னவும்.. தன் முதுகிற்குப் பின்னால் ஒரு பெண் வந்து கொண்டிருக்கிறாள் என்று யூகித்து விட்டான் பிரபாகரன்.

'இவனுக்கு தினகரன் என்று பெயர் வைத்ததற்குப் பதிலாக மன்மதன் என்று பெயர் வைத்திருக்கலாம்..'

எரிச்சலுடன் திரும்பிப் பார்த்தவன் அதிர்ந்துவிட் டான். அங்கே கையில் ரோஜாப் பூவை.. ஏதோ பொக்கிஷத்தை

வைத்துக் கொண்டிருப்பதைப் போல முகபாவனையுடன் பிடித்துக் கொண்டு வந்தாள் மாலினி.

தினகரனின் விழிகளில் ஏன் அந்த மின்னல் வந்தது என்று இமைப் பொழுதில் பிரபாகரனுக்கு புரிந்துவிட்டது.

'கடைசியில் இவன் கொடுத்த பூவை இவள் வாங்கிக் கொண்டாளா?'

பிரபாகரனுக்கு தன் கண்களையே நம்ப முடிய வில்லை.

'எப்படி இது சாத்தியமானது? மாலினி அப்படிப் பட்ட பெண்ணில்லையே...'

அவன் மனதுக்குக்குள் சொல்லிக் கொண்டாலும்.. மாலினி ஒருமுறைகூட தினகரனிடம் முகம் முறித்துப் பேசியதில்லை. அவன் பேச வரும்போது அவனைத் தவிர்த் ததுமில்லை என்று அவன் மனது எதிர்வாதம் புரிந்தது.

'நீங்கள் அழகாக இருக்கீங்க..' என்று தினகரன் சொன்னபோது ஆட்சேபனையாய் பதில் சொல்லாமல்,

'தேங்க்ஸ்..' என்று மாலினி பதில் சொல்லியது இன்றளவும் பிரபாகரனின் நெஞ்சில் இருந்தது.

தினகரனுடன் ஸ்வேதா பேசிக்கொண்டிருந்தாள் என்று மாலினி சொல்லியபோது.. ஸ்வேதா போன பின்னா லும் ஏன் இவள் தினகரனுடன் நின்று பேசிக் கொண் டிருந்தாள் என்று பிரபாகரனின் மனம் கேள்வி எழுப்பியதும் அவனது நெஞ்சில் இருந்தது.

மனதுக்குள் எழுந்த காதல் அலையில் அவனும் மாலினியும் நனைந்து எழுந்த பொழுதிற்குப் பின்னாலும் அவள் தினகரனுடன் பேசிக்கொண்டிருந்தது இன்னும் அவனது நெஞ்சில் இருந்தது.

இத்தனைக்கும் சிகரம் வைத்ததைப் போல.. இரவு முழுவதும் தூங்காமல் மாலினியை நினைத்துக் கொண்



டிருந்த பிரபாகரன் ஆவலுடன் அவளைத் தேடி தோட்டத் திற்கு போனபோது.. அங்கு அவள் தினகரனுடன் நின்று பேசிக் கொண்டிருந்த காட்சி அவனது நெஞ்சில் இருந்தது.

அதைப் பார்க்கப் பிடிக்காமல் மாடிக்கு வந்து பால்கனி யில் நின்று பார்த்தபோதும்.. அவர்கள் அங்கேயேதான் நின்று பேச்சைத் தொடர்ந்து கொண்டிருந்தார்கள் என்ற நினைவு அவனது நெஞ்சில் இருந்தது.

மாலினி சிரித்துக்கொண்டே வீட்டிற்குள் செல்ல.. அவளைக் கையில் கிள்ளிய ரோஜா மலருடன் தினகரன் தொடர்ந்து சென்றது அவனது நெஞ்சில் இருந்தது.

மாடிக்கு வந்த தினகரனின் கையில் அந்த ரோஜாப் பூ இல்லை. அவனுக்கு பின்னாலயே வந்த மாலினி யிடம் அந்தப் பூ இருக்கிறது என்றால் அதற்கு ஒரே ஒரு அர்த்தம்தான் இருக்க முடியும் என்று பிரபாகரனின் மனம் சொன்னது.

அது.. தினகரன் அந்தப் பூவை மாலினியிடம் கொடுத் திருக்கிறான்.. அதை பத்திரமாக கையில் ஏந்திக்கொண்டு மாலினி வருகிறாள்.

தான் கொடுத்த பூவை மாலினி பத்திரமாகப் பிடித்துக் கொண்டு வருவதைப் பார்த்த பெருமையால்தான் தினகர னின் கண்கள் அப்படி மின்னியிருக்கின்றன.

பரவசத்துடன் ஹாலுக்குள் வந்த மாலினி.. பிரபா கரனைக் கண்டதும் அப்படியே நின்றுவிட்டாள். காலை யில் இருந்து அவனைப் பார்க்கத் துடித்தும்.. பார்க்க முடியாத தவிப்பு அவள் மனதில் பொங்கியது.

அவனுக்காக அவள் தோட்டத்தில் காத்திருந்தபோது தினகரன் வந்து ரம்பம் போட்டான். பிரபாகரன் வந்து விடுவான் என்ற நம்பிக்கையுடன்.. அவனிடம் நின்று பேசிக் கொண்டிருந்த மாலினி.. அவன் வருவதைப் போல

இல்லை என்று தெரிந்தவுடன் தினகரனிடம் இருந்து கழன்று கொண்டு வீட்டுக்குள் வந்து விட்டாள்.

மாடியில் அவனைப் பார்க்கலாம் என்று மாடிப்படியில் கால் வைத்தவுடன் காயத்ரி அவளை அழைத்து விட்டாள். அவளுடன் பேசிமுடித்து விட்டு வந்தவளை செந்தாமரை வந்து பிடித்துக் கொண்டாள். நர்மதா தந்ததாகச் சொல்லி அவள் கொடுத்த ரோஜாப்பூவை பிரபாகரனிடம் காட்ட வேண்டும் என்ற ஆவலுடன் மாடிக்கு வந்தவளை பிரபாகரன் அறிமுகமில்லாத பார்வையொன்றை பார்த்து வைக்கவும், அவளுக்கு என்னவோ போல் ஆகி விட்டது.

அவளுக்குள் பொங்கிக் கொண்டிருந்த உணர்வுகள். தண்ணீர் பட்ட சுடுபால் போல அடங்கிப் போனது.

''அது என்ன கையில் பூ?'' பிரபாகரன் வினவினான்.

அதற்கு 'அத்தை கொடுத்து விட்டாங்க..' என்ற பதிலை மாலினி சொல்லியிருந்தால் எவ்வளவோ நன்றாக இருந்திருக்கும். அதை விட்டு அவள் குதுகலமான குரலில்..

''நான் மரியாதையும்.. மதிப்பும் வைத்திருக்கும் சொந்தக்காரங்க இதைக் கொடுத்தாங்க..'' என்று சொல்லி விட்டாள்.



உன் வாய்மொழியின் வார்த்தை
என் நெஞ்சைத் தொட்ட விந்தை
என்னவென்று நான் சொல்ல..?

மாலினி சொன்னதைக் கேட்டதுமே அங்கே நின்று



கொண்டிருந்த சகோதரர்கள் இருவரில் ஒருவன் முகம் கன்ற.. மற்றொருவன் முகம் மலர்ந்தான்.

'என் மாலினியின் வாயிலிருந்து வரும் வார்த்தைகளா இவை..' பிரபாகரன் துணுக்குற்றான்.

'நான் கொண்டு வந்த ரோஜாப்பூ எப்படி இவள் கைக்குப் போனது?' என்று யோசித்தாலும்.. அவன் கொண்டு வந்த பூவைப் பற்றி மாலினி உயர்வாகப் பேசிய விதத்தில் தினகரன் சிறகேயில்லாமல் வானில் பறந்தான்.

''தினா.. பரந்தாமனை நான் இருக்கச் சொன்னதாக கீழே போய் சொல்லிவிட்டு வா.. வீட்டுப் பெண்கள் வெளியே போக வேண்டுமென்று அவரைக் கூப்பிட்டுக் கொண்டு போய்விடப் போகிறார்கள்..''

பிரபாகரன் உத்தரவிட்டதும்... அங்கிருந்து நகர மனமின்றி நகர்ந்தான் தினகரன்.

தனிமை கிடைத்துவிட்ட ஆனந்தத்தில் மாலினி எதையோ பேச வாய் திறக்க கடுமையுடன் அவளை உறுத்துப் பார்த்தான் பிரபாகரன்.

அவனது கனல் கக்கும் விழிகளைப் பார்த்ததும் மாலினிக்கு பேச நா எழவில்லை.

'நான் என்ன தப்பு செய்துவிட்டேன்னு இவன் என்னை இப்படிப் பார்க்கிறான்?'

மாலினி என்ற ஒருத்தி அங்கே இல்லாததைப் போன்ற பாவனையுடன் பிரபாகரன் அவனது அறைக்குச் செல்ல முனைய..

''ஒரு நிமிஷம்...'' என்று அவசரமாக அவனை தடுத்தாள் மாலினி.

''என்ன?'' அவன் திரும்பிப் பார்க்காமலேயே வினவினான். மாலினி பேச வாய் திறந்தபோது.. ஸ்வேதா அங்கே

வந்து விட்டாள். வந்தவள் சும்மா இருப்பாளா.. விஷமமாக பிரபாகரனைப் பார்த்தபடி..

''என்ன மாலினி.. கையில் இருப்பது ரோஜாப்பூவா?'' என்று கேட்டாள்

பிரபாகரனின் கோபத்திற்கு என்ன காரணம் என்று கேட்க முடியாமல் ஸ்வேதா வந்துவிட்ட எரிச்சலில் இருந்த மாலினி..

''ஏன்.. உனக்கு இதைப் பார்த்தால் எப்படித் தெரிகிறது?'' என்று கேட்டாள்.

''ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு மாதிரியாகத் தெரிய இது என்ன மனிதப் பிறவியா? பூ.. மாலினி.. ரோஜா ரோஜாவாகத்தான் எனக்குத் தெரியுது..'' என்று வியாக்கியானம் சொல்லியபடி மீண்டும் பிரபாகரனைப் பார்த்தாள் ஸ்வேதா..

'இவள் என்ன இன்றைக்கு ஒரு மார்க்கமாக பேசுகிறாள்? இப்படியெல்லாம் யோசிக்கக்கூட இவளுக்குத் தெரியுமா?' மாலினி யோசனையாக ஸ்வேதாவைப் பார்த்தாள்.

ஸ்வேதாவின் பார்வையோ மாலினியின் கையிலிருந்த பூவில் பதிந்து.. பிரபாகரனின் மேல் மீண்டும் படிந்தது. அவளது பார்வை 'இது தினகரன் பறித்துக் கொண்டு வந்த பூ..' என்று சொல்லாமல் சொல்லி எள்ளி நகையாட... பிரபாகரனின் மனம் கொதிகலனானது.

தன் காதலி.. இன்னொருவன் கொடுத்த பூவை வைத்துக் கொண்டு நிற்பதை ஸ்வேதா சுட்டிக்காட்டுவது அவனுக்குத் தெரியாமல் இல்லை. அவனது ஆண்மை இந்த செயலை பொறுத்துக் கொள்ள முடியாமல் தவித்தது.

''அதுதான் உனக்குத் தெரியுதில்ல.. அதுக்கப்புறமும் கையில் இருக்கிறது என்னன்னு என்ன கேள்வி வேண்டிக் கிடக்கு.''



''இது ரோஜான்னு எனக்கும் தெரியுது மாலினி.. ஆனால், கொஞ்ச நேரத்துக்கு முன்னால் நீ தோட்டத்திலிருந்து வரும்போது உன் கையில் ரோஜா இல்லையே...''

''ம்ம்.. இல்லைதான்.. அதுக்கென்ன இப்ப..''

''ஸோ.. நீ இதைப் பறிக்கலை...''

''அது எப்படி நான் பறிப்பேன்.. பூவைப் பறித்தால் தான் உன் பெரியத்தானுக்குப் பிடிக்காதே...''

மாலினி கூறியது இயல்பான உரையாடல். பிரபாகரன் காதல் சொல்வதற்கு முன்னாலே என்றால்.. ஸ்வேதாவிடம் வம்பிழுக்க வேண்டும் என்பதற்காகவே.. 'என் அத்தான்..' என்று வாய்க்கு வாய் சொல்லுவாள். இப்போதோ.. 'உன் பெரிய அத்தான்' என்றுதான் அவளுக்கு சொல்ல வந்தது.

இதற்கான காரணம் மிக இயல்பானது. மாலினியின் வீட்டில் ஜானகிராமனைப் பற்றி ரஞ்சித்திடமும் மாலினியிடமும் காவேரி பேசும்போது.. 'உன் அப்பா..' என்றுதான் சொல்லுவாள். சசிரேகா.. தன் கணவனைப் பற்றி மாலினியிடம் பேசும்போது 'உன் அத்தான்' என்று சொல்லுவாள். மாலினியின் அண்ணி ராதிகா.. ரஞ்சிதத்தைப் பற்றிக் குறிப்பிடும்போது.. மாலினியிடம் 'உன் அண்ணன்...' என்றும் காவேரியிடம் 'உங்க மகன்..' என்றும் சொல்லுவாள்.

மாலினி, ஸ்வேதாவிடம் கூறியதும் அதைப் போலத் தான். அதை உணராத பிரபாகரன், ஸ்வேதாவின் முன்னால் மாலினி அவனை விட்டுக் கொடுத்து விட்டதாகவே நினைத்தான். ஸ்வேதா வேறு எரியும் கொள்ளியில் இன்னும் கொஞ்சம் எண்ணெயை ஊற்றினாள்.

''என் பெரிய அத்தானா? பார்த்தீங்களா அத்தான்.. இந்தப் பூ செய்யும் மாயத்தை.. கொஞ்ச நேரத்திற்கு முன்னால் வரை நீங்கள் மாலினியின் அத்தானாக இருந்தீங்க. இந்தப் பூ கைக்கு வந்த உடனே உங்களை என் பெரியத்தானாக்கி விட்டாள்.

''சும்மா உளறாதே ஸ்வேதா.. இந்தப் பூவைப் பற்றியே நீ எதுக்குப் பேசற? அது உனக்குத் தேவையில்லாத விஷயம்..''

''எனக்கு மட்டும் தேவையில்லையா.. இல்லை.. என் பெரிய அத்தானுக்கும் தேவையில்லையா..''

ஸ்வேதாவின் சாகஸப் பேச்சை மாலினி நன்கு அறிவாள். ஆனால்.. அப்போது அவள் பேசிக் கொண்டிருந்த சாகஸப் பேச்சின் உட்கருத்தைத்தான் அவளால் அறிய முடியவில்லை. அதைவிட ஸ்வேதாவை பேச விட்டு விட்டு பிரபாகரன் மௌனமாக இருப்பதன் காரணமும் அவளுக்கு விளங்கவில்லை...

''இதோ பார் ஸ்வேதா.. எனக்கு வேலைக்கு கிளம்ப வேண்டும். நேரமாகிறது.. உன்னுடன் வெட்டிப் பேச்சுப் பேச வேறு ஆளைத் தேடிப்பிடி...''

''பொறு மாலினி பொறு.. இப்போதுதான் உனக்கு நேரமாவது நினைவுக்கு வந்ததா? காலையில் விடிந்தவுடன் கீழே இறங்கிப் போனவள்.. வேலைக்கு கிளம்பும் நினைவில்லாமல் யாருடன் மணிக்கணக்காக பேசிக்கொண்டிருந்தாய்?''

''எல்லாம் இந்த வீட்டில் இருப்பவர்களுடன்தான் பேசிக் கொண்டிருந்தேன்..''

''நான் மட்டும் என்ன... நீ ரோட்டில் இருப்பவர்களுடன் பேசிக் கொண்டிருந்தாய்ன்னா சொன்னேன்?''



''ஏன் சொல்லித்தான் பாரேன்.. அப்போது இந்த மாலினி யாருன்னு உனக்குத் தெரியும்..''

''எனக்கு எப்போதோ நீ யாருன்னு தெரியும். தெரிய வேண்டியவங்களுக்குத்தான் அது இன்னமும் தெரிய மாட்டேங்குது..''

''விட்டால் நீ இன்றைக்கு முழுவதும் பேசிக்கொண்டிருப்பாய்.. உன்னோடு பேச நான் ஆளில்லை..''

''அப்படின்னா மகராசியாய் போ.. போவதற்கு முன்னால் அந்தப் பூவை என்னிடம் கொடுத்துவிட்டுப் போ...''

'ஆக.. அங்கே சுற்றி.. இங்கே சுற்றி இந்த பூவைப் பறிக்கும் நோக்கத்தில்தான் நீ இருக்கிறாயா..'

நர்மதா தனக்கு பூ கொடுத்துவிட்டதை பொறுக்காத ஸ்வேதா.. அதைத் தன்னிடமிருந்து பறித்துக் கொள்ளப் பார்க்கிறாள் என்று மாலினி நினைத்துவிட்டாள்.

வருங்கால மாமியாரின் கையால் முதன்முதலாக வாங்கிய பூவை விட்டுக் கொடுக்கக் கூடாது என்ற வேகம் அவளுக்குள் எழுந்தது.

''இது எனக்காக கொடுக்கப்பட்ட பூ.. இதை வேறு யாருக்கும் நான் கொடுக்க மாட்டேன்..'' என்று பட்டென்று சொல்லி விட்டாள்.

''கேட்டீங்களா அத்தான்.. எப்போதும் என் மேலேயே குற்றம் கண்டுபிடித்து இவளை சப்போர்ட் பண்ணுவீங்களே.. நீங்களே இதுக்கு ஒரு நியாயத்தைச் சொல்லுங்க. நான் மாலினியிடம் அப்படி என்ன பெரிதாக கேட்டு விட்டேன்.. ஒரு பூவைத்தானே ஆசைப்பட்டுக் கேட்டேன். அதை அவள் எனக்குக் கொடுக்கக்கூடாதா?'' ஸ்வேதா குறைபட்டுக் கொள்வதைப் போல ஏளனமான குரலில் பிரபாகரனிடம் கேட்டாள்.

''இதென்ன ஸ்வேதா.. இந்தப் பூவை அவ்வளவு ஈஸியாக நினைத்துவிட்டாய்?''

''ஓ.. அப்படின்னா.. இது ஈஸியில்லையா?''

''இல்லை..''

''இந்தப் பூ.. உனக்கு அவ்வளவு உயர்வானதா?''

''ஆமாம்..''

''எதனால் உயர்வு மாலினி.. இதைக் கொடுத்தவங்களை நீ அவ்வளவு உயர்வானவங்களாக நினைக்கிறாயா?''

''ஆமாம்.. ஆமாம்.. ஆமாம்..''

ஸ்வேதா மட்டும் பக்கத்தில் இல்லாமல் இருந்திருந்தால் பிரபாகரன் மாலினியை கன்னம் கன்னமாக அறைந்திருப்பான். அவ்வளவு ஆவேசம் அவனுக்குள் இருந்தது.

அதையறிந்து கொண்ட ஸ்வேதா மனதிற்குள் நகைத்துக் கொள்ள.. அறியாத மாலினி.. அந்தப் பூவை இறுக்கமாக பிடித்துக் கொண்டு நின்றாள்.

''உனக்குப் பூவுன்னா இவ்வளவு பிடிக்கும்னு எனக்குத் தெரியாமல் போச்சு மாலினி.. பூ யாருக்காகன்னு கவிதையெல்லாம் தினா அத்தானிடம் சொன்னாயாமே.. எனக்கும் கவிதை பிடிக்கும்.. என்னிடமும் கவிதை சொல்லேன்..''

''கவிதையை ரசிக்கவும் ஒரு அறிவும் மனமும் வேண்டும். உன்னிடம் அது இல்லை..''

''அங்கே தினா அத்தானிடம் மட்டும் அது இருக்குன்னு உனக்கு எப்படித் தெரிந்தது மாலினி.. அவருடைய அறிவை விடு.. மனத்தை எப்படிப் புரிந்து கொண்டாய்? உங்களுக்குத் தெரியுமா பெரிய அத்தான்.. நம்ம மாலினி.. காலையில் தோட்டத்தில் தினா அத்தானுக்கு கவிதை சொன்னாளாம்.. நீங்களும்தான் தினமும் இவளுடன் காரில் போய் வர்றீங்க.. ஒரு நாளாவது உங்களிடம் இவள் கவிதை சொல்லியிருக்காளா..?''



இல்லை.. பிரபாகரனிடம் பேசிச் சிரிப்பதிலேயே இன்பத்தை கண்டுவிடும் மாலினி.. அவனிடம் ஒரு நாள் கூட கவிதை சொன்னதில்லை. ஏன்.. மாலினிக்கு கவிதை வருமென்பதே அதுவரை பிரபாகரனுக்குத் தெரியாது. அவன் விழிகள் மாலினியைச் சுட்டெரிக்க, அவளுக்குள் குளிர் பிறந்தது..

'இது என்ன.. யதார்த்தமாக தினகரனிடம் கவிதை சொன்னது இவ்வளவு பெரிய பிரச்னையாகிறதே...' மாலினி கலங்கினாள்.

''என்னமோ போங்க அத்தான்.. நீங்க என்னவோ இந்த வீட்டின் நிர்வாகம் உங்க கையில் இருக்குங்கற நினைப்பில இருக்கீங்க. ஆனால்.. ஆளாளுக்கு மனசில பல நினைப்பை வைச்சுக்கிட்டில்ல அலையறாங்க..'' ஸ்வேதா, மாலினியைப் பார்த்தபடி பிரபாகரனிடம் சொன்னாள்.

அதற்கு மேலும் அங்கு நின்று வார்த்தை வளர்க்க விரும்பாத மாலினி.. பிரபாகரனுடன் பேசும் ஆசையை கைவிட்டு.. அங்கிருந்து நகர முயல.. கடுமையான முகத்துடன், ''நில் மாலினி..'' என்றான் பிரபாகரன்.

அவனது அதட்டலைக் கேட்க மாலினிக்கு சங்கடமாக இருந்தது. போயும் போயும் ஸ்வேதா சொல்வதைக் கேட்டு மாலினியை பிரபாகரன் அதட்டுகிறானா?

ஆனாலும்.. தடுத்து நிறுத்துவது பிரபாகரன் என்பதால் மாலினி தயங்கி நின்றாள்.

''அந்தப் பூவைக் கொடு..''

''இதை எனக்காக கொடுத்தாங்க...''

''இருக்கட்டும். நான் கேட்கிறேன்.. இதை என்னிடம் கொடு..''

மாலினி கொடுத்து விட்டாள். பிரபாகரன் வெற்றிப் பார்வையோடு ஸ்வேதாவைப் பார்க்க.. அவள் முகம் விழுந்து விட்டது. பெரிதாக அணுகுண்டைப் போல பிரச்னை வெடிக்கப் போகிறது என்ற எதிர்பார்ப்போடு நின்றவளுக்கு.. அப்படி எதுவும் நடக்காமல் புஸ்வாண மாகப் போய்விட்டதில் என்னவோ போல் ஆகிவிட்டது.



*சிறுபிணக்கில் உன்னைத்*
*திட்டிவிட்ட என் மனவலியை*
*என்னவென்று நான் சொல்ல..?*

ஸ்வேதா ஏமாற்றத்துடன் அவளது அறைக்குப் போய் விட்டாள். முதன்முதலாக நர்மதா ஆசையாக கொடுத்த பூவை பிரபாகரன் வாங்கிக் கொண்டுவிட்டானே என்ற கோபத்துடன் மாலினியும் போய்விட்டாள். பிரபாகரன் கையில் இருந்த ரோஜா மலரைப் பார்த்தான்.. அழகான அந்தப் பூ அவனைப் பார்த்து சிரிப்பதைப் போல இருந்தது.

'ஒரு பூவாலே.. இத்தனை மன வலியா..'

அவன் மௌனமாக ஹாலில் இருந்த கார்த்திகேய னின் படத்தின் முன்னால் அந்தப் பூவை வைத்துவிட்டுப் போய்விட்டான். அவனது மனதின் தீ அணையாமல் இருக்க.. வெளியில் இறுக்கமான முகபாவனையுடன் அலுவலகத்துக்கு கிளம்பினான்.

டைனிங் ஹாலில் தினகரனின் கண்கள் மாலினி யின் தலையில் ரோஜாப் பூவைத் தேடி ஏமாந்ததை பிரபாகரன் கவனித்துக் கொண்டுதான் இருந்தான். அவன் கவனிப்பதை ஸ்வேதாவும் கவனித்துக் கொண்டிருக்கிறாள்



என்ற உணர்வில் அவன் அசட்டையாகக் காட்டிக் கொண் டான்..

காயத்ரியின் நிச்சயதார்த்தத்திற்கு வந்த உறவினர் கள் வீட்டில் இருந்ததால் வீடே கலகலப்பாக இருந்தது. பவித்ராவிடம் பேச முடியாத மாலினி.. மாலையில் வந்து அவளுடன் பேசுவதாகக் கூறிவிட்டு வேலைக்கு கிளம் பினாள்.

பிரபாகரனின் காரில் ஏறி.. அவனருகில் அமர்ந்த பின்னால்தான் மாலினிக்கு நிம்மதியாக இருந்தது. முதல் நாள் இரவில் அவனைப் பிரிந்ததில் இருந்து அவள் மன திற்குள் தோன்றியிருந்த இனம்புரியாத ஏக்கம் மறைந்து.. தாயின் மடியை அடைந்துவிட்ட மழலை போல உணர்வு வந்தது. ஆனாலும்.. பிரபாகரனின் மேல் இருந்த சின்ன கோபம் மனதின் ஓர் ஓரத்தில் இருக்க.. அவள் வேடிக்கைப் பார்ப்பதைப் போல வெளியில் பார்த்துக் கொண்டு வந்தாள்.

பிரபாகரன் பேசவே இல்லை. அவனது அந்த மௌனம் மாலினியை மிகவும் பாதித்தது. தவறு செய்தது அவன்.. அவள் கையில் இருந்த பூவை வாங்கிக் கொண் டது அவன்.. அப்படியிருக்க.. மாலினி தவறு செய்துவிட் டதைப் போல அவன் குற்றம்சாட்டும் பாவனையில் மௌன மாக வந்ததை அவளால் தாங்கிக் கொள்ள முடியவில்லை.

சும்மா இருந்தால் அது மாலினி ஆகிவிடாதே... அவனது மௌனத்தை உடைக்க முடியாதவளாய் அவள் காரில் பாடல்கள் இருந்த சிடியை ஒலிக்க விட்டாள்.

*"ஒரு நாளைக்குள் எத்தனை கனவு*
*உன் பார்வையில் விழுகின்ற பொழுது*
*தொடுவானத்தைத் தொடுகின்ற உணர்வு...*
*ஓஹோ ஹோஹோ....*

இனிமையான ஆண்குரல் ஒலித்தது. பிரபாகரனின் மனம் கிளர்ந்தது. முதல் நாள் முழுவதும் மாலினியின் அருகாமையில் இருந்த நினைவு அவனது நெஞ்சில் எழுந்தது. அதையடுத்து அவள் தினகரனுடன் பேசிச் சிரித்ததும் சேர்ந்தே நினைவில் வர.. அவன் இறுக்கமான முகத் துடன் அவளை முறைத்தான்.

*''ஒரு நிமிடத்தில் எத்தனை மயக்கம்.*
*அந்த மயக்கத்தில் எத்தனை தயக்கம்..*
*இந்தத் தயக்கத்திலும் வரும் நடுக்கம்.''*

மாலினி மெதுவாக ஆண் குரலைத் தொடர்ந்து பாடிய பெண்குரலுடன் இணைந்து பாடினாள். பிரபாகரன் சட்டென்று பாடலை நிறுத்தினான். மாலனிக்குள் கோபம் கிளர்ந்தது. இவனும் பேச மாட்டான்.. பாடலைக் கேட்கவும் விடமாட்டான் என்றால் என்ன அர்த்தம். ஒரு மனுஷிக்கு பாட்டுக் கேட்பதற்குக்கூட உரிமையில்லையா என்ன?

பொறுத்தது போதும் என்று பொங்கியெழுந்தாள் மாலினி.

''ஏன் பாட்டை நிறுத்தினீங்க?'' என்று சண்டையை ஆரம்பித்து வைத்தாள்.

''ம்ச்ச்.. தலைவலி...''

பிரபாகரன் இதைச் சொன்ன விதம் மாலினியைப் பாதித்தது. அவன் தனக்கு வந்த தலைவலியாக உடல் வேதனையைச் சொல்கிறானா.. இல்லை மாலினியைச் சொல்கிறானா என்ற சந்தேகம் அவளுக்குள் எழுந்தது. மனதில் நினைத்ததை மறைக்காமல் கேட்டாள்.

''தலைவலின்னு எதைச் சொல்கிறீங்க... இல்லை யாரைச் சொல்கிறீங்க..''



அவளது தீர்க்கமான பார்வையை தனது அலட்சியமான பார்வையால் எதிர்கொண்டான் பிரபாகரன்.

''என்ன.. அதட்டல் பலமாக இருக்கு.. மிரட்டிப் பார்க்கறியா?''

''உங்களைப் போய் யாராலும் மிரட்ட முடியுமா.. நீங்க யாரு?''

''கே. பிரபாகரன்.. கே.பின்னு இந்த தமிழ்நாடே சொல்லும்..''

''நான் அப்படிச் சொல்ல மாட்டேன்..''

''அது சரி.. எல்லோருக்கும் ஒரு வழின்னா.. உனக்குத் தனி வழியாச்சே..''

''இதை நான் சொல்லணும்.. கேபியாம்.. கே.பி.. சரியான ஹிட்லர்..''

''ஹிட்லர்.. மத்தவங்களுக்கு வேண்டும்னா என் மேல் அப்படிப்பட்ட பயமிருக்கலாம். உனக்கு அந்த பயம் இருக்கா?''

மாலினியின் முகம் மாறியது. இவன் ஏன் இதைச் சொல்கிறான். காரணமில்லாமல் சொல்ல மாட்டானே... இதற்கு என்ன பதிலைச் சொல்வது? உன்னைப் பார்த்து நான் ஏன் பயப்பட வேண்டும் என்று அவனிடம் அவளால் கேட்க முடியுமா?

''உங்களிடம் பயப்பட வேண்டிய அவசியம் இது வரை எனக்கு வந்ததில்லை அத்தான்...''

''அத்தான்...! குட்.. இதை ஒன்றை நீ கண்டுபிடித்து வைத்திருக்கிறாய் மாலினி.. வாக்குவாதம் வந்துவிட்டால் அத்தான்னு கூப்பிட வேண்டியது. சமாதானமாகி விட்டால் அந்த அத்தனை அம்போன்னு விட்டுவிட வேண்டியது..''

''ம்ச்ச்.. இப்ப நமக்குள் என்ன வந்துவிட்டது?''

''எதுவும் வரவில்லையா?''

''என்னைப் பொறுத்தவரை எதுவும் இல்லை. நீங்கள் தான் இப்போது நீங்களாகவே இல்லை அத்தான்..''

''ஓஹோ.. இந்தக் குற்றம் வேறு சொல்கிறாயா.. நான் நானாக இல்லாமல் எப்படியிருக்கிறேன்?''

''மாறிப் போய்விட்டீங்க...'' மாலினி மனம் குமுறினாள்.

''நேற்றைக்கு நைட் என்னுடன் மொட்டை மாடியில் பேசிக் கொண்டிருந்த என்னுடைய பிரபாகரனாக நீங்கள் இப்போது இல்லை... மாறிவிட்டீங்க..''

அவள் கண்களில் நீர் தளும்பி விட்டது. முதல் முறையாக அவள் அவனுடைய பெயரை உச்சரித்ததைக் கேட்ட பிரபாகரன் காரை நிறுத்தி விட்டான்..

அவன் மனதில் என்ன நினைத்தானோ.. அதையே அவளும் சொன்னதில் அவனுக்கு ஆச்சரியம் வந்தது.

''மாறியது நீயா.. இல்லை நானா?''

''உங்கள் மனச்சாட்சியிடம் இதைக் கேளுங்க..''

''ஏன்.. உன்னிடம் கேட்டால் நீ பதில் சொல்ல மாட்டாயா?''

''ம்ச்ச்.. நானே கடுப்பில் இருக்கிறேன் அத்தான்.. என் வாயைப் பிடுங்காதீங்க. எனக்கு இதெல்லாம் பழக்கம் இல்லை..''

''எது?''

''ம்ம்..? இப்படிக் காதலைச் சொல்வது.. அதன் பின்னால் நீ யாரோ நான் யாரோன்னு முறைப்பது..''

''ஓ.. மேடம் அப்படிச் சொல்கிறீங்களா..''

''ஆமாம்.. நான்பாட்டுக்கு நான் உண்டு என் வேலை உண்டுன்னு இருந்தேன். விடாமல் சைட் அடித்து.. கடலை



போட்டு.. கடைசியில் காதலையும் சொல்லிவிட்டு.. சாமியாரைப் போல் ரூமில் போய் பதுங்கிக் கொண்ட ஆள்தானே நீங்க..''

மனதை அழுத்திக் கொண்டிருந்த உணர்வுகள்.. அவளையுமறியாமல் வார்த்தையில் வெளிப்பட்டுவிட.. மாலினி நாக்கைக் கடித்துக் கொண்டு பேச்சை நிறுத்தி விட்டாள்.

''ஏய்ய்.. மாலினி...'' பிரபாகரன் கிளர்ந்து விட்டான்.

''நானாடி சாமியாரைப் போல ரூமில் போய்ப் பதுங்கிக் கொண்டேன்? காயத்ரிக்கு கல்யாணம் ஆகணும்.. நீங்கதான் பெரிய்ய்ய அண்ணன்னு கதை சொல்லி.. மொட்டை மாடியை விட்டு முதலில் ஓடினவள் நீதானேடி.. அப்படியிருந்தும்.. தூக்கம் வராமல் ஹாலுக்கு வந்தால்.. நீ தினகரனுடன் வாயடித்துக் கொண்டிருந்தாய்.. ஒரு வார்த்தை பேசிவிட்டு ஓடி விட்டாய். விடிந்ததும் உன்னிடம் பேச வந்தால்.. அப்போதும் நீ தினகரனுடன் அரட்டையடித்துக் கொண்டிருந்தாய். நீ என்னைச் சொல்கிறாயா?''

பிரபாகரன் கோபத்துடன் பொரியவும், மாலினி திகைத்து விட்டாள்.

''அத்தான்.. நான் தினகரனுடன் பேச நினைத்து பேசவில்லை..''

''இது ஒரு பேச்சாடி?''

''நிஜம்தான் அத்தான்.. உங்களுக்கு எப்படித் தூக்கம் வரவில்லையோ அதைப் போல எனக்கும் தூக்கம் வரவில்லை. பால்கனியில் நின்றுவிட்டு வரலாமென்றுதான் ரூமைவிட்டு வெளியே வந்தேன்.. அங்கே பவித்ராவும் தினகரனும் நின்று பேசிக் கொண்டிருந்தார்கள். நான் அதில் கலந்துகொண்டேன். என் நேரம்.. நீங்க வரும்போது அவள் ஓடிவிட்டாள்...''

மாலினியின் முகத்தில் நிஜமான வருத்தம் தெரியவும்.. பிரபாகரன் சற்று மனம் தெளிந்தான்.

''காலையில் எதுக்குடி தோட்டத்தில் நின்றுகொண்டிருந்தாய்? அதிலும் கவிதை வேறு சொல்லியிருக்கிறாய்..''

''ஏன் அத்தான் என் வயிற்றெரிச்சலைக் கிளப்புகிறீங்க..''

''ஏன்.. என்னாச்சு?''

''விடிந்தவுடன் உங்களைப் பார்க்கணுமுன்னு மனசு தேடிருச்சு..'' இதைச் சொன்ன மாலினியின் முகத்தில் வெட்கச் சிகப்பு வந்தது. அவளது கண்களில் மயக்கம் இருந்தது. பிரபாகரனின் பார்வையைச் சந்திக்க முடியாமல் தவிப்புடன் அவளது பார்வை அங்குமிங்கும் அலைந்தது.

அந்த நொடியில் பிரபாகரனின் மனதிலிருந்த சந்தேக மேகங்கள் அகன்று விட்டன. அவனது மனதை சூழ்ந்திருந்த குழப்பங்கள் விலகின. மாலினியின் முகத்தில் அப்பட்டமான காதல் தெரிவதை உணர்ந்தான் பிரபாகரன்.

அதில் வேஷமில்லை.. பொய்யில்லை.. அவள்.. அவனது காதலியாக உருகுவதை அவனால் புரிந்துகொள்ள முடிந்தது.

''மனசு தேடினால்.. என்னைப் பார்த்துவிட வேண்டியதுதானே..''

''அதற்குத்தான் தோட்டத்துக்குப் போனேன்.. அங்கே உங்களுக்காக காத்திருந்தால்.. உங்கள் தம்பி வந்து நிற்கிறார். கொஞ்ச நேரம் பேசிவிட்டுப் போய்விடுவாருன்னு பார்த்தால்.. விடாமல் ரம்பம் போட்டார்..''

''அவனே ரம்பம் போட்டிருக்கிறான்.. அவனிடம் போய் எதற்கு கவிதையைச் சொன்னாய்?''

''அந்தக் கவிதையைச் சொல்கிறேன்.. நீங்களே கேளுங்க..''



மாலினி சொன்ன கவிதையைக் கேட்டதும் பிரபாகரன் அயர்ந்து விட்டான். அவனுடைய காதலி வெளிப்படுத்திய மற்றுமொரு பரிமாணம் கண்டு அவன் மனம் வியந்தது.

'இவள்தான் எப்பேர்ப்பட்டவள்..'

அவனது வியப்பை அறியாத மாலினி.. இயல்பாக தன் பேச்சைத் தொடர்ந்தாள்..

''நானே மலர்விட்டு மலர் தாவும் வண்டைப் பற்றிய கவிதையைச் சொல்கிறேன்.. அதைப் புரிந்து கொள்ளாத உங்கள் தம்பி.. ஆஹா.. ஓஹோன்னு பாராட்ட ஆரம்பித்து விட்டார். இது வேலைக்கு ஆகாதுன்னு உங்களை தோட்டத்தில் பார்க்கும் ஆசையை விட்டுவிட்டு வீட்டுக்குள் வந்து விட்டேன்..''

''வண்டைப் பற்றிய கவிதையை அவனிடம் ஏன் சொன்னாய்?''

''ஆமாங்க.. இது பெரிய பிரம்ம சூத்திரம்.. உங்களுக்குத் தெரியாது. என்கிட்ட வந்து கேளுங்க. கொஞ்சம் பார்க்கிறதைப் போல ஒரு பெண் அவர் கண்ணில் தென்பட்டுவிட்டால் போதும்.. உடனே என்னமாய் கடலை போட ஆரம்பித்து விடுகிறார் தெரியுமா?''

பிரபாகரனுக்கா அது தெரியாது? அது மாலினிக்கும் தெரிந்திருக்கிறது என்ற நிம்மதியுணர்வுடன் அவன் வாய் விட்டுச் சிரித்தான். அவனது இறுக்கமான முகபாவனை மாறி.. அவனது கண்களும் சேர்ந்து சிரிக்கும் அதிசயத்தை அவனிடம் கண்டவள் அந்தச் சிரிப்பில் மயங்கிப் போனாள்.

'என்னமாய் சிரிக்கிறான்..'

அவனையே அவள் விழி விரிய பார்க்க.. அவன் அவளைப் பார்த்து கண் சிமிட்டினான்.




*பொய்கோபம் கொண்டு மௌனிக்கையில்..*
*உன் புன்னகையில் அதை நீ வெல்வதையே..*
*என்னவென்று நான் சொல்ல..?*

மாலினியின் உடலெங்கும்.. 'குப்..'பென்று ஓர் உணர்வு பற்றிக் கொண்டது. வயிற்றினில் பட்டாம்பூச்சிகள் பறக்கும் அனுபவத்தை அன்றுதான் அவள் உணர்ந்தாள். உதட்டைக் கடித்துக் கொண்டு அவள் தலைகுனிந்து கொள்ள.. அதற்கு மேலும் தாளமுடியாதவனாக அவன் தாபத்துடன் மாலினியை நெருங்கினான்.

''அத்தான்.. வேண்டாம்..'' மாலினி எதிர்பார்ப்புடன் பொய்யாக சிணுங்கினாள்.

''காதலிக்கும் பெண்.. வேண்டாம்னு சொன்னால் என்ன அர்த்தம் தெரியுமா?'' பிரபாகரன் கேலியாக நகைத்தான்.

''என்ன அர்த்தமாம்..'' தெரிந்துகொண்டே அவள் அறியாதவளைப் போல வினவினாள்.

''வேண்டும்னு அர்த்தம்..'' பிரபாகரனின் இதழ்கள் அவளது இதழ் மீது பதிந்தன.

மாலினிக்குள் பரவசம் பொங்கியது. அவள் கண் மூடி அவன் தோளில் சாய்ந்தாள். அவளை நெருங்கி அமர்ந்த பிரபாகரன், அவளது தோளைச் சுற்றிக் கையை படரவிட்டான்.

மாலினியின் மேல் அவனுக்கிருந்த மனத்தாங்கல் இருக்குமிடம் தெரியாமல் ஓடி மறைந்துவிட்டது. அவன் தொட்டவுடன் பாகாய் உருகுகிறவளிடம் குற்றம் கண்டு பிடிக்க அவனால் முடியவில்லை.



''ஏன்.. என் மேல் கோபமாய் இருந்தீங்க?'' அவள் குழந்தை போல் வினவியதும் அவனுக்கு என்னவோ போல் ஆகி விட்டது.

''ஸாரி கண்ணம்மா.. என் குணம்தான் உனக்குத் தெரியுமே... ஏதோ ஒரு சொல்லத் தெரியாத கோபம்..'' அவன் உண்மையான வருத்தத்துடன் கூறியதும் அவள் இளகிவிட்டாள்.

''இதுக்குப் போய் ஸாரி சொல்லணுமா அத்தான்.. உங்கள் கோபத்தை என்னிடம்தானே காட்டினீங்க.. இதைக் கூட நான் தாங்கிக் கொள்ள மாட்டேனா..'' அவள் காதலுடன் அவனது விரலோடு தன் விரல்களைப் பிணைத்துக் கொண்டாள்..

இப்படிப் பேசுபவளிடம் எப்படி பிரபாகரன் அந்த ரோஜாப்பூவைப் பற்றிக் கேட்பான்?

தன்னிடமிருந்த தவிப்பையும் துடிப்பையும் மாலினியும் பிரதிபலித்ததை உணர்வுபூர்வமாக உணர்ந்துகொண்ட பின்னால் அவளைச் சந்தேகித்து கேள்வி கேட்க பிரபாகரனுக்கு மனமில்லை.

அவர்களைக் கடந்து சென்ற காரை ஓட்டிக் கொண்டிருந்தவர்.. வியப்புடன் திரும்பிப் பார்த்துவிட்டுப் போவதைக் கண்டவுடன் மாலினி.. அவசரமாக விலகி அமர்ந்தாள்.

''ஏன்?''

''அந்தக் காரில் போகிறவர்.. உங்க காரைத் திரும்பிப் பார்த்துவிட்டுப் போகிறார்.. நீங்க கவனிக்கலையா?''

''உங்க காரா?''

பிரபாகரன் குற்றம் சாட்டும் பாவனையில் வினவ...

''தப்புத்தான் சாமி.. கன்னத்தில் போட்டுக்கறேன்..'' என்று கன்னத்தில் போட்டுக் கொண்டாள் மாலினி.

''சரியாச் சொல்லிப் பழகு..''

''நம்ம கார்.. போதுமா...''

''இது.... இப்படியே பேசிப் பழகு.. நம் வீடு.. நம்ம காயத்ரி... நம்ம மில்.. புரியுதா?''

மறந்தும் அவன் 'நம்ம தினகரன்..' என்று சொல்ல வில்லை என்பதை கவனித்துக் கொண்டாள் மாலினி.

''புரியுது..''

''அந்தக் காரில் போகிறவர் எனக்குத் தெரிந்தவர்.. என் கார் இங்கே நிற்குதுன்னு திரும்பிப் பார்த்துவிட்டுப் போகிறார். ஆனால்.. கார் கண்ணாடிக் கதவுகள்தான் மூடியிருக்கே.. அப்புறம் எதுக்கு தள்ளிப் போகிற?''

''இப்ப அதுதான் ரொம்ப முக்கியம்..''

''எனக்கு முக்கியம்டி...''

அவளுக்கு முகச்சிவப்பு அதிகரித்தது. அவளது வழக்கமாக அவன் கையில் கிள்ளினாள்.

''காதல் பண்ணுவதை விட்டு விட்டு காரைக் கிளப் புங்க..''

''அதற்குள்ளாகவா?''

''நேரமாச்சு அத்தான்.. நான் இதுவரை வேலைக்கு லேட்டாகப் போனதில்லை..''

''இன்றைக்கு லேட்டாய் போ..''

''அப்படிப் போனால் என்ன சொல்லுவாங்க தெரி யுமா?''

''என்ன சொல்லுவாங்க?''

''கேபியின் அத்தை மகள் லேட்டாய் வருகிறாள்னு சொல்லிவிட மாட்டாங்களா?''



அவள் எதற்கும்.. எதற்கும் முடிச்சுப் போடுகிறாள் என்ற நினைவில் அவன் சிரித்துக்கொண்டே காரைக் கிளப்பினான்.

''நீ கெட்டிக்காரிடி..''

''என்ன கெட்டிக்காரத்தனம் இருந்து என்ன பண்ண.. என் வருங்கால மாமியார் கொடுத்த பூவை உங்ககிட்ட இருந்து கைப்பற்றிக் கொள்ள முடியலையே..''

காரை ஓட்டிக் கொண்டிருந்த பிரபாகரன்.. அவள் சொல்வதைக் கேட்டதும்.. சிரிப்பை நிறுத்திவிட்டு.. தீவிர மான முகபாவனையுடன் அவளைப் பார்த்தான்.

''நீ எதைச் சொல்கிற?''

''காலையில் நீங்க வாங்கி வைத்துக் கொண்ட ரோஜாப் பூவை சொல்கிறேன்..''

''அதை அம்மா கொடுத்தாங்கன்னா சொன்ன?''

''ம்ம்ம்.. அத்தைதான் கொடுத்துவிட்டாங்களாம்..''

''அப்போ.. அம்மா.. நேரடியாக உன்னிடம் அந்தப் பூவை கொடுக்கவில்லையா?''

''ஊஹூம்.. செந்தாமரையிடம் கொடுத்துவிட்டாங்க..''

'செந்தாமரை கொடுத்தாளா?'

செந்தாமரை பொய் சொல்ல மாட்டாள்.. ஆனால்.. தினகரனின் கையில் இருந்த பூ எங்கே போனது? பிரபா கரனின் முகத்தில் சிந்தனை ரேகைகள் படிந்தன.

அவனது மனப் போராட்டத்தை உணராத மாலினி இயல்பாக தொடர்ந்து பேசிக் கொண்டிருந்தாள்.

''அந்தப் பூ.. நம்ம வீட்டுத் தோட்டத்தில் இன்றைக் குத்தான் மலர்ந்ததாம்.. அதை அத்தை எனக்காக கொடுத்து விட்டாங்களாம்.. செந்தாமரை இதைச் சொல்லி.. என்

கையில் அந்தப் பூவை கொடுத்தபோது எனக்கு எவ்வளவு சந்தோஷமாக இருந்தது தெரியுமா?''

'பூவுக்குள் பூகம்பம் என்பது இதுதான் போல..'

ஒரு பழத்துக்காக.. அண்ணன் விநாயகருக்கும் தம்பி முருகனுக்கும் மனத்தாங்கல் வரும்போது.. பூவை வைத்து ஏன் இத்தனை பிரச்னைகள் வராது என்று நினைத்துக் கொண்டான் பிரபாகரன்.

''ஸாரிடி செல்லம்.. அப்பா படம் ஹாலில் இருந்ததில்ல?''

''ஆமாம்..''

''அதுக்கு தினமும் ஒரு பூவை வைப்பேன்.. உன் கையில் அந்தப் பூவைப் பார்த்ததும் கீழே இறங்கிப் போக சோம்பல் பட்டுக்கொண்டு அந்தப் பூவை வாங்கி வைத்து விட்டேன்..''

''அவ்வளவுதானா?'' மாலினி லேசான மனத்தோடு சிரித்தாள்.

''நான் என்னமோன்னு நினைத்து பயந்துவிட்டேன் அத்தான்..''

''என்னமோன்னு நினை.. என்னை மட்டும் நினைத்து விடாதே..''

அதற்குள் மில் வந்துவிட.. இறங்கிக் கொண்ட மாலினி.. பிரபாகரன் இருந்த பக்கம் வந்து குனிந்தாள்.

''மறந்தாள்தானே நினைப்பதற்கு?''

இதைக் கேட்டு விட்டு வேகமாய் அவள் சென்று விட.... அவளின் வார்த்தைகள் மழைச் சாரலாய் அவனது மனம் நனைத்தன.

'மாலினி...' அவன் மனம் மயங்கினான்.



அவனுடைய கார் வளைந்து திரும்பி மில்லை நோக்கிப் போகாமல் வீட்டை நோக்கி விரைந்தது.

பிரபாகரன்.. கோட்டையூர் ஜமீன்தார் கார்த்திகேயனின் மூத்த மகன்.. பெரிய தொழில் சாம்ராஜ்ஜியத்தை உருவாக்கிய கர்த்தா... ஆயிரக்கணக்கான தொழிலாளர்களுக்கு சம்பளம் கொடுக்கும் முதலாளி.. பல தொழில்களை கட்டுக்குள் வைத்திருக்கும் மிகச் சிறந்த நிர்வாகி..

அவன் வீட்டுக்குள் குழப்பம் முளைப்பதா...?

தினகரனின் கையிலிருந்த பூ.. மாலினியின் கைக்கு செந்தாமரை மூலம் வந்திருக்கிறது. அதை நர்மதா கொடுத்துவிட்டதாக செந்தாமரை சொல்லியிருக்கிறாள். அந்தப் பூவை மாலினி வைத்திருப்பதைக் கண்ட தினகரனின் கண்கள் ஜொலிக்கின்றன. ஸ்வேதாவோ அதைக் குத்திக் காட்டிப் பேசுகிறாள்.

தவறு எங்கிருந்து ஆரம்பித்து என்று கண்டுபிடிக்கா விட்டால் அவன் பிரபாகரன் இல்லையே.

இதுவரை இதுபோன்ற மனக்குழப்பம் அவனுக்கு வீட்டுக்குள் ஏற்பட்டதில்லை. வெளியே எவ்வளவு பிரச்னைகள் இருந்தாலும் வீட்டுக்குள் வந்துவிட்டால் அது தானாக மறந்துவிட வேண்டும். அப்படி மறக்கடிப்பதற்குப் பெயர்தான் வீடு என்ற கொள்கையை உடையவன் பிரபாகரன். நர்மதாவும் மூத்த மகனின் மனதிற்கேற்ப வீட்டை நிர்வகித்து வந்தாள். இன்று முதன்முறையாக ஒரு பிரச்னை தோன்றியிருக்கிறது. அதன் ஆணிவேரைக் கண்டுபிடித்து முளைக்கும்போதே கிள்ளி எறிய வேண்டியது அவசியம் என்று பிரபாகரனுக்குத் தோன்றியது.

எஜமானனின் காரைக் கண்டதும் பரந்தாமன் அவசரமாக அருகில் ஓடிவந்தார்.

''என்னங்கய்யா.. போன சுருக்கில் திரும்பிட்டீங்க..''

''ஒன்றுமில்லை பரந்தாமன்.. முக்கியமான ஃபைல் ஒன்றை மறந்து வைத்துவிட்டுப் போய்விட்டேன்..''

''நீங்க அவ்வளவு சீக்கிரம் மறக்க மாட்டீங்களே..''

''இன்றைக்கு என்னவோ மறந்து விட்டது..''

பிரபாகரன், நர்மதாவைத் தேடிப் போனான். காலை உணவிற்குப் பின்னால் அவள் எப்போதுமே சற்று நேரம் ஓய்வெடுப்பாள்.

அப்போதும் அதுபோல் படுத்திருந்தவள்.. மூத்த மகனைக் கண்டதும் பரபரப்பாய் எழுந்து கொண்டாள்.

''என்ன விஷயம் பிரபா?''

''அம்மா... நீங்க காலையில் மாலினிக்கு ரோஜாப் பூ கொடுத்துவிட்டீங்களா?''

''இல்லையேப்பா..''

இந்தப் பதில் பிரபாகரன் எதிர்பார்த்ததுதான். அவன் யோசனையோடு..

''செந்தாமரை நீங்கள் கொடுத்ததாகச் சொல்லி ஒரு ரோஜாப்பூவை மாலினியிடம் கொடுத்திருக்கிறாள்மா.. அதுவும் சும்மா கொடுக்கவில்லை.. இன்றைக்கு காலையில்தான் அந்தப் பூ மலர்ந்ததாகவும்.. அதை மாலினிதான் வைத்துக் கொள்ள வேண்டுமென்று நீங்க கொடுத்துவிட்டதாகவும் சொல்லிக் கொடுத்திருக்கிறாள்..''

நர்மதாவின் புருவங்கள் யோசனையுடன் சுளித்தன.

''பொன்னி.. செந்தாமரையை வரச் சொல்லு..'' என்றாள்.

''என்னாங்கம்மா..'' என்று உடனே செந்தாமரை வந்து நின்றுவிட்டாள்.



''காலையில் மாலினிக்கு ரோஜாப் பூவை கொடுத்தாயா?''

''நீங்க கொடுத்துவிட்ட பூவுதானேம்மா.. கொடுத்துட்டேனே..''

''பொறு.. பொறு.. அது நான் கொடுத்துவிட்ட பூவுன்னு உனக்கு எப்படித் தெரியும்? நான் உன் கையில் பூவைக் கொடுக்கலையே..''

''நீங்க கொடுத்துவிட்டதாகச் சொல்லி ஸ்வேதம்மா கொடுத்தாங்கம்மா. அது இன்னிக்கு பூத்த பூவாம்.. அதை ஆசையாய் மாலினியம்மாவுக்கு கொடுத்து விட்டீங்களாம்.. இதையும் அந்தம்மாதான் சொன்னாங்க. இந்த விவரம் பூராவும் மாலினியம்மாகிட்ட சொல்லித்தானே பூவைக் கொடுத்தேன்?''

''சரி.. நீ போ..''

நர்மதா மகனைப் பார்த்தாள். பிரபாகரனின் புருவங்கள் சுளித்திருந்தன. அவன் மனம் ஒருபக்கம் தினகரன் அந்தச் செயலை செய்யவில்லை என்பதில் திருப்தி அடைந்திருந்தது. மறுபக்கம்.. இந்த வீட்டில் இருந்து கொண்டு இந்த வீட்டின் வேலையாளைப் பயன்படுத்தி இப்படியொரு காரியத்தை செய்யத் துணிந்த ஸ்வேதா.. வேறு எதற்குத்தான் துணியமாட்டாள் என்று கேள்வி கேட்டது.

ஸ்வேதா மிகவும் சாதுர்யமாக அந்த விளையாட்டை விளையாடியிருந்தாள். ஆனானப்பட்ட பிரபாகரனே ஒரு கணம் தம்பி கொடுத்த பூவை மாலினி வாங்கிவிட்டாள் என்று நினைக்க வைத்து விட்டாளே...

பிரபாகரன் பல்லைக் கடித்தான்.




*உறக்கத்திலும் என் மனது..*
*உன் முகத்தை நினைக்கும் நினைவை..*
*என்னவென்று நான் சொல்ல..?*

கத்தி முனையில் நடப்பது என்று சொல்வார்களே.. அது போன்றது காதலில் விழுந்தவர்கள் பேசுகின்ற பேச்சுகள்.. அவர்களையும் அறியாமல் சிறிது கவனப்பிசகாகிப் பேசிவிட்டாலும் அந்தப் பேச்சு கத்திமுனையைவிடக் கூர்மையாக இதயத்தை அறுத்துவிடும். காலம் பூராவும் அந்த ரணம் ஆறாமல் வலி இருந்து கொண்டே இருக்கும்.

கண்ணகி பேசிய எந்த வார்த்தையும் கோவலனைக் காயப்படுத்தவில்லை. அதுவே அவனது காதலியான மாதவி பாடிய 'கானல் வரிக் கவிதை..' அவனைக் கோபப் படுத்தியது. அந்தக் கோபத்தில் அவன் மாதவியைப் பிரிந்தான். மணிமேகலையுடன் அவளை அநாதையாக நிற்க விட்டு விட்டு ஊரை விட்டே சென்றுவிட்டான்.

அதுபோல பிரபாகரனும் ஏதேனும் மாலினியைக் கேள்வி கேட்டிருந்தால் என்ன நடந்திருக்கும்? குற்றமற்ற மாலினி அந்தச் சொல்லைப் பொறுத்திருப்பாளா? அந்த வினாடியே பிரபாகரனை விட்டுப் பிரிந்து சென்றிருக்க மாட்டாளா?

நினைக்கும்போதே நடுங்கியது அவனது நெஞ்சம் மாலினியில்லாத வாழ்வை நினைத்துப் பார்க்கவே அவனால் முடியவில்லை.

அதுதான் ஸ்வேதாவின் திட்டமா? அப்படியென்றால் அவள் இனிமேலும் அந்த வீட்டில் இருப்பது சாத்தியப் படாது என்று முடிவெடுத்தான் பிரபாகரன்.



அது அவனுடைய வீடு. அங்கே அவனுடைய தாயும் தங்கையும் சகோதரர்களும் ஒற்றுமையுடன் வாழ வேண்டும்.

ஸ்வேதா பிரிக்கப் பார்த்தது மாலினியையும் பிரபாகரனையும் மட்டும் அல்ல.. அண்ணனையும் தம்பியையும் பிரிக்கப் பார்த்தாள். அந்த தைரியமும் துணிச்சலும் அவள் மனதிற்கு வந்து விட்ட பின்பு அவளை அந்த வீட்டில் தங்குவதற்கு பிரபாகரனால் அனுமதிக்க முடியாது.

''அம்மா...''

''சொல்லுப்பா..''

மகனின் தீவிரமான ஆலோசனையைக் கண்டவுடன் ஏதோ நடந்திருக்கிறது என்று யூகித்துக் கொண்டு அவனது உத்தரவிற்காக காத்திருந்த நர்மதா கேட்டாள்.

''ஸ்வேதாவின் வீட்டினர் இன்னும் இருக்காங்க இல்லையா?''

''ஆமாம் பிரபா... இன்னும் இரண்டு மூன்று நாள்கள் கழித்துதான் அவங்க கிளம்புவாங்க..''

''அவங்க போகும்போது ஸ்வேதாவை அவங்களுடன் அனுப்பி வைத்து விடுங்க..''

''பிரபா...''

''இது என் வேண்டுகோள்ம்மா. இதை உத்தரவாக நீங்க எடுத்துக் கொண்டாலும் சரி... இனி அவள் இந்த வீட்டில் இருக்கக் கூடாது..''

''என்ன நடந்தது பிரபா?''

''சொல்கிற விஷயமாக இருந்தால் நானே உங்கஎிடம் சொல்லியிருப்பேனேம்மா.. இவள் நம் குடும்பத்தை உடைக்கப் பார்க்கிறாள். அவள் இந்த வீட்டில் இருப்பது பெரிய ஆபத்தில் கொண்டு போய் விட்டு விடும்மா...''

''நீயா இப்படிப் பேசுவது?''

''நானேதான் பேசுகிறேன்.. மகாபாரதத்தில் பீஷ்மர் வில்லைப் போட்டுவிட்டு நிராயுதபாணியாக ஏன் நின்றார்ம்மா? அவரை எதிர்த்த அர்ஜுனனின் தேரில் இருந்த சிகண்டி பிறப்பால் ஒரு பெண்.. மாவீரன் எவனும் பெண்ணை எதிர்த்துப் போராட மாட்டான். அப்படிப் போராடினால் அவன் ஆண்மகன் அல்ல.. நான் வீரன்ம்மா.. ஆண்மகன்..''

இதற்கு மேல் எப்படி நர்மதா வாதாடுவாள். அவளுக்கு மூத்த மகனின் சொல்தான் வேதம். பிரபாகரன் எதைச் சொன்னாலும் கேள்வியே கேட்காமல் ஏற்றுக்கொள்வதுதான் அவளுடைய பழக்கம்.

ஆளவந்தாருக்காகவும் விசாலாட்சிக்காகவும் அவர்களின் பேத்தியை பிள்ளைகளின் மறைமுக எதிர்ப்பையும் மீறி அத்தனை நாள்களாக வீட்டில் இருக்க விட்டிருந்தாள்.

இப்போது பிரபாகரன் தீர்மானமாக சொல்லிவிட்ட பின்பு அவளைத் தங்க வைக்க நர்மதாவால் எப்படி முடியும்?

''ஆகட்டும் பிரபா..''

அதற்கு மேல் அங்கே நிற்காமல் பிரபாகரன் போய் விட்டான். நர்மதா ஆயாசத்துடன் எழுந்து கொண்டாள். இனி காலைத் தூக்கம் போட அவளால் முடியாது. அறையை விட்டு வெளியே வந்தவள் ஆளவந்தாரைத் தேடிச் சென்றாள்.

''பெரியப்பா..''

மாடி பால்கனியில் மனைவி விசாலாட்சியுடன் கதை பேசிக் கொண்டிருந்த ஆளவந்தார் திரும்பிப் பார்த்தார்.

''வாம்மா நர்மதா..''

''காபி சாப்பிட்டீங்களா பெரியப்பா..''



''ஆச்சும்மா.. நீ உட்காரு..''

நர்மதா, விசாலாட்சியின் அருகே அமர்ந்தாள். எப்படி பேச்சை ஆரம்பிப்பது என்று அவளுக்குத் தயக்கமாக இருந்தது.

தம்பி மகளின் முகக் குறிப்பிலிருந்து அவள் எதையோ சொல்வதற்காக வந்திருப்பதை ஆளவந்தாரால் புரிந்து கொள்ள முடிந்தது.

''என்ன விஷயம் நர்மதா?''

''பெரியப்பா.. எனக்கு அம்மா.. அப்பா இல்லாத குறையை நீங்களும் பெரியம்மாவும்தான் போக்கிக்கிட்டு இருக்கீங்க..''

''அதுக்கென்னம்மா.. உன்னை நாங்க பெத்த பெண்ணாகத்தான் நினைக்கிறோம்.. வேற்றாளாய் நினைக்கலியே..''

''அண்ணன்கள் மூன்று பேரையும் என் கூடப் பிறந்த அண்ணன்களாகத்தான் நான் நினைக்கிறேன்..''

''இதை நீ சொல்லணுமாம்மா..''

''அந்த உரிமையினால்தான் ஸ்வேதாவை இத்தனை நாளாய் இங்கே தங்க வைச்சிருந்தேன்..''

ஆளவந்தாருக்கும் விசாலாட்சிக்கும் நர்மதா கூற வந்த விவரம் என்னவென்று விளங்கி விட்டது. அவர்கள் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள்..

''பெரியம்மா.. நான் சொல்லித்தான் உங்களுக்கு புரியணும்னு இல்லை. எப்போதுமே கண்ணுக்கு முன்னால் இருக்கிற பொருள் மீது யாருக்கும் அவ்வளவு சீக்கிரத்தில் கவர்ச்சி ஏற்பட்டுவிடாது. எட்ட இருக்கும் பொருளின் மேல்தான் பிடிப்பு வரும்..''

''நிசம்தான் நர்மதா..'' என்றாள் விசாலாட்சி.

''இத்தனை வருஷமாக ஸ்வேதா இந்த வீட்டில்தான் இருக்கிறாள். ஆனால்.. பிரபாவோ தினாவோ அவளைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளப் பிரியப்படலை..'' நர்மதா தயக்கத்துடன் கூறினாள்.

''பிரியமில்லாத பிள்ளைகளை வற்புறுத்த வேணாம் நர்மதா.. பெண் கொடுத்து பெண்ணை எடுத்தால்தான் நம் சொந்தம் நிலைக்கும்னு இல்லை.. இது எப்போதுமே மாறாத சொந்தம். இதுக்கு எதுக்கு இப்படிக் கலங்கறே..'', ஆறுதலாகப் பேசினாள் விசாலாட்சி..

''அப்படியில்லை பெரியம்மா.. அண்ணன் என் வீட்டில் பெண் கொடுக்க ரொம்பவும் ஆசைப்படுகிறார்..''

''யாராருக்கு எங்கே முடியணும்னு ஆண்டவன் போட்ட கணக்கு இருக்கு.. அதுப்படிதான் நடக்கும்.. வீணாய் நீ ஏன் மனசைப் போட்டுக் குழப்பிக்கறே. ஸ்வேதாவை எங்க கூட கூப்பிட்டுக் கொண்டு போகணு முன்னுதான் நாங்களும் முடிவு பண்ணியிருந்தோம்.. வயதுக்கு வந்த பெண்ணை வருஷக்கணக்கில் அத்தை யின் வீட்டில் விட்டு வைக்கிறது சரியில்லைன்னுதான் நானும் உன் பெரியப்பாவும் நினைக்கிறோம்..''

''பெரியம்மா..''

''த்ச்சு.. உன் அண்ணனுக்குத்தான் புத்தியில்லை.. பெத்த பெண்ணை வளர்க்கத் தெரியாமல் வளர்த்து வைத்திருக்கிறான். அதை நாங்க எடுத்துச் சொன்னால் காதில் போட்டுக்கவும் மாட்டான். அதுக்கு நீ என்னம்மா பண்ணுவ? உன் மேல் என்ன குற்றமிருக்கு? நீ கண்கலங் காதே.. கண்ணைத் துடைச்சிக்கிட்டு வேலைகளைக் கவனி...''

''பெரியப்பா...''

''நாங்க பார்த்துக்கறோம் நர்மதா.. சுவாதியும் ஸ்வேதா வும் ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகள்தான். ஆனால், சுவாதி



இருக்கிற இடமே தெரியாது. குணத்திலயும் பண்பிலயும் அவ அப்படியே அவளுடைய அம்மா பரிமளத்தின் வார்ப்பு. அவளோட வளர்ப்பு. ஸ்வேதாவை சின்ன வயதிலிருந்தே உன் அண்ணன் இப்படி வளர்த்து வைத்துவிட்டான். நாங்க சொன்னால் எங்களையே எதிரியாகப் பார்க்கிறான்..''

''இப்படிச் பேச வேண்டாம் பெரியப்பா.. நம்ம பெண்ணை நாமே விட்டுக் கொடுத்தால் எப்படி? அந்த நினைவில்தான் நான் ஸ்வேதா செய்த எந்தக் காரியத்தை யும் கண்டிக்க மட்டுமே செய்தேன். அவளை கருங்கல் லுக்கு திருப்பி அனுப்ப வேண்டுமுன்னு நினைக்க வில்லை. ஆனா, இன்னிக்கு பிரபாகரன் முடிவாகச் சொல்லிவிட்டான்..''

''பிரபாகரன் சொன்னானா? என்ன சொன்னான் நர்மதா?''

''இந்த ஸ்வேதா என்ன பண்ணித் தொலைத்தாள்னு தெரியவில்லை பெரியப்பா. இனி ஸ்வேதா இந்த வீட்டில் இருக்கக் கூடாதுன்னு சொல்லிவிட்டான்...''

ஆளவந்தாரும் விசாலாட்சியும் திகைப்புடன் பார்த்துக் கொண்டார்கள். அவர்களுக்குப் புரிந்துவிட்டது. நர்மதா சொல்வது மறைமுகமான செய்தி. அந்த செய்தி சொல்ல வருவது என்னவென்றால்.. ஸ்வேதா அந்த வீட்டின் மருமக ளாக இனி ஒருபோதும் வர முடியாது.

கார்த்திகேயனின் மறைவுக்குப் பின்னால் அந்த வீட்டில் பிரபாகரன்தான் குடும்பத் தலைவன். அவன் எடுக்கும் முடிவிற்கு அவனது தாய் உட்பட எல்லோரும் கட்டுப்படுவார்கள். அப்பேர்ப்பட்ட பிரபாகரன் இனி ஸ்வேதா அந்த வீட்டில் விருந்தாளியாகக்கூட இருக்கக் கூடாது என்ற முடிவை எடுத்துவிட்டான்.. அதைக் கண்டிப்பாக தாயிடம் கூறியும் விட்டான்.

விருந்தாளியாகக்கூட அந்த வீட்டில் ஸ்வேதா இருக்கக்கூடாதென்று சொல்லிவிட்டவன்.. மருமகளாக அவளை எப்படி இந்த வீட்டில் காலம் முழுவதும் இருக்க அனுமதிப்பான்?

இந்த முடிவை மாணிக்கவாசகம் எப்படி எதிர் கொள்ளப் போகிறாரென்று ஆளவந்தாரும் விசாலாட்சியும் கவலைப்பட்டார்கள். அவர்களும் ஆயிரம் முறை இரண்டாவது மகனுக்கு புத்தி சொல்லிப் பார்த்துவிட்டார்கள். மாணிக்கவாசகம் கேட்டுக் கொள்வதாகவே இல்லை. எல்லோரும் தாங்கள் பிடித்த முயலுக்கு மூன்று கால்கள் என்று சொன்னால், அவர் மட்டும் அது ஒற்றைக் கால்தான் என்று இன்னும் அதிகமாக பிடிவாதம் பிடிப்பவராக இருந்தார்.

''கோட்டையூர் ஜமீன் வம்சத்தில் பொண்ணைக் கொடுக்கணும்கிறதுதான் என்னோட லட்சியம்.. இதுக்கு நீங்க குறுக்கே வராதீங்கப்பா..''

''ஏண்டா.. எனக்கு மட்டும் என் பேத்தியை அங்கு கொடுக்கணும்கிற ஆசையிருக்காதா?''

''இருக்குது அப்பா.. உங்க மனசில் அந்த ஆசையிருக்கு. ஆனா, அது நான் பெத்த மகளைக் கொடுக்கணும்கிற ஆசையில்லை. வாசவன் பெத்த மகளைக் கொடுக்கணும்கிற ஆசை..''

''அபாண்டமாய் பேசாதே மாணிக்கம்..''

''நான் காரணமில்லாமல் சொல்லவில்லை. இப்போது கூட உங்கள் வாயிலிருந்து உங்க பேத்தியை அந்த வீட்டில் கொடுக்கணும்கிற ஆசையிருக்குன்னுதானே வருது.. ஸ்வேதாவை அந்த வீட்டில் கொடுக்கணும்னு வரவில்லையே..''

''ஏண்டா.. ஸ்வேதா என் பேத்திதானேடா..''

''ஆனா.. பவித்ராவும் உங்க பேத்திதானேப்பா.. எப்பவுமே உங்களுக்கு என்னைவிட.. அண்ணன் மேலயும் தம்பி மேலேயும் பாசம் அதிகம்ப்பா. அண்ணன் வீட்டில் ராதிகாவை கல்யாணம் பண்ணிக் கொடுத்துட்டாங்க. அதனால அவளை விட்டு விட்டீங்க. தம்பி வீட்டில் பவித்ரா கல்யாணத்துக்கு தயாராக இருக்கிறா.. அதனால அவளை உங்க மனதில் வைத்துக்கிட்டு பேசுகிறீங்க..''



''இப்படியெல்லாம் நினைக்க உன்னால் மட்டும் தான் முடியும்டா மாணிக்கம்..''

''அப்போ.. பவித்ராவை நர்மதாவின் வீட்டிலிருந்து பெண் கேட்டு வந்தால்.. கொடுக்க முடியாதுன்னு சொல்லி விட்டு என் மகளைத்தான் அவ மருமகளாக்கிக்கணும்னு கண்டிஷன் போடுவீங்களா?''

அங்கே சுற்றி இங்கே சுற்றி மாணிக்கவாசகம் இங்கே வந்து நின்று கிடுக்கிப் பிடி போடுவார் என்று எதிர்பார்த்திருக்காத ஆளவந்தார் திகைத்துப் போனார்.




*ஒரு சின்னஞ்சிறு சொல்லில்*
*என் இதயம் சிதறிவிட்ட நிலையை*
*என்னவென்று நான் சொல்ல..?*

''பேசணும்னு எதையும் பேசாதே மாணிக்கம்...'' ஆளவந்தார் கண்டிப்புடன் சொன்னார்.

''நான் கேட்டதுக்கு பதில் சொல்லுங்கப்பா..''

''நீ எதிர்பார்க்கும் பதிலை என்னால் சொல்ல முடியாது மாணிக்கம்..''

''அதுதான் ஏன்னு கேட்கிறேன்..''

''இதோ பார் மாணிக்கம்... பவித்ராவை நர்மதா பெண்

கேட்டால் கொடுக்கிறதும் மறுக்கிறதும் வாசவனின் விருப்பம். அதில் நான் தலையிட முடியாது..''

''நீங்க இப்படித்தான் பேசுவீங்கன்னு எனக்குத் தெரியும்ப்பா. எப்பவுமே உங்களுக்கு அவன்தான் உசத்தி..''

''அப்போ உன் அண்ணன் உசத்தியில்லையா? இப்பத்தானே எனக்கு உன்னைத் தவிர.. மற்ற இரண்டு மகன்கள் மேலயும் அன்பும் பாசமும் ஜாஸ்தின்னு சொன்னே..''

''அப்பா.. முடிவா என்னதான் சொல்றீங்க.. நீங்க பார்த்து நர்மதாகிட்ட அழுத்தமா ஒரு வார்த்தை சொன்னால் போதும்.. அவ கேட்டுக்குவா..''

''நான் சொல்லமாட்டேன்..''

''ஏன்ப்பா உங்களுக்கு இந்த கெட்ட எண்ணம். உங்க பேத்தி நன்றாக வாழணும்கிற ஆசை உங்களுக்கு இல்லையா?''

''அது என் நெஞ்சு நிறைய இருக்கிறது மாணிக்கம். ஆனால்.. அதற்காக என் தம்பி மகளை ஒரு நாளும் வற்புறுத்த மாட்டேன். அவளுக்கு உன் மகளை மருமகளாக ஆக்கிக் கொள்ளணும்னு ஆசை வந்தால் அதற்கு நான் தடை சொல்ல மாட்டேன். அதேசமயம் பவித்ராவை மருமகளாக்கிக்கணும்னு அவள் நினைத்தாலும் மறுப்புச் சொல்ல மாட்டேன். இல்லை.. இவங்க இரண்டு பேரையும் விட்டு விட்டு அவள் வெளியே பெண் கட்ட நினைத்தாலும் அதில் நான் தலையிட மாட்டேன்.

''ஆனால்.. தாய்மாமன் வீட்டுச் சீர்செய்ய மட்டும் முதல் ஆளாகப் போய் நிற்க மட்டும் தவற மாட்டீங்க..''

''அது என் கடமை..''

''எனக்கு வயிறு எரிகிறதுப்பா. ஒன்றுக்கு நான்கு பெண்கள் நம் வீட்டில் இருக்கு. நாங்க அண்ணன் தம்பிகள்



மூன்று பேரும் பெண்பிள்ளைகளை பெற்று வைத்திருக்கிறோம். நர்மதாவுக்கு மூன்று மகன்கள் இருக்காங்க.. அவங்க மூன்று பேருக்கும் எங்க மூன்று வீட்டிலும் பெண் எடுத்தால் சொந்தமும் இறுகும். நாங்க அண்ணன் தம்பி மூன்று பேரும் ஒற்றுமையாக இருப்போம். அதை விட்டு விட்டு கருணாகரனுக்கு வெளியே பெண் கட்டியதிலிருந்து பிரச்னை ஆரம்பித்துவிட்டது..''

''ஒரு பிரச்னையும் இல்லை. எல்லாம் அவங்கவங்க மனதில்தான் இருக்கிறது. மனுஷக் கழுதையாகப் பார்த்து மலையை மடுவாக்கலாம்.. மடுவை மலையாக்கலாம்..''

''பெண்ணையாவது எங்க மூன்று பேரின் வீட்டில் கொடுப்பான்னு பார்த்தால்.. அதுவும் இல்லை..''

''காயத்ரிக்கு ஷியாம்சுந்தரைத்தானே பிடிச்சிருக்கு..''

''தட்டிக்கழிக்க இது ஒரு சாக்கு.. அதென்னப்பா.. பெற்ற பிள்ளைகளுக்கு வால் வளர்த்துவிடுவது.. இவங்களைத்தான் கட்டணும்னு சொன்னால்.. கண்ணை மூடிக்கிட்டு அவங்க கட்டிக்கிரணும்.. அதை விட்டுவிட்டு.. அவனைப் பிடிக்குது, இவனைப் பிடிக்குதுன்னு சொல்லிக்கிட்டு அலைந்தால்.. அது நன்றாகவா இருக்கு?''

''இதை உன் மகளுக்கு சொல்லிக் குடு.. இப்போ ஆளை விடு...''

அறிவுரை சொல்ல ஆரம்பித்தாலே மாணிக்கவாசகம் கதி கலங்க வைக்க ஆரம்பிக்க... அவரிடம் வாயைத் திறக்கவே ஆளவந்தார் பயப்பட ஆரம்பித்தார்.

''ஏங்க.. இந்த மாணிக்கம் செய்வது கொஞ்சம்கூட சரியில்லை. வருஷக்கணக்காய் ஸ்வேதாவை நர்மதாவின் வீட்டில் விட்டு வைக்கலாமா? சொந்த பந்தம் கேட்கிற கேள்விக்கு பதில் சொல்லி முடியலை. நீங்களாவது அவன்

கிட்ட சொல்லக் கூடாதா?'' விசாலாட்சி தாங்க முடியாமல் கேட்பாள்.

''ஏன்.. நீ பெற்ற தாய்தானே. நீதான் அவன் கிட்ட சொல்லிப் பாரேன்..'' ஆளவந்தார் கடுப்புடன் பதில் சொல்வார்.

''ஐயோ.. நான் சொல்வதா?''

''சொல்லச் சொன்னதற்கே இப்படி அலறுகிறாயே.. நான் சொல்லிவிட்டு படும் அவஸ்தையைப் பற்றி உனக்குத் தெரியுமா?''

மாணிக்கவாசகத்தின் விதண்டாவாதமான கேள்வி களுக்குப் பயந்து ஆளவந்தார்.. மகனைக் கேள்வி கேட்கும் வேலையை விட்டுவிட்டார்.

தகப்பனின் வாயை மிகச் சாமர்த்தியமாக அடைத்து விட்ட மாணிக்கவாசகம்... மார்த்தாண்டத்தில் இருந்து மகளை அழைத்துக் கொண்டு வரும் நினைவே இல்லாமல் இருந்தார். அதை நினைவுபடுத்திய மனைவியையும் அதட்டி அடக்கி வைத்தார்.

''ஏன் மாணிக்கவாசகம்.. உங்களுடைய இரண்டாவது பெண் ஸ்வேதா எங்கே?'' என்று உறவினர்கள் யாராவது கேட்டால்..

''அவள் இருக்கவேண்டிய இடத்தில் இருக்கிறாள்..'' என்று அமர்த்தலாக பதில் சொல்லுவார்.

''இருக்கவேண்டிய இடமா?''

''ஆமாம்.. மார்த்தாண்டபுரத்தில் இருக்கும் என் தங்கையின் வீடுதான் அவள் இருக்கவேண்டிய இடம்..''

இவ்வளவு உறுதியாக இருக்கும் மாணிக்கவாசகத் திடம் நர்மதாவின் முடிவை எப்படிச் சொல்வது என்று கவலைப்பட்டார் ஆளவந்தார். அந்த வேலையைப் பார்க்கும் பொறுப்பை எடுத்துக் கொண்டாள் விசாலாட்சி.



''பரிமளம்.. இங்கே வாம்மா..''

''என்னங்கத்தை...''

''உன் புருஷன் எங்கே?''

''ஸ்வேதாவுடன் பேசிக் கொண்டிருக்கிறார்..''

'அப்படி என்னதான் மகளுக்கு ஓதுவானோ... என்ன ஓதி என்ன செய்ய? நர்மதா பெண்ணைப் பிடிக்கலைன்னு சொல்லிட்டா..

நல்லதை ஓதியிருந்தா.. அவளும் நல்லபடி இருந் திருப்பா.. சாகஸம் பண்ண ஓதினா.. இப்படித்தான் பெயர் எடுப்பா. அறிவு கெட்டவன்..'

மனதிற்குள் இரண்டாவது மகனைத் திட்டித் தீர்த்தாள் விசலாட்சி.

''பரிமளா.. உன்கிட்ட சொல்வதை பொறுமையாய் காதைக் கொடுத்துக் கேளும்மா..''

''சரிங்கத்தை...''

'நீ கேட்டு விடுவாய்.. நீ போய் ஒப்பிப்பதை உன் புருஷன் கேட்கணுமே..'

''என்னத்தை பேசாமல் இருக்கீங்க..''

'எப்படிப் பேசுவதுன்னு மனதில் ஒத்திகை பார்த்துக் கிட்டு இருக்கேன்ம்மா..'

''அத்தை... அத்தை...''

பேச அழைத்துவிட்டு விசாலாட்சி ஒரு மார்க்கமாக பார்த்துக் கொண்டு அமர்ந்து விடவும்.. பரிமளா பயந்து விட்டாள்.

''என்ன பரிமளா..''

''எதையோ சொல்ல வந்தவங்க.. பேசாமல் உட்கார்ந் துட்டீங்களே...''

''அதை எப்படிச் சொல்கிறதுன்னு யோசித்துக்கிட்டு இருக்கேன் பரிமளா.. வேறு ஒன்றுமில்லை..''

''என்ன விஷயமாக இருந்தாலும் என்கிட்ட சொல்லுங்க அத்தை...''

''நம்ம நர்மதா இன்றைக்கு ஒரு விஷயம் சொன்னாள்..''

''என்னவாம்..''

''நம்ம ஸ்வேதாவை நாம் போகும்போது கூடவே கூப்பிட்டுக் கொண்டு போய்விடச் சொல்கிறாள்..''

''அத்தை...''

பரிமளம் அதிர்ந்துவிட்டாள். அவளுக்குத் தெரியும்.. இது மிகப் பெரிய அவமானம். இதைத் தேடித் தந்துவிட்ட கணவனின் மீது அவளுக்கு அடக்க முடியாத கோபம் ஏற்பட்டது.

விசாலாட்சி மருமகளை இரக்கத்துடன் பார்த்தாள்.

''உன் வேதனை எனக்குப் புரியுது பரிமளா. இப்படி ஒரு சொல் வந்துவிடக் கூடும்ன்னுதான் நான் தலைப்பாடாய் உன் புருஷன்கிட்ட அடிச்சுக்கிட்டேன். அவன் என் சொல் கேக்கல. இப்ப.. இப்படி ஒரு வார்த்தையை காது கொடுத்து கேட்கும்படியாகி விட்டது. உன் மாமாவும் புத்தி சொல்லிப் பார்த்துவிட்டார். மாணிக்கவாசகம் அவர்கூட சண்டைக்குப் போனான். இப்ப நர்மதாவின் வாயிலிருந்து இப்படி ஒரு வார்த்தை வந்து விட்டது. இனிமேல் என்ன செய்ய?''

''நர்மதாவும் தான் ஏன் இப்படிச் சொல்ல வேண்டும் அத்தை?''

''கல்யாணம் பண்ணிக் கொண்டு இன்னொரு வீட்டிற்கு வாழப் போகிற அடுத்த வீட்டுப் பெண்ணை தன் வீட்டில் ஒரு மனுஷி எத்தனை காலம்தான் தங்க வைத்துக் கொள்வாள்?''



''ஏன்.. அவளுடைய இரண்டு மகன்களில் ஒருவனுக்கு என் மகளைக் கட்டிக் கொண்டால்தான் என்ன?''

''இதை அவளிடம் போய் நாம் கேட்க முடியுமா பரிமளா? பிரபாகரனுக்கு ஸ்வேதா இந்த வீட்டில் விருந்தாளியாகக்கூட இருப்பதில் இஷ்டமில்லையாம். அவனுக்கும் அவன் தம்பிக்கும் ஸ்வேதாவின் மேல் கொஞ்சம் கூட பிரியம் வரவில்லையாம். வராத பிரியத்தை நம்மால் எப்படி வரவைக்க முடியும் பரிமளா.. அவங்க வீட்டில் இஷ்டப்படாதபோது நாம் கட்டாயப்படுத்தி கல்யாணம் பண்ணிக் கொடுக்க முடியுமா? அப்படிக் கொடுக்கும் அளவிற்கு நாம் தாழ்ந்துவிட்டோமா?''

இயல்பான குடும்ப கௌரவத்தின் கர்வம் விசாலாட்சியின் குரலில் தொனித்தது. பரிமளம் வருத்தத்துடன் மாமியாரின் பேச்சுக்கு தலை அசைத்தாள்.

''நானும் சொல்லிப் பார்த்து விட்டேன் அத்தை... நாம் எதில் குறைந்து விட்டோம்.. நம் பெண்ணை வைரத்தாலேயே இழைத்துக் கல்யாணம் பண்ணிக் கொடுக்கும் அளவிற்கு நமக்கு வசதியிருக்கு. அப்புறம் எதுக்கு ஸ்வேதாவை அழையாத விருந்தாளியாக இங்கே கொண்டு வந்துவிடணும்னு.. அவர் என் சொல் பேச்சை எப்போது கேட்டார் இப்போது கேட்பதற்கு..''

''அதுக்குத்தான் இந்த வார்த்தையை கேட்க வைச்சிட்டான்.. அவங்கவங்க இடத்தில் அவங்கவங்க இருந்தால் தான் மதிப்பு. இடம் மாறினால் இந்தப் பெயர்தான் வரும்..''

''நான் அவரிடம் இதை சொல்லிவிடுகிறேன் அத்தை...''

மனைவிக்கும் மருமகளுக்கும் இடையே நடந்த உரையாடலை ஊடே குறுக்கிடாமல் செவிமடுத்த ஆளவந்தார்

நிம்மதிப் பெருமூச்சு விட்டார். மகனிடம் இந்த செய்தியைச் சொல்ல வேண்டிய பொறுப்பு அவருக்கில்லை.

அதை புத்திசாலித்தனமாக மருமகளின் தலையில் சுமத்திவிட்டாள் விசாலாட்சி.

கோபத்துடன் மாணிக்கவாசகமும் ஸ்வேதாவும் பேசிக் கொண்டிருந்த இடத்திற்குப் போனாள் பரிமளம்.

என்றைக்கும் இல்லாத திருநாளாக கோபத்துடன் வந்து நின்ற மனைவியைப் பார்த்ததும் பேச்சை நிறுத்தி விட்டு அவளின் முகத்தைப் பார்த்தார் மாணிக்கவாசகம். அவள் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தது.

'என்னடா இது.. என் தர்ம பத்தினி கட்டிப்போட்ட சாதுப் பசு போல இருப்பாள். இப்ப என்னன்னா காளி அவதாரம் எடுத்திருக்காளே... என்னவா இருக்கும்..' தாடையைத் தடவி யோசித்தார் மாணிக்கவாசகம்.

பரிமளமே கோபாவேசம் கொண்டிருக்கிறாள் என்றால்.. மாணிக்கவாசகம் பெரிய தவறைச் செய்திருக்க வேண்டும் என்ற நினைவு மனதில் எழ.. சுதாரிப்பாக முந்திக் கொண்டு மனைவியை அதட்டினார் மாணிக்கவாசகம்.

''எதுக்குடி இப்ப பத்ரகாளி போல வந்து நிற்கிறே..''

''உங்களுக்கு பெண்டாட்டியாகிப் போயிட்டேனில்ல.. அப்படித்தான் வந்து நிற்பேன்...''

''இது கருங்கல்லும் இல்லை.. நீ நின்றுகிட்டு இருக்கிறது நம்ம வீடும் இல்லை... அடக்கி வாசி...''

வாயைக் கொடுத்து மாட்டிக் கொண்டார் மாணிக்கவாசகம்.





# 60

*நீ விட்டுச் சென்ற நினைவுகளால்*
*விரிசல் கண்ட என் மனதை...*
*என்னவென்று நான் சொல்ல...?*

''ஓஹோ.. அந்த நினைப்புகூட உங்க மனசில் இருக்கா?''

''எந்த நினைப்பு?''

''இது உங்க வீடில்லை.. அடுத்தவங்க வீடுங்கிற நினைப்பு...''

பரிமளம் எந்த இடத்திற்கு வருகிறாள் என்று சட்டென்று கண்டுகொண்டார் மாணிக்கவாசகம். அவள் அறிவுரை சொல்ல இடம் கொடுத்துவிடக்கூடாதென்று கவனமாக பேச ஆரம்பித்தார்.

''அடுத்தவங்க வீடா? எது அடுத்தவங்க வீடு.. இது என் தங்கையின் வீடுடி..''

''உங்க தங்கையைக் கல்யாணம் பண்ணிக் கொடுத்த வீடு..''

''அதுக்கென்ன இப்ப?''

''பொண்ணைக் கொடுத்த வீட்டில் இரண்டு நாள் தங்கவே நாம் ஆயிரம் யோசனை யோசிக்கணும்..''

''இதுதான் உன் பிரச்னையா.. வா.. இப்பவே கிளம்பி நம்ம ஊருக்குப் போகலாம்..''

''ஏய்ய் ஸ்வேதா.. கிளம்புடி..''

''பொறு.. பொறு.. அவளை எதுக்கு இப்ப கிளம்பச் சொல்?''

''வெட்கமாயில்லை உங்களுக்கு.. நான் எதுக்கு சொல்கிறேன்னு உங்களுக்குத் தெரியாதா?''

''என்னடி சொன்னே?''

கோபத்துடன் எழுந்த மாணிக்கவாசகம் பரிமளத்தின் கன்னத்தில் ஓங்கி ஒரு அறைவிட்டார். திருமணம் ஆகி அவருடைய மனைவியாக பரிமளம் வாழ ஆரம்பித்த நாளில் இருந்து அதுவரை மாணிக்கவாசகம் கோபமாக பேசும்படிகூட பரிமளம் நடந்து கொண்டதில்லை. அன்று அவர் அடித்தே விட்டார். ஆனாலும் பரிமளம் அசையாமல் முறைப்பாய் அவரது பார்வையை எதிர்கொண்டாள்.

''ரொம்ப சந்தோஷமாயிருக்கு.. சொல்லு பொறுக்காத குணம் இன்னும் உங்க ரத்தத்தில் இருக்குன்னு தெரியுது..''

''இன்னும் என் ரத்தத்தில் இருக்குன்னு சொல்கிறாயா? அது என் ரத்தத்தில் ஊறினதுடி.. என்னை யாருன்னு நினைச்சே.. கருங்கல் ஆளவந்தாரின் மகன் மாணிக்கவாசகம்டி..''

''அந்தப் பெருமையே நம்ம பரம்பரைக்கு போதுமே. அதை விட்டுவிட்டு கோட்டையூர் ஜமீன் குடும்பத்தில் பொண்ணு கொடுக்கணும்னு ஏன் அலைகிறீங்க..''

''அது என் கனவு பரிமளா..''

''அதுக்கு விலையாய் நம்ம மரியாதையை விட்டுக் கொடுப்பீங்களா?''

''இப்ப நம்ம மரியாதைக்கு என்ன குறைவு வந்து விட்டது?''

இதைக் கேட்ட பரிமளம் கோபச் சிரிப்பு சிரித்தாள்.. என்றுமே அன்னைக்குப் பயப்படாத ஸ்வேதாகூட அன்றைக்கு பரிமளம் நின்ற கோபத் தோற்றத்தைக் கண்டு நடுங்கிப் போயிருந்தாள்.



''நம்ம மரியாதைக்கு என்ன குறையா? ம்ஹூம்.. பூனை கண்ணை மூடிக்கிட்டு பூலோகமே இருண்டு போச்சுன்னு சொல்லிச்சாம். உங்க கதையைக் கேட்டா.. அந்தக் கதைதான் எனக்கு நினைவுக்கு வருது...''

''என்னடி சொல்கிற?''

''உங்க தங்கை.. நாம் ஊருக்குப் போகும்போது ஸ்வேதாவையும் நம்ம கூடக் கூப்பிட்டுக் கொண்டு போகச் சொல்லிவிட்டாளாம்...''

மாணிக்கவாசகம் அதிர்ந்துபோனார். அவருக்கு பரிமளத்தின் கோபத்தில் இருந்த நியாயம் இப்போதுதான் பிடிபட்டது. சாது மிரண்டால் காடு கொள்ளாதுதான். ஆனால் சாது மிரளவும் காரணம் இருக்குமல்லவா? அது எப்படிப்பட்ட காரணம் என்று இப்போது அவருக்குப் புரிந்தது.

மாணிக்கவாசகம் கோட்டையூர் ஜமீன் வம்சத்தில் பெண் கொடுக்க ஆசைப்பட்டார்தான்.. ஆனால்.. அதற்காக தன் மரியாதையைப் பணயம் வைக்க ஒருபோதும் அவர் விரும்ப மாட்டார்.

தங்கையின் வீட்டில் மூன்று மகன்களும் ஒரு மகளும் இருக்கிறார்கள். அவர் வீட்டில் இரண்டு மகள்களும் ஒரு மகனும் இருக்கிறார்கள். தங்கை ஏன் அவர் வீட்டில் பெண் எடுத்து பெண் கொடுக்கக் கூடாது என்பதுதான் அவரது பிடிவாதமான கேள்வியாக இருந்தது.

கருணாகரன், சசிரேகாவை காதல் திருமணம் செய்து கொள்ள.. வீட்டிற்கு ஒரே பெண் மகவான காயத்ரியை தனது கணவரின் விருப்பப்படி.. அவரது ஒன்றுவிட்ட தங்கையின் மகனுக்கே திருமணம் செய்து கொடுத்துவிட நர்மதா முடிவு பண்ணிவிட்டாள்.

வேறுவழியின்றி தனது மூத்த மகளுக்கும் மகனுக்கும் வேறு இடத்தில் திருமணத்தைப் பண்ணிக் கொடுத்து

விட்டு.. ஸ்வேதாவின் மூலமாக தன் ஆசை நிறைவேறாதா என்ற எதிர்பார்ப்புடன் அவளை நர்மதாவின் வீட்டிலேயே தங்க வைத்தார் மாணிக்கவாசம்.

பிரபாகரனுக்கும் தினகரனுக்கும் இன்னும் திருமணம் முடிவாகவில்லை. அவர்கள் இருவரில் ஒருவனுக்கு தன் மகளை மணம் முடித்துக் கொள்ளச் சொல்லும் கோரிக் கையை மறைமுகமாக அதன் மூலம் நர்மதாவிற்கு உணர்த் தினார் அவர்.

நர்மதாவினால் அவரது கோரிக்கையை நிராகரிக்க முடியவில்லை. அது மறைமுகமான நிர்ப்பந்தம் என்பது அவளுக்கு புரிந்தாலும்.. தமையனாக முன்னால் நிற்கும் தன் ஒன்றுவிட்ட சகோதரனிடம் முகம் முறித்துப் பேச அவளால் இயலவில்லை.

அவளது அந்தத் தயக்கத்தை தனக்குச் சாதகமாக பயன்படுத்திக் கொண்டார் மாணிக்கவாசகம்.

''இது உனக்குக் கிடைத்திருக்கும் மிகப் பெரிய வாய்ப்பு ஸ்வேதா. இன்றைக்கு இந்த வீட்டில் விருந்தாளி யாக இருக்கிறவள். இந்த வீட்டின் மருமகளாகிக் காட்ட வேண்டும். அது உன் கையில்தான் இருக்கிறது..''

இப்படிப்பட்ட அறிவுரையை அவர் மகளுக்குச் சொல்லியபோதே பரிமளம் அதை ஆட்சேபித்தாள். அவர் அப்போது அதை காதில் போட்டுக் கொள்ளாமல் அலட் சியம் செய்தார்.

'அதற்குத்தான் இப்போது அனுபவிக்கிறேனோ..' குற்றம் செய்யாத அவர் மனது குறுகுறுத்தது.

''யாரிடம் சொன்னாளாம்?''

''உங்க அப்பாவிடம் சொன்னாளாம்..''

''அவர் அதை வாய் மூடிக் கேட்டுக்கிட்டாரா..''



''வேறு என்ன செய்யணும்னு சொல்கிறீங்க.. உங்க மகளை இந்த வீட்டில் கல்யாணமா செய்து கொடுத்திருக் கீங்க? அப்படி கொடுத்திருந்தால் நாம எதிர்த்துக் கேள்வி கேட்கலாம். இப்போ எதிர்கேள்வி கேட்டால் அசிங்கம் யாருக்கு?''

''அதுக்காக.. அண்ணன் மகள் என்கிற மரியாதை கூட இல்லாமல் பட்டுன்னு நர்மதா இப்படி ஒரு சொல்லைச் சொல்லலாமா?''

''அந்த மரியாதையைக் காப்பாத்திக்கணும்கிற எண்ணம் உங்களுக்கும் உங்க மகளுக்கும் இருந்திருக் கணும். அதை விட்டு விட்டு ஊரார் மேல பழிபோடாதீங்க..''

''ஆயிரம்தான் இருக்கட்டும்.. அவ வாயிலிருந்து அந்த வார்த்தை வந்திருக்கக் கூடாது பரிமளா..''

''அது அவள் வாயிலிருந்து வரவில்லை..''

''பின்னே.. வேறு யார் சொன்னதாம்?''

''பிரபாகரன் எடுத்த முடிவாம்..''

''பிரபாகரனா?''

மாணிக்கவாசகம் மகளை முறைத்தார்.

''உனக்கு அறிவிருக்கா ஸ்வேதா.. இந்த வீட்டில் பிரபாகரன்தான் முடிவுகளை எடுக்கிறவன். அவன் வாயி லிருந்து இப்படிப்பட்ட வார்த்தையை வர வைத்துவிட் டாயே.. அவன் பேச்சுக்கு எதிர்பேச்சை இந்த வீட்டில் யாரும் பேசித் தொலைக்க மாட்டாங்களே...''

''அதில்லை அப்பா...''

''பேசாதே... உனக்குச் சுட்டுப் போட்டாலும் சாமர்த் தியம் வராது. என் தம்பி மகள் பவித்ராவைப் பார். அவ ளோட அப்பன் பாடம் எடுக்கிறதைப் போலவா அவள் நடந்துக்கிறா? நீ மட்டும் ஏன் இப்படி களிமண்ணாய் இருக்கிற ஸ்வேதா?''

''அப்பா... பவித்ரா, தினகரனை மயக்கப் பார்க்கிறாள்..''

இதைக் கேட்டதும் மாணிக்கவாசகத்தின் முகம் பயங்கரமாக மாறியது. எது நடக்கக் கூடாது என்று அவர் நினைக்கிறாரோ அது நடந்துவிடுமோ என்று அவரது நெஞ்சம் நடுங்கியது.

''உனக்கு எப்படித் தெரியும்?''

''என் கண்ணால் பார்த்தேன். அது மட்டுமில்லை.. கருணாவின் பெண்டாட்டிக்கு சொந்தக்காரின்னு சொல்லிக் கொண்டு ஒரு மோகினி இந்த வீட்டில் இருக்கிறாள் இல்லையா?''

''அவள் பெயர் மாலினியாச்சே..?''

''எனக்கு அவள் மோகினிதான்..''

''அவளுக்கு என்ன?''

''அவள் பிரபாகரன் அத்தானை மயக்கிவிட்டாள்..''

''என்ன?'' மாணிக்கவாசகம் சேரை விட்டு எழுந்து நின்றார். பரிமளம் வெறுப்புடன் அவர்கள் இருவரையும் பார்த்தாள். அவள் என்ன சொல்ல வந்தாள். இவர்கள் இருவரும் எதைப் பேசிக் கொண்டு இருக்கிறார்கள்.

''உனக்கு நிச்சயமாகத் தெரியுமா?''

''பவித்ராதான் தினகரனை மயக்கப் பார்க்கிறாள். தினகரன் அவளிடம் மயங்கவில்லை. இது எனக்குத் தெரியும். ஆனால்.. மாலினியிடம் பிரபாகரன் மயங்கிப் போய் விட்டார். இது எனக்கு சர்வ நிச்சயமாகத் தெரியும்..''

மாணிக்கவாசகம் இடிந்துபோய்விட்டார். தினகரன், ஸ்வேதாவை விரும்பவில்லை என்று அவரிடமே நேரடியாய் சொல்லிவிட்டவன்...

''பாருங்க மாமா.. நீங்க தங்கை மகன் என்கிற உரிமையில் தாராளமாய் என்னை 'மாப்பிள்ளை...'ன்னு



கூப்பிடுங்க.. ஆனால், உங்க பெண்ணைக் கட்டிக்கொள்கிற மாப்பிள்ளை என்ற முறையில் மட்டும் கூப்பிட்டு வைத்து விடாதீங்க..''

''ஏன் மாப்பிள்ளை அப்படிச் சொல்கிறீங்க.. நீங்க என் தங்கை மகன்.. உங்களுக்குப் பெண் கொடுக்க நான் ஆசைப்படக் கூடாதா.. இல்லை.. எனக்குத்தான் அந்த உரிமையில்லையா?''

''எனக்கு ஸ்வேதாவின் மேல் பாசம் அதிகம் மாமா..''

இதைத் தினகரன் சொன்னபோது.. மாணிக்கவாசகம் நுணுக்குற்றார். அப்படி அத்தை மகன் பாசத்தைப் பொழிகிறதைப் போல ஸ்வேதா கண்ணியம் காத்திருக்க மாட்டாள் என்பது அவருக்குத் தெரிந்த விஷயம்தான்..

எப்படியாவது நர்மதாவின் மகன்களில் ஒருவனை வளைத்துப் பிடிக்க வேண்டிய அவசியத்தை அவளுக்கு சொல்லிச் சொல்லி வளர்த்துத் தொலைத்தது அவர்தானே.

அப்படிப்பட்ட ஸ்வேதாவைப் பார்த்து தினகரனைப் போன்ற காதல் மன்னன் ஒருவன் பாசப்பறவையைப் பறக்க விடுகிறான் என்றால் அதற்கு ஒரே ஒரு அர்த்தம்தான் இருக்க முடியும்.

அது.. தினகரனுக்கு ஸ்வேதாவைத் திருமணம் செய்து கொள்வதில் துளிக்கூட விருப்பம் இல்லை என்பதுதான்.

தினகரன் அடுத்துச் சொன்ன வார்த்தைகளும் அதை உறுதிப்படுத்தின..

''எனக்கு ஸ்வேதாவைப் பார்த்தால்.. காயத்ரியைப் பார்ப்பதைப் போலவே இருக்கு மாமா. அவளை மாமன் மகளாய் நினைக்கத் தோன்றவில்லை..''

'அடப்பாவி.. சண்டாளா.. வேறு என்ன நினைப்பு உனக்கு வருது?'

''என் தங்கையைப் போலவே தோன்றுகிறது..''

இதைச் சொல்லிய தினகரன் ஒன்றும் உத்தமபுத்திரன் இல்லை என்பது மாணிக்கவாசகத்திற்கு தெரிந்ததுதான்...

சேலை கட்டிய பெண்களுக்கு என்று ஒரு தனி வாசனை உண்டு என்று சொல்கிற கலாரசிகன்... சுடிதார் போட்ட சுந்தரிகளை 'சூப்பர்..' என்று வருணிக்கும் கவிஞன்... ஜீன்ஸ் போட்ட பெண்களிடம் 'ஜொள்ளு..' விடக் கூச்சப்படாத வீராதி வீரன்... அவருடைய மகளைப் பார்த்து தங்கையென்று சொல்லிவிட்டால்.. அவருடைய நெஞ்சம் தாங்குமா?

61

*பூப்போன்ற என் மனதில்....*
*பொத்தி வைக்கும் காதல் உணர்வை..*
*என்னவென்று நான் சொல்ல..?*

அவருடைய நெஞ்சம் சுக்குநூறாய் நொறுங்குவதைப் பற்றிக் கொஞ்சம்கூட கவலைப்படாமல் தினகரன் தன் மனதை வெளிப்படையாகச் சொல்லிவிட்டு தப்பித்தும் விட்டான்.

அவனை நம்பினால் வேலைக்கு ஆகாது என்பதை புரிந்து கொண்ட மாணிக்கவாசகம் மகளின் பார்வையை பிரபாகரனின் பக்கம் திருப்பிவிட்டார்.

''உன் கவனமெல்லாம் பிரபாகரனின் மேல்தான் இருக்கணும் ஸ்வேதா.. இதுவும் ஒருவகையில் நல்லதிற்குத் தான்..''

''எதனால் அப்படிச் சொல்கிறீங்கப்பா..''



''பிரபாகரன்தான் இந்தக் குடும்பத்தின் ஆணிவேர் ஸ்வேதா.. தொழில் எல்லாம் அவன் கைப்பிடிக்குள் இருக்கு..''

தந்தை கோடு போட்டால் ரோட்டைப் போட்டு அங்கே ஒரு நகரத்தையே நிர்மாணித்துவிடும் வல்லமை படைத்த ஸ்வேதா, அவர் என்ன சொல்ல வருகிறாள் என்பதை ஒரு நொடியில் புரிந்து கொண்டாள்.

''ஓ.. நீங்க அப்படி வருகிறீங்களா?''

''ம்ம்ம்.. அவனுக்கு நீ மனைவியாகிவிட்டால் இந்த அதிகாரம் பூராவும் உன் கையில்..''

''முதலில் உங்கள் தங்கையைத்தான் ஓட ஓட விரட்டுவேன்..'' அப்படிப்பட்ட ஆசை மாணிக்கவாசகத்தின் மனத்திலும் இருந்ததால் அவர் மௌனமாக மகளின் கோபத்தை அங்கீகரித்தார்.

இன்று அவருடைய கனவுக் கோட்டை தகர்ந்து தரை மட்டமாகி விட்டது.

எங்கிருந்தோ வந்தவள்.. அந்த கோட்டையூர் குடும்பத்தின் மூத்த மருமகள் என்ற மிகப் பெரிய பதவியை தட்டிப் பறித்துக் கொண்டு போவதா?

காத்திருந்த தாய்மாமனின் மகள் ஏமாந்து நிற்பதா?

ஸ்வேதா எதைச் செய்திருந்தாலும் அதை கேள்வி கேட்க முடியாது என்பதை மாணிக்கவாசகத்தின் மனம் உணர்ந்து கொண்டது.

''என்ன செய்தாய்னு கேட்கமாட்டேன். அதை மாட்டிக் கொள்ளால் செய்யத் தெரியலையான்னுதான் கேட்பேன்..''

''நான் மாட்டிக் கொள்ள சான்ஸே இல்லைன்னு தான்ப்பா நினைத்தேன். இன்னும் நீங்க தெரிந்து கொள்ள வேண்டிய விஷயம் ஒன்னு இருக்குப்பா..''

''என்னம்மா..''

''இந்த தினகரனுக்கு மாலினியின் மேல் ஆசை இருக்கு..'' இதைக் கேட்ட மாணிக்கவாசகம் ஆச்சரிய மடைந்தார்..

'கதை இப்படிப் போகிறதா? அண்ணனின் காத லியை தம்பி சைட் அடிக்கிறானா? வெரிகுட்.'

''ம்ம்.. அப்புறம்..?''

அவர் கதை கேட்கும் ஆர்வத்துடன் வினவ.. பரிமளா தலையில் அடித்துக் கொண்டாள்.

''இப்படிப்பட்ட தகப்பனுக்கு பிறந்த பெண்.. இப்படித் தான் எனக்கு பெயர் வாங்கிக் கொடுப்பாள். அவளைக் கெடுக்கிறதெல்லாம் நீங்கள்தான். நான் அவளைக் குற்றம் சொல்ல மாட்டேன். உங்களைத்தான் குற்றம் சொல் வேன்...''

''சும்மாயிரு பரிமளா.. நாங்க முக்கியமாகப் பேசிக் கிட்டு இருக்கிறோம்..''

''இது எந்த வகையில் நமக்கு முக்கியம்? சொல் லுங்க..''

''அவ கிடக்கிறாம்மா.. நீ சொல்லு..''

''தினகரன், மாலினியை சைட் அடிப்பதை பிரபா கரனும் புரிந்து கொண்டிருக்கிறார்..''

''இன்ட்ரஸ்டாய்... அப்புறம்?''

''மாலினி, தினகரனிடம் பேசுவதை அவர் ஆட்சே பித்து மாலினியைக் கண்டிப்பதை நான் காதால் கேட் டேன். அவளும் பயந்து பதிலைச் சொன்னாள். ஆனால், தினகரனை அவாய்ட் பண்ணவில்லை. இதுதான் பொஸி ஷன்னு தெரிந்த பின்னால்.. லட்டு போல காலையில் இதுகளுக்கு மத்தியில் குழப்பம் உண்டாக்க எனக்கொரு



சான்ஸ் கிடைத்தது.. விட மனசில்லை.. யூஸ் பண்ணிக் கிட்டேன்..''

''என்ன நடந்தது?''

''அப்பா.. காலையில் தோட்டத்தில் தினகரனுடன் மாலினி சிரித்துப் பேசிக்கிட்டு இருந்தா. அதை மாடி பால்கனியில் மறைஞ்சு நின்னுக்கிட்டு பிரபாகரன் வேவு பார்த்துக்கிட்டு இருந்தார்..''

''அடிச்சக்கை.. அப்புறம்?''

''மாலினி முதலில் வீட்டுக்குள் வந்துவிட்டாள். அவள் பின்னாலேயே தினகரன் ஒரு ரோஜாப் பூவைப் பறித்துக் கொண்டு வந்தான்..''

''சொல்லு.. சொல்லு..''

''மாடிக்கு வந்த தினகரனின் கையில் பூ இல்லை. அவன் பின்னாடியே வந்த மாலினியின் கையில் அந்தப் பூ இருந்தது. இதை நீங்க பார்த்திருந்தால் என்ன நினைப் பீங்க?''

''என்ன நினைப்பேன்.. தினகரன் அந்தப் பூவை மாலினி கிட்ட கொடுத்திருக்கிறான்... அவளும் அதை வாங்கிக் கொண்டு வந்திருக்கிறான்னு நினைப்பேன்..''

''அதைத்தான் பிரபாகரனும் நினைத்தார். அதாவது.. நான் அவரை அப்படி நினைக்க வைத்தேன்..''

''அப்போ.. உண்மை அது இல்லையா..''

''இல்லை..''

ஸ்வேதா.. தான் செய்ததை விளக்கமாகக் கூறினாள். மகளின் புத்திசாலித்தனத்தை மாணிக்கவாசகம் மெச்சிக் கொள்ள.. அவளுடைய புத்திசாலித்தனம் இப்படித் தீய வழி களில் விரயமாகிறதே என்று பரிமளா கவலை கொண்டாள்.

''நான் நினைத்தது ஓரளவு நடந்துவிட்டதுப்பா.. நான் எதிர் பார்த்த விளைவு நடக்கவில்லை. அது மட்டும் நடந்திருந்தால் பிரபாகரனுக்கு காதல் தோல்வியையும் தம்பியின் துரோகத்தையும் நினைக்கிறதில்தான் மனசு போயிருக்கும். என் தவறைப் பற்றி யோசித்து துப்பறி வதில் மனசு போயிருக்காது..''

''நீ என்ன நடக்கும்னு எதிர்பார்த்தாய்?''

''மாலினியின் கையில் பூவைப் பார்த்ததும் பிரபா கரன் மனம் கோபப்படும். மாலினியின் கன்னத்தில் நாலு அறைவிட்டு கேள்வி கேட்பார்னு எதிர்பார்த்தேன்..''

''அடிவாங்கிய கோபத்தில் மாலினி, பிரபாகரனை விட்டு ஓடிவிடுவாள்னு கணக்குப் போட்டாயா.. வெரி குட்..''

மாணிக்கவாசகம் மகிழ்ந்து போக.. ஸ்வேதா அவரை யோசனையோடு பார்த்தாள். மகளின் பார்வையில் செய்தி இருந்ததைப் புரிந்து கொண்டவர்,

''என்னம்மா..'' என்று வினவினார்.

''நீங்க அடிச்சதில் கோபப்பட்டு அம்மா உங்களை விட்டுப் போய் விடுவாங்களாப்பா?''

மாணிக்கவாசகத்தின் பார்வை பரிமளத்தின் வீங்கிய கன்னத்தில் படிந்தது. அவர் குற்றஉணர்வுடன் மகளுக்குப் பதில் சொன்னார்.

''அது எப்படிப் போவாள்?''

''ம்ம்ம்.. அது போல்தான் மாலினியும்..''

''ஸ்வேதா.. உன் அம்மா எனக்குப் பெண்டாட்டி...''

''மாலினி.. பிரபாகரனின் காதலி..''

''காதலியும் மனைவியும் ஒன்றாகி விடுவாங்களா?''



''காதலியும் மனதளவில் மனைவிதான் அப்பா. பெண்கள் உடலளவில் பலவீனமானவர்கள் என்றாலும் மனதளவில் ஆண்களைவிட மிகமிக வலிமையானவர்கள். அதைப் போலவே ஆண்களைவிட மிகமிக ரோஷமான வர்கள். ஆண்கள் கட்டிப் பிடித்து உருண்டு பெரண்டு சண்டை போட்டு சட்டையைக் கிழித்துக் கொள்வார்கள். அடுத்த நாளே சமாதானமாகி தோளில் கை போட்டு 'நண்பேன்டா..'ன்னு சொல்லிக் கொள்வார்கள். பெண்கள் அப்படியில்லை. மனதைப் பாதிக்கும் ஒரு சிறு சொல்லைக் கேட்டுவிட்டால் ஆயுள் முடிகிற வரைக்கும் அதைச் சொன்னவர்களுடன் பேசமாட் டார்கள்...''

''இப்போ நீ சொல்ல வருவதுதான் என்ன ஸ்வேதா?''

''அப்பா.. நீங்கள்னு இல்லை.. கணவன் என்ற உரிமை யில் எல்லா ஆண்களும் மனைவிகளை அடிக்கத்தான் செய்கிறார்கள். கணவன் அடித்தால் போலீஸில் புகார் கொடுக்கலாம் என்ற சட்டம் இருந்தாலும் எல்லா மனைவி களும் கணவன் கொடுக்கும் அடிகளை மௌனமாக சகித்துக் கொண்டும் பொறுத்துக் கொண்டும்தான் இருக்கி றாங்க. இது கணவனிடம் ஒரு மனைவி வைத்திருக்கும் அன்பின் வெளிப்பாடு. கணவன் கையால் சாக நேர்ந் தாலும் அவனைக் காட்டிக் கொடுக்காமல் செத்துப் போகும் மனைவிமார்களின் எண்ணிக்கை நம்ம நாட்டில் அதிகம்ப்பா..''

ஸ்வேதாவின் தார்மிக கோபம் மாணிக்கவாசகத்திற்கு புரிந்தது. பரிமளம் அவரை மட்டும் கண்டிக்கவில்லை.. ஸ்வேதாவையும் சேர்த்துத்தான் கண்டித்தாள். ஆனாலும் ஸ்வேதா, பரிமளத்திற்கு ஆதரவாக மாணிக்கவாசகத்தை சாடுகிறாள் என்பதை நினைக்கும்போது மாணிக்கவாசகத் திற்கு மகளை நினைத்து பெருமையாக இருந்தது.

ஸ்வேதாவிடம் இருந்த நல்ல குணங்களைப் பற்றி பரிமளத்திற்கும் நன்றாகவே தெரியும். அவளுக்கு தாயின்

மீது பாசம் உண்டு. ஆனாலும் தாயின் அறிவுரையைக் கேட்காமல் தந்தையின் பேச்சைக் கேட்கிறவளாக அவள் வளர்ந்து விட்டாள்.. அப்படி வளர்ந்திருந்தாலும் நியாயத்தை நியாயம் என்று சொல்லும் அவளின் குணத்தை நினைத்து கண்கலங்கினாள் பரிமளா.

''இவ எப்போப்பட்ட பொண்ணு.. நமக்கென்ன பணமில்லையா.. சொத்தில்லையா? நல்ல இடத்தில் இவளைக் கல்யாணம் பண்ணிக் கொடுக்க வசதியில்லையா?''

''அதனால்தான் கோட்டையூர் ஜமீன் வமிசத்தில் பொண்ணு கொடுக்கணும்னு நினைக்கிறேண்டி.... இங்கே பெண்ணைக் கொடுக்க எனக்குத் தகுதியில்லையா? இல்லை.. சொந்தம்தான் இல்லையா?''

''நீங்க அதிலேயே நில்லுங்க. இப்பத்தான் அது கனவுன்னு தெரிஞ்சுபோச்சே.. இனியாவது நம்ம பொண்ணை நம்ம வீட்டுக்கே கூப்பிட்டுக் கொண்டு போய் விடலாங்க..''

பரிமளம் கண்களில் நீர்மல்க கெஞ்சினாள். மாணிக்க வாசகம் மகளின் முகத்தைப் பார்த்தார்.

''போகலாம்மா.. நம் வீட்டுக்கு நான் வருகிறேன். இந்த வீட்டை விட்டுப் போய் விடலாம். என்னை வேண்டாம்னு சொல்லுகிற இந்த அண்ணன், தம்பிகள் எனக்கும் வேண்டாம். ஆனால், நாம் கிளம்புவதற்கு முன்னால் இவர்களின் வாழ்க்கையோடு விளையாடிப் பார்க்காமல் கிளம்ப மாட்டேன்..''

ஸ்வேதாவின் குரலில் உறுதி இருந்தது. மாணிக்க வாசகம் மகளின் பேச்சைக் கேட்டு..

''சபாஷ்..'' என்றார்.

பரிமளம் கலவரப்பட்டாள். இப்போதுதான் மகள் திருந்திவிட்டாள் என்று அவள் சந்தோஷப்பட்டாள். அது



நொடிப் பொழுதில் சீட்டுக்கட்டு மாளிகை கலைந்து விழுந்ததைப் போல சிதறிவிடுவதா.

''வேண்டாம் ஸ்வேதா.. உன் மனதில் பழிஉணர்வு வரக் கூடாதும்மா. அது உனக்கு நல்லதில்லை..''

''இல்லைம்மா.. இந்த வீட்டில் வருஷக்கணக்காக உட்கார்ந்திருக்கிறேன்.. எதற்காக? நம் வீட்டைவிட இந்த வீடு வசதியாய் இருக்கிறது. நம் வீட்டுச் சாப்பாடைவிட இவங்க வீட்டுச் சாப்பாடு நன்றாக இருக்கிறது என்றா இங்கே உட்கார்ந்து இருக்கிறேன்? நாம் இவங்களைவிட எந்த வகையில் குறைந்தவர்கள்ம்மா? என் வீட்டுக்கு இவங்க வீடு இணையில்லை.. நம் வீட்டுச் சாப்பாட்டை மிஞ்சிய ருசி இவங்க வீட்டுச் சாப்பாட்டில் இல்லை..''

''ஸ்வேதா...''

மகளின் மனக்குமுறலைக் கேட்டு பரிமளத்தின் பெற்ற வயிறு பதறியது.

எந்த அளவுக்கு இந்த வீட்டாரால் உதாசீனப்படுத்தப் பட்டிருந்தால் ஸ்வேதா இந்த வார்த்தையைச் சொல்லுவாள்?

இந்த நிலையை மகளுக்கு உருவாக்கிவிட்ட கணவன் மேல் அவளுக்கு வெறுப்பு வந்தது.

## 62

*அடி ஆழ மனதினிலே*
*அமிழ்ந்திருக்கும் காதலையே*
*என்னவென்று நான் சொல்ல..?*

யார் நெஞ்சில் கோபம் இல்லை.. யார் நெஞ்சில் குரோதம் இல்லை.. யார் நெஞ்சில் வஞ்சம் இல்லை.. யார்

நெஞ்சில் வருத்தம் இல்லை.. யார் நெஞ்சில் கருணை இல்லை.. யார் நெஞ்சில் காதல் இல்லை யார் நெஞ்சில் காமம் இல்லை.. யார் நெஞ்சில் சோகம் இல்லை.. யார் நெஞ்சில் துக்கம் இல்லை.. யார் நெஞ்சில் கஷ்டம் இல்லை.. யார் நெஞ்சில் விரக்தி இல்லை.. யார் நெஞ்சில் வேதனை இல்லை.. யார் நெஞ்சில் பொறுமை இல்லை.. யார் நெஞ்சில் வெறுமை இல்லை.. யார் நெஞ்சில் சாடல் இல்லை.. யார் நெஞ்சில் தேடல் இல்லை?

இந்த உலகில் மகான் என்று அழைக்கப்படுகிற வர்களுக்கும் மறுபக்கம் என்று ஒன்று உண்டு..

அதைப் போல கொலைகாரனுக்கும் ஒரு மறுபக்கம் உண்டு..

அவரவர்க்கு ஒரு நியாயம் கண்டிப்பாக இருக்கும். அது இல்லாத மனிதர்கள் இந்த உலகத்தில் இருக்க மாட்டார்கள்..

துரியோதனன் வில்லன்தான். ஆனால், அவன் ஏன் வில்லனாக மாறினான்? அதற்கு அவன் பக்கம் பல நியா யங்கள் இருந்தன.

அவனுடைய தகப்பனான திருதராஷ்டிரன்தான் மூத்தவன். அரச பரம்பரையின் வழக்கப்படி மூத்தவனுக்கே அரியணை சொந்தம். ஆனால்.. கண்பார்வையற்றவன் என்ற குறைபாட்டினால் அவனுடைய தம்பி பாண்டு அரியணை ஏறினான். இதை விதி செய்த சதியாக துரியோ தனன் நினைத்து வெகுண்டான்.

ஒரு கட்டத்தில் காட்டுக்குப் போக வேண்டிய முடிவை எடுத்த பாண்டு, தன் அண்ணனிடம் அரசை ஒப்படைத்துவிட்டு அவனது இரு மனைவிகளான குந்தி.. மாத்ரியுடன் காட்டுக்குச் சென்றுவிட்டான். அரசாட்சி



துரியோதனனின் தந்தைக்கு வந்தது. துரியோதனன் இளவரச னாக.. நாளைய அரசன் என்ற கனவுடன் வளர்ந்து வந்தான்.

காட்டுக்குப் போன பாண்டுவும் மாத்ரியும் போக.. கானகத்தில் இருந்து பாண்டவர்களுடன் ஒரு நாள் குந்தி தேவி திரும்பி வந்தாள். துரியோதனன் கனவில் மண் விழுந்தது. அரசாட்சிக்கு போட்டி ஆரம்பமாகியது.

ஒருவேளை.. பாண்டு காட்டுக்குப் போகாமல் அரசாண்டு கொண்டு இருந்திருந்தால்.. திருராஷ்டிரனும் தற்காலிக மன்னனாக ஆகியிருக்க மாட்டான்.. துரியோ தனனுக்கும் கனவு ஏற்பட்டிருக்காது.

அப்படி நேராமல் போனதற்கு யார் பொறுப்பு? பிறப்பால் அரசை சொந்தமாக்கிக் கொள்ள வேண்டிய மூத்த மகனான தன் தகப்பன் பார்வையற்றவனாகப் போனதை எண்ணி துரியோதனன் கோபத்தில் கொந்த ளித்தால் அதில் குற்றம் காண முடியுமா? அப்படி வேதனைப்படக்கூட அவனுக்கு உரிமையில்லையா?

வாழ்க்கை சிலசமயம் சிலரை வஞ்சித்துவிடுகிறது. அந்த வேதனையில் அவர்கள் தடம் மாறி விடுகிறார்கள். அதனால் அவர்களின் நல்ல குணங்கள் நம் கண்களுக்குப் படாமல் மறைக்கப்படுகின்றன. அல்லது மறக்கப்படு கின்றன.

இன்றளவும் நட்புக்கு உதாரணமாக துரியோதனன்.. கர்ணனின் நட்பைத்தான் சொல்கிறார்கள்.

அதைப் போல செய்நன்றிக்கு உதாரணமாக செஞ்சோற்றுக் கடனுக்காக.. தனது சகோதரர்கள் என்று தெரிந்திருந்தும் அவர்களை எதிர்த்து.. நண்பனுக்கு ஆதரவாக உயிரை விட்டு செஞ்சோற்றுக் கடனைத் தீர்த்த கர்ணனைத்தான் சொல்கிறார்கள்.

ஸ்வேதாவும்கூட அப்படிப்பட்டவள்தான். அவளுக்கு தன் தாயின் மேல் பாசம் அதிகம். தந்தையின் மேல் மரியாதை அதிகம். அதனால்தான் 'தந்தை சொல் மிக்க மந்திரமில்லை..' என்று தந்தையின் வாக்கை வேதமாக நினைத்து கருங்கல்லை விட்டுவிட்டு மார்த்தாண்டத்துக்கு வந்தாள்.

அவள் படித்திருந்தாள். அழகாக இருந்தாள். பிறப்பி லேயே பெரிய வீட்டுப் பெண் என்ற பரம்பரைப் பெருமை யோடு பிறந்திருந்தாள். அளவற்ற செல்வம் அவளுக்கு இருந்தது. இத்தனைக்கும் மேலாக நர்மதாவின் ஒன்று விட்ட அண்ணன் மகள் என்ற செல்வாக்கும் சொந்தமும் அவளுக்கு இருந்தது.

ஒரு பாடலின் வரிகளில்,

'ஆயிரம் இருந்தும்.. வசதிகள் இருந்தும்.. நோ பீஸ் ஆஃப் மைண்ட்...' என்று வருமே... அதைப் போல இத்தனை தகுதிகள் இருந்தும் ஸ்வேதா அந்த வீட்டு ஆண்மகன்களால் புறக்கணிக்கப்பட்டாள்.

புறக்கணிப்பு என்பது மிகக் கொடுமையான ஒன்று. புறக்கணிக்கப்பட்ட பெண்கள் வரலாற்றையே மாற்றிப் போட்டிக்கிறார்கள். ராமனால் புறக்கணிக்கப்பட்ட சூர்ப்ப னகையின் கோபம் ராமாயணத்தில் எந்த அளவுக்கு முக்கிய பங்கு வகித்தது என்பதை அறியாதவர்கள் யார்? அம்பை யின் கோபம் ஆனானப்பட்ட பீஷ்மரையே அம்புப் படுக்கை யில் தள்ளியதை தெரியாதவர்கள் யார்?

ஸ்வேதாவின் மனம் வெஞ்சினம் கொள்ளாமல் எப்படி இருக்கும். ஒவ்வொரு நாளும் அவள் அந்த வீட்டைச் சேர்ந்தவள் இல்லை என்று அந்த வீட்டாரால் உணர்த்தப் பட்டாள். அந்த வீட்டில் வேலை செய்யும் வேலையாள்கூட அவள் சொல்பேச்சுக் கேட்காத நிலையைச் சகித்துக் கொண்டாள்.. அழையாத விருந்தாளியாக அந்த வீட்டிற்கு வந்து பல வருடங்களாக டேரா போட்டிருக்கிறாள் என்று சொல்லிக் காட்டப்பட்டாள்.



இவை அத்தனையையும் அந்த வீட்டார் அவளை மட்டும் தனியாக நிற்க வைத்துப் பேசியிருந்தால்கூட.. ஆயிரம் சொன்னாலும்.. நம் அத்தையின் வீட்டு ஆள்கள் தானே என்று ஸ்வேதா பொறுமையாகப் போயிருப்பாள்.

அந்த வீட்டில் அதைச் செய்யவில்லை. மாறாக.. அந்த வீட்டில் வாழ வந்த சசிரேகாவின் முன்னால் அப்படிச் செய் தார்கள். சசிரேகாவின் உறவுக்காரி என்ற முறையில் வந்த மாலினியின் முன்னால் அப்படிச் செய்தார்கள். வீட்டு வேலையாள்களின் முன்னால் அப்படிச் செய்தார்கள்.

அதைத்தான் ஸ்வேதாவினால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. அதற்குப் பதிலாக.. அந்த வீட்டு ஆண் மகன்களின் வாழ்க்கையில் விளையாடிப் பார்க்காமல் அவள் அந்த வீட்டை விட்டு நகர்வதாக இல்லை.

''இத்தனைக்குப் பின்னாலும் இவர்கள் வீட்டில் நான் இருக்க நினைக்கிறேன் என்றால் என் மனதில் எந்த அள வுக்கு வேதனை இருக்கும்னு நினைத்துப் பாருங்கம்மா...''

''இவர்களைவிட உயர்த்தியான மாப்பிள்ளை உனக்குக் கிடைப்பார் ஸ்வேதா...''

''அந்த நம்பிக்கை எனக்கும் இருக்கும்மா. எனக்கு அப்பாவின் பலம் என்னன்னு தெரியும். அக்காவைப் போல என்னையும் வாழவைப்பார் அம்மா. ஆனால்.. இத்தனை நாளாய் இவங்க வீட்டில் இருந்ததற்கு பலன் இதுதானா?''

''நீ உன் வாழ்க்கையை மட்டும் பார் ஸ்வேதா..''

''பார்க்கிறேன்.. அதுக்கு முன்னால்.. இந்த ஸ்வேதா யாருன்னு இவங்களுக்கு காட்டிவிட்டுப் பார்க்கிறேன்...''

''வேண்டாம்மா..''

''பரிமளா.. அவளை விட்டுவிடு...''

''இவ மனசில் எந்த அளவுக்கு வேதனையை வைத்திருக்கிறாள்னு தெரிஞ்ச பின்னாலுமா நீங்க இப்படிச் சொல்கிறீங்க?''

''அது தெரிந்ததால்தான் சொல்கிறேன். விட்டுவிடு.. அவ மனதில் நிம்மதி வரும்னா அவ எதையும் செய்யட்டும். நீ இதில் தலையிடாதே...''

''ஸ்வேதா.. உன் அப்பாவின் பேச்சைக் கேட்காதே...''

ஸ்வேதாவிற்கு தாயின் தவிப்பு புரிந்தது. அவள் பரிமளத்தை அமைதிப்படுத்தும் விதத்தில் சிரித்தாள்.

''கவலைப்படாதீங்கம்மா.. எனக்கு ஒன்றும் ஆகாது...''

''பழிபாவம் வருமே ஸ்வேதா..''

''என் பழிபாவத்தை ஏற்றுக்கொள்வதைப் பற்றி இவங்க கவலைப்பட்டாங்களா. அப்படி நான் என்ன தப்பைப் பண்ணிவிட்டேனம்மா? இந்த வீட்டுக்கு மருமகளாக வரணும்னு நினைத்தேன். அது தப்பா? அதுக்கான தகுதியும் உரிமையும் எனக்கில்லையா?''

இந்தக் கேள்வியில் நியாயமில்லையென்று பரிமளத்தினால் சொல்ல முடியவில்லை.

நர்மதா திருமணம் செய்து கொண்டு.. கோட்டையூர் ஜமீன் வம்சத்தில் நுழைந்த இரண்டொரு வருடங்களிலேயே தாய் தகப்பனை இழந்துவிட்டாள். அன்று முதல் இன்று வரை அவளுக்கு தாய்வீட்டுச் சீதனம் ஆளவந்தாரின் வீட்டிலிருந்துதான் போய்க் கொண்டிருந்தது. தாய்மாமன்களின் சீர்செய்ய ஆளவந்தாரின் மகன்கள்தான் முன்னால் நின்றார்கள். அதற்கெல்லாம் பெரியப்பாவும் அவர் பெற்ற



மகன்களும் வேண்டும். ஆனால்.. மகன்களுக்கு திருமணம் செய்து வைக்க மட்டும் அந்த பெரியப்பாவின் மகன் பெற்ற மகள் வேண்டாம் என்றால், அது எந்த நியாயத்தில் சேர்த்தி என்று பரிமளமும் மனதில் வினவிக் கொண்டாள்.

பரிமளத்தின் முகத்திலிருந்து அவளது அனுமதி கிடைத்துவிட்டதை உணர்ந்து கொண்ட மாணிக்கவாசகம்,

''சொல் ஸ்வேதா.. நீ காலையில் என்ன செய்ய நினைத்தாய்?'' என்று கேட்டார்..

''அப்பா மாலினி ரோஷக்காரி.. சொல் பொறுக்க மாட்டாதவள்.. வேண்டாமென்று ஒன்றை வெறுத்துவிட்டால் ஆயுளுக்கும் அதைத் திரும்பிப் பார்க்க மாட்டாள்...''

''அதற்கும் நீ செய்ய நினைத்ததற்கும் என்ன சம்பந்தம்?''

''இருக்குப்பா.. மாலினிக்கு பிரபாகரனின் மேல்தான் காதல். தினகரனிடம் அவள் அதிகம் பேசமாட்டாள். தினகரன்தான் வலியப் போய் அவளிடம் வழிவான்..''

''அப்படியா?''

''ஆமாம்.. மாலினி நேர்மையானவள். அண்ணனுக்கும் தம்பிக்கும் ஒரே நேரத்தில் நூல் போடுகிற ... யில்லை..''

இதைச் சொல்லும்போதே தான் செய்தோம் என்ற நினைவில் ஸ்வேதா கண்கலங்கினாள். மாணிக்கவாசகத்தின் மனம் கனத்தது.

''விடும்மா.. நாம் நடப்பதைப் பார்ப்போம்..'' மகளைத் தேற்றினார்.

ஸ்வேதா கண நேரத்திற்குள் சுதாரித்துக் கொண்டாள்.

''அவள் பிரபாகரன் அடித்தால்.. அந்த அடியை சந்தோஷமாகத் தாங்கிக்கொள்வாள். ஆனால், அவர் எதை யாவது சொல்லி விட்டால்.. அந்த சொல்லைத் தாங்கிக் கொள்ள மாட்டாள்..''

மாணிக்கவாசகம், ஸ்வேதாவின் புத்திகூர்மையைக் கண்டு வியந்து போனார். அவரது கண்களில் பாராட்டு தோன்றியது.

''வெல்டன் ஸ்வேதா.. நீ புத்திசாலிங்கிறதை நிருபித்து விட்டாய். மேலே சொல்லு..''

''பிரபாகரன் மட்டும் மாலினியை ஒர் அடி அடித்து, என்னடி.. தினகரனையும் கணக்குப் பண்ணுகிறாயான்னு கேட்டிருந்தார்னு வையுங்க.. அவள் ஜென்மத்திற்கும் அவர் பக்கம் திரும்பிக்கூடப் பார்க்க மாட்டாள். விலகிப் போய்விடுவாள். அதுதான் அவளின் குணம். நான் இதுதான் நடக்கும்னு எதிர்பார்த்தேன் அப்பா..''

''பிரபாகரன் மாலினியை சந்தேகப்படவில்லையா?''

''ஊஹூம்.. அப்படி நிச்சயமாய் சொல்லிவிட முடியாது. நான் தினகரனும் மாலினியும் பேசிக்கொள் வதைப் பற்றி சொன்னதும் அவர் முகத்தில் யோசனை வந்தது. பூவோடு வந்த மாலினியை ஒரு மார்க்கமாகத் தான் பார்த்தார். பட்.. எங்கேயோ ஒரு சின்னச் சறுக்கல் என் திட்டத்தில் இருந்திருக்கிறது. அவர் உண்மையைத் தெரிந்துகொண்டு விட்டார். அதுமட்டும் நடக்காமல் இருந்திருந்தால் அவர்கள் பிரிந்திருப்பார்கள்...''

63

உன் வார்த்தையெல்லாம் வடிவெடுத்து..
என் உயிர் துடிக்க வைப்பதையே...
என்னவென்று நான் சொல்ல....?



அந்தச் சறுக்கல் இல்லாத திட்டத்தை தன் மகள் மீண்டும் தயாரிப்பாள் என்று நம்பினார் மாணிக்கவாசகம். அதை உறுதிபடுத்திக் கொள்ள வாய்விட்டு கேட்கவும் செய்தார்.

''இனி என்ன செய்யப் போகிறாய்?''

''அந்தச் சறுக்கல் இல்லாத திட்டத்தைத் தயாரிக்கப் போகிறேன்...''

இதைத்தான் மகள் சொல்வாள் என்று தெரிந்திருந்து மாணிக்கவாசகம் மனைவிக்கு பயந்து.. வாய் வார்த்தையில் அதை மறுத்தார்.

''ஊஹூம்.. அதெல்லாம் வேண்டாம்.. நீ கிளம்பு..''

''இல்லைப்பா.. இவர்களைப் பிரிக்காமல் நான் வர மாட்டேன்..''

''நீதான் இங்கே இருக்க முடியாதேம்மா..''

''என்னப்பா நீங்க... என்னை 'வா'ன்னு இவங்க அழைத்தா நான் வந்தேன்? இப்போ.. 'போ'ன்னு இவங்க சொன்னவுடன் பெட்டியைக் கட்டிக் கொண்டு கிளம்ப நான் என்ன இவங்க வீட்டு கீரைச்சட்டியா? ஸ்வேதாப்பா.. நானாகத்தான் கிளம்புவேன். இவங்க சொல்லி கிளம்ப மாட்டேன்...''

''பிரபாகரன் நீ இருக்கக் கூடாதுன்னு சொல்லிட் டானேம்மா.''

''அவன் ஆசைப்படி நானும் இந்த வீட்டில் இருக்க மாட்டேன். என் ஆசைப்படி மாலினியும் இந்த வீட்டில் இருக்கமாட்டாள். எப்போது அவளை நான் இந்த வீட்டை விட்டு விரட்டுகிறேனோ அப்போது நீங்க கூப்பிடாமலே நான் நம்ம வீட்டுக்கு வந்திருவேன்...''

''மாலினி இந்த வீட்டில் இருந்தால் நமக்கென்ன..

போனால் நமக்கென்ன... நமக்கே இந்த வீடு இல்லையென்றாகி விட்டது..''

''எனக்கு இல்லாத வீடு பவித்ராவிற்கும் மாலினிக்கும் கிடைக்கலாமா?''

''ஸ்வேதா...''

''என்னை இந்த வீட்டை விட்டு விரட்டிவிட்டு மாலினி மட்டும் இந்த வீட்டில் இருக்கலாமா?''

''என்னம்மா செய்யப் போகிறாய்?''

''நிறையச் செய்வேன்... அதை சான்ஸ் கிடைக்கும் போதெல்லாம் செய்வேன்..''

''திரும்பவும் நீ மாட்டிக்கொள்ள மாட்டாய்னு என்னம்மா நிச்சயம்?''

''நான் மாட்டிக்கிட்டாலும்.. மாலினியை விரட்டிய பின்னால்தான் மாட்டிக் கொள்வேன். இருந்திருந்து இவர்களால் என்னை என்ன செய்துவிட முடியும்? இப்போது என்னை இவர்களால் என்ன செய்ய முடிந்தது? நீ உன் வீட்டிற்குப் போய் விடுன்னு சொல்லுவாங்க. அவ்வளவுதானே.. இப்போது பெட்டியைக் கட்டுவதற்குப் பதிலாக அப்போது கட்டிவிட்டுப் போகிறேன்..''

''இப்போ.. என்ன சொல்லி உன்னை விட்டுவிட்டுப் போவது?''

''காயத்ரியின் கல்யாணத்தை காரணமாக சொல்லுங்க...''

சுயமரியாதைக்கும் பழிஉணர்ச்சிக்கும் இடையில் சிக்கித் தவித்த மாணிக்கவாசகத்தின் முகத்தில் வெளிச்சம் வந்தது.

''அட... ஆமாமில்ல.. இதை எப்படி நான் மறந்து போனேன்?''



''இன்னும் இரண்டே மாதங்களில்.. எண்ணி அறுபதே நாள்களில் காயத்ரியின் கல்யாணம் நடக்கப் போகுது. இத்தனை நாள்களாய் இந்த வீட்டிலேயே இவர்களின் வீட்டுப் பெண்ணாக இருந்துவிட்டு காயத்ரியின் கல்யாணம் நிச்சயமாகிவிட்ட இந்தச் சமயத்தில் நான் இந்த வீட்டில் இல்லாமல் போனால்.. ஊர் என்ன கேள்வி கேட்கும்னு தாத்தாகிட்ட கேளுங்க...''

''இதை உன் தாத்தாகிட்ட கேட்டு என்னம்மா பண்ண.. நீ இருக்கக் கூடாதுன்னு பிரபாகரன்தானே சொல்கிறான்?''

''நேராக உங்களிடம் அவர் வந்து சொன்னாரா?''

மகளின் கேள்வியால் மீண்டும் மாணிக்கவாசகத்தின் முகம் ஒளிர்ந்தது.

''அட... ஆமாம். அவன் நர்மதாகிட்ட சொன்னான்.. அவள் அப்பாகிட்ட வந்து சொன்னாள். அப்பா அம்மாகிட்டச் சொன்னார். அம்மா பரிமளாகிட்ட சொல்லி.. பரிமளா நம்ம கிட்ட வந்து சண்டை போட்டாள்..''

''சண்டை போட்டது அவங்க.. அடிச்சது நீங்க..''

ஸ்வேதா மீண்டும் தந்தையின் தவறைக் கண்டித்தாள். மாணிக்கவாசகம் குற்றஉணர்வுடன் மனைவியைப் பார்க்க... அவள் வேறு திசையில் பார்த்தாள்.

''தசு.. வாய்வார்த்தை தடிச்சிருச்சும்மா..''

''வாய்வார்த்தைக்குப் பதில் வாய்வார்த்தைதான் வரணும்...''

''விடும்மா.. அம்மாவை நான் சமாதானம் பண்ணிக்கறேன். இப்போ செய்ய வேண்டியதை யோசிப்போம். அவர்களைப் போலவே நானும் செய்தியை அப்பாவின் மூலமாகவே அனுப்புகிறேன். அவர் நர்மதாகிட்ட

சொல்லட்டும். அவள் மகனிடம் பேசிக்கட்டும். ஆனால், இதில் ஒரு சிக்கல் இருக்கே ஸ்வேதா?''

''என்ன சிக்கல்ப்பா?''

''என் அப்பாதான் சிக்கல். அவர் ஏற்கெனவே ஒரு வயதுப் பெண்ணை அத்தையின் வீட்டில் வருஷக்கணக்கில் தங்க வைக்கலாமான்னு என்னைக் குடைஞ்சுக்கிட்டு இருக்கிறார். இப்பப் போயி நான் உன்னைக் கூப்பிட்டுக் கொண்டு போக மாட்டேன்னு சொன்னேன்னு வைய்யு.. மனுஷருக்கு பழியாய் கோபம் வரும். அதுக்கென்ன பதிலைச் சொல்வது? அதுதான் எனக்குப் பிடிபட மாட்டேங்குது..''

தந்தைக்கு ஆலோசனை கூறும் மந்திரியின் பதவி தனக்கு வாய்த்துவிட்டதை உணர்ந்து கொண்டாள் ஸ்வேதா.

''ஒரு வயது பெண்தானே இருக்கக் கூடாது? இரண்டு வயதுப் பெண்கள் இருக்கலாமில்லையா?''

''நீ என்னம்மா சொல்கிற?''

''பவித்ராவையும் ஒரு வழி பண்ணணுமில்லையாப்பா.. அவள்பாட்டுக்கு சித்தப்பா வீட்டிற்கு போய் விட்டால் என் திட்டம் என்ன ஆவது?''

''அவள் இங்கே இருந்தால்.. தினகரனிடம் பேசிப் பழக அதிக சான்ஸ் கிடைக்குமேம்மா..''

''கிடைக்கட்டும்.''

''அது பவித்ராவின் கல்யாணத்தில் வந்து முடிந்து விடாதா?''

''முடியாது..''

''எப்படிச் சொல்கிறாய்..''

''போகப் போக உங்களுக்கே தெரியும்..''

''என்னிடம்கூட சொல்ல மாட்டாயா?''



''சொல்லிவிட்டுச் செய்தால் அது திட்டமாகாதுப்பா..''

''இப்ப பவித்ராவையும் உன்னுடன் விட்டுவிட்டுப் போகச் சொல்கிறாயா?''

''ஆமாம்.. இதை நிச்சயமாக தாத்தாவும் மறுக்க மாட்டார். அத்தையும் மறுக்க மாட்டாங்க...''

''அதைச் சொல்லு.. அவளுக்குத்தான் பவித்ராவை பிடித்து விட்டதே..''

''அவங்களுக்குப் பிடித்தால் மட்டும் போதுமா?''

''போதாதா?''

''போதாது.. தினகரனுக்கும் பிடிக்க வேண்டும்..''

''பவித்ராவிற்கு தினகரனைப் பிடித்திருக்கிறதே...''

''அதற்காக அவள் என்ன பாடுபடப் போகிறாள்னு பொறுத்திருந்து பாருங்க...''

ஸ்வேதா சட்டென்று எழுந்து போய்விட்டாள். பரிமளத்தின் முகம் வெறுப்பைக் கக்குவதை உணர்ந்தார் மாணிக்கவாசகம்.

''பரிமளா..''

''பேசாதீங்க..''

''உன்னை நான் அடிச்சது தப்புத்தான். மன்னிச்சுக்க..''

''அதுக்காகவா நான் உங்களைக் கோவிச்சுக்கறேன்னு நினைத்தீங்க?''

''பின்னே.. வேறு எதுக்காக கோபப்படறே..''

''தெரியாததைப் போல நடிக்காதீங்க..''

''நிசமாவே எனக்குத் தெரியலைடி..''

''உங்களுக்கா தெரியாது.. நீங்க ஊருக்கே பாடம் சொல்லிக் கொடுப்பீங்களே. இப்படி ஸ்வேதாவின்

பேச்சுக்கு பூம்பூம் மாட்டைப்போல தலையைத் தலையை ஆட்டுகிறீங்களே... இது உங்களுக்கே நல்லாயிருக்கா?''

தலையைத் தலையை ஆட்டுவது பூம்பூம்மாடு மட்டும்தானா? தஞ்சாவூர் பொம்மைகூடத்தான் தலையைத் தலையை ஆட்டும். பொம்மையை விட்டு விட்டு.. பூம்பூம் மாட்டை.. அடி வாங்கிய கோபத்தில் மனைவி உதாரணம் காட்டுகிறாளோ என்ற சந்தேகம் மாணிக்கவாசகத்தின் மனதில் எழுந்தது.

'மாட்டை அடிக்கிறதைப் போல ஒரு மனுஷியை அடிச்சா அவள் மாடுன்னு சொல்ல மாட்டாளா...' தன் மனதை சமாதானம் செய்து கொண்டார் மாணிக்கவாசகம்.

''ஏண்டி.. ஸ்வேதா சொல்வதிலேயும் ஒரு நியாயம் இருக்கில்ல..''

''ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்த்தால் தன் பிள்ளை தானே வளரும்னு சொல்வாங்க...''

''இப்போ.. எதுக்காகடி இந்த பழமொழியைச் சொல்கிற?''

''ஊரார் பிள்ளையைக் கெடுக்க நினைச்சா.. நம்ம பிள்ளை எப்படி நல்லா வாழும்?''

பரிமளம் விசுக்கென்று உள்ளே போய் விட்டாள்.

பெண்கள் இருவரும் ஒன்று சொன்னதைப் போல.. பாதிப் பேச்சிலேயே அவரை அம்போவென்று விட்டு விட்டுப் போய்விட... தனித்து அமர்ந்து தாடையைத் தடவிக் கொண்டார் மாணிக்க வாசகம்..

'ம்ஹூம்.. தாயும் மகளும் இதில் மட்டும் ஒற்றுமையாய் இருக்காங்க..'

**மா**ணிக்கவாசகம், ஆளவந்தாரைத் தேடிப் போன போது.. அவருடைய அறையில் வாசவன் அமர்ந்து தந்தையுடன் பேசிக் கொண்டிருந்தார். சின்ன மகன் சொல்வதை ஆதுரத்துடன் கேட்டுக் கொண்டிருந்த தகப்பனைக் கண்டு மாணிக்கவாசகத்தின் மனதில் பொறாமை எழுந்தது.



அறைவாசலில் நிழலாடுவதை உணர்ந்து திரும்பிப் பார்த்த ஆளவந்தார்.

''வாப்பா..'' என்றார்..

மாணிக்கவாசகம் உள்ளே சென்று வாசவனின் பக்கத்தில் அமர்ந்தார். அவர் எதையோ சொல்ல வந்திருக்கிறார் என்பதை உணர்ந்து கொண்ட ஆளவந்தார் சின்ன மகனைப் பார்த்து..

''அப்புறம்?'' என்று வினவினார்.

அந்தத் தொனியின் அர்த்தம் புரிந்த வாசவன் எழுந்து கொண்டார்.

''அவ்வளவுதான்ப்பா..'' என்றபடி போய் விட்டார்.

''நீ சொல்லுப்பா..'' மாணிக்கவாசகத்தின் முகம் பார்த்தார் ஆளவந்தார்.

''பரிமளா வந்து சொன்னாள்ப்பா..''

ஆளவந்தாரின் மனம் இதைக் கேட்டதும் வேதனைப் பட்டது. அவரும் ஒரு தகப்பன். பிள்ளைகளைப் பற்றி நல்லவிதமாக கேட்க முடியாவிட்டால் பெற்றவர்களின் மனம் என்ன பாடுபடும் என்று அவருக்கும் தெரியும்.

அவர் தர்மசங்கடமடைந்தார்.

''என்னப்பா செய்வது? எனக்கும் நர்மதாவின் மேல் கோபம் வந்தது. ஆனா.. அடுத்த வீட்டில் ஒரு வயதுப் பெண்ணை விட்டு வைத்தது நம்மளோட தப்பாச்சேப்பா.. அவகிட்ட எப்படி கோபப்படுவது?''

''இருந்தாலும் நர்மதா இப்படிச் சொல்லியிருக்கக் கூடாது..''

''எனக்கும் அது தெரியுது.. என்ன செய்ய முடியும்?

நீயே சொல்லு.. அவளோட மகன்களில் ஒருத்தனுக்குக்கூட ஸ்வேதாவின் மேல் பிரியம் வரவில்லைங்கறப்போ நீயும் நானும் வருத்தப்பட்டு என்ன ஆகப் போகுது?''

''வாசவன் என்ன சொல்கிறான்ப்பா?''

''பவித்ராவை நர்மதா புகழ்ந்து பேசினாளாம்..''

இதைச் சொன்ன ஆளவந்தாரும் சங்கடப்பட்டார். கேட்ட மாணிக்கவாசகத்தின் முகமும் இருண்டது.

''அதைத்தான் நானும் சொல்ல வந்தேன்ப்பா..''

'என்னடா இது.. தம்பி மகளை நர்மதாவுக்கு பிடித்திருப்பதைப் பற்றி இவன் சொல்ல வருகிறானா?'

உலக மகா அதிசயத்தை பார்ப்பதைப் போல மகனின் முகத்தை பார்த்தார் ஆளவந்தார்.

''இத்தனை நாளாய் ஸ்வேதா இந்த வீட்டில் இருந்திருக்கிறாள்..''

''வருஷங்கள்னு சொல்லு..''

''பார்த்தீங்களா.. அதை நீங்களே சொல்லிட்டீங்க..''

''அதுக்கென்ன இப்ப?''

''இப்ப.. இந்த வீட்டுப் பெண்ணுக்குக் கல்யாணம் நிச்சயமாகி இருக்கிறது..''

''நீ என்னதாண்டா சொல்ல வருகிற?''

''இப்போது பார்த்து ஸ்வேதாவை நாம் அழைத்துக் கொண்டு போனால் இந்த ஊர் என்ன சொல்லும்?''

ஆளவந்தார் இந்த புதிய கோணத்தை எதிர்பார்த்திராததால் திகைத்துப் போனார்.



''அதுக்காக.. நர்மதா சொல்லிவிட்ட பின்னாலும் நாம் ஸ்வேதாவை இங்கேயே விட்டு வைக்க முடியுமா?''

''அப்படி நான் சொன்னேனா..''

''எனக்குப் புரியும்படி சொல்லு மாணிக்கம்.''

''இந்த வார்த்தை வந்த பின்னால்.. நர்மதாவே ஸ்வேதாவை இருக்கட்டும்னு சொன்னாலும் இந்த வீட்டில் அவளை இருக்க விட மாட்டேன். அவள் மகன்களுக்கு பெண் கேட்டாலும் கொடுக்க மாட்டேன்..''

ஆளவந்தாருக்கு இதைக் கேட்டு ஆச்சரியம் வந்தது.




*உன் புன்னகைக்கு.. பின்னால்...*
*பொதிந்திருக்கும் உணர்வை...*
*என்னவென்று நான் சொல்ல..?*

கோட்டையூர் ஜமீன் வமிசத்தில் பெண் கொடுப்பதையே தன் வாழ்க்கை லட்சியமாக வைத்திருந்த மாணிக்கவாசகத்தின் வாயிலிருந்து வந்த வார்த்தைகளைக் கேட்டதும் வியப்புடன் வாய் பிளந்தார் ஆளவந்தார்.

''நிஜமாகத்தான் சொல்கிறாயா மாணிக்கம்?''

''இதில் போய் யாராவது பொய் சொல்வாங்களாப்பா?''

''திடீர்னு எப்படி இந்த முடிவுக்கு வந்த?''

''நான் உங்கள் மகன்ப்பா. கண்ணுக்கு முன்னால் தங்கை ஜமீன் வீட்டில் வாழ்க்கைப்பட்டிருக்கிறதைப் பார்த்ததும் அவள் வீட்டில் பெண் கொடுக்கணும்னு ஆசைப்பட்டேன். இது நியாயமாய் எல்லா பெண்ணைப் பெற்றவர்

களுக்கும் வருகிற ஆசைதான். ஆனால்.. அதுக்காக என் பெண்ணைக் குறைவாகப் பேசினால் நான் கேட்டுக் கொண்டு சும்மா இருக்க மாட்டேன்..''

''நம் மீதும் தப்பு இருக்கா.. இல்லையா?''

''என்ன தப்பைப்பா கண்டுவிட்டிங்க...''

''ஸ்வேதா வயதுப் பெண்.. அவளை அத்தையின் வீட்டில்.. கல்யாணமாகாத அத்தை மகன்கள் இருக்கும் போது தங்கவிடலாமா?''

''என் மகள் மட்டும்தான் வயதுப் பெண்ணா? எங்கேயோ சென்னையில் இருந்து வந்திருக்கிறாளே.. மாலின்னு ஒருத்தி.. அந்தப் பெண் வயதுப் பெண்ணில் லையா.. அவளுக்கு நர்மதா என்ன முறையாகணும்ப்பா.. பெரியம்மா முறையாகணுமா? நர்மதாவின் மகன்கள் அண்ணன்.. தம்பி முறையாகணுமா?''

''மாணிக்கம்...''

இதைப் பற்றி யோசித்துக்கூடப் பார்த்திராத ஆளவந் தார் திகைத்தார். மகனின் கேள்வியிலும் ஒரு நியாயம் இருப்பதை அவரால் உணர முடிந்தது.

''சொல்லுங்கப்பா.. நர்மதா, மாலினிக்கு அத்தை முறையாகணுமா இல்லையா? இந்த வீட்டு ஆண்பிள்ளை கள்.. அவருக்கு அத்தை மகன்களின் முறையாகணுமா இல்லையா? ஸ்வேதா இந்த வீட்டில் இருந்தால் மட்டும் தப்பு.. அதுவே மாலினி இருந்தால் சரியா? எந்த ஊர் நியாயம் இது?''

''அவள் வேலை பார்க்க வந்திருக்கிறாள் மாணிக்கம்..''

''இருக்கட்டுமேப்பா.. ஊருக்குள் ஆயிரம் லேடீஸ் ஹாஸ்டல் இருக்கு. அதில எதிலேயாவது தங்கலாமே...''

''அது வந்து...''



''ஏன்ப்பா மென்று முழுங்கறீங்க.. நான் கேட்டது நியாயம்தானே.''

''அவள் இந்த வீட்டு மருமகளின் சித்தப்பா மகள்ப்பா..''

''ஸ்வேதா மட்டும் யார்?''

ஆளவந்தாரின் மனதிலும் அந்த எண்ணம் இருக்கத் தான் செய்தது. ஆயிரம்தான் அவருக்கு மாணிக்கவாசகத் தின் செயல்களில் உடன்பாடு இல்லையென்றாலும்.. ஸ்வேதா அவருடைய பேத்தி என்ற பாசம் அவர் மனதுக் குள்ளேயும் இருந்தது. ஸ்வேதாவை அழைத்துக் கொண்டு போய்விடச் சொல்லி நர்மதா சொல்லியிருக்கக் கூடாது என்ற எண்ணமும் இருந்தது.

''எனக்கு மட்டும் அந்த கோபம் இல்லைன்னு நீ நினைக்கறியா மாணிக்கம்..''

''இருந்து என்ன பிரயோசனம் அப்பா? ஒன்றை யோசித்தும் பாருங்க. நர்மதாவும் இந்த வீட்டு மருமகள் தான். சசிரேகாவும் இந்த வீட்டு மருமகள்தான். ஆனால், உறவுக்காரங்களை இந்த வீட்டு மனிதர்களைப் போல் இந்த வீட்டில் தங்க வைக்கும் உரிமை யாருக்கு இருக் கிறது? நர்மதாவிற்கா.. இல்லை சசிரேகாவிற்கா..''

மாணிக்கவாசகம்.. ஆளவந்தாருக்கு தம்பி மகளின் மேல் இருக்கும் பாசத்தை உசுப்பி விட்டார்.

''இதையும் நான் நினைத்தேன்டா..''

''நினைத்து என்ன பிரயோஜனம்? கோட்டையூர் ஜமீன் வம்சத்தில் பெண்ணைக் கொடுக்கப் போகிறோ முன்னு நீங்களும் உங்க தம்பியும் பெட்டிப் பெட்டியாய் வைரத்தை அள்ளிக் கொடுத்தீங்க. உங்க தம்பியின் சொத்தை வைத்து எத்தனை ஊரை விலைக்கு வாங்கலாம்

தெரியுமா? அத்தனையும் ஒரே வாரிசுன்னு நர்மதாவின் மூலமா கார்த்திகேயனுக்கும் போய்ச் சேர்ந்தது. நம் வீட்டுப் பெண்ணுக்கு அந்த சசிரேகா இணையா?''

''நீ சொல்வது நிஜம்தான்..''

''மகன் ஆசைப் பட்டான்கிற ஒரே காரணத்துக்காக அந்தப் பெண்ணை இந்த வீட்டு மருமகளா கொண்டு வந்தா நர்மதா.. நாம ஏன்னு கேட்டோமா?''

பிரபாகரனிடம் அப்படியெல்லாம் கேட்டுவிட முடியாது என்ற ஒரே காரணத்திற்காகத்தான் மாணிக்க வாசகம் வாயை மூடிக் கொண்டிருந்தார். ஆனால்.. பேரன் களின் மீது யாரும் வலுக்கட்டாயமாக தங்களின் விருப் பத்தை திணிக்கக்கூடாது என்ற கொள்கையோடு இருந்த ஆளவந்தார், ஆட்சேபக்குரல் எழுப்பவில்லை என்பது உண்மைதான் என்பதால்.. அவர் அமைதியாக யோசித்தார்.

''இப்ப என்னாச்சுன்னு பாருங்க.. வெறுங்கையோடு வந்த பெண்ணுக்கு இந்த வீட்டில் இருக்கும் செல்வாக் கும் சொல்வாக்கும் நம்ம வீட்டுப் பெண்ணுக்கு இருக்கா?''

என்னவோ நர்மதாவை ஒதுக்கி மூலையில் உட்கார வைத்துவிட்டு சசிரேகா அந்த வீட்டின் அதிகாரங்களை கையில் எடுத்துக் கொண்டதைப் போலவும் அவள் படும் துயரத்தைக் காணச் சகிக்காமல் அதை ஆளவந்தாரின் கவனத்திற்கு கொண்டு வருகிறவரைப் போலவும் மாணிக்கவாசகம் காட்டிய பாவனையில் ஆளவந்தார் நெஞ்சுருகிப் போனார்.

''நிஜம்தாண்டா மகனே.. என் தம்பி மகளை இந்த வீட்டில் என்ன நிலையில் வைத்திருக்கிறாங்கன்னு நீ சொன்ன பின்னால்தான் எனக்கே தெரியுது..''

உண்மையிலேயே.. நர்மதாவை முடக்கி மூலையில் உட்கார வைக்க வேண்டுமென்ற கனவு.. மாணிக்கவாசகத் திற்கும் அவர் பெற்ற குலக்கொழுந்தான ஸ்வேதாவிற்கும் தான் இருந்தது. இருக்கிறது என்பதை அறியாத ஆளவந்தார் சொன்னதைக் கேட்ட மாணிக்கவாசகம் மனதிற்குள் புன்னகை செய்து கொண்டார்.



'எங்கே அடித்தால் எங்கே வலிக்குமுன்னு எனக்குத் தெரியும்ப்பா.. பெற்ற மகன்களைவிட உங்களுக்கு தம்பி மகள்தான் என்னைக்குமே உயர்த்தி. அவள் கஷ்டப்படு கிறாள்னு பில்ட்அப் கொடுத்தால்தான் நீங்க அவளைக் காப்பாற்றுகிறேன் பேர்வழின்னு அவளையே நாலு கேள்வி கேட்பீங்கன்னு எனக்குத் தெரியாதா..'

''இந்த பிரபாகரனையே எடுத்துக்கங்க..''

''அவனுக்கு என்னடா..?''

''அவன் யாருப்பா..?''

''இது என்னடா மாணிக்கம்.. கூறுகெட்டதனமா இப்படிக் கேட்கிற... அவன் யாருன்னு இந்த தமிழ்நாட் டுக்கே தெரியுமே..''

'ஹூம்.. இந்தப் பெருமையைச் சொல்லலைன்னு இப்ப நான் அழுதேனா?'

''நர்மதாவுக்கு அவன் யாருப்பா?''

''பெற்ற மகன்..''

''எல்லா வீட்டிலயும் அம்மாதான் மகனைக் கண்டிப்பா.. இந்த வீட்டில் அது தலைகீழா இல்ல இருக்கு. மகன்காரன் முகத்தைப் பார்த்துப் பேச பயப்படுகிற அம்மா இந்த உலகத்திலேயே நம்ம நர்மதாவாகத்தான் இருப்பா..''

''நீ சொல்வதை இப்போதுதான் யோசிக்கறேன் மாணிக்கம்..''

''வயித்தெரிச்சலா இருக்குப்பா.. புருஷன் இல்லாத பொம்பளைக மகன்களை அண்டித்தான் வாழணும்..

அதுக்காக.. அவங்க பேசக்கூட பயப்படுகிற அளவுக்கு அடக்கி வைச்சிருக்கலாமா...? அது பாவமில்லையா?''

நர்மதாவைப் பார்த்து பாவப்படுகிற ஆளா மாணிக்க வாசகம்.. ஆனாலும் வேதாளம் தேவாரம் படித்தது.. அவரும் முதலைக் கண்ணீர் விட்டு சோக ரசம் பிழிந்தார்.

''நர்மதாவிற்கு ஒண்ணுன்னா தட்டிக் கேட்க யாரு மில்லைன்னு அந்த பிரபாகரன் நினைத்தானா? அவளுடைய பெரியப்பன் நானிருக்கேண்டா...''

ஆளவந்தார் பொங்கி எழுந்தார். கார்த்திகேயன் இறந்த வுடன் அவர் நிர்மாணித்த தொழில் சாம்ராஜ்ஜியம் ஆட்டம் கண்டது. அதைக் காப்பாற்ற எத்தனை கோடிகள் தேவைப் பட்டன என்று நர்மதாவிற்கும் அவள் பெற்ற பிள்ளை களுக்கும் மட்டுமே தெரியும். அந்தச் சரிவை சமாளிக்க தனி மனிதனாக பிரபாகரன் மட்டுமே போராடி னான்.

நர்மதா கொண்டு போன சொத்து.. யானைப் பசிக்கு சோளப் பொரியைப் போல... அவள் மனம் உடைந்தபோது பிரபாகரன்தான் தாயை சமாதானம் செய்தான்.

''அப்பாவின் பெயர் நிலைக்கும். இந்த கோட்டையூர் ஜமீனின் தொழில் அழியாது. நிமிர்ந்து நிற்கும். அதை நான் பார்த்துக் கொள்கிறேன். நீங்க கவலைப்படாதீங்க..''

''ஆனால் பிரபா.. நீ தனியாளாக போராடுகிறாயே..''

''தம்பிகளுக்கு என்னம்மா தெரியும். அவர்கள் சின்னப் பையன்கள். சுமக்க நான் இருக்கிறேன். இந்தச் சுமையை அவர்கள் தாங்க மாட்டார்கள். வேண்டாம்.. அவர்களை இதில் இறக்க மாட்டேன்..''

தனியொருவனாய் சுமைகளைத் தோளில் சுமந்தவன் பிரபாகரன்.. அதிகாரமும் மதிப்பும் பதவியும் ஒருவருக்கு தானாக வந்து விடாது.. மற்றவர்கள் கொடுக்க வேண்டும்.



பிரபாகரனின் வார்த்தைக்கு நர்மதா அடிபணிந்தது. அப்பனுக்கே பாடம் சொன்ன சுப்பிரமணியைப் போன்ற மகன் அவன் என்பதற்காக..

அண்ணன் சொல்லே வேதம் என்று அவனுடைய தம்பிகளும் தங்கையும் கட்டுப்பட்டு நின்றது.. அந்த அண்ணன் அவர்களை பெற்ற தகப்பனைப் போல பாது காத்து நிற்கிறவன் என்பதற்காக.

சும்மா கிடைத்து விடவில்லை சுதந்திரம் என்பதைப் போல பிரபாகரன் அந்தக் குடும்பத்தின் ஆணிவேராகவும் குடும்பத் தலைவனாகவும் ஆனதற்குப் பின்னணியில் அவனுடைய உழைப்பும் தியாகமும் இருந்தன.

இதை அறிந்து கொள்ள முடியாத அறியாமை உடை யவரல்ல ஆளவந்தார். ஆனால்.. சொல்கிற விதமாகச் சொல்லி.. அவர் கண்களில் பாசம் என்ற திரையைப் போட்டு விட்டார் மாணிக்கவாசகம்.

''இப்போ எதையும் பேச வேணாம்ப்பா.. இது காயத்ரியின் கல்யாண சமயம். இது முடியட்டும். அப்புறம் பார்த்துக்கலாம். அந்த பிரபாகரனை நிற்க வைத்து நாலு கேள்வி கேட்டால்தான் என் நெஞ்சு ஆறும்..''

மனதில் இருப்பதை மறைக்காமல் சொன்னார் மாணிக்க வாசகம். அவர் பிரபாகரனை நிற்க வைத்து கேள்வி கேட்க விரும்புவது எதற்காக என்று அவர் மனதுக்குத்தான் நன்றாகத் தெரியுமே..

'என் மகளுக்கு என்ன குறை.. ஏன் அவளை உனக்கும் உன் தம்பிமார்களுக்கும் பிடிக்காமல் போனது.. என் மகளை விட அந்த சசிரேகாவும் அவளுடைய சித்தப்பன் மகளும் எந்த விதத்தில் உயர்த்தியாகப் போனார்கள்.. அவளை விரட்ட என் மகள் நினைத்தால் நீ என் மகளையே விரட்ட நினைக்கிறாயா?'

இதுதான் பிரபாகரனிடம் மாணிக்கவாசகம் கேட்க விரும்பிய நான்கு கேள்விகள்.

இதை அறியாத கூமுட்டை கோவிந்தசாமியான ஆளவந்த மகா பிரபு.. தன் நரைத்த மீசையை முறுக்கி விட்டுக் கொண்டு கர்ஜித்தார்.

''நீ சொல்வதும் சரிதாண்டா மகனே.. என் பேத்தியின் கல்யாணம் முடியட்டும். அதுக்கப்புறம் பாரு.. உன் அப்பன் அவனை என்ன கேள்வி கேட்கிறேன்னு...''

''பேத்தியின் கல்யாணமா... நீங்க என்னப்பா சொல்கிறீங்க?''

பவித்ராவின் நினைவில் மாணிக்கவாசகம் கதிகலங்கி போனார். அவரை விசித்திரமாகப் பார்த்தார் ஆளவந்தார்.

''என்னடா மாணிக்கம்.. இப்படி அறிவுகெட்டதனமா கேள்வி கேட்கிற. இப்ப நீதாண்டா என் பேத்தியின் கல்யாணத்தைச் பத்திச் சொன்னே?''

''நான் எப்போ சொன்னேன்?'' மாணிக்கவாசகம் திருதிருவென விழித்தார்.

''போடா மாங்கா மடையா...''

இந்த ஸ்வேதாவிற்காக இன்னும் எத்தனை பட்டப் பெயர்களை தகப்பனாரிடம் இருந்து வாங்க வேண்டியிருக்குமோ என்று நொந்துகொண்டார் மாணிக்கவாசகம்.

''நான் உங்களைப் போல அறிவாளியில்லைப்பா.. டியூப்லைட்.. எதையும் தேங்காயைப் போட்டு உடைத்ததைப் போல பட்டுன்னு போட்டு உடைத்தால்தான் எனக்குப் புரியும்...''

வேறுவழியின்றி.. தகப்பனாரிடம் சமரசமாக பேசி வைத்தார் மாணிக்கவாசகம். இல்லாவிட்டால் ஆளவந்தார் பட்டப்பெயர்களை அடுக்கி விடுவாரே.



## 65

*உன்னிடம் கோபம் கொள்ள முடியாமல்*
*நான் தோற்கின்ற நிலையை....*
*என்னவென்று நான் சொல்ல..?*

''பின்னே என்னடா மாணிக்கம்.. பேத்தியின் கல்யாணம்னு நான் சொன்னா.. இப்படி பேந்தப் பேந்த முழிக்கிறயே..''

'நான் என்ன வைத்துக் கொண்டா வஞ்சனை செய்கிறேன்? என் முழியே அப்படித்தான்...'

''காயத்ரி யாருடா?''

''நர்மதாவின் மகள்..''

''நர்மதா யாரு?''

''உங்க தம்பி மகள்..''

''காய்த்ரி நர்மதாவிற்கு மகள்னா.. எனக்கு என்ன வாகனும்..?''

''இதென்னப்பா கேள்வி... உங்களுக்கு பேத்தியாகணும்.. இதுகூடத் தெரியலையா?''

''ம்ஹூம்.. இதை நீ.. என்னைப் பார்த்து சொல்கிறாயா.. நேரம்டா மகனே.. இதைத்தானே நானும் சொன்னேன்..''

''ஓ.. நீங்க காயத்ரியின் கல்யாணத்தைத்தான்... உங்க பேத்தியின் கல்யாணம்னு சொன்னீங்களா?''

''ஆமாம்.. நீ என்ன நினைத்தே..''

''நான் என்னென்னத்தையோ நினைத்து விட்டேன். அது எதுக்கு இப்ப தேவையில்லாம. அப்பா.. நானும் காயத்ரியின் கல்யாணத்தைப் பத்தித்தான் பேச வந்தேன்..''

''சொல்லுப்பா.. தாய்மாமன் சீராக நீ என்ன செய்யப் போற?''

'நீங்க அதிலேயே இருங்க..' பல்லை நறநறவென கடித்தார் மாணிக்கவாசகம்.

பெற்ற பிள்ளைகளை மொட்டை அடித்து தம்பி மகளுக்கு சீர்செய்ய வைக்கும் அப்பா.. உலகத்திலேயே தன்னைப் பெற்ற அப்பாவாகத்தான் இருக்க முடியும் என்பது மாணிக்கவாசகத்தின் அசைக்க முடியாத நம்பிக்கை.

இதை அவ்வப்போது.. இந்த மாதிரி பேசி ஆளவந்தாரும் உறுதி செய்வார்..

''அதுக்கென்னப்பா.. செய்துட்டா போச்சு. நானும் என் அண்ணன் தம்பிகளும் வேறு எதுக்கு இருக்கோம்? எங்க வீட்டுப் பிள்ளைகளை வெளியிடத்தில் கல்யாணம் பண்ணிக் கொடுத்துவிட்டு.. உங்க தம்பி மகள் பெற்ற பிள்ளைகள்.. வெளியிடங்களில் கல்யாணம் பண்ணிக் கொள்ளும்போது சீர்செய்யத்தானே இருக்கிறோம்...''

சீர்வரிசைப் பட்டியலைப் பற்றி விவரமாக பேச நினைத்து வாயைத் திறந்த ஆளவந்தார்.. மகனின் பேச்சைக் கேட்டதும் வாயை கோந்து போட்டு ஒட்டாத குறையாக மூடிக்கொண்டார்.

''காயத்ரியின் கல்யாணத்திற்கு செய்ய வேண்டிய சீர்வரிசையை குறைவில்லாம செய்வேன். நீங்க அந்தக் கவலையை விட்டுவிட்டு இப்ப நடக்கிற பஞ்சாயத்துக்கு வாங்க..''

''என்னன்னு சொல்லுப்பா..''

''இத்தனை வருஷமாய் இந்த வீட்டிலேயே ஸ்வேதா இருந்தது நம்ம சொந்த பந்தங்களுக்கு தெரியுமா.. தெரியாதா?''



''ஏன் தெரியாது? அதுதான் ஒவ்வொருத்தனும் என்னை நாக்கைப் பிடுங்கிறதைப் போல நாலு கேள்வி கேட்டுக்கிட்டே இருந்தானுகளே.. எங்கே.. நானும் இதைப் பற்றி உன்னிடம் சொல்லிப் பார்த்தேன். நீ கேட்பேனான்னு சரிமல்லுக்கு நின்னியே..''

தம்பியின் மகளுக்கு சீர்செய்வதை குத்திக்காட்டிப் பேசிய மகனை பதிலுக்குப் பதில் குத்திக் காட்டிப் பேசி மனதை ஆற்றிக் கொண்டார் ஆளவந்தார்.

'இப்படி ஒரு அப்பாவுக்கு மகனாகப் பிறக்க நான் என்ன வரம் வாங்கி வந்தேன்.. முருகா..'

மாணிக்கவாசகம்.. தாய் தகப்பனிடம் கோபித்துக் கொண்டு பழனி மலையில் குடியிருந்த முருகனை அழைத்து மனதுக்குள் புலம்பிக் கொண்டார்..

''அப்படிக் குத்திக் காட்டின உறவு ஜனங்கள்.. இப்ப காயத்ரியின் கல்யாணம் நடக்கப் போகிற இந்தச் சமயத்தில் ஸ்வேதா இந்த வீட்டில் இல்லாததை கவனிச்சு அதுக்கும் நாலு கேள்வி கேட்க மாட்டாங்களா?''

ஆளவந்தாரின் உறவு வட்டாரம் அப்படிப்பட்டது தான்.. அதை உணர்ந்தவராக அவரும் தாடையைத் தடவிக் கொண்டு யோசித்தார்.

''ஆமாம்.. இப்படி ஒண்ணு இருக்கே.. இதை எப்படி நான் மறந்துபோனேன்?''

''அதை என்கிட்ட வந்து கேளுங்க.. கொஞ்சமாவது பெற்ற பிள்ளைகளைப் பற்றி நினைத்துப் பார்த்திருந்தா.. இந்த நினைப்பு வந்திருக்கும்.. எப்பப் பார்த்தாலும் தம்பி மகளைப் பத்தியே கவலைப்பட்டுக்கிட்டு இருந்தா இந்த நினைப்பு எப்படி வரும்?''

''அவளுக்கு என்னை விட்டா யாருடா இருக்கா?''

''எனக்கும் உங்களை விட்டா யாருமில்லை.. ஸ்வேதா உங்க பேத்தி.. இந்த வீட்டில் அவளைக் கல்யாணம் பண்ணிக் கொடுக்க முடியாதுன்னு ஆகிப் போச்சு. நாளைக்கு வெளியிடத்திலிருந்து அவளைப் பெண் கேட்டு வரணுமின்னா.. ஒரு சொல் இல்லாம இருக்கணுமா இல்லையா?''

''நிச்சயமா இருக்கணும்..''

''இந்தச் சமயத்தில் ஸ்வேதாவை நாம கூப்பிட்டுக் கிட்டுப் போனால் பார்க்கிறவங்களுக்கு ஆயிரம் சந்தேகம் வரும். அதனால்...''

''அதனால்?''

''காயத்ரியின் கல்யாணம் முடிந்தவுடன் கூப்பிட்டுக் கொண்டு போய் விடலாம். கேட்கிறவங்களிடம்.. இத்தனை நாள் நர்மதாவின் வீட்டில்.. காயத்ரியுடன் ஸ்வேதாவும் வளர்ந்து வந்தாள். இப்ப அவளுக்கு கல்யாணம் முடிந்து போனவுடன் கல்யாண வயசில் அத்தை மகன்கள் மட்டும் இருக்கிற வீட்டில் இருக்க மாட்டேன்னு ஸ்வேதா சொல்லி விட்டாள். அதனால் அழைத்துக் கொண்டு வந்து விட்டோ முன்னு சொல்லிக் கொள்ளலாம். நமக்கும் அது கௌரவ மாக இருக்கும்..''

இது நல்ல திட்டம் என்று ஆளவந்தாருக்கும் தோன்றி விட்டது. காயத்ரியின் திருமணத்திற்கு அதிக நாள்கள் காத்திருக்கத் தேவையும் இல்லை. எண்ணி அறுபதே நாள்கள். இத்தனை நாள் ஸ்வேதாவைப் பொறுத்துக் கொண்ட நர்மதா.. இன்னும் ஒரு அறுபது நாள்கள் பொறுத்துக் கொள்ள மாட்டாளா?

அறுபது நாள்கள் என்பது ஸ்வேதாவைப் பொறுத்த வரை மிக அதிகமான நாள்கள் என்று பாவம்.. அந்த வயோதிகிகருக்குத் தெரியாமல் போய்விட்டது. முதல்



நாள் இரவுதான் பவித்ரா, தினகரனை விரும்புவதையும் தினகரன், மாலினியிடம் ஜொள்ளு விடுவதையும் மாலினி, பிரபாகரனை காதலிப்பதையும் ஸ்வேதா தெளிவாக அறிந்தாள். விடிந்தவுடன் மிகப் பெரிய விபரீத விளை யாட்டை அவள் விளையாடிப் பார்த்து விடவில்லையா? ஒரு நாளிலேயே இதைச் செய்து முடித்த ஸ்வேதாவின் கைகளில் லட்டு போல அறுபது நாள்களை அள்ளிக் கொடுத்து விட்டார் ஆளவந்தார்.

''சரிப்பா.. நர்மதாவிடம் இதைப் பற்றி நான் பேசிப் பார்க்கிறேன். அவள் என்ன சொல்கிறாளோ...''

''அவள் சொல்வதற்கு என்ன இருக்குதோ இல் லையோ.. நான் சொல்வதற்கு இன்னும் ஒரு விஷயம் இருக்குப்பா..''

''என்னப்பா..''

''இப்படி ஒரு வார்த்தை நர்மதாவின் வாயிலிருந்து வந்தபின்னால்.. நாம் ஸ்வேதாவை மட்டும் தனியாக இந்த வீட்டில் விட்டுவிட்டுப் போகக் கூடாதுப்பா..''

''நாமும் கூடவே இருக்கலாமுன்னு சொல்கிறாயா? இரண்டு மாசம் இங்கே தங்கினால் நம்ம ஜோலிகளை யாரு பார்க்கிறது?''

''என்னத்தை பெரிய ஜோலிகளை பார்க்கப் போகி றோம்.. இங்கே என்னென்ன சீர்வரிசைகளை கொண்டு வரணும்னு லிஸ்ட் போடப் போறோம். எரிச்சலைக் கிளப் பாம நான் சொல்கிறதைக் கேளுங்கப்பா..''

''நீயேண்டா.. நர்மதாவின் சீர்வரிசையிலேயே நிற்கிற?''

''நீங்கதான் அதை விட்டு நகராமல் நிற்கறீங்க.. அப்பா.. ஸ்வேதா கூட நாம இருக்கணும்னு நான் சொல்ல

வரலை. கோட்டையூர் ஜமீன் குடும்பத்துக்கு மட்டும் தொழில்கள் இருக்கு.. நீங்க பெத்த பிள்ளைகளுக்கு அது இல்லையா. நாங்க எங்க தொழிலைப் பார்க்கப் போகணும்.. ஸ்வேதா கூட துணைக்கு இருக்கிற அளவுக்கு நாங்க வேலை வெட்டி இல்லாத ஆளுக கிடையாது..''

''நீ என் கூட சண்டை போடணும்கிற முடிவோட இருக்கிறாயா?''

''அது நிறைய போட்டாச்சு. இனிமேலும் நிறைய போடலாம். இப்ப நான் சொல்ல வருவது அது இல்லை. ஸ்வேதா கூட பவித்ராவையும் விட்டுவிட்டுப் போவோம்..''

''இதுகூட நல்ல ஐடியாவா இருக்கே..''

''இப்பத்தான் வாசவனும் நர்மதாவிற்கு பவித்ராவை பிடித்திருக்குன்னு சொன்னான்னு சொன்னீங்க. அதனால்.. நர்மதாவும் இதுக்கு மறுப்புச் சொல்ல மாட்டாள்..''

''அப்பாடி.. கவலை விட்டது. நான் இப்பவே நர்மதா விடம் இதைப் பற்றிப் பேசி விடுகிறேன்..''

அவ்வளவு சீக்கிரம் கவலை தன்னை விட்டுப் போகாது என்பதை அறியாத ஆளவந்தார்.. ஆர்வமாக தம்பி மகளைத் தேடிப் போனார்.

மதிய உணவிற்கு டைனிங் ஹால் தயாராவதை பார்வையிட்டுக் கொண்டிருந்த நர்மதா.. ஆளவந்தாரைக் கண்டதும்..

''வாங்க பெரியப்பா.. உட்காருங்க.. எல்லோரையும் வரச் சொல்கிறேன்.. சாப்பிட்டு விடலாம்..'' என்றாள்.

''சாப்பாட்டுக்கு இப்ப என்னம்மா அவசரம். நீ சொன்னதைப் பத்தி உன் கூட கொஞ்சம் பேசணுமே..'' என்றார் ஆளவந்தார்.

''அதுக்கென்ன பெரியப்பா.. பேசிட்டாப் போச்சு..'', நர்மதா.. தனது அறைக்குள் ஆளவந்தாரை அழைத்துச் சென்றாள்..



அவர்களின் வீட்டில்.. ஒவ்வொரு படுக்கையறையும் தனித் தனி வீடுகளைப் போன்ற அமைப்புடன் இருக்கும். முன்னால் வரவேற்பறை.. அடுத்து படுக்கையறை.. அதை ஒட்டிய உடை மாற்றும் அறை... அதனுடன் இணைந்த குளியலறை என்ற விஸ்தாரமாக விரிந்து பரந்திருக்கும்.

வரவேற்பறையில் இருந்த சோபாவில் ஆளவந்தாரை அமரச் சொல்லிவிட்டு எதிரே அமர்ந்தாள் நர்மதா..

''என்ன விஷயம் பெரியப்பா?''

''நீ சொன்ன விஷயத்தை உன் அண்ணனிடம் சொல்லி விட்டேன் நர்மதா..''

இதைக் கேட்ட நர்மதா சங்கடமடைந்தாள்.

''அண்ணன் என்னைத் தப்பா நினைச்சிட்டாரா பெரியப்பா..'' தம்பி மகள் இப்படிக் கேட்டதும் உருகி விட்டார் ஆளவந்தார்.

''அதெல்லாம் இல்லைம்மா. நீ வருத்தப்பட்டுக்காதே. எப்படியும் ஸ்வேதாவை நாங்க கூப்பிட்டுக்கிட்டுத்தானே போகணும்...''

''என்னை மன்னிச்சிருங்க பெரியப்பா..''

''இதுக்கெல்லாம் மன்னிப்புக் கேட்கணுமா.. நீ என்ன தப்பு செய்தே.. ஒண்ணும் இல்லை. உன் வீட்டில் மகளைக் கொடுக்கணுமுன்னு மாணிக்கம் ஆசைப்பட்டான். அது நடக்காமல் போய்விட்டது. நாம நினைச்சதெல்லாம் நடந்துக்கிட்டா இருக்குது? ஆனால்.... உன் அண்ணன் வேறு ஒன்றைச் சொல்கிறான்...''

''என்ன பெரியப்பா?''

மாணிக்கவாசகம் கூறியதை ஆளவந்தார் தம்பி மகளிடம் எடுத்துச் சொன்னார்.

'எப்படியோ.. இந்த மட்டிலும் காயத்ரியின் கல்யாணம் முடிஞ்சதும் பெண்ணைக் கூப்பிட்டுக்கிட்டு போய் விடுகி றேன்னு என் அண்ணன் ஒப்புக்கொண்டாரே..'

நர்மதா அதை நினைத்து ஆறுதல்பட்டுக் கொண் டாள்.

''அதுக்கென்ன பெரியப்பா.. நான் பிரபாகிட்ட பேசிக் கறேன்..''

பிரபாகரனின் பேச்சு வந்ததும்.. ஆளவந்தாரின் முகத் தில் யோசனை வந்தது. அவரின் முகமாற்றத்தைக் கண்ட நர்மதா கேள்வியாக அவரைப் பார்த்தாள்.

''இன்னும் என்ன பெரியப்பா..'' என்று கேட்டாள்..

''அம்மாடி... நீ சந்தோஷமா இருக்கியா தாயி...''

என்னவோ.. நேற்றுத்தான் திருமணமாகி புகுந்த வீட்டிற்கு வந்திருக்கும் புது மணப்பெண்ணிடம் விசாரிப் பதைப் போல அவர் விசாரிக்கவும் நர்மதாவிற்கு என்ன பதிலைச் சொல்வது என்றே பிடிபடவில்லை.

'இந்த பெரியப்பாவிற்கு என்ன ஆகிவிட்டது..' விசித்திரமாக அவரைப் பார்த்தபடி..

''இதென்ன கேள்வி பெரியப்பா?'' என்று கேட்டாள்.

''அதில்லை நர்மதா.. இந்த வீட்டில் நீ எப்படி இருக் கிற..''

சகலவித அதிகாரங்களுடன் இருக்கிறாயா என்பதை தம்பி மகளிடம் ஆளவந்தார் கேட்கிறாராம்.

இதெல்லாம் ஒரு வீடா.. இந்த வீட்டில் மனிதன் இருப்பானா.. இது மாதிரி வீட்டில் நீ எப்படி இருக்கிற என்ற தோரணையில் ஆளவந்தார் கேட்டு வைக்க..

''ஏன் பெரியப்பா.. உங்களுக்கு ஏதாவது சௌகர்ய குறைவு இருக்கா.. உங்க ரூமில் ஏ.ஸி. ஒழுங்காகத்தானே ஓடுது? பாத்ரூமில் ஹீட்டர் வேலை செய்யுதா.. இல்லையா..'' என்று நர்மதா விசாரிக்க ஆரம்பித்து விட்டாள்.



'நான் என்ன கேட்கிறேன்.. இவளென்ன பதில் சொல் கிறாள்..' என்று.. தான் கேள்வி கேட்ட லட்சணத்தை அறியாமல் தம்பி மகளின் புத்திசாலித்தனத்தை குறைவாக நினைத்து.. மனதிற்குள் திட்டித் தீர்த்தார் ஆளவந்தார்.

## 66

*உன் முகம் பார்த்த நொடியில்*
*என் முகவரி மறைந்த நிலையை..*
*என்னவென்று நான் சொல்ல...?*

''பாரும்மா.. நர்மதா..'' என்று ஆளவந்தார் ஆரம்பிக் கவும்.. அவர் முகத்தையே.. பயபக்தியோடு பார்க்க ஆரம் பித்தாள் நர்மதா.

''நீ கோட்டையூர் ஜமீன்தாரிணி..''

''அதுக்கென்ன பெரியப்பா...''

''நீ யாருக்கும் பயப்படவேண்டிய அவசியமில்லை..''

''நான் யாருக்குப் பயப்படப் போகிறேன்?''

''நீ நில்லுன்னா எல்லோரும் நிற்கணும்.. உட்கா ருன்னா உட்காரணும்.. புரியுதா?''

''புரியுது பெரியப்பா...''

''என்ன புரியுது?''

''நான் நில்லுன்னு சொன்னால் எல்லோரும் நிற்கணும்.. உட்காருன்னு சொன்னால் எல்லோரும் உட்காரணும்.. சரியா.. பெரியப்பா..''

'ம்ஹூம்.. இது வேலைக்கு ஆகாது..' என்று எழுந்து கொண்டார் ஆளவந்தார்..

''என்ன பெரியப்பா.. அதுக்குள்ள எழுந்துவிட்டீங்க..''

''வேறு என்னம்மா செய்யச் சொல்கிற?''

''நீங்க எதையோ சொல்ல வந்தீங்களே..''

''வேண்டாம்மா.. அதை நான் சொல்ல வந்தால்.. இன்றைக்கு பொழுதே போய்விடும் போல இருக்கு.. அதை இன்னொரு நாள் பார்த்துக்கலாம்.''

''இப்படிச் சொன்னால் எப்படி பெரியப்பா?''

''நான் எப்படிச் சொன்னால் உனக்கு பிடிபடும்னு எனக்குப் புரியவே மாட்டேன்குதே நர்மதா. நான் ஒன்றைச் சொன்னால்.. நீ வேற ஒன்றைப் புரிந்து கொள்கிறாய்.. இது பசி நேரம் வேற.. அதனால முதலில் சாப்பிடுகிற வேலையைப் பார்ப்போம். காயத்ரியின் கல்யாணம் முடிந்த பின்னால் இதைப் பற்றி ஒரு நாள் முழுக்க உட்கார்ந்து விவரமா பேசலாம்..''

''எதைப் பத்தி பெரியப்பா..''

ஒன்றும் புரியாமல் பேந்த பேந்த விழித்தாள் நர்மதா. இப்படி முதலும் இல்லாமல் முடிவும் இல்லாமல் மொட்டைக் காத்தான் குட்டையில் விழுந்தான் என்ற ரீதியாகப் பேசி வைத்தால் அவள்தான் பாவம் என்ன பண்ணுவாள்?

''வேண்டாம் நர்மதா.. வயதான பெரியப்பன் மேல் கருணை காட்டி இந்தப் பேச்சை இத்துடன் விட்டுவிடு. இன்னொரு நாள் இதைப் பற்றி பேசிக்கலாம்..''

''அதில்லை பெரியப்பா...''

''பசிக்குதும்மா..''

வேறுவழியின்றி அந்தப் பேச்சை விட்டு விட்டாள் நர்மதா. ஆளவந்தாரின் மூலமாக நர்மதா சம்மதித்துவிட்ட செய்தி மாணிக்கவாசகத்திற்கும் போனது. அவர் மூலமாக ஸ்வேதாவின் காதுகளுக்குப் பறந்தது.

மதிய உணவிற்குப் பின்னர் ஊருக்குக் கிளம்பிய பரிமளம்.. மகளிடம் ஆயிரம் புத்திமதிகளை சொல்லி விட்டு கிளம்ப மனமில்லாமல் கிளம்பிச் சென்றாள்.



''மத்தவங்களை அழிக்கிற முயற்சியில் நீ அழிந்து விடாமல் பார்த்துக் கொள் ஸ்வேதா..''

இதுதான் அவள் திரும்பத் திரும்ப மகளிடம் சொன்னது. வாசவனின் அறிவுரையோ வேறு மாதிரியாக இருந்தது.

''பவித்ரா.. அண்ணன் ஸ்வேதாவை இந்த வீட்டில் வருஷக்கணக்கில் தங்க வைத்தார். எப்படியும் தன் மகளை இந்த வீட்டு மருமகளாக்கிடணும்னு கனவு கண்டார். அவர் கனவு பலிக்கலை. உனக்கு அந்த அதிர்ஷ்டம் தானாத் தேடி வருது.. கை நழுவ விட்டுவிடாதேம்மா..''

அப்படி கணக்குப் போட்டு காய் நகர்த்துவதில் பவித்ராவிற்கு உடன்பாடில்லை.

'பெரியப்பாவும் சரி.. அப்பாவும் சரி.. இதை கோட்டையூர் ஜமீன் குடும்பம்னே நினைக்கிறாங்க. நான்... என்னுடைய தினா அத்தானின் குடும்பம்னு நினைக்கிறேன். அது ஏன் இவங்களுக்கு பிடிபடமாட்டேங்குது. என் தினா அத்தான் ஜமீன்தாரின் வீட்டில் பிறந்திருக்காமல் ஒரு சாதாரண ஆடு மேய்ப்பவர் வீட்டில் பிறந்திருந்தாலும் எனக்கு அவர்தான் உசத்தி. இதை ஏன் யாரும் புரிஞ்சுக்க மாட்டேன்கிறாங்க.'

இது காதல் கொண்ட மனது.. அந்த மனது மாலினிக்கு இருந்தது. அதனால் அவள் சட்டென்று பவித்ராவைப் புரிந்துகொண்டாள். ஸ்வேதாவிற்கோ மற்றவர்களுக்கோ இல்லை. அதனால்.. அவர்களால் பவித்ராவைப் புரிந்து கொள்ள முடியவில்லை.

வாசவனின் கோரிக்கைக்கு பவித்ராவால் என்ன பதிலைச் சொல்ல முடியும்?

''சரிப்பா..'' என்று மட்டும் சொன்னாள்.

அன்று மாலை.. பிரபாகரன் மாலினியுடன் வீட்டுக்கு வந்தபோது.. ஸ்வேதா கிளம்பியிருக்கவில்லை. மாறாக.. அவள் கண்களில் வெற்றிக் குறியுடன் தோட்டத்தில் நடை பழகிக் கொண்டிருந்தாள்.

'இந்தப் பிசாசு.. இன்னுமா இங்கே இருக்கு..' பிரபாகரன் கோபத்துடன் தாயைத் தேடிப் போனான்.

''அம்மா..''

நர்மதாவிற்கு தெரியும்.. வீட்டுக்கு வந்த மகன்.. உடைகூட மாற்றாமல்.. தன்னைத் தேடி வருவது எதற்காக என்று.

''வா, பிரபா! காபி.. டிபன் கொண்டு வரச் சொல்லவா?''

''அதிருக்கட்டும்.. நான் சொன்னது என்ன? நீங்க செய்திருப்பது என்ன.. இதுதான் என் பேச்சுக்கு நீங்க தரும் மரியாதையா?''

நர்மதா முகம் மாறிப் போனாள். இதுவரை பிரபாகரனின் அதிருப்திக்கு அவள் ஆளானதில்லை. முதல் முறையாக மூத்த மகனின் கோபத்திற்கு அவளை ஆளாக்கி விட்ட மாணிக்கவாசகத்தையும் அவர் பெற்ற மகளையும் மனதுக்குள் சபித்தபடி மகனுக்கு பதில் சொன்னாள் அவள்.

''நீ சொல்லி.. நான் எதைக் கேட்காமல் போனேன் பிரபா... நீ அந்தப் பக்கம் போனவுடன் இந்தப் பக்கம் உடனே போய் பெரியப்பாவிடம் ஸ்வேதாவை கூப்பிட்டுக் கொண்டு போகும்படி சொல்லி விட்டேன்..''

தாய் தன்மையாகப் பதில் சொன்னதும்.. பிரபாகரனின் கோபம் வடிந்து விட்டது.

'ஐ ஆம் ஸாரிம்மா.. ஆனால்.. இவள் இன்னும் நம் வீட்டில் இருக்கிறாளே...''



''பெரியப்பா.. அண்ணனிடம் சொன்னதற்கு.. அண்ணன் வேறு ஒரு வேண்டுகோளை வைத்தார் பிரபா..''

''என்னவாம்?''

நர்மதா பொறுமையாகச் சொன்னாள்.. அதைக் கேட்ட பிரபாகரன் யோசனையாக நின்றான்.

''எனக்கு என்ன பதில் சொல்றதுன்னே தெரியலைப்பா.. அவங்க கேட்கிறதிலயும் ஒரு நியாயம் இருக்கில்ல..''

''ஆமாம்..''

''அவளை கூப்பிட்டுக் கொண்டு போகச் சொல்லி... சொல்லியாகி விட்டது. உனக்கும் தினாவுக்கும் அவளைக் கல்யாணம் செய்து கொள்வதில் விருப்பமில்லை என்கிறதையும் சொல்லிவிட்டேன்...''

''அதையும் சொல்லிட்டீங்களா... அப்பாடி..''

பிரபாகரன் நிம்மதியாக உணர்ந்தான்.

''ஆமாம்பா.. உங்களுக்கு மட்டும்தான் அவள் மேல் வெறுப்பா? எனக்கும் காயத்ரிக்கும் வெறுப்புத்தான்.. இருந்தாலும் அதை வெளியில் சொல்ல முடியுமா? என் பெரியப்பாவிற்கு பேத்தியாக போய்விட்டாளே.. என்ன செய்து தொலைப்பதுன்னு வெளியே சொல்லாமல் சகித்துக் கொண்டிருக்கேன்..''

''உங்க மனசு புரியாம கோபமா பேசிட்டேன். என்னை மன்னிச்சிடுங்கம்மா..''

''விடு பிரபா! எப்போ.. நீ இந்த அளவுக்கு சொல்லிட்டயோ.. அப்பவே அவ எனக்கு வேண்டாதவளா ஆகிப் போயிட்டா. உன் அப்பாவின் கைபிடித்து.. இந்த வீட்டுக்குள் மருமகளாக நுழைந்த நாளில் இருந்து. இன்றைக்கு வரைக்கும் நான் என் புருஷன்.. புள்ளைகளைத்

தான் முதலில் வைத்திருக்கிறேன்.. என் பிறந்தவீட்டுச் சொந்தங்கள் எனக்கு இரண்டாம்பட்சம்தான்...''

''எனக்குத் தெரியாதாம்மா.. அவ அதிகமா விளையாடிட்டா.. அதனாலதான் இப்படிப் பேசிட்டேன்..''

''நீ பேசினால் அதற்கு காரணமில்லாமல் இருக்காது. இத்தனை நாள் இருந்தவ... இன்னும் எண்ணி அறுபதே நாள்கள்தான்.. இருந்து தொலைத்துவிட்டுப் போகட்டுமே... அவளுக்கும் கல்யாணம்னு ஒண்ணு நடக்கணுமுல்ல..''

''எவன் மாட்டப் போகிறானோ... பாவம்.. அந்த தியாகி..''

''அதைப் பத்தி நமக்கென்ன.. இப்போதைக்கு அவ மட்டும் தனியா இல்லாம பவித்ராவும் கூட இருக்கிறா.. அந்த மட்டிலும் நமக்கு நிம்மதி..''

வரும் நாள்களில் பவித்ராவின் நிம்மதி கேள்விக் குறியாகப் போகப்போவது தெரியாமல் நர்மதா பேசிக் கொண்டிருந்தார்.

''அதைச் சொல்லுங்க.. வாசவன் மாமா.. பெண்ணை அருமையாக வளர்த்து வைத்திருக்கிறார்..''

''எனக்கு மனதுக்குள் ஒரு ஆசை இருக்கு பிரபா.. அதை காயத்ரியின் கல்யாணம் முடிந்ததும் சொல்கிறேன்..''

பிரபாகரன் தாயைப் பார்த்து கனிவாக புன்னகைத்து விட்டு வெளியே வந்தான்.

ஹாலில் அமர்ந்து டி.வி. பார்த்துக் கொண்டிருப்பதைப் போல பிரபாகரன்.. நர்மதாவின் அறையை விட்டு வெளியே வருவதைப் பார்த்துக் கொண்டிருந்தாள் ஸ்வேதா.

அவளைப் புழுவைப் பார்ப்பதைப் போல பார்த்துக் கொண்டே மாடிக்குச் செல்ல மாடிப்படியில் கால் வைத்தான் பிரபாகரன்.



''என்ன பெரியத்தான்.. எப்பவும் வீட்டுக்கு வந்தால்.. முதலில் உங்கள் ரூமுக்குப் போய் குளித்து டிரஸ் மாற்றி விட்டு அப்புறம்தான் வேறு வேலையைப் பார்ப்பீங்க.. இன்றைக்கு என்னடான்னா.. அத்தையின் ரூமுக்குள் போய் மந்திராலோசனை பண்ணிவிட்டு வருகிறீங்க. எதுவும் முக்கியமான விஷயமா?'' ஸ்வேதாவின் குரலில் இருந்தது ஏளனமா.. இல்லை எகத்தாளமா என்று கண்டுகொள்ள முடியாமல் இரண்டும் பின்னிப் பிணைந்திருந்தன.

பிரபாகரனோ.. இல்லை தினகரனோ அவளை மணக்கப் போவதில்லை என்று ஆகிவிட்டது. இனிமேலும் இவர்களுக்கு என்ன கணக்கு என்பது அவளின் எண்ணம்.

பிரபாகரன்.. பாவ புண்ணியம் பார்க்கிறவன். ஸ்வேதாவின் திருமணம் பாதிக்கும் என்று தெரிந்த பின்னால்.. அவளை காயத்ரியின் திருமணத்திற்கு முன்னால்.. கருங் கல்லுக்கு அனுப்ப மாட்டான்.

இருக்கும் நாள்களில் முடிந்தவரை அவனுடன் மோதிப் பார்த்துவிடும் முடிவோடு இருந்தாள் ஸ்வேதா.

மாடியில் ஏறப்போன பிரபாகரனின் புருவங்கள் முடிச்சிட்டன. இதற்கு முன்.. ஸ்வேதா இவ்வளவு தைரியமாக அவன் முகம் பார்த்துப் பேசியதில்லை.

''முக்கியமான விஷயத்துக்குத்தான் மந்திர ஆலோசனை பண்ணணும்னு இல்லை ஸ்வேதா.. அல்ப விஷயங்களுக்குகூட மந்திர ஆலோசனை பண்ணலாம்...''

அவன் இதைச் சொல்லிய விதம் கண்டு ஸ்வேதாவின் முகம் மாறிவிட்டது. அவளைப் பற்றிய விஷயம் இவனுக்கு அவ்வளவு அல்பமாய் போய்விட்டதா?

''பரவாயில்லையே... கோட்டையூர் ஜமீன்தாரின் குடும்பம்கூட அல்ப விஷயங்களுக்கு கவலைப்பட

ஆரம்பித்து விட்டாங்களே.. இது முன்னேற்றமா.. இல்லை பின்னேற்றமா அத்தான்?''

''கோட்டையூர் ஜமீனின் குடும்பத்தில் பின்னேற்றங் கிறதே கிடையாதும்மா.. அல்பவிஷயம்கூட எங்களுக்கு ஆரம்பத்திலேயே நசுக்கப்பட வேண்டிய விஷயம்தான்.. அந்த வகையில் எங்களுக்கு இது முன்னேற்றம்தான்..''

''எனக்கு இந்த லாஜிக் புரியவில்லை அத்தான்..''

''புத்திசாலிகளுக்குத்தான் இது புரியும்.. உனக் கெங்கே புரியப் போகுது?''

''ஊஹூம்.. கோட்டையூர் ஜமீன் வீட்டில் அல்ப விஷயங்கள்கூட மண்டையைக் குடைய வைக்க ஆரம் பித்து விட்டன.. இதைப் போய் முன்னேற்றம்னு எந்த புத்திசாலியும் சொல்ல மாட்டாங்க...''

''நிச்சயம் இது முன்னேற்றம்தான் ஸ்வேதா. நாங்க.. பெரிய வீட்டுக்காரங்க.. பெரிய மனசு படைத்தவங்க. வெளுத்ததெல்லாம் பால்னு நினைக்கிறவங்க. சின்னப் புத்தி படைச்ச.. பொடித்தனமான மனுஷங்களும் இருக்காங் கன்னு வீட்டை விட்டு வெளியே போகாமலே நாங்க கண்டுபிடித்து அவங்களை நசுக்குவது முன்னேற்றம் இல்லையா?''

ஸ்வேதாவின் முகம் இப்போது முற்றிலும் கறுத்து விட்டது. பிரபாகரனின் சொல்வீச்சை எதிர்பார்த்திருந் தாலும் இந்த அளவுக்கு தாக்குதலை அவள் எதிர்பார்த் திருக்கவில்லை.

அவள் சின்ன புத்தி படைச்ச பொடித்தனமான மனுஷியா?

வாயடைத்துப் போய்விட்டவளை இகழ்ச்சியுடன் பார்த்தபடி பிரபாகரன் படியேறினான்.



அதேசமயம்.. கலகலவென்று சிரித்த வண்ணம் கை கோத்தவாறு மாலினியும் பவித்ராவும் படியிறங்கினார்கள்.




*உன் நிழலோடு.. நிழலாகி...*
*உன்னைப் பின்பற்றும் என் மனதை...*
*என்னவென்று நான் சொல்ல..?*

இணைபிரியாத தோழிகளைப் போல இசைந்து நகைத்த வண்ணம் படியிறங்கிக் கொண்டிருந்தவர்களைப் புன்னகையுடன் பார்த்தான் பிரபாகரன். அவனுடைய புன்னகையை அதிசயத்துடன் பார்த்தாள் பவித்ரா.

'பெரிய அத்தானுக்கு சிரிக்கக்கூடத் தெரியுமா?'

அவன் முன்னால் நின்று பேசுவதற்குகூட பவித்ரா பயப்படுவாள். ஏன்.. அவளுடைய அப்பா வாசவனே ஓரிரு வார்த்தைகளுக்கு மேல் பிரபாகரனிடம் பேசமாட்டார். அதற்கு மேல் நின்று பேச அவன் இடம் கொடுக்க மாட் டான் என்பதுதான் முக்கியமான காரணம்.

அப்படிப்பட்ட பெரிய அத்தான்.. அவளைப் பார்த்து புன்னகைக்கவும் பவித்ராவிற்கு கால் தரையில் நிற்க வில்லை.

''நீங்க இரண்டு பேரும் என்ன இணைபிரியாத தோழிகளா?'' என்று கேட்டான் பிரபாகரன்.

''பார்த்தால் எப்படித் தெரிகிறதாம்..'' மாலினி வெட்டும் பார்வையுடன் பதில் சொன்னாள்.

''கோந்து போட்டு ஒட்டிக் கொண்டிருப்பதைப் போல தெரிகிறது..''

''தெரியும்.. தெரியும்.. ஏன் தெரியாது?''

''ஆமாம்.. நீங்க ஒருத்தரையொருத்தர் பார்த்து இரண்டு மூன்று நாள்கள்தானே ஆகியிருக்கும்?''

''அதுக்கு என்ன இப்ப?''

''எனக்கு ஒன்றுமில்லை.. பிறந்ததிலிருந்து தெரிந்த வங்களைப் போல பின்னிப் பிணைகிறீங்களே.. அதுதான் விசாரித்தேன்..''

''நாங்களெல்லாம் அப்படித்தான்..''

''நாங்கன்னா யாரு.. நீயும் பவித்ராவுமா?''

''நாங்கன்னா.. நாங்கதான். பெண்குலம்..''

''அடேங்கப்பா.. நீங்க அப்படித்தான்னு எதைச் சொல்கிறீங்க..''

''உம்.. நட்பை வைத்துச் சொல்கிறோம்..''

''அட.. அப்படி உயிருக்குயிரான நட்பு உங்ககிட்ட இருக்கிறதாக்கும். நீங்கன்னா.. நீங்க இரண்டு பேர் மட்டுமில்லை.. ஒட்டுமொத்த பெண்குலத்தையும் சொல் கிறேன்..''

''ஆமாம்.. நாங்க பார்த்த அடுத்த நிமிஷம் பேசிப் பழகிருவோம்..''

''சட்டுன்னு பழகிருவீங்க போல..''

''அப்படித்தான்..''

''உங்களைப் பற்றி எனக்குத் தெரியாதா.. பழகிய அடுத்த நிமிஷம் சண்டை போட்டு.. வருஷக்கணக்கா ஆனாலும் பேச மாட்டீங்க..''

''இப்ப என்னதான் சொல்ல வரீங்க..''

''சட்டுன்னு சண்டையும் போட்டுக்குவீங்கன்னு சொல்ல வரேன்..''



''எங்களைப் பற்றி உங்களுக்கென்ன தெரியும்?'' மாலினி சண்டைக்கு தயாராக.. பவித்ரா கையைப் பிசைந் தாள்.

''பெண்களைப் பற்றி தெரிந்துகொண்ட மனிதர் யாராவது ஒருத்தர் இருக்க முடியுமா? கடலைக்கூட ஆழம் கண்டுபிடித்து விடலாம்.. உங்க மனசின் ஆழத்தை யாராலும் கண்டுபிடிக்க முடியாதே...''

''இதையே எத்தனை காலம்தான் சொல்லிக்கிட்டு இருப்பீங்க? ஆமாம்.. நாங்க ஆழமானவங்கதான். எங்க அன்பும் அதைப் போல ஆழமானது. கரை காண உங்க ளால்கூட முடியாது.''

மாலினியின் கண்கள் சிரித்தன. பிரபாகரன் அவளது வார்த்தைகளைக் கேட்டு கிளர்ந்தான். அருகேயிருந்த பவித்ராவையும் சூழ்நிலையையும் கவனத்தில் கொண்டு கட்டுப்படுத்திக் கொண்டவன்..

'உன்னை.. இரு.. தனியாக அகப்படுவியில்லையா... அப்போது பேசிக் கொள்கிறேன்..' என்று கண்களால் செய்தி சொன்னான்.

அதை உணர்ந்துகொண்டு நாணப் புன்முறுவலுடன் மாலினி, ''வா.. பவி.. போகலாம்..'' என்று படியிறங்கிப் போனாள்.

''பவி..'' என்று புருவம் உயர்த்தினான் பிரபாகரன்.

''உம்.. பவிதான்..'' என்று கேள்வியாகப் பார்த்தாள் மாலினி..

''என்ன சின்ன மாமாவின் மகள் பெயர் பவித்ரா வாச்சே..'' இதைக் கேட்டதும் பவித்ராவின் முகம் சிவந்து விட்டது.

''நான் சார்ட் கட்டாய் கூப்பிட்டேன்.. இப்ப அதுக்கு என்ன?'' என்று முறைத்தாள் மாலினி.

''ஒன்றுமேயில்லை.. பவித்ராங்கிற பெயர் அப்படி நீளமாகவா இருக்குன்னு யோசிச்சேன்...'' பிரபாகரனின் கேள்வியில் கேலி இருந்தது.

''உங்கள் பெயர்கூடத்தான் நீளமாக இல்லை. அதனால் உங்களை எல்லோரும்.. 'பிரபாகரா.. பிரபாகரா..'ன்னுதான் கூப்பிடுகிறாங்களா.. பிரபான்னு யாரும் கூப்பிட்டதில்லையா?'' மாலினி பதிலுக்கு கேட்டாள்.

பவித்ராவின் விழிகள் விரிந்துவிட்டன. அவருடைய பெரிய அத்தானை பெயர் சொல்லிக்கூட ஒருவரால் அழைக்க முடியுமா.. அதுவும் மாலினி அழைக்கக்கூடும் என்பதை அன்றுதான் கண்டாள் அவள்.

மையலுடன் மாலினி அவனை 'பிரபா' என்று அழைக்கும் வழக்கத்தை அவள் நினைவூட்டியது புரிந்து போக.. பிரபாகரனின் கண்கள் மின்னின.

''ஓ.. அதை மறந்துவிட்டேனில்ல.. அப்போ.. நீ பவித்ராவை பவின்னு கூப்பிடுவது சரிதான். ஆமாம் பவித்ரா.. இந்த உயிர் சிநேகிதியை நீ எப்படிக் கூப்பிடுவாய். நான் சார்ட் கட்டாய் கூப்பிடுவதைப் பற்றிக் கேட்டேன்..'' என்று பவித்ராவின் பக்கம் திரும்பிக் கேட்டான்.

பவித்ராவிற்கு கைகால்கள் தந்தியடிக்க ஆரம்பித்துவிட்டன. கேட்டதற்கு பதில் சொல்லாமல் இருக்கக்கூடாது என்ற உணர்வுடன்...

''மாலுன்னு கூப்பிடுவேன்..'' என்று மெல்லிய குரலில் நடுக்கத்துடன் கூறினாள்.

''தப்பாக கூப்பிடுகிறாயே.. அதுக்குப் பதில் 'வாலு'ன்னு கூப்பிட்டிருந்தேன்னு வை... பொருத்தமாக இருந்திருக்கும்..''

பிரபாகரன் கடகடவென்று சிரித்துவிட்டுப் படியேறிவிட.. அவன் போவதையே பொய் கோபத்துடன் பார்த்துக்



கொண்டு நின்றிருந்த மாலினியின் கையில் கிள்ளினாள் பவித்ரா.

''ஸ்... ஆ.. வலிக்குது பவி..''

''கள்ளி.. என்ன நடக்குது இங்கே?''

''அது.. என்னென்னவோ நடக்குது.. அது எதுக்கு உனக்கு?''

''எனக்குத் தெரிய வேணாமா?''

''உனக்கு அதெல்லாம் சொன்னால் புரியாது பவி...''

''ஏன்?''

''ஏன்னா.. ஏன்னா... நீயே.. ஒரு அமுல் பேபி..''

இதைச் சொன்ன மாலினி கலீரென்று நகைக்க.. அவள் காதைப் பிடித்துத் திருகினாள் பவித்ரா.

''விடு பவி..'' மாலினி சிணுங்கினாள்.

''உன்னை... நானா அமுல் பேபி?''

இருவரும் வழக்கடித்துக் கொண்டிருக்கையில்..

''நானும் ஜாயின் பண்ணிக்கலாமா..'' என்ற குரல் கேட்டது. இருவரும் திரும்பிப் பார்த்தார்கள். கடைசிப் படியில் ஸ்வேதா நின்றுகொண்டிருந்தாள். நொடிப்பொழுதில் மாலினியின் முகத்தில் இருந்த சிரிப்பு மறைந்து வெறுப்பு வந்தது.

''வா.. பவி..'' என்றபடி அவள் மடமடவென்று படிகளில் இறங்கி.. ஸ்வேதா என்ற ஒரு ஜீவன் அங்கே நின்றுகொண்டிருப்பதை உணராதவள் போல அவளைக் கடந்து சென்றுவிட்டாள்.

'கொடுத்து வைத்தவள்..' என்று மனதிற்குள் மாலினியின் மேல் பொறாமைப்பட்டாள் பவித்ரா.

அவளால் அப்படிப் போக முடியாதே.. ஸ்வேதா

அவளுடைய பெரியப்பாவின் ஆசை மகளாயிற்றே. எனவே வேறுவழியின்றி ஸ்வேதாவைப் பார்த்து புன்னகைத்தபடி படி இறங்கினாள்.

''நானும் நீ வந்திலிருந்து பார்க்கிறேன்.. அவளோடு கொஞ்சிக் குலாவிக்கிட்டு அலைகிறயே.. என்ன விஷயம்?'' என்று கனல் கக்கினாள் ஸ்வேதா.

'பெண்ணுக்குப் பெண் சிநேகிதமாய் இருப்பதுகூடத் தப்பா..' என்று கடுப்பாகிப் போனாள் பவித்ரா.

''ஜஸ்ட் ஃப்ரெண்ட்ஸ்.. வேற ஒண்ணுமில்லை ஸ்வேதா...'' என்று.. தன்னைவிட வயதில் மூத்தவளான ஸ்வேதாவை பெயர் சொல்லி அழைத்துப் பதில் சொன்னாள் பவித்ரா.

ஒரு முறை மரியாதை கொடுக்கிறேன் பேர்வழி யென்று ஸ்வேதாவை.. பவித்ரா 'அக்கா' என்று அழைத்து விட்டாள். ஸ்வேதாவிற்கு படுகோபம் வந்துவிட்டது. ஆடித் தீர்த்து விட்டாள். அன்றிலிருந்து அவளை பெயர் சொல்லித் தான் அழைப்பாள் பவித்ரா. 'அக்கா' என்று மறந்தும் அழைப்பதில்லை.

''ஃப்ரெண்ட்ஸா? அவளுடன் கூடப் படித்தாயா? இல்லை அவள் கூடத்தான் வேலை பார்க்கிறாயா?'' இடக் காக கேட்டாள் ஸ்வேதா. பவித்ராவின் முகம் மாறிவிட்டது.

''இது இரண்டும் இருந்தால்தான் ஃப்ரெண்ட்ஸ் ஆக முடியுமா?'' என்று எரிச்சலுடன் கேட்டாள்.

''பின்னே... இரண்டு நாளில் எப்படி ஃப்ரெண்ட்ஸாக முடியும்?''

''ஒரே வேவ்லைனில் இருக்கிறவங்க.. ஒருத்தரை யொருத்தர் பார்த்துப் பேசிப் பழக.. ஒரு நொடிகூட அதிகம் ஸ்வேதா. உனக்கெங்கே அது புரியப் போகுது...''



பவித்ராவும்தான் எவ்வளவு தூரத்திற்கு பொறுமை யாக போக முடியும்? சம வயதில் இருக்கும் பெண்ணிடம் பேசிப் பழகி.. நட்பாக இருப்பதைக்கூட ஸ்வேதா சொல்லிக்காட்டிக் கொண்டிருந்தால்.. அவளுக்கும்தான் கோபம் வராதா?

''என்னிடமே எதிர்த்துப் பேசுகிறாயா.. இது யார் கொடுத்த தைரியம்?'' ஸ்வேதாவின் கண்களில் அனல் பறந்தது.

''இதுக்குப் போய் யாராவது ஒருத்தர் வந்து தைரியம் கொடுத்துக்கிட்டே இருக்க முடியுமா.. எல்லாம் தானாய் வருவதுதான்..'' ஸ்வேதா அவளைக் கடந்து போக முயன் றாள்.

அவள் கையைப் பிடித்து தடுத்து நிறுத்திய ஸ்வேதா..

''வேண்டாம் பவித்ரா.. அவளுடன் அளவாய் பேசிப் பழகு. அவள் ஒன்றும் நல்லவள் அல்ல..'' என்றாள்.

'இதை நீ சொல்கிறாயா..' என்று நினைத்துக் கொண் டாள் பவித்ரா... அவளது நினைவை யூகித்தவள் போல...

''நான் சொல்வதனாலேயே.. இதை நீ நம்பமாட்டாய்.. பின்னால் பட்டுத் தெரிந்து கொள்ளும்போது.. என் எச்சரிக் கையில் இருக்கும் உண்மையை நீ புரிந்து கொள்வாய்..'' என்றால் ஸ்வேதா..

'இவள் ஏன் இப்படிச் சொல்கிறாள்..' என்ற குழப்பத் துடன் பவித்ரா.. அவளைக் கடந்து தோட்டத்திற்கும் போனாள்.

'போகிறாயா.. போ.. உன் மனக் குளத்தில் கல்லை எறிந்து விட்டேன். இனி அதைக் கலக்குவதுதான் என் வேலை..'

தனக்குள் சொல்லி சிரித்துக் கொண்டாள் ஸ்வேதா. பவித்ராவின் மனதைக் குழப்பும் வேலையை வெற்றிகரமாக

ஆரம்பித்து வைத்துவிட்ட நிறைவு அவள் மனதில் உதித்தது.

தோட்டத்தில் நீச்சல்குளத்தின் அருகேயிருந்த மர பெஞ்சில் சாய்ந்து அமர்ந்து காலாட்டிக் கொண்டிருந்தாள் மாலினி.

பவித்ராவின் காலடியோசையைக் கேட்டு திரும்பிப் பார்த்து வெள்ளையாகச் சிரித்தாள்.

'இவளையா ஸ்வேதா.. அப்படிச் சொன்னாள்?'

பவித்ராவின் மனதிலிருந்த குழப்ப மூட்டம் நொடிப் பொழுதில் அகன்றது..

''என்ன பவி.. ஒருவழியாய் தப்பித்து வந்துவிட்டாயா?'' மாலினி சிரித்தாள்.

''அதையேன் கேட்கிற.. அவள் என்னவோ.. பாதுகாப்பு அதிகாரியைப் போலவும் நான் அவளுடைய கண்காணிப்பில் இருப்பதைப் போலவும் ஒரே விசாரணை மயம்தான். தப்பிச்சு வருவதற்குள் போதும் போதும்னு ஆகிவிட்டது..'' பவித்ரா அவள் அருகில் அமர்ந்தபடி கூறினாள்.

''நீ சொன்னாலும்.. சொல்லாவிட்டாலும் அதுதான் உண்மையான நிலைமை..''

''புரியலை மாலு..''

''ஊஹூம்.. நீ பேசாமல் மாலினின்னே சொல்லிவிடு...''

''ஏன்?''

''நீ மாலுன்னு சொன்னால்.. உன் பெரியத்தானின் நினைவில் எனக்கு 'வாலு'ன்னு காதில் விழுகுது...''

''விழும்.. விழும்.. அதைப் பத்தி அப்புறம் கேட்டுக்கறேன்.. இப்ப எதுக்கு ஸ்வேதாவை பாதுகாப்பு அதிகாரின்னு சொன்ன?''



''உன் பெரியத்தானையும்.. தினகரனையும் நீ அண்டிவிடாமல் பாதுகாக்கிறவளுக்கு வேறு என்ன பெயர் வைப்பது? உன்னைக் கண்காணிக்க வேண்டிய பொறுப்பும்.. கவலையும்.. பாவம்.. அவளுக்கும் இருக்குமில்லையா..?''

இதைக் கேட்ட பவித்ரா விழுந்து விழுந்து சிரித்தாள்.

''உன்னை... உனக்கு பெரியத்தான் சரியாகத்தான் பெயர் வைத்திருக்கிறார்..''

''என்ன பெயர் வைத்தாராம்?''

''அதுதான் கொஞ்ச நேரத்துக்கு முன்னால் சொன்னாயே வாலுன்னு.. அந்தப் பெயர்தான்..''

மீண்டும் பவித்ரா சிரிக்க ஆரம்பிக்க.. அவள் காதைப் பிடித்து திருகினாள் மாலினி.

''ஆ! வலிக்குது மாலினி.. விடு.. பழிக்குப் பழியா?''

''ஆமாம்.. நீ திருகியபோது என் காதும் இப்படித் தானே வலித்திருக்கும்?''

இருவரும் மனம்விட்டுச் சிரித்தார்கள்.

## 68

*பெண்ணாக நான் பிறந்ததின்பலனை*
*உன்னைக் கண்ட நொடியில் உணர்ந்ததை*
*என்னவென்று நான் சொல்ல..?*

காதலைப் போல நட்பும்.. பரம சுகமான விஷயம். இதிகாச காலத்தில்.. மனைவியை நேசித்ததைவிட கர்ணனை மிக அதிகமாக நேசித்தான் துரியோதனன்.. அதனால்தான் கர்ணனை தன் அந்தப்புரம் வரை

வருவதற்கு அனுமதித்தான். அவனுடைய மனைவியிடம் கர்ணன் காட்டிய பாசத்தை ஆதரித்தான்.

சொக்கட்டான் விளையாட்டின் இடையே பாதியில் துரியோதனன் வந்து கொண்டிருப்பதை உணர்ந்த அவனது மனைவி எழுந்து கொள்ள.. அவளது இடுப்பு மணிமேகலையைப் பிடித்து இழுத்து..

'தோற்றுவிடப் போகும் பயத்தில்.. பாதியில் போகிறாயா..' என்று விளையாட்டாய் வினவினான் கர்ணன்.

அவளது இடுப்பு மணிமேகலை அறுந்து மணிகள் தரையில் சிதறின. அப்போதுதான் துரியோதனன் அங்கு வந்து நிற்பதை உணர்ந்த கர்ணன் பதற்றத்துடன் எழுந்து நின்றான்.

அது மிக மிக சிக்கலான சூழல்.. அரசன் மனைவியின் இடுப்பு மணிமேகலையை இழுத்து அறுத்திருக்கிறான் கர்ணன். அந்த கால கட்டத்தில் அது மிகப் பெரிய குற்றம்.

தரையில் விழுந்து கிடந்த மணிமேகலையைப் பார்த்த துரியோதனன். கர்ணனைப் பார்த்துக் கேட்டானே ஒரு கேள்வி!

'எடுக்கவோ? கோக்கவோ?'

எத்தனை யுகங்கள் கடந்து சென்றாலும் நிலைத்து நிற்கக்கூடிய கேள்வியில்லவா அது? அப்படிப்பட்ட நண்பனின் நட்புக்காக தன் உயிரையே கர்ணன் அர்ப்பணித்ததில் வியப்பேதும் இல்லை.

கர்ணனுக்குத் தெரியும்.. குருக்ஷேத்திர யுத்த களத்தில் அவன் எதிர்க்கவேண்டிய பாண்டவர்கள் அவனுடைய சகோதரர்கள்தான் என்பது.. குந்தி அவனைப் பெற்ற தாய்தான் என்பது.



தெரிந்தும் அவன் யுத்தம் புரிந்தான் என்றால்.. அது தான் நட்புக்கு அவன் கொடுத்த மரியாதை. அதுதான் நட்பின் வலிமை.

'நண்பேன்டா...'

இதை விளையாட்டாக நாம் பேசினாலும்.. அதன் பின்னாலிருக்கும் உணர்வு அழுத்தமானது. என்ன ஒன்று.... அப்படிப்பட்ட நட்பை ஆண்களிடம் மட்டும்தான் நம்மால் பார்க்க முடிகிறது. பெண்களிடம் அதைக் காண முடிவதில்லை.

இதற்கு ஆயிரம் காரணங்கள் இருக்கலாம். பெண்களின் இயல்பான எச்சரிக்கை உணர்வு.. உரிமை மனப்பான்மை.. தொட்டாற்சிணுங்கித் தன்மை.. எதையும் தீவிரமாக எடுத்துக் கொள்ளும் சுபாவம் என்று நிறையச் சொல்லலாம்.

பெண்களுக்கும் நட்பை ஆராதிக்கும் குணம் உண்டு. ஆனாலும்.. எப்படி அவர்கள் திருமணத்திற்குப் பின்னால் தன் சுயத்தை இழந்து.. எல்லாமே தன் கணவன்.. அவனைச் சார்ந்த சொந்த பந்தம் என்று மாறி.. பிறந்த வீட்டுச் சொந்த பந்தங்களை துறக்கிறார்களோ.. அப்படியே அவர்களுக்கு மட்டும் சொந்தமான நட்பையும் சேர்ந்து துறக்கிறார்கள். அப்படி அவர்கள் துறந்துதான் ஆகவேண்டும். வேறுவழியேதும் அவர்களுக்கு இல்லை.

எது எப்படியாக இருந்தாலும் நட்பு என்பது மிக இனிமையான ஒன்று. ஒரேவிதமான அலைவரிசையுடைய மனதைச் சேர்ந்தவர்கள் சந்தித்துக் கொள்ளும்போது இந்த இனிமையை அவர்கள் உணர்வார்கள்.

'கற்றோரை.. கற்றோரே காமுறுவர்..'

கற்றோர்.. ஆண்.. பெண்ணாக இருக்க வேண்டிய

அவசியமென்ன? ஆணுக்கு ஆணையும்.. பெண்ணுக்கு பெண்ணையும் பிடித்துப் போய்விடுவதுதான் நட்பு.

இந்த யுகத்தில்.. அதற்கும் ஆயிரம் வகையான பெயர் களும் விமரிசனங்களும் வந்துவிட்டன.

மிருகங்கள்கூட செய்யாத செயலை மனித குலம் செய்ய ஆரம்பித்துவிட்டதன் விளைவு அது.

ஒரே வகையான உணர்வலைகள் இருக்கும் இருவர் பேச அமர்ந்துவிட்டால் நேரம் போவதே தெரியாது. அதற்கு அந்த இருவரும் காதலர்களாக இருக்க வேண்டிய அவசிய மில்லை. நண்பர்களாக.. தோழிகளாக.. இருந்தாலே போதும்.

அந்த நட்பின் அலைகளைப் பரிபூரணமாக உணர்ந் தார்கள் பவித்ராவும் மாலினியும்.

''ஏய்ய்.. சொல்லு..'' என்றாள் பவித்ரா.

''எதைச் சொல்லச் சொல்கிறே...'' கள்ளச் சிரிப்புடன் கண்கள் மின்ன வினவினாள் மாலினி.

''பெரியத்தானின் முன்னால் நின்று பேசவே நாங்க ளெல்லாம் பயப்படுவோம். நீயானால் அவருடன் இப்படி சரிக்குச் சரியாய் வம்பிழுக்கிறாயே.. என்ன விஷயம்?''

''ஒன்றுமில்லையே..''

''இதை நம்ப நான் என்ன.. நீ சொன்னதைப் போல அமுல் பேபியா?''

''ஒன்றுமில்லாததை ஒன்றுமில்லைன்னுதானே சொல்லணும்..?''

''வேண்டாம் மாலினி.. எனக்கு காது குத்தியாகி விட்டது..''

''அதுதான் உன் வைர தொங்கட்டான்களைப் பார்த் தாலே தெரியுதே.. பவி.. உன் தொங்கட்டானின் டிஸைன்



அழகாயிருக்கு. இதைப் போல நான் தங்கத்தில் வெள்ளைக் கல் பதித்து செய்து கொள்ளப் போறேன்..''

''பேச்சை மாத்தாதே...''

''விட மாட்டாயே..''

மாலினி பொங்கிச் சிரித்தாள். பிரபாகரனின் பெயரைக் கேட்டதும் அவளது முகத்தில் தெரிந்த நாணச் சிரிப்பை ரசனையுடன் பார்த்தாள் பவித்ரா.

''ஓஹோ.. கதை அப்படிப் போகிறதா..''

''எப்படிப் போகிறதாம்..''

''இப்போதுதானே புரியுது...''

''என்ன புரியுது...''

''சிங்கத்தை.. உன் சின்னஞ்சிறு கண்ணுக்குள் கட்டி வைச்சிருக்கேன்னு..''

''சின்னக் கண்ணா.. அவர் முட்டைக் கண்ணுன்னு இல்ல சொல்கிறார்.''

''எவர்.. அவர்?''

''அவர்தான்...''

''அட.. அட.. வெட்கத்தைப் பாரேன்.. ஏனாம்.. மேடம் அவரோட பெயரைச் சொல்ல மாட்டீங்களாக்கும்..''

''போ.. பவி..''

''போவா.. போய் எல்லோரிடமும் இதைச் சொல்லி விடவா?''

''பவி.. ப்ளீஸ்..''

''இப்போதுதான் அவரை என்னவோ நீதான் பெயர் வைத்ததைப் போல பிரபா.. பிரபான்னு ஏலம் போட்ட. இப்ப என்னடான்னா.. அவர் பெயரைக்கூட சொல்ல மாட் டேங்கிற. சரிதான்..''

அவர்கள் இருவரும் ரகசியத்தை பகிர்ந்துகொண்ட சொந்தத்துடன் சிரித்துக் கொண்டார்கள்.

''அதுதானே பார்த்தேன்..'' என்றாள் பவித்ரா.

''என்ன பார்த்தாய்.. அன்றைக்கு உன் தினாவை இதே தோட்டத்தில் ஒளிந்து கொண்டு பார்த்தாயே.. அதைச் சொல்கிறாயா?'' என்று வாரினாள் மாலினி.

''அன்றைக்கு எனக்கு சந்தேகம்தான்..''

''என்னவாம்..''

''நான் தினாவைப் பார்த்ததை நீ பார்த்துவிட்டு ஒரு மாதிரி விழித்தாய்..''

''அடிப்பாவி.. ஒரு மாதிரின்னா அது எந்த மாதிரி. அதை முதலில் சொல்லித் தொலை...''

''கையில் இருக்கும் பொம்மையை யாராவது பிடுங்கிக் கொண்டு போய் விடுவாங்களோன்னு தன்னோடு இறுக்கப் பிடிச்சுக்கிட்டு குழந்தை பார்க்குமே.. அந்தப் பார்வை பார்த்தாய்...''

மாலினிக்கு வெட்கமாகிவிட்டது. அவள் நகம் பார்த்தாள்.

''நான் பெரியத்தானை சைட் அடிக்கிறேனோன்னு தானே நீ நினைத்து பயந்தாய்?''

பவித்ரா விரலை ஆட்டிக் கொண்டே சிரித்தாள்.

''ஆமாம்..'' அசடு வழிய கூறினாள் மாலினி.

''நான் தினா அத்தானைக் காட்டியதும் உன் முகத்தில் ஒரு வெளிச்ச வட்டம் வந்தது பாரு.. அப்பவே நான் யோசிச்சேன்..''..

''என்ன யோசித்தாய்?''

''என்னடா இது... நானும் தினா அத்தானும் ஜோடி



சேர்வதில் இந்தப் பொண்ணுக்கு இத்தனை சந்தோஷமான்னு...''

மீண்டும் இருவரும் பொங்கிச் சிரித்தனர். அதைக் கேட்டுக் கொண்டே கையில் காபி டிபன் தட்டுக்கள் கொண்ட டிரேயை ஏந்தி வந்த செந்தாமரை தானும் சிரித்தாள்.

வாயெல்லாம் பல்லாக அவள் சிரித்ததைக் கண்ட மாலினி வியப்புடன்..

''இப்ப.. நீ எதுக்கு இப்படிச் சிரிக்கிற செந்தாமரை..'' என்று கேட்டாள்.

''நீங்க சொன்ன ஜோக்கைக் கேட்டுத்தான்.. ஹி.. ஹி.. ஹி..''

''இரு.. இரு.. இப்ப நான் ஜோக் சொன்னதை நீ கேட்டாயா?''

''அப்போ நீங்க ஜோக்கு சொல்லலியா?''

''ஊஹூம்.. உனக்கு என்னவோ ஆகிவிட்டது. எதை வைச்சு நான் ஜோக்கடித்தேன்னு நீ நினைச்சே?''

''வேற எதுக்கு பவித்ராம்மா அப்படி விழுந்து விழுந்து சிரிச்சாங்க..''

''ஏன் பவி.. உனக்கு காயம் கீயம் பட்டிருக்கா..''

''ஏன் அப்படிக் கேட்கிற?''

''பாரு செந்தாமரை.. இவளுக்கு காயம் எதுவும் படலையாம்..''

பவித்ராவும் செந்தாமரையும் மாலினி எதற்காக இதைச் சொல்கிறாள் என்று புரியாமல் விழிக்க.. மாலினியே அமைதியாக அதற்கு விளக்கம் வேறு சொன்னாள்.

''இப்ப செந்தாமரைதானே பவித்ரா விழுந்து விழுந்து சிரித்தாள்னு சொன்னா..''

''அதுக்கென்ன இப்ப..''

''இல்ல பவி.. நீ விழுந்ததில் ஏதும் காயம் பட்டிருக்கணுமே.. ஒரு தடவை விழுந்தால் பரவாயில்லை.. நீ நிறைய தடவை விழுந்திருக்கிற போல இருக்கே...''

மாலினி இதை சிரிக்காமல் சொல்ல.. இப்போது செந்தாமரை விழுந்து விழுந்து சிரித்தாள்.

''அம்மா... ஹா.. ஹா... விழுந்து விழுந்து சிரிச்சா.. ஹி..ஹி.. அடி படுமா.. ஹோ.. ஹோ..''

''போதும் செந்தாமரை.. பல் சுளுக்கிக்கப் போகுது.. மற்ற சுளுக்குன்னாலாவது பொன்னி சுளுக்கெடுத்து விடும்னு நம்பி நீ காட்டலாம்.. பல்லு சுளுக்கிருச்சுன்னா பொன்னியை நம்பி நீ காட்ட முடியாது...''

''ஏன்ம்மா அப்படிச் சொல்கிறீங்க..''

''கிடைச்சது சான்ஸுன்னு சுளுக்கெடுத்து விடுகிற சாக்குல பொன்னி உன் பல்லைத் தட்டிக் கையில் கொடுத்துவிட்டால் என்ன செய்வது..''

இப்போது செந்தாமரை வயிற்றைப் பிடித்துக் கொண்டு புல் தரையில் அமர்ந்து சிரிக்க ஆரம்பித்து விட்டாள்.

அவள் சிரிப்பதை ஆர்வமாக பார்த்துக் கொண்டே அங்கு வந்த சசிரேகா..

''என்ன செந்தாமரை இவ என்ன சொன்னா?'' என்று விசாரித்தாள்.

''சோக்கும்மா.. சோக்கு..'' என்று சொல்லிவிட்டு செந்தாமரை சிரிக்க ஆரம்பித்தாள்..

''அது என்ன ஜோக்குன்னு சொல்லிவிட்டுத்தான் சிரியேன்...'' என்று சசிரேகா விடாப்பிடியாய் வினவ..



''அதை எப்படிம்மா நான் சொல்லுவேன்..'' என்றாள் செந்தாமரை.

''அடிப்பாவி மாலினி.. நீ 'ஏ' ஜோக்கெல்லாம் அடிக்க ஆரம்பித்து விட்டாயா?'' என்று குண்டைத் தூக்கிப் போட்டாள் சசிரேகா.

பவித்ராவும் மாலினியும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொள்ள..

'' 'ஏ' சோக்குன்னா என்னாம்மா? இத்தனை சோக்கையும் சொல்லிட்டு அதை மட்டும் என்கிட்ட சொல்லாம ஒளிச்சு வைக்கறிங்களே.. இது நியாயமாம்மா?'' என்று நியாயம் கேட்டாள் செந்தாமரை.

''கேட்கிறாளில்ல.. நீயே இவகிட்ட.. 'ஏ' ஜோக்குன்னா என்னன்னு சொல்லு..'' மாலினி சசிரேகாவை முறைத்தாள்.

''என் மேல ஏண்டி பாயறே... அவதானே.. அதை எப்படி என் வாயாலே சொல்லுவேன்னு சொன்னா..'' சசிரேகா தன்னிலை விளக்கம் சொன்னாள்.

''இது வேற இருக்கா.. அம்மாடி செந்தாமரை.. நீ ஏன் ஜோக்கை உன் வாயால சொல்ல முடியாதுன்னு சொன்ன?''

''அதை நினைச்சாலே சிரிப்பு பொத்துக்கிட்டு வருது. அதை வாயாலே சொல்லச் சொன்னா.. ஹா.. ஹா...''

செந்தாமரை மீண்டும் சிரிக்க ஆரம்பித்தாள்.

## 69

என் சோகத்திலே என் நெஞ்சம்
உன் மடிதேடி துடிப்பதையே..
என்னவென்று நான் சொல்ல...?

மாலினி, செந்தாமரையின் பக்கம் கண்காட்டி சசிரேகாவை முறைத்தாள். சசிரேகாவின் முகத்தில் குடம் குடமாய் அசடு வழிந்தது.

''கேட்டுக்கிட்டியாடி.. என் பெரியப்பா மகளே.. இவளுக்கு ஏபிசிடியே தெரியாது. இவகிட்ட போய் 'ஏ' ஜோக்கைப் பற்றிப் பேசுகிறாயே. உன்னை என்னான்னு சொல்லுறது..''

''அம்மா.. அம்மா.. எனக்கு ஏபிசிடி பத்தி தெரிய லைங்கிறதுக்காக அந்த 'ஏ' சோக்கை சொல்லாம விட்டுரா தீங்கம்மா. என்கிட்டயும் சொல்லுங்கம்மா..'' செந்தாமரை நச்சரிக்க ஆரம்பித்தாள்.

''இவ இப்படியே வீடு பூராவும் போய் சொல்லி என் மானத்தை வாங்கப் போறா.. செந்தாமரை உனக்கு இப்ப என்ன வேணும்? 'ஏ' ஜோக்குதானே வேணும்?''

''ஆமாம்மா.. ஆமா..''

''ஒரு ஆளுக்கு கண் பார்வையில ஏதோ பிரச்னை யாம்.. அவன் கண் டாக்டர்கிட்ட போனானாம்..''

''உம்...''

''அந்த டாக்டர்.. போர்டுல மாட்டியிருக்கிற எழுத்தில, ஏபிசிடியை காண்பித்து.. 'ஏ'யைத் தெரியுதான்னு கேட்டிருக் கிறார். அவன் தெரியலைன்னு சொல்லியிருக்கிறான். அந்த டாக்டர்.. அவன் கண்பார்வையில ஏதோ கோளா றுன்னு நினைச்சாராம்..''

''உம்..''

''அப்போ பார்த்து அவரோட பாக்கெட்டிலிருந்து ஒரு பத்து ரூபா தாள் தூரமா விழுந்துருச்சாம். இவன் அந்த டாக்டர் பார்க்கலைன்னு நினைச்சு அதை லபக்கிக் கிறப் பார்த்தானாம். அந்த டாக்டருக்கு ஆச்சரியமாகப் போச்சாம்..''



''உம்..''

''ஏய்யா.. உனக்கு கண் தெரியாதுன்னு நினைச் சேனே.. அப்புறம் எதுக்கு 'ஏ' யைக் காட்டித் தெரியுதான்னு கேட்டால் தெரியலைன்னு சொன்னன்னு கேட்டாராம். அதுக்கு அவன் என்ன சொன்னான் தெரியுமா?''

''என்ன சொன்னான்ம்மா?''

செந்தாமரை ஆவலாகக் கேட்பதை பவித்ரா வியப் புடன் பார்த்தாள். காலோடு ஒட்டிக் கொண்டு சுற்றும் செல்லப் பிராணியைப் போல. அவள் மாலினியோடு இழைந்ததைப் பார்க்க அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது.

''எனக்கு ஏபிசிடி படிக்கத் தெரியாதுங்கன்னு சொல் னானாம். இது எப்படியிருக்கு.. அவன் 'ஏ'யைப் படிக்கத் தெரியலைன்னு சொல்லியிருக்கான். டாக்டர் அவனுக்கு கண் தெரியலைன்னு முடிவு பண்ணிட்டார்..''

''ஆமாம்மா.. 'ஏ'யைத் தெரியலைன்னா.. ஹா.. ஹா.. கண்ணு தெரியலைன்னு ஹி... ஹி..''

செந்தாமரை மீண்டும் சிரிக்க ஆரம்பிக்க.. மாலினி யின் கெட்டிக்காரத்தனத்தை நினைத்து பவித்ராவும் சசிரேகா வும் சிரிக்க ஆரம்பித்தார்கள்.

ஒரு வழியாக எல்லோரும் சிரித்து முடிக்கவும்.. காலி காபி.. டிபன் பாத்திரங்களை எடுத்துக் கொண்டு செந்தாமரை தனக்குள் மாலினியின் ஜோக்குகளை நினைத்துச் சிரித்த வாறே வீட்டை நோக்கிப் போனாள்.

அவள் போவதற்காகவே காத்திருந்த அந்த மூன்று பேரும் அவளின் தலை மறைந்ததும் பொங்கிச் சிரித்தார் கள்..

''மாலினி.. நீ சொன்ன 'ஏ' ஜோக்.. ஏ ஒன்..'' என்றாள் பவித்ரா.

''இவளை என்ன செய்தால் தேவலாம் பவித்ரா. இப்படி 'ஏ' ஜோக்கைப் பற்றி அவகிட்ட சொல்லி என்னை மாட்டிவிடுகிறா பாரேன்..'' சசிரேகாவைப் பற்றி புகார் சொன்னாள் மாலினி.

''நான் என்னத்தைடி கண்டேன்.. அவ அப்படிச் சொன்னால்.. நான் எப்படி அர்த்தம் எடுத்துக்கிறது?'' சசிரேகா சமாதானத்திற்கு வந்தாள்.

''ஒண்ணுதான் எனக்குப் புரியலை மாலினி..''

''என்னது..''

''நீயேன் அவளிடம் வேடிக்கையாய் பேசின?''

''அப்படிப் பேசலைன்னா அவ இங்கேயிருந்து நகரவே மாட்டா. அவளுக்கு நான் எதையாவது சொல்லி சிரிக்க வைச்சாகணும்.. இது அவளுக்கு என் மேல இருக்கிற எதிர்பார்ப்பு..''

''அதுதான் ஏன்?''

''ஏன்னா.. இந்த வீட்டு ஜீவன்கள் அந்த அளவுக்கு சிரிப்பை மறந்து போயிருக்காங்க. பாரேன்.. ஒரு வேலைக் காரிக்குகூட சிரிப்பு தேவைப்படுகிறதுன்னா.. இந்த வீட்டு மனுஷங்களுக்கு சிரிப்பு தேவைப்படாதா?''

''நிஜமாகவே இந்த வீட்டில் யாரும் சிரிக்க மாட்டாங் களா?''

''எனக்குத் தெரியாது. ஒரு வேளை.. உன் அருமை அக்கா ஸ்வேதா இந்த வீட்டுக்கு வருவதற்கு முன்னால் சிரிச்சுக்கிட்டு இருந்தாங்களோ என்னவோ..''

இப்போது சசிரேகாவும் பவித்ராவும் மீண்டும் சிரிக்க ஆரம்பித்தார்கள்.

''இவ இப்படித்தான்.. சிரிச்சுச் சிரிச்சே நாம் நம்ம வயிற்றைப் புண்ணாக்கிக்கற மாதிரி பேசி வைப்பா.. இங்கே யாருடி சிரிப்புக்கு ஏங்கினது?''



''தோடா.. இதை சசிரேகாவா சொல்லுறது? கேளேன் பவி.. இந்த மேடம் இந்த வீட்டுக்கு சின்ன மருமகளா வருவதற்கு முன்னால்.. பேச ஆரம்பித்தால் அப்படியே மத்தாப்பூதான்..''

''நிஜமாகவா..''

''நானென்ன பொய்யா சொல்கிறேன். நிஜமாகத் தான். இப்பப் பாரேன்.. குத்துவிளக்கைப் போல நிதானமாகப் பார்த்து.. பேசாமடந்தை போல எப்படி இருக்கிறா..''

''ஏய்.. சும்மா இருடி.. இவ சொல்வதையெல்லாம் நீ நம்பாதே பவித்ரா...''

அவர்கள் மூவரும் அரட்டையடித்துக் கொண்டிருந்த போது வீட்டுப் பக்கம் பார்த்த மாலினி.. பவித்ராவிடம் கணசிமிட்டினாள்.

''இப்பப் பாரேன்.. ஒரு மேஜிக் நடக்கப் போகுது...''

''என்ன மேஜிக்..''

''என் அருமை பெரியப்பா மகள்.. உன்னையும் என்னையும் அம்போன்னு விட்டுவிட்டு சொல்லிக்காம கூட வீட்டை நோக்கிப் பறக்கப் போகிறா...''

''எதை வைச்சு அப்படிச் சொல்கிற?''

பவித்ரா வினவிக் கொண்டிருந்தபோதே.. அவர்கள் வீட்டுக் காம்பவுண்டிற்குள் கார் நுழையும் சத்தம் கேட் டது. சசிரேகா அவசரமாக காரின் பக்கம் திரும்பிப் பார்த் தாள். கருணாகரன் காரை விட்டு இறங்குவதைப் பார்த் ததும் அவசரமாக எழுந்து அவர்கள் இருவரையும் கண்டு கொள்ளாமல் கணவனை நோக்கி விரைந்தாள்.

''நான் சொல்லவில்லை..'' பவித்ராவைப் பார்த்து சிரித்தாள் மாலினி.

''நீ எப்படித்தான் இப்படி இருக்கிறாயோ.. எனக்கு

உன்னை ரொம்ப பிடிச்சிருக்கு மாலினி..'' பவித்ரா.. மாலினியின் கைபிடித்துக் கொண்டாள்.

''பவித்ரா...''

ஸ்வேதா அழைக்கும் குரல் கேட்டதும்.. பவித்ரா கோபத்துடன் மாலினியிடம் முணுமுணுத்தாள்.

''இவள் ஏன் என்னைக் கூப்பிடுகிறாள்?''

''என்னைக் கேட்டால் எனக்கென்ன தெரியும். உன் அன்புச் சகோதரிகிட்டதான் அதை நீ கேட்கணும்..''

''அவளா அன்புச் சகோதரி.. சரியான வம்புச் சகோதரி...'' பவித்ரா கோபத்துடன் எழுந்து ஸ்வேதாவிடம் போனாள்.

அவள் போனபின்.. அற்புதமான தனிமை மாலினியை சூழ்ந்து கொண்டது. அவள் அமைதியாக கண்மூடி அந்தத் தனிமையை ரசித்தாள்.

''ஸோ.. உனக்கு 'ஏ' ஜோக் சொல்லக்கூடத் தெரியும்..'' என்ற குரல் கேட்டதும்.. மனம் துள்ள கண்விழித்தாள். எதிரே பிரபாகரன் நின்றுகொண்டிருந்தான்.

''ஒட்டுக் கேட்டீங்களா?''

''ஊஹூம்.. மறைவாய் நின்று கேட்டேன்..''

''இரண்டுக்கும் ஒரே அர்த்தம்தான்..''

''யாரு அப்படிச் சொன்னது? இரண்டுக்குமே வேறு வேறு அர்த்தம்..''

''உங்க ஊர் நியாயமே தனிதான்..''

''ஏய்ய்.. இது உன் ஊர் நியாயம்டி.. இன்னும் நீ சென்னைப் பொண்ணுங்கிற நினைப்பிலயே இருக்கயா? நீ மார்த்தாண்டபுரத்து மகாராணிடி..''



பிரபாகரன் அவளருகே அமர்ந்து கொள்ள.. மாலினி அவசரமாய் சுற்றுமுற்றும் பார்த்தாள். இருள் போர்வையாய் அவர்களைச் சுற்றிக் கவிழ்ந்திருக்க.. பிரபாகரனின் கை சுவாதீனமாய் அவள் தோளின் மீது விழுந்தது. மாலினியின் உடலில் ஒருவித பரபரப்பு உற்பத்தியானது.

''யாரும் பார்க்கலை..'' என்றான் அவன்.

''தி ஃபேமஸ் ஹிட்லர் பேசுகிற பேச்சைப் பாரேன்..'' அவள் குரல் கிசுகிசுப்பாய் வெளிவந்தது.

''ஹிட்லரும் மனிதன்தானே..'' அவன் அவளை தன் பக்கம் லேசாக இழுத்து அணைத்தான்.

''வெறும் மனிதனில்லை.. இரும்பு மனிதன்..'' அவன் பிடியிலிருந்து விடுபட முடியாமல் அவள் சொன்னாள்.

''அந்த இரும்பு மனிதனையும்.. இளக வைச்சிட்டியேடி..'' அவன் மீசை அவளது காதோரமாக உராய்ந்தது.

அவள் இன்ப அவஸ்தையுடன் கண் மூடிக் கொண்டாள்.

''நீங்களா இளகறீங்க.. என்னை இளக்கிக்கிட்டு இருக்கறீங்க..'' அவன் தோள் மீது தலைசாய்ந்து சொன்னாள்.

''மாலினி...''

அவன் தாள முடியாத தாபத்துடன் அவளை இறுக்கி அணைத்து மடியில் சரித்துக் கொண்டான். அவள் அவனது தொடுதலை விரும்பி ஏற்றுக்கொண்டாள். அவனது அத்துமீறலை அனுமதித்தாள்.

''ஐ லவ் யூடி கண்ணம்மா..''

காதோரமாக கிறக்கத்துடன் அவன் பேசியதைக் கேட்டவள் விழி மூடி மயங்கினாள்.''

''இப்படி உன்னிடம் மயங்கிப் போவேன்னு நான் நினைத்துக்கூடப் பார்க்கலைடி..''

போகிறான் என்ற விந்தைக்கான விளக்கத்தை இதுவரை யாரும் சொல்லவில்லை.

மாலினி.. ஒரு கண்பார்வைகூட தேவையில்லாமல் தன்மேல் படிவதை விரும்பாதவள்..

அப்படிப்பட்டவள்.. திருமணமாகும் முன்னரே தன்னை பிரபாகரனிடம் ஒப்படைத்தாள்.

அது.. அவள் பிரபாகரனின் மேல் கொண்டுள்ள அளவற்ற காதலின் அடையாளம்.

நான் உன் உடைமை. என் மனதும் உடலும் உனக்குச் சொந்தம். நீ தாராளமாக எடுத்துக்கொள். திருமணம் ஆனால்தான் நீ என் கணவன் என்று இல்லை.

எப்போது உன்னை மனமாரக் காதலிக்க ஆரம்பித்தேனோ அப்போதே நீ என் கணவன்தான்.

இதைத்தான் மாலினி சொல்லாமல் சொன்னாள்.

ஆனால்.. கோட்டையூர் ஜமீன்தாரான பிரபாகரன்.. நியாயத்திற்கு பெயர் பெற்றவன்.

அவன் மேல் கொண்டுள்ள காதலை தன்னை ஒப்படைத்து மாலினி நிருபிக்கும்போது.. அவள் மேல் கொண்ட காதலை அவனும் நிருபித்தாக வேண்டுமில்லையா?

எனவே.. எல்லையைக் கடக்காமல் அவன் விலகினான்.

''என்மேல் உனக்குப் பயமில்லையாடி?'' அவள் கன்னத்தில் முத்தமிட்டு காதோரமாக கேட்டான்.

''எதுக்குப் பயப்படணும்?''

''தாலி கட்டாமல் உன்னை ஆண்டுவிடுவேனோன்னு பயமில்லையா?''



மாலினி அவனது மீசையின் இரு பக்கத்தையும் இரு கைகளால் பிடித்து இழுத்தாள்.

''ஆண்பிள்ளை சிங்கம் பயமுறுத்துகிறாரு.. ஆண்டால் தான் என்ன? உங்களுடைய சொத்தை நீங்க எடுத்துக்க நீங்க..''

''மாலினி...''

அன்று இரவு.. வெகுநேரம் அவன் உறங்கவில்லை. அவன் மனதில் மாலினி கூறிய வார்த்தைகள்தான் எதிரொலித்துக் கொண்டிருந்தன.

அவளுடைய காதல் தந்த இதமான மன சுகத்தை அனுபவித்தபடி மெதுவாக கண்ணயர்ந்தான் பிரபாகரன்.

காலையில்.. அழைப்புமணியொலித்ததும் மாலினி கண் விழித்து எழுந்து கதவைத் திறந்தாள். பொன்னி காபியோடு உள்ளே வந்தாள்.

''உங்களுக்கு ஏம்மா இந்த ஓரவஞ்சனை..'' என்று கேட்டாள்.

''ஓரவஞ்சனையா.. இது என்ன புதுக்கதையா இருக்கு?'' மாலினி காபியை வாங்கிக் கொண்டாள்.

''நேத்து செந்தாமரைக்கு மட்டும் 'ஏ' ஜோக் சொல்லியிருக்கீங்க.. எனக்குச் சொல்லலை..''

பொன்னி படித்த புகாரைக் கேட்டதும்.. காபி குடித்துக் கொண்டிருந்த மாலினிக்கு புரையேறிவிட்டது.

'''ஏ' ஜோக்கா.. நானா.. உன்கிட்டேயும் சொல்லிட்டாளா?''

''இந்த ஊருக்கே சொல்லிட்டா...''

''கிழிஞ்சது போ...''

மாலினி காலி காபித் தம்ளரைக் கொடுத்துவிட்டு தலை மேல் கை வைத்துக் கொண்டாள்.

போகிறான் என்ற விந்தைக்கான விளக்கத்தை இதுவரை யாரும் சொல்லவில்லை.

மாலினி.. ஒரு கண்பார்வைகூட தேவையில்லாமல் தன்மேல் படிவதை விரும்பாதவள்..

அப்படிப்பட்டவள்.. திருமணமாகும் முன்னரே தன்னை பிரபாகரனிடம் ஒப்படைத்தாள்.

அது.. அவள் பிரபாகரனின் மேல் கொண்டுள்ள அளவற்ற காதலின் அடையாளம்.

நான் உன் உடைமை. என் மனதும் உடலும் உனக்குச் சொந்தம். நீ தாராளமாக எடுத்துக்கொள். திருமணம் ஆனால்தான் நீ என் கணவன் என்று இல்லை.

எப்போது உன்னை மனமாரக் காதலிக்க ஆரம்பித்தேனோ அப்போதே நீ என் கணவன்தான்.

இதைத்தான் மாலினி சொல்லாமல் சொன்னாள்.

ஆனால்.. கோட்டையூர் ஜமீன்தாரான பிரபாகரன்.. நியாயத்திற்கு பெயர் பெற்றவன்.

அவன் மேல் கொண்டுள்ள காதலை தன்னை ஒப்படைத்து மாலினி நிரூபிக்கும்போது.. அவள் மேல் கொண்ட காதலை அவனும் நிரூபித்தாக வேண்டுமில்லையா?

எனவே.. எல்லையைக் கடக்காமல் அவன் விலகினான்.

''என்மேல் உனக்குப் பயமில்லையாடி?'' அவள் கன்னத்தில் முத்தமிட்டு காதோரமாக கேட்டான்.

''எதுக்குப் பயப்படணும்?''

''தாலி கட்டாமல் உன்னை ஆண்டுவிடுவேனோன்னு பயமில்லையா?''



மாலினி அவனது மீசையின் இரு பக்கத்தையும் இரு கைகளால் பிடித்து இழுத்தாள்.

''ஆண்பிள்ளை சிங்கம் பயமுறுத்துகிறாரு.. ஆண்டால் தான் என்ன? உங்களுடைய சொத்தை நீங்க எடுத்துக்க நீங்க..''

''மாலினி...''

அன்று இரவு.. வெகுநேரம் அவன் உறங்கவில்லை. அவன் மனதில் மாலினி கூறிய வார்த்தைகள்தான் எதிரொலித்துக் கொண்டிருந்தன.

அவளுடைய காதல் தந்த இதமான மன சுகத்தை அனுபவித்தபடி மெதுவாக கண்ணயர்ந்தான் பிரபாகரன்.

காலையில்.. அழைப்புமணியொலித்ததும் மாலினி கண் விழித்து எழுந்து கதவைத் திறந்தாள். பொன்னி காபியோடு உள்ளே வந்தாள்.

''உங்களுக்கு ஏம்மா இந்த ஓரவஞ்சனை..'' என்று கேட்டாள்.

''ஓரவஞ்சனையா.. இது என்ன புதுக்கதையா இருக்கு?'' மாலினி காபியை வாங்கிக் கொண்டாள்.

''நேத்து செந்தாமரைக்கு மட்டும் 'ஏ' ஜோக் சொல்லியிருக்கீங்க.. எனக்குச் சொல்லலை..''

பொன்னி படித்த புகாரைக் கேட்டதும்.. காபி குடித்துக் கொண்டிருந்த மாலினிக்கு புரையேறிவிட்டது.

'''ஏ' ஜோக்கா.. நானா.. உன்கிட்டேயும் சொல்லிட்டாளா?''

''இந்த ஊருக்கே சொல்லிட்டா...''

''கிழிஞ்சது போ...''

மாலினி காலி காபித் தம்ளரைக் கொடுத்துவிட்டு தலை மேல் கை வைத்துக் கொண்டாள்.

பொன்னி அறையை விட்டு வெளியேறாமல் மாலினி முகம் பார்த்துக் கொண்டே நிற்கவும்..

''என்ன?'' என்று கேட்டாள்.

''எனக்கு ஒரு 'ஏ' ஜோக்...'' என்று பொன்னி இழுக் கவும்.. நொந்துபோனவளாய் ஒரு பார்வை வைத்தாள் மாலினி.

''என்னாம்மா?'' என்று திகைத்துப் போய் கேட்டாள் பொன்னி.

''செந்தாமரையைப் பத்தி நான் சொல்லியா உனக்குத் தெரியணும் பொன்னி?''

''அதனால்தானே ஆத்திரம் ஆத்திரமாய் வருது..''

''ஏன்.. என்ன ஆச்சு?''

''அவளுக்கு புரிகிற ஜோக்கு எனக்குப் புரியாதா.. என்னைவிட அவ விவரமான ஆளா?''

''அடக்கடவுளே.. பொன்னி.. செந்தாமரைகிட்ட நான் சொன்ன 'ஏ' ஜோக்கையும், அதை எதுக்குச் சொன் னேன்கிற விவரத்தையும் உனக்கு நான் சொல்கிறேன் கேளு..''

சசிரேகாவிடம் செந்தாமரை சொன்னதையும் அதைக் கேட்டுவிட்டு சசிரேகா 'ஏ' ஜோக்கைப் பற்றிச் சொன்னதை யும் சொன்னவள்.. தான் சொன்ன ஜோக்கையும் சொன் னாள்.

''இதைப் போயா 'ஏ' ஜோக்குன்னு ஊரு பூரா அவ சொல்லிக்கிட்டு அலையறா?'' பொன்னி மோவாயில் கையை வைத்து ஆச்சரியப்பட்டாள்.

''ஆமாம்..'' தலையில் கை வைத்தாள் மாலினி.

''அதுதானே பார்த்தேன்.. ஆயிரம் 'ஏ' ஜோக்கு நான் சொல்வேனே... என்னை பீட் அடிக்கிறதைப் போல . இந்த



மாலினியம்மா அப்படி என்ன ஜோக்கைச் சொல்லிப்புட் டாங்கன்னு இல்ல நான் யோசிச்சிக்கிட்டு இருந்தேன்..'' அசால்ட்டா சொல்லிவிட்டு பொன்னி போய்விட.. இப்போது மோவாயில் கை வைப்பது மாலினியின் வேலை யானது.

முகம் கழுவி.. உடைகளைச் சரிசெய்து கொண்டு காலை நேர வாக்கிங்கிற்காக அறையை விட்டு வெளியே வந்தாள். முதல் நாள் நினைவில் தோட்டத்திற்குப் போவ தைத் தவிர்த்தவள்.. பிரபாகரனை காரில் பார்த்துக் கொள்ள லாம் என்ற எண்ணத்துடன் மொட்டைமாடிக்குப் போனாள்.

இளவெயில் ஆரம்பமாகியிருந்தது. நீண்டு பரந்து விரிந்திருந்த அந்த அரண்மனை போன்ற மாளிகையின் மொட்டைமாடி மிகப் பெரிய மைதானங்கள் பலவற்றை சேர்த்து இணைத்தது போல இருந்தது.

மாலினி.. மெலிதாகப் பாடியபடி மொட்டைமாடி யில் குறுக்கும் நெடுக்குமாக நடக்க ஆரம்பித்தாள்.

*''அந்த மாப்பிள்ளை...*
*காதலிச்சான்... கையைப் பிடிச்சான்..*
*என்தன் கையைப் பிடிச்சான்..*
*அங்கே முன்னால் நின்றான்*
*பின்னால் சென்றேன்..*
*வா.. வா.. என்றானே...*
*அருகினில்.. வா.. வா.. என்றானே...''*

காலை நேரத்து புத்துணர்வுடன்.. மனதில் முதல் நாள் இரவின் கிறங்கடிக்கும் நினைவுகளுடன் உல்லாசமாக பாடியபடி நடை பயின்றாள் அவள்.

அவள் மேல் ஒரு ரோஜாப் பூ வந்து விழுந்தது. அதைக் கையில் எடுத்துக் கொண்டு சுற்றுமுற்றும்

பார்த்தாள். அவள் பின்னாலிருந்து ஒரு கரம் அவள் கண்ணைப் பொத்தியது.

*''என்னை விட்டால் யாருமில்லை..*
*கண்மணியே உன் கையணைக்க..*
*உன்னை விட்டால் வேறொருத்தி..*
*என்னமில்லை நான் காதலிக்க...''*

பாடலைக் கேட்டதும்..

''பிரபா...'' என்றாள் மாலினி ஆனந்தமாக.

''உன் பிரபாதாண்டி..'' அவன் கரம் அவளைத் திருப்பி அணைத்துக் கொண்டது.

அவனது முதுகோடு தன் கைகளைப் படரவிட்டுப் பிணைத்துக் கொண்டவள்... காதலுடன் அவன் முகம் பார்த்தாள்.

''தேங்க் யூ மை டியர்..''

''எதுக்கு இந்த தேங்க்ஸ்?''

''என்னதான் நாள் முழுவதும் கொஞ்சிக் குலாவினாலும்... விடிந்தவுடன் உங்களைப் பார்க்கணும்னு மனசுக்குள் பரபரப்பாகிறது...''

''அப்ப எதுக்கு அம்மிணி மொட்டை மாடிக்கு வந்தீங்களாம்.. நம்ம மீட்டிங் ஸ்பாட் காலை நேரத்தில் தோட்டம்தானே...''

''இது உங்களுக்குத் தெரிந்ததைப் போல உங்க தம்பிக்கும் தெரிந்து தொலைத்திருக்கிறதே...''

அந்த நேரத்தில் பிரபாகரனின் மனது கொண்ட கர்வத்தை மாலினி அறியாள். அவன் மனதை மயிலிறகைப் போல வருடிச் சென்றன மாலினியின் வார்த்தைகள்.

அவன் அதிகாலையிலேயே எழுந்து விட்டான். தோட்டத்துப் பக்கம் போனால் அங்கே தினகரன். ரோஜாச்



செடிப் பக்கம் நின்றவாறு மாடியைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

'இவன் மாலினிக்காக காத்திருக்கிறானோ..' பிரபாகரனின் மனம் துணுக்குற்றது.

அங்கே நிற்கப் பிடிக்காமல் திரும்பியவனின் பார்வை அருகிலிருந்த ரோஜாச் செடியின் மேல் விழுந்தது.

'நேற்றே ரோஜாவின் மேல் ஆசைப்பட்டாள்..'

மாலினியின் நினைவுடன் ஒரு பூவைப் பறித்துக் கொண்டு மாடியேறினான்.. அவன் மாடி ஹாலில் பிரவேசித்தபோது மாலினி மொட்டைமாடிக்கு படியேறிக் கொண்டிருந்தாள்.

'ஏன் இவள் தோட்டத்துக்கு வரவில்லை?' என்று யோசித்தவன்.. 'ஒரு வேளை தினாவை அவாய்ட் பண்ண நினைக்கிறாளோ' என்ற நினைவு வரவும், கண்கள் மின்ன அவளைப் பின்தொடர்ந்தான்.

அவன் கணிப்பு சரியாகவே இருந்ததை மாலினி தன் வாயால் சொல்லவும்.. அவனுடைய மனம் மலர்ந்து விட்டது.

''ஐயோ.. என்ன இது பிரபா.. எலும்பு நொறுங்கி விட்டது..''

அவனின் இறுக்கமான அணைப்பிலிருந்து விடுபட முயலாமல் சிணுங்கிக் கொண்டிருந்தாள் மாலினி.

ஒரு வழியாக வேகம் தணிந்து அவளை விடுவித்த பிரபாகரன்.. குனிந்து தரையில் கிடந்த ரோஜாப் பூவை எடுத்து அவள் கையில் கொடுத்தான்.

''என்னதிது?''

''பார்த்தால் தெரியலையா.. ரோஜாப் பூ..''

''இது எனக்கா?''

''இல்லை.. தெருவில் போகிறவளுக்காக கொண்டு வந்தேன்..''

''கோபமா பிரபா?''

''கொஞ்சாதேடி.. பூவை வைத்துக்க.. நேற்றே ஆசைப்பட்டாயே...''

''அது அத்தை கொடுத்து விட்ட பூ..''

''இது அத்தை மகன் கொடுக்கிற பூ..''

''ஹ... பேச்சிலே ஒன்றும் குறைச்சல் இல்லை..''

''வேற எதில் குறைச்சல்.. சொல்லு சரிபண்ணிரலாம்..''

''போதுமே.. திரும்பவும் ஆரம்பிக்க வேண்டாம்..''

''எதை?''

''நான் சொல்ல மாட்டேன்..''

அவள் முகம் சிவக்க ஓடிவிட்டாள். மனசெல்லாம் நிறைந்திருக்க.. படியிறங்கினான் பிரபாகரன்.

பால்கனிப் பக்கம் வந்த பவித்ரா.. தோட்டத்தில் நின்றிருந்த தினகரனைப் பார்த்து விட்டாள். அவனுடன் பேசும் ஆவல் மனதில் எழும்ப.. தோட்டத்துக்குப் போக வேகமாய் படியிறங்கினாள்.

''எதுக்கு இப்படி ஓடி வருகிற பவித்ரா.. காலைக் காபிக்கா?''

கையில் காபியோடு நின்றிருந்த ஸ்வேதா வினவினாள்.

''சும்மாதான்..''

பூனை போல் மெதுவாக நடந்த பவித்ரா.. ஸ்வேதாவின் பார்வை வேறு பக்கம் திரும்பியபோது... வாசலுக்கு நழுவினாள்.



அவள் அவசரமாக தோட்டத்துக்குப் போனபோது... தினகரன் மாடி பால்கனியை பார்த்துக் கொண்டிருந்தான்.

'யாரைப் பார்க்கிறான்..' பவித்ராவும் அண்ணாந்து பார்த்தாள்.

அங்கே மாலினி நின்றிருக்கவும் பவித்ராவின் முகம் மலர்ந்தது. அவள் மாலினியைப் பார்த்துக் கையாட்டினாள். பதிலுக்கு மாலினி சிரித்தபடி கையாட்ட... அதைப் பார்த்த தினகரன், தேன் குடித்த நரியைப் போல் ஆகி விட்டான்.

அவன் இருந்த இடத்திலிருந்து எம்பி உற்சாகமாக அவன் கையாட்டியதைக் கண்டு மாலினியும் பவித்ராவும் அதிர்ச்சியில் ஆழ்ந்தனர்.



## 71

நீ விட்டுச் சென்ற இடத்தை...
தொட்டுச் செல்லும் என் மனதை..
என்னவென்று நான் சொல்ல...?

பவித்ராவின் முகம் அதிர்ச்சியைக் காட்டியது. அதற்கு குறையாத அதிர்ச்சியை மாலினியின் முகம் பிரதிபலித்ததை அவளால் பார்க்க முடிந்தது.

மாலினி சட்டென்று பால்கனியை விட்டு அகன்று விட்டாள்.

திரும்பி விடலாமா என்ற யோசனையுடன் பவித்ரா நின்றிருந்தபோது உல்லாசமாக விசிலடித்தபடி தினகரன் திரும்பினான். அது வரை அவள் வருவதை உணராமல் நின்றிருந்தவன்.. அப்போதுதான் அவளைப் பார்த்தவனாய்..

''ஓ.. பவித்ரா.. காலையில் தோட்டத்துப் பக்கம் வந்திருக்கிறாயே.. காற்று வாங்க வந்தாயா...''

'இல்லை... நீ கையாட்டுவதைப் பார்க்க வந்தேன்...'

எரிச்சலுடன்.. நீச்சல்குளத்தைப் பார்த்தாள் பவித்ரா.. அவளுக்கு ஏன் வந்தோம் என்று இருந்தது.

'நான் உன்னை சைட் அடிக்க வந்தால்.. நீ மாலினியை சைட் அடிக்கிறாயா..'

அவள் மனதிற்குள் பொருமிக் கொண்டிருந்ததை உணராதவனாக தினகரன் தன் பிரத்தியேக மயக்கும் புன்னகையை உதிர்த்தான்.

''நான் கேட்டதுக்கு பதில் சொல்லாம.. என்ன யோசனையில் இருக்கிற பவித்ரா?''

''நீங்க எதுக்கு வந்தீங்களோ... நானும் அதுக்குத்தான் வந்தேன் அத்தான்..''

பவித்ரா இரு பொருள்படப் பேசுவதை உணராதவனாக பலமாக சிரித்தான் தினகரன்.

''இதைப் பாருடா.. என் மாமன் மகள் வாய் திறந்து போட்டுத் தாக்குவதை. இத்தனை நாளாய் உன்னை ஊமையினுல்ல நினைச்சுக்கிட்டு இருந்தேன்..''

அந்த கேலிப் பேச்சில் மனம் குளிர்ந்து போனாள் பவித்ரா. சற்று முன் தினகரன், மாலினியைப் பார்த்துக் கையாட்டியதை மறந்தே விட்டாள்.

''போங்க அத்தான்..''

அவள் முகம் வெட்கத்தில் சிவக்க.. மாலினியை மறந்து அவளது நாணத்தை ரசிக்க ஆரம்பித்தான் தினகரன்.

''இது என் வீடு நினைவிருக்கிறதா?''

''அதுக்கு என்னவாம்?''



''என்னைப் போங்க அத்தான்னு சொன்னால்.. எங்கே போகச் சொல்லுகிற?''

''இப்படிக்கூட நீங்க பேசுவீங்களா?''

''நான் எப்படியும் பேசுவேன்.. என்ன ஒண்ணு.. நீ அதை இப்போதுதான் கேட்கிறாய்...''

''யார் சொன்னது?''

''ஏன்.. நான்தான் சொல்கிறேன்..''

''அதுதான் இல்லை...''

''ஏய்.. இதுக்கு முன்னாலே என் முன்னால் வந்து நிற்கக்கூட அந்தப் பயம் பயப்படுவாய். இந்தத் தடவை தான் தைரியமாக என் முன்னால் நின்று என் முகம் பார்த்து நாலு வார்த்தைகள் பேசுகிறாய். ஆமாம்.. எங்கேயிருந்து உனக்கு இந்த அளவுக்கு தைரியம் வந்தது?''

''ம்ம்.. எல்லாம் கருங்கல்லில் இருந்து வந்ததுதான். புதிதாய் ஒன்றும் வந்து விடவில்லை...''

''அடேங்கப்பா.. கருங்கல்காரங்க அவ்வளவு தைரியசாலிகளாக்கும்?''

''பின்னே இல்லையா.. உங்களுக்கு சந்தேகமிருந்தால்.. அத்தையிடம் கேட்டுவிடலாமா?''

''அது எதுக்கு?''

''என் அத்தையும்.. எங்க வீட்டில் பிறந்தவங்க தானே...''

''அம்மாடியோவ்.. உன்னை என்னமோன்னு நினைத்தேன். நீ இந்த அளவுக்கு விவரமான ஆளா?''

''என்னன்னு நினைத்தீங்களாம்..''

''சொன்னால் அடிக்க வர மாட்டாயே..''

''அந்த அளவுக்கு நீங்க பயப்படுகிற ஆளாக்கும்?

யார்கிட்ட பில்ட் அப் காட்டுகிறீங்க... என்னன்னு சொல்லுங்க...''

''பச்சைக் குழந்தைன்னு நினைச்சேன்..''

'அமுல் பேபின்னு மாலினி சொன்னதை.. இவனும் சொல்கிறான்..' பவித்ரா புன்னகைத்தாள். அவளது முகத்திற்கு அழகு சேர்த்த அந்தச் சிரிப்பை ஆச்சரியத்துடன் பார்த்தான் தினகரன்.

''ஏய்ய.. நீ இப்ப எப்படியிருக்கிற தெரியுமா?''

''எப்படி?''

''இந்த பூச்செடிகளின் மத்தியில் சிரிக்கிற உன் முகமும் ஒரு பூவைப் போல இருக்கு பவித்ரா..''

அவன் இயல்பாக அருகிலிருந்த ரோஜாச் செடியில் ஒரு பூவைப் பறித்து.. அவள் முகத்துக்கு அருகே வைத்துப் பார்த்தான். அவனது விரல்.. அவளது கன்னம் தீண்ட.... பவித்ரா சொக்கிப் போனாள்.

''அச்சு அசல் பூவேதான்.. கொஞ்சம்கூட வித்தியாசமில்லை..''

அவன் லேசாக அவளது கன்னத்தில் தட்டிவிட்டு.. அந்தப் பூவை அவளிடமே நீட்டினான்.

விழி விரிய அதை வாங்கிக் கொண்டாள் பவித்ரா. வீட்டை நோக்கிப் போய்விட்டான் தினகரன்.

அப்படியே நீச்சல்குளத்தின் படிகளில் அமர்ந்து விட்டாள் அவள்.

நடந்த நிகழ்வை திரும்பத் திரும்ப அசை போட்டது அவள் மனம். அவன் விரல் பட்ட கன்னத்தை அவள் விரல் வருடிக் கொடுத்தது..

*''பூக்கள் பூக்கும் தருணம் - ஆருயிரே..*
*பார்த்த தாரும் இல்லையே....*



*புலரும் காலைப் பொழுதை - முழுமதியும்*
*பிரிந்து போவதில்லையே..*
*நேற்று முதல் நேரம் போகவில்லையே - உன்தருகே*
*நேரம் போதவில்லையே....*
*எதுவும் பேசவில்லையே - இன்று ஏனோ*
*எதுவும் தோன்றவில்லையே..*
*இரவும் விடியவில்லையே - அது விடிந்தால்*
*பகலும் முடியவில்லையே...''*

முழங்கால்களில் முகம் புதைத்து.. பூவைப் பார்த்தவாறு பாடிக் கொண்டிருந்தவளின் அருகே வந்து ஸ்வேதா நின்றாள்..

நீச்சல்குளத்தின் நீரின் மேற்பரப்பில் பிரதிபலித்த அவளின் உருவத்தைக் கண்டதும் ஸ்விட்ச் போட்டதைப் போல பாடுவதை நிறுத்திக் கொண்டாள் பவித்ரா.

''ஏன் பாட்டை நிறுத்திவிட்டாய் பவித்ரா.. பாடு...''

நாடக பாணியில் ஸ்வேதா பேச.. பவித்ரா எரிச்சலுடன் எழுந்து கொள்ளப் போனாள்.

''ம்.. ம்.. ம்.. ஏன் இப்ப எழுந்துக்கிற... உட்காரு..''

பவித்ராவின் தோளைப் பிடித்து அழுத்தி உட்கார வைத்த ஸ்வேதா.. தானும் அருகே அமர்ந்து கொண்டாள்.

''பாட்டெல்லாம் பாடற.. பூவை வேற வச்சிருக்க... ம்.. தூள் பரத்தறியே பவி. என்ன.. எல்லாம் உன் அம்மா கொடுத்த டிரெயினிங்கா...''

''ஸ்வேதா.. ஒழுங்காகப் பேசு. என்னைப் பேசினால் பொறுத்துக்குவேன். என் அம்மாவை இழுத்தால் சும்மா விட மாட்டேன்..''

''சும்மா விடாமல் என்னடி செய்வாய்? பெரிசா பூச்சாண்டி காட்ட வந்துட்டா..''

''வேண்டாம் ஸ்வேதா.. என் கோபத்தை கிளறாதே..''

''கிளறினால் ராட்சஸி ஆகிவிடுவாயா?''

''ஆமாம்.. ஆமாம்.. ஆமாம்..''

''எதுக்கு இத்தனை ஆமாம் போடுகிற.. ராட்ஸசி ஆகித்தான் பாரேன்.. எனக்கும் அதுதான் ஆசை. நீ பெரிய அமைதியின் சிகரம். குடும்ப குத்துவிளக்குன்னு நினைச்சுக் கிட்டு இருக்கிற அத்தையம்மாளுக்கு அப்போதுதானே உன் சுயரூபம் தெரியும்..''

''ஓ.. உனக்கு அப்படி ஒரு ஆசையா?''

''இருக்காதா.. இத்தனை வருஷமாய் இதுகளுக்கு முன்னாடி பவ்யமாய் நடிக்க என்ன பாடுபட்டிருப்பேன். அதையெல்லாம் கண்டுக்காமல் உன்னைக் கொண்டாடுது களே.. இதுகளை என்ன செய்தால் தகும்?''

''இப்படி நினைப்பை மனதில் வைத்துக்கிட்டு வெளி வேஷம் போட்டால்... இப்படித்தான் ஆகும்..''

ஸ்வேதாவிற்கு 'சுருக்'கென்று தைத்தது. எவ்வளவு திமிரும் தெனாவெட்டும் இருந்தால் இந்த பவித்ரா இப்படிப்பட்ட பேச்சுக்களை தைரியமாக அவள் முகத்தைப் பார்த்துப் பேசுவாள்.

'இவளை சும்மா விடக்கூடாதே...'

ஸ்வேதாவின் பார்வை பவித்ராவின் கையிலிருந்த பூவின் மேல் படிந்தது.

அவள் பவித்ராவைப் பின்பற்றி தோட்டத்திற்கு வந்து... நடந்த அத்தனை நாடகங்களையும் பார்த்துக் கொண்டுதான் இருந்தாள்.

''வெளிவேஷத்தைப் பத்தி நீ சொல்கிறாயா?''

''எனக்கு வேஷம் போடத் தெரியாது...''



''அதைச் சொல்லு.. ஒப்புக்கொள்கிறேன். ஆனால்.. வேஷம் போடுகிறவங்களை கண்டுபிடிக்க உனக்குத் தெரியுமா?''

பவித்ரா துணுக்குற்றாள்.

''நீ என்ன சொல்கிற?''

''மாலினியின் வேஷமும் தினகரனின் வேஷமும் உனக்குத் தெரியுமா? உன்னால் அதைக் கண்டுபிடிக்க முடிந்ததா?''

''தேவையில்லாமல் பேசாதே ஸ்வேதா..''

''எல்லாம் தேவையோடுதான் பேசுகிறேன்..''

''உனக்கு இப்ப என்ன வேணும்..?''

''உன் கையில் இருக்கிற பூ வேணும்னு நான் சொன்னால் உடனே கொடுத்து விடுவயா?''

பவித்ராவின் கை.. அனிச்சையாய் பூவை மறைத்தது.

''ஒளிச்சு வைச்சிருக்கற போல.. ஏன் பவி.. அது தினகரன் கொடுத்த பூ என்பதாலா?''

'இவள் பார்த்திருக்கிறாள்..' பவித்ராவின் முகம் சிவந்தது.. அதைக் கடுமையாகப் பார்த்தாள் ஸ்வேதா.

''ரொம்பத்தான் வெட்கப்பட்டு மகிழ்ந்து போகாதே.. தினகரன் உனக்கு பூ கொடுத்ததையும் நான் பார்த்தேன். அதுக்கு முன்னால் மாலினியைப் பார்த்து கையை ஆட்டி யதையும் நான் பார்த்தேன்..''

சிறகடித்து பறந்துகொண்டிருந்த பவித்ராவின் காதல் சிறகுகளை இரக்கமில்லாமல் வெட்டிக் கீழே தள்ளினாள் ஸ்வேதா.

குற்றுயிரும் குலையுயிருமாக விழுந்த பவித்ராவின் காதல் துடித்துப் போனது.

''ஸ்வேதா..''

''இதற்கே அலறினாள் எப்படி? அதுக்கு முன்னால்.. மாலினி, தினகரனைப் பார்த்து கையாட்டியதையும் நான் பார்த்தேன்..''

''அடிப்பாவி.. மாலினி.. என்னைப் பார்த்து கையாட்டினாள்..''

''அது உன் நினைவு. இந்தத் தினகரனும் சரி.. மாலினியும் சரி.. இரண்டு பேருமே ஒரே குட்டையில் ஊறிய மட்டைகள்தான்..''

''என்ன உளறுகிறாய்..''

''நான் பேசுவது இப்போது உனக்கு உளறலாகத்தான் இருக்கும். போகப் போக அதை நீ புரிந்து கொள்வாய்..''

''நான் எல்லோரையும் புரிந்துதான் வைத்திருக்கிறேன். உன்னையும் தெரியும்.. மாலினியையும் எனக்குத் தெரியும்..''

''இப்பக்கூட தினகரனையும் தெரியும்னு உன் வாய் சொல்ல மாட்டேங்குதே...''

பவித்ராவின் வாய் அடைத்துப்போனது. ஏளனப் பார்வையுடன் ஸ்வேதா தொடர்ந்து பேசினாள்..

''தினகரனால் பெண்களை சைட் அடிக்காமல் இருக்க முடியாது பவித்ரா. மாலினியிடம் கையாட்டிய அடுத்த நிமிஷமே உன்னிடம் பூவைக் கொடுக்க அவனால் மட்டுமே முடியும்...''

''அவரை.. அவன் இவன்னு சொல்லாதே...''

''அது என் இஷ்டம்.. அதைப் போல பிரபாகனைக் காதலிக்கிற கையோடு தினகரனையும் கவிழ்க்கப் பார்ப்பது மாலினிக்கு ரொம்ப ரொம்ப இஷ்டம்...''

''ஸ்வேதா...''



பவித்ராவின் மனம் அதிர்ந்தது. மாலினியைப் போயா இவள் இப்படிச் சொல்கிறாள்?

''சீச்சீ.. என்ன பேச்சுப் பேசுகிற ஸ்வேதா.. இது கொஞ்சம்கூட நல்லா இல்லை..''

''நல்லா இல்லைதான்.. அது எனக்குத் தெரியுது. உனக்கும் தெரியுது. மாலினிக்கும் தினகரனுக்கும் தெரியலையே.. நான் தெரியாமல்தான் கேட்கிறேன் பவித்ரா.. அது எப்படி தினகரன் தோட்டத்தில் நிற்கும் நேரம் பார்த்து மாலினி பால்கனிக்கு வந்து நிற்கிறா?''

பவித்ராவின் முகம் இருண்டது. இரண்டு நாளகளுக்கு முன்னால் மாடி ஹாலில் தினகரனுடன் தனிமையில் பவித்ரா நின்று பேசிக் கொண்டிருந்தபோது.. மாலினி வந்து குறுக்கிட்டுப் பேசியது அவளுக்கு இப்போது நினைவுக்கு வந்தது.

## 72

*நீரோடை போலிருந்த என் மனது..*
*நின்வரவால் சலனப்பட்டு.. சுழல்வதையே..*
*என்னவென்று நான் சொல்ல..?*

காதல்.. யாரையும் சிநேகிக்க வைக்கும். அதுவே யாரையும் சந்தேகிக்கவும் வைக்கும்.

கைப்பொருளை காப்பது போல் காதலை காக்கின்ற குழந்தை மனம் காதல் மனம்.

எந்த நேரத்தில் யார் வந்து பறித்துக் கொண்டு போவார்களோ என்று பயக்கும் மனம் காதல் மனம்.

இந்தக் காதலுக்கு ஆட்பட்ட பவித்ராவுக்கும் இந்த

உணர்வுகள் இருந்தன. அவள் மனம் சஞ்சலப்பட்டது. தான் அருகிலிருக்கும்போது மாலினியின் மீது தினகரனின் பார்வை தாவுவதை அவள் அறிந்துதான் இருந்தாள்.

அதனையும் தாண்டி அவன் வேண்டும் என்று அவள் மனம் அடம்பிடித்தது. அதனாலேயே மாலினியைப் பார்த்துக் கையாட்டிய தினகரனின் செய்கையை அவள் மன்னித்தாள்.

ஆனால், மாலினி?

அவள் மனம் தினகரனின் பக்கம் திரும்பி விட்டால் பவித்ராவின் கதி என்ன ஆவது?

''அவள்தான் பெரிய அத்தானைக் காதலிக்கிறாளே பவித்ரா..'' தன்னையறியாமல் முணுமுணுத்தாள்.

அதைக் கேட்ட ஸ்வேதாவின் முகம் கொடூரமாக மாறியது.

'ஆமாடி.. நான் பூதம் போல இந்த இரண்டு பேரையும் காவல் காத்து வைப்பேன்.. நீங்க இரண்டு பேரும் கந்தர்வ கன்னிகள் போல வந்து லவட்டிக்கிட்டுப் போவீங்க. அதை நான் வாயில் விரலை வைத்துக் கொண்டு வேடிக்கை பார்பேன். நினைப்புத்தாண்டி உங்களுக்கு...'

''பெரிய அத்தானை அவள் காதலிக்கிறாள்.. ஆனால், உன் தினா அத்தான் அவளை நோட்டம் விடுகிறானே..''

''மாலினி அதை அலெவ் பண்ணணுமே..''

''பண்ணாமலா இவன் பார்வை போகும் திசையெல்லாம் வந்து நின்று தொலைக்கிறாள்?''

''இருக்காது ஸ்வேதா.. அவள் யதார்த்தமாக வந்து நின்றிருப்பாள். நாம் யாரையும் சட்டென்று சந்தேகப்பட்டு விடக் கூடாது...''



இந்த இடத்தில்தான் பவித்ரா தவறு செய்துவிட்டாள். இருக்காது என்று நிச்சயமாய் நம்புகிறவள்.. அதை வாய்விட்டுச் சொல்ல மாட்டாள்.

அந்த நிகழ்விலேயே அவள் மனதில் சஞ்சலம் இருப்பதை ஸ்வேதாவிற்கு உணர்த்தி விட்டாள்.

அடுத்து.. 'நாம்..' என்று தன்னையுமறியாமல் ஸ்வேதாவுடன் தன்னைக் கூட்டுச் சேர்த்துக் கொண்டாள்.

இந்த இரண்டையுமே பவித்ரா உணரவில்லை. ஆனால், சாகஸமே வடிவான ஸ்வதோ உணர்ந்து கொண்டாள்.

'தூண்டிலில் மீன் மாட்டிவிட்டது..' அவள் புன்னகைத்துச் கொண்டாள்.

''அவ யதார்த்தமாக வந்து நின்னாளோ... இல்லை பதார்த்தமாக வந்து நின்னாளோ.. அது இனி உன் கவலை. நான் சொல்ல வந்ததை சொல்லிட்டேன். இனி உன் காதலைக் காப்பாற்றிக் கொள்வது உன் பாடு...''

''பெரியத்தானுக்கு இதெல்லாம் பிடிக்காதே..''

பவித்ரா யோசனையுடன் கூறினாள். பிடி கிடைத்து விட்ட சந்தோஷத்தில் ஸ்வேதா மனதிற்குள் மகிழ்ந்துபோய்..

'எங்கேயோ போயிட்ட ஸ்வேதா நீ...' என்று தன்னைத் தானே பாராட்டிக் கொண்டாள்.

அது எப்படி.. அவள் கோட்டைப் போட்டு வைத்தால் அது தானாக ரோடாக மாறுகிறது?

''பிடிக்காதுதான்.. நம்ம பெரியத்தானுக்கு இப்படிப்பட்ட கீழ்த்தரமான வேலைகள் பிடிக்காதுதான்.. ஆனால், இதை அவருக்கு யார் சொல்லுவா?''

''அதெப்படி.. அவருக்குத் தெரியாமல் போகும்?''

''எப்படித் தெரியும் ஸ்வேதா.. உன்னையும் என்னையும் பக்கத்தில் வைத்துக் கொண்டு தினகரன், மாலினியை சைட் அடிப்பான்.. அவனோட பெரியண்ணனை பக்கத்தில் வைத்துக்கிட்டு அடிப்பானா?''

'அதுதானே.. அது முடியாதே..' நகத்தைக் கடிக்க ஆரம்பித்தாள் பவித்ரா.

''இதுக்கே நகத்தைச் சாப்பிட்டுவிட்டால் எப்படி? மிச்சத்தையும் கேட்டு விரலைச் சாப்பிடப் போகிற...''

''நீ சொல்லு...''

எப்போதுமே ஸ்வேதா பேசுவதைக் காதில் போட்டுக் கொள்ளாத பவித்ரா அன்று அவள் வாய்மொழியைக் கேட்கத் துடிப்பதிலிருந்து அவள் தன் வழிக்கு வந்து விட்டதை உணர்ந்து கொண்டாள் ஸ்வேதா.

''அதே போல்தான் மாலினியும்.. அவரைப் பார்த்தால் உருகிவழிவாள். அவர் அந்தப் பக்கம் போனதும்.. இந்தப் பக்கம் தினகரனுக்கு கண்ணாலே வலை விசுவாள்..''

''என்ன ஸ்வேதா சொல்கிற?''

*''அவங்க கண்ணால*
*ரகசியம் பேசிக்குவாங்க..*
*அவ இரண்டு பக்கம்*
*காதல் வலை வீசிக்குவா..''*

ஸ்வேதா பாட... பவித்ராவின் முகம் வெளுத்தது. அவள்தான் பாவம் என்ன செய்வாள்.. தினகரன் ஓரிடத்தில் நிலைத்து நிற்காத பிறவியாகப் போய் விட்டான். அவளும் அவனைப் போய் காதலித்து தொலைத்து விட்டாள்.

அவள் கண்களில் நீர் தளும்பியது. அதை திருப்தியுடன் பார்த்தாள் ஸ்வேதா.

''இப்போ எதுக்குடி கண்ணில தண்ணி விடறே.. இது பொதுவா ஹியூமன் நேச்சர்தாண்டி..''



''என்னத்தை நேச்சர்ன்னு சொல்கிற.. எனக்கு பத்திக்கிட்டு வருது..''

''யாராவது நம்மை அழகாயிருக்கிறதாக சொன்னால் நமக்கொரு சந்தோஷம் வருமா.. இல்லையா?''

''வரும்..''

''அதுவேதான் மாலினிகிட்டயும் இருக்கு. அவள் பெரியத்தானைக் காதலிக்கிறதாகச் சொல்லிக்கிறா. அதே சமயம் தினகரன் அவளை ரசிப்பதையும் ரசிக்கிறா. மொத்தத்தில் இரண்டு பேரையும் அவளைச் சுற்ற வைத்துக்கிட்டு இருக்கிற...''

''இது தப்பில்லையா..''

''அவளுக்கு இது தப்பாகத் தெரியாமல் இருக்கலாம்..''

''அதுக்கு தினா அத்தானையே அவள் காதலித்துத் தொலைத்திருக்க வேண்டியதுதானே...''

இதைச் சொல்லும்போதே மனம் வலிப்பதை உணர்ந்தாள் பவித்ரா. அவளது அகத்தின் வலி.. முகத்தில் தெரிய.. ஸ்வேதா உற்சாகமானாள்.

'இதுக்கே உன் முகம் இருட்டடிக்குதே.. இன்னும் இருக்குடி உனக்கு..'

''நீ வேற.. அவள் வந்த முதல் நாளிலேயே அண்ணனுக்கும் தம்பிக்கும் போட்டா போட்டி வந்திருச்சு..''

''எதுக்கு?''

''மாலினியை யார் கொண்டு போய் அவ வேலை செய்கிற மில்லில் விட்டுவிட்டு வருவதுன்னு..''

''என்ன ஸ்வேதா சொல்கிற?''

''இதுக்கே வாயைப் பிளந்தா எப்படி? இன்னும் கதையைக் கேளு..''

பவித்ரா மிரண்ட விழிகளால் ஸ்வேதாவைப் பார்க்க.. அவள் கதையைத் தொடர்ந்தாள்.

''தினகரன் தான்தான் கூப்பிட்டுக் கொண்டு போகனுமுன்னு ஒற்றைக் காலில் நின்று பார்த்தான்..''

''அப்புறம் ஏன் கூப்பிட்டுக் கொண்டு போகலையாம்?''

''உனக்குத்தான் தெரியுமே.. அண்ணன்காரனின் முன்னால தம்பிகாரன் வாயைத் திறக்கவே மாட்டானே..''

''அதுக்காக..''

''உன் பெரியத்தான் தான்தான் கூப்பிட்டுக் கொண்டு போவேன்னு சொல்லிட்டார். தினா வாயை மூடிக்கிட்டு ஒதுங்கிக்கிட்டான்..''

''அதுக்கே ஒதுங்கினவர்.. அண்ணன் காதலிக்கும் பெண்ணை சைட் அடிக்காமலும் ஒதுங்கவேண்டியது தானே?''

'ஆஹா.. இவள் சரியான ரூட்டில் யோசிக்க ஆரம்பித்து விட்டாளே.. இவள் இந்த ரூட்டில் போகவே கூடாதே...'

ஸ்வேதா உஷாரானாள்.

''புரியாமல் பேசாதே பவித்ரா..''

''ஏன் இப்படிச் சொல்கிற?''

''தம்பிக்குன்னு அண்ணன் பார்ப்பார்.. அண்ணனுக்குன்னு தம்பி பார்க்க மாட்டான். இது அந்த மாதிரியான குடும்பம் பவித்ரா..''

''இன்னும் எனக்குப் புரியலையே..''

'டியூப்லைட்..' மனதிற்குள் பவித்ராவை திட்டினாள் ஸ்வேதா.

''அண்ணன் காதலிக்கும் பெண்ணை சைட் அடிக்க தினகரன் தயங்க மாட்டான். அதனால் அவனிடம் பெரிய



அத்தான் மாலினியைக் காதலிக்கும் விஷயத்தை சொல்லுவது வேஸ்ட்..''

சாதுர்யமான ஸ்வேதா.. மாலினி, பிரபாகரனைக் காதலிக்கிறாள் என்று மறந்தும் சொல்லவில்லை. பிரபாகரன்தான் மாலினியைக் காதலிக்கிறான் என்று சொன்னாள். அது பவித்ராவின் மனதில் பதிந்தது.

''நீ அப்படிச் சொல்கிறயா..''

''ஆமாம்.. அதுவே தினகரனை நீ காதலிக்கும் விஷயத்தைச் சொல்லி.. உனக்கும் தினா அத்தானுக்கும் ஊடே மாலினி வருகிறாள்னு நீ பெரியத்தானிடம் சொன்னேன்னு வை...''

''என்ன நடக்கும்?''

பவித்ரா ஆவலுடன் கேட்டாள். ஸ்வேதா ஜாக்கிரதையாக வார்த்தைகளைக் கோத்துச் சொன்னாள்.

''பெரியத்தானுக்கு மாலினியின் மேல் காதல் அதிகம். அவளை யாருக்கு விட்டுத் தர மாட்டார். மாலினிக்கும் தினாவுக்கும் பெரியத்தானிடம் பயம் உண்டு. அவர் இதுக இரண்டையும் கூப்பிட்டு ஒரு சத்தம் போட்டாருன்னு வை.. இரண்டும் அடங்கிடும்..''

''அடங்கிரும்னா.. அது எப்படி?''

'உனக்கு எல்லாத்தையும் புட்டுப்புட்டு வைக்கணும்.. மக்கு.. மக்கு...' ஸ்வேதாவிற்கு எரிச்சல் எரிச்சலாக வந்தது.

இப்படி ஒரு மண்ணாந்தைப் பெண்ணை பெற்று அப்பாவியாய் வளர்த்து வைத்திருக்கும் சிறிய தகப்பனை மனதிற்குள் திட்டித் தீர்த்தாள்.

''தினகரனும் மாலினியை சைட் அடிக்க மாட்டான். மாலினியும் அவன் இருக்கும் திசைப் பக்கமே தலை வைத்துப் படுக்க மாட்டாள்...''

''நிஜமாகவா சொல்ற?''

''எனக்குப் பொய் சொல்லத் தெரியாது..''

''உண்மை சொல்லத் தெரியாதுன்னு சொல்லு.. நான் கேட்டுக்கறேன்.. பொய் சொல்லத் தெரியாதுன்னு நீ சொன்னால் என்னால் நம்ப முடியுமா?''

''இவ்வளவு நேரமும் உணக்கையாய் நான் பேசு வதைக் கேட்டுவிட்டு.. என்கிட்டயே வித்தாரம் பேசறியா? தீட்டின மரத்திலேயே கூர் பார்க்கிற ஆளுடி நீ..''

''இன்னமும் நீ சொல்கிறதை என்னால் நம்ப முடிய வில்லை ஸ்வேதா..''

''நம்பினால் நம்பு.. நம்பாவிட்டால் போ. எனக் கென்ன வந்தது?''

ஸ்வேதா கோபமாக சொல்வது போல சொல்லிவிட்டு விசுக்கென்று எழுந்து உள்ளே சென்றாள்.

அவளுக்கா தெரியாது.. நம்பாதவளாக இருந்தால் பவித்ரா அவ்வளவு தூரத்திற்கு அமர்ந்து கதை கேட்டிருக்க மாட்டாள்.

முதல் நாள் பவித்ராவின் தெளிந்த மனதில் கல்லை விட்டு எறிந்து சலனத்தை உண்டாக்கியவள்.. அன்று சலனப்பட்ட மனதை சகதியாக்கி கலக்கிவிட்டுச் சென்று விட்டாள்.

பவித்ரா நீச்சல்குளத்தைப் பார்த்தபடி யோசனை யுடன் அமர்ந்திருந்தாள். அவளால் ஸ்வேதா சொன்னதை நம்பவும் முடியவில்லை.. நம்பாமல் இருக்கவும் முடிய வில்லை.

''இங்கே என்ன செய்கிற பவி..''

பவித்ரா திரும்பிப் பார்த்தாள். காயத்ரி வெள்ளையான மலர் சிரிப்புடன் அவளுக்கு அருகில் வந்தாள்.



''சும்மா உட்கார்ந்திருக்கிறேன்..''

காயத்ரி அவளருகே அமர்ந்து பேச ஆரம்பித்தாள் மெல்ல மெல்ல பவித்ராவின் மனது வேறு பேச்சுகள் பக்கம் திரும்பியது.

அவளது கலங்கிய மனம் லேசாக சமனப்பட்டது.

## 73

*உனக்காக என் மனது..*
*உறங்காமல் துடிக்கும் நிலைமை..*
*என்னவென்று நான் சொல்ல..?*

''இன்னும் இரண்டு பூரி வைத்துக்க பிரபா.. செந்தா மரை.. ஐயா தட்டைக் கவனி...'' நர்மதா உத்தரவிட்டாள்.

மாலினி, பிரபாகரனின் தட்டைக் கவனிக்க.. பக்கத் திலிருந்த சசிரேகா.. கணவனுக்கும் மற்றவர்களுக்கும் கேட்காத குரலில்..

''நீயென்ன செந்தாமரையா?'' என்று கேட்டாள்.

''முதலில் நீ இதுக்குப் பதிலைச் சொல்லு.. நான் என்ன உன் ஹஸ்பெண்டா?''

''என்னடி இப்படிக் கேட்டு வைக்கிற?''

''பின்னே.. எப்படிக் கேட்கச் சொல்கிற.. உன் ஹஸ்பெண்டைக் கவனிக்கிறதை விட்டுவிட்டு.. என்னை நோட்டம் பார்த்தால் நான் இப்படித்தான் கேட்பேன்..''

அவர்கள் லேசாக சிரித்துக் கொள்ள.. பிரபாகரன்.. மாலினியையே பார்த்தவாறு பூரிகிழங்கை காலி செய்தான்.

அவர்கள் என்ன பேசுகிறார்கள் என்பதை புரிந்து கொண்ட புன்முறுவல் அவன் முகத்தில் தவழ.. மாலினி..

நர்மதாவை ஒரு பார்வை பார்த்துவிட்டு.. தட்டைப் பார்த்துச் சாப்பிடுமாறு அவளுக்குத் தெரியாமல் பிரபாகரனை பார்வையிலேயே அதட்டினாள்.

பிரபாகரன்.. தாயையும் தங்கை... தம்பிகளையும் பார்த்தான். அவர்கள் கவனிக்கவில்லை என்பதை உறுதி படுத்திக் கொண்ட பின்..

'நீ ஊட்டி விடு..' என்று பதிலுக்கு ஜாடை செய்தான்.

'போதுமே...' முகம் சிவக்க.. மாலினி அழகு காட்டினாள்.

இப்போது பிரபாகரனின் முகத்தில் புன்னகை படர்ந்து விரிந்தது. அவன் கண்கள் மின்னின. அவன் காதலுடன் மாலினியைப் பார்த்தபடி கை கழுவ எழுந்தான்.

'காருக்கு வா பேசிக்கறேன்..'

ஒற்றை விரலை உயர்த்தி பயமுறுத்தியபடி அவன் கைகழுவச் சென்றுவிட.. மாலினியும் எழுந்தாள்.

"நினைத்தேன்.." என்று சிரித்தாள் சசிரேகா.

"போடி.." மாலினி பொய் கோபம் போல காட்டிக் கொண்டு போய் விட்டாள்.

மறந்தும் அவள் தினகரன் இருக்கும் திசைப்பக்கம் பார்க்கவேயில்லை.

அதைக் கண்காணிப்பாய் பார்த்துக் கொண்டிருந்த பவித்ராவின் முகம் யோசனைக்கு மாறியது.

'மாலினியின் மேல் தப்பில்லை போல இருக்கே..'

அதே சமயம்.. தினகரனின் கண்கள் மாலினியின் மேல் ஆர்வத்துடன் படிந்து கொண்டிருப்பதையும் அவள் கவனிக்கவே செய்தாள்.



மாலினி கைகழுவ எழுந்தவுடன் தினகரனும் எழுந்து அவள் பின்னாலேயே சென்று விட்டான்.

தினகரனின் மனதில் மாலினியின் மேல் எண்ணமிருப்பது தெள்ளத் தெளிவாக பவித்ராவுக்குப் புரிந்தது.

அவளுக்குப் புரிந்தது மாலினிக்குப் புரியாமல் இருக்குமா?

இதுதான் அவள் மனதில் எழுந்த கேள்வி... மாலினியின் புத்திசாலித்தனத்தை அவள் நன்கு அறிவாள். ஸ்வேதாவிடம் அவள் முகம் கொடுத்துப் பேசுவதில்லை. சசிரேகாவின் கணவனிடம் பாசம் கலந்த மரியாதையைக் காட்டத் தவறுவதில்லை. நர்மதாவிடம் பணிவை அதிகப்படியாகக் காட்ட அவளுக்குத் தெரிந்திருந்தது. காயத்ரியிடம் கனிவையும் நட்பையும் காட்டினாள். பவித்ராவிடம் நட்பு பாராட்டினாள்.

இவ்வளவு ஏன்.. செந்தாமரை அந்த வீட்டு வேலையாள்தான். ஆனால், அவளுக்கு மாலினியிடம் இருக்கும் எதிர்பார்ப்பு என்ன என்பதை அவள் புரிந்து வைத்திருந்தாள். ஒரு ஜோக்கைச் சொல்லி.. அவளை சிரிக்க வைக்க அவள் மறக்கவில்லை.

இப்படிப்பட்டவள்.. தினகரனைக் கணிக்காமல் இருப்பாளா? ஒரு வார்த்தை.. ஒரேயொரு வார்த்தை... பிரபாகரனைத்தான் அவள் காதலிப்பதாக தினகரனிடம் சொல்லிவிட்டால் போதுமே..

அண்ணனின் மேல் பக்தியுடன் இருக்கும் தம்பி.. அண்ணியாகப் போகிறவளை திரும்பிக்கூடப் பார்க்க மாட்டானே.

நேரடியாய் சொல்லாவிட்டாலும் பரவாயில்லை.. மறைமுகமாய் உணர்த்தியிருந்தால்கூடப் போதுமே...

மாலினி.. ஏன் அதைச் செய்யவில்லை?

பவித்ராவிற்கு தலையை வலித்தது. அவள் அரை குறையாய் சாப்பிட்டேன் பேர்வழி என்று பெயர் பண்ணி விட்டு கை கழுவ எழுந்து சென்றாள்.

இத்தனை பேரின் மன உணர்வுகளையும் நாடகம் போல் கவனித்துக் கொண்டிருந்த ஸ்வேதா, தனக்குள் சிரித்துக் கொண்டாள்.

''என்ன ஸ்வேதா.. உனக்கு நீயா சிரிச்சுக்கறே..'' காயத்ரி ஆச்சரியத்துடன் வினவினாள்.

''ஏன் காயத்ரி.. நான் சிரிக்கக் கூடாதா..?''

''ஏன் கூடாது.. நான் அப்படிச் செல்வேனா? உனக்குச் சிரிக்கத் தெரியாதுன்னு இல்ல இத்தனை நாளாய் நான் நினைத்திருந்தேன்?''

''மனிதர்களுக்கும் மற்ற விலங்குகளுக்கும் உள்ள வித்தியாசமே இந்தச் சிரிப்புத்தான். அதுகளுக்குச் சிரிக்கத் தெரியாது. நமக்குச் சிரிக்கத் தெரியும்...''

இதைச் சொல்லிவிட்டு கித்தாய்ப்பாய் காயத்ரியை ஸ்வேதா பார்க்க..

'அது சரி.. நீ மனிதப்பிறவியா?' என்று மனதிற்குள் சொல்லிக் கொண்டாள் காயத்ரி.

மார்த்தாண்டத்தை விட்டு வெளியேறியவுடன் வழக்கம் போல பிரபாகரனின் கார் வேகத்தைக் குறைத்தது.

''என்ன கேபி சார்.. நடந்து போகிறவங்களையாவது ஓவர்டேக் பண்ணணும்கிற உத்தேசமில்லையா?'' மாலினி அவனை வம்புக்கு இழுத்தாள்.

''காலையில் ஏண்டி.. அந்தப் பார்வை பார்த்த?''

''என்னோட ஆளச்சே.. அவர் ஒழுங்காய் சாப்பிடு



கிறாரான்னு ஒரு கவலைதான்.. ஐயா மட்டும் ஏன் அப்படி ஜாடை காட்டினாராம்..''

''அக்கறையிருக்கிறவ ஊட்டி விடவேண்டியது தானே...''

''அம்மா முன்னாடியும் தங்கை முன்னாடியும் வாயைத் திறக்க நீங்க ரெடின்னா... ஊட்டி விட நானும் ரெடிதான்..''

''அந்தத் தைரியம்தானேடி உனக்கு...''

பிரபாகரனின் கார் சாலையோரமாய் நின்றுவிட....

''இது ஒண்ணு இருக்கு உங்ககிட்ட.. காரைக் கிளப் புங்க அத்தான்..'' என்று சிணுங்கினாள் மாலினி.

அவன் காதுகள் செவிடாகி விட்டன. அவள் பேசுவது காதில் விழாதவனைப் போல அவன் தாகத்துடன் அவளை நெருங்கினான்.

''அத்தான்.. இது அநியாயம்..''

''ஏண்டி.. நானென்ன.. அடுத்தவன் காதலியையா கட்டிப் பிடிக்கிறேன்?''

''நேற்று நைட் தோட்டத்திலும் இதே கதைதான்..''

''ஊஹூம்..''

''இன்றைக்கு விடிந்தவுடன் மொட்டை மாடியிலும் இதே கதைதான்...''

''அப்புறம்...''

''இப்போ.. காரிலும் இதே கதைதானா?''

''இது தொடர்கதைடி... இதுக்கு முடிவே கிடையாது...''

பிரபாகரனின் இதழ்கள் ஆவலுடன் அவளது கன்னத் தில் பதிந்து.. பின் அவளது இதழ்களைத் தேடின. அவள் இசைந்து கொடுக்க.. அவன் உடலில் மின்சாரம் பாய்ந்தது.

அவன் அவளை இறுக்கிக் கொண்டான்..

*''சொந்தம் எப்போதும் தொடர்கதைதான்...*
*முடிவே இல்லாதது....*
*எங்கே சென்றாலும் தேடிப் பிடித்து...*
*இணையும் கதை இது...*
*உன்னை என்னோடு சேர்த்த தெய்வம்..*
*எழுதும் புதுக்கதை இது...''*

காரில் பாடல் ஒலித்துக் கொண்டிருந்தது. மாலினி விடுபட விரும்பாமல் பிரபாகரனின் கைகளுக்குள் புதைத் திருந்தாள். அவர்களின் மனமிரண்டும் ஒருமனமாய் அங்கே கலந்து நெகிழ்ந்திருந்தன.

பரபரப்பாக இங்கும்.. அங்கும் ஆள்கள் நடமாடிக் கொண்டிருக்க.. பிரபாகரனின் மில்லிற்குள் மாலினி உதட்டைப் பிதுக்கியபடி யோசித்துக் கொண்டிருந்தாள்.

அவளது உத்தரவை எதிர்பார்த்து.. பெயிண்டர் மாணிக்கம் நின்றுகொண்டிருந்தான்.

''ஆபீஸ் ரூமுக்கு ஆகாய நீலத்தில் பெயிண்ட் அடிங்க..''

''அது பெட்ரூமில் அடிக்கும் நிறமாச்சேம்மா...''

''ஆமாம்.. அது மனதை அமைதிப்படுத்தும் நிறம்.. மாணிக்கம்.. ஒரு நாளின் இருபத்து நாலு மணி நேரத்தில் அதிகமான நேரத்தை நாம் தூங்கிக் கழிக்கிறோம்..''

அதைக் கேட்ட மாணிக்கத்தின் விழிகள் வியப்பில் விரிய.. பிரபாகரனின் முகத்தில் புன்னகை விரிந்தது.

அவன் சுழல் நாற்காலியில் சுழன்றபடி சுவாரஸ்யமாக மாலினியைப் பார்த்தான்.



மாணிக்கத்துடன் பேசிக்கொண்டே மாலினியின் விழிகளும் அவ்வப்போது அவன்மீது படிந்து மீண்டன.

விழுங்கிவிடுவதைப் போன்ற அவனது பார்வை யைக் கண்டு அவள் முகம் சிவந்தது.

''அடுத்து நாம் அதிகமான நேரத்தை ஆபீஸில்தான் கழிக்கிறோம் மாணிக்கம்...''

''நிஜம்தான்ம்மா..''

''அதனால்.. இங்கேயும் மனதை அமைதிப்படுத்தும் நிறத்தைத்தான் அடிக்கணும்..''

''மத்த இடங்களில்?''

''லக்சரிஸ் கோல்டன் கலர்.. அட்டகாசமாய் அசத் தணும்..''

மாணிக்கம் அசத்தினான். ஒவ்வொரு அறையிலும்.. மாலினியின் எண்ணத்திற்கேற்ப வண்ணங்கள் அடிக்கப் பட்டன.

பிரபாகரனின் அலுவலகம் இருந்த கட்டடம்.. மாலினி யின் கற்பனைக்கேற்ப அழகுபடுத்தப்பட்டது..

''வாசலில்.. இந்த இடத்தில் பூச்செடிகள் இருக்க ணும்.. ரிசப்ஷனில் ஃப்ளவர் வாஷ்.. மாடிப்படிகளில் ஏறும் இந்த இடத்தில் பெயிண்டிங்..''

''ரிசப்ஷன் ஹாலில்.. உள்ளே எண்ட்ரி ஆனதுமே கண் ணில் படுகிற மாதிரி ஒரு படம் மாட்டணும்னு சொன்னீங் களே... அதுக்கு நேச்சர் பெயிண்டிங் ஏதாவது வாங்கணு மாம்மா..''

''நோ.. நோ... அங்கே பிரமாண்டமாய்.. நம்ம சாரோட அப்பாவோட படத்தை மாட்டணும்.. கோல்டன் பிரேமில்.. சந்தன மாலையோடு அந்தப் படம் இருக்கணும்..''

சுழல்நாற்காலி அசைவற்று நின்றது. இதை எதிர் பார்த்திராத பிரபாகரன், மாலினியையே பார்த்தான். மாணிக்கம் உதவியாளர்களிடம் எதையோ உத்தரவிடு வதற்காக வெளியே செல்ல.. மாலினி அவனைப் பார்த்து புருவம் உயர்த்தினாள்.

''எப்படிடி.. இது உனக்குத் தோன்றியது...'' பிரபா கரனின் குரல் நெகிழ்ந்திருந்தது.

''என்ன பிரபா இது.. இதுக்குப் போய் எமோஷனல் ஆகுறீங்க...''

''இல்லைடி.. இதை நான் யோசித்திருந்தால் அது இயல்பான ஒன்று. நீ யோசிக்கிறாயே...''

''நான் யோசிக்காமல் எப்படி இருப்பேன் பிரபா.. நீங்க உங்க அப்பாவின் மேலேயும் குடும்பத்தின் மேலயும் எவ்வளவு பாசம் வைத்திருக்கீங்கன்னு எனக்குத் தெரி யாதா.. உங்க அப்பாதான் தொழில் கற்றுக் கொடுத்த குருன்னு அடிக்கடி சொல்வீங்களே... இது குரு வணக்கம் இல்லையா?''

''மாலினி...''

''எத்தனையோ தொழில்களை நீங்க உருவாக்கி இருக்கீங்க... அது அத்தனையையும் திறந்து வைக்க அத்தை வந்திருப்பாங்க... அதேபோல இதையும் திறந்து வைக்க வருவாங்க இல்லையா? அப்போ.. வரவேற்பி லேயே அவங்களை வரவேற்க மாமாவின் படம் இருந்தால்.. அவங்களுக்கு எவ்வளவு சந்தோஷமாயிருக்கும்? நினைத் துப் பாருங்க...''

நினைத்துப் பார்த்தான் பிரபாகரன்.. நர்மதாவின் மன நெகிழ்வை அவனது மனம் அப்போதே உணர்ந்தது.

''இதுக்கு முன்னால்.. என் ஆபீஸ் ரூமில் மட்டும்தான்



அப்பாவின் படம் இருக்கும் மாலினி. வரவேற்பிலேயே அவருடைய படம் இருப்பது இதுதான் முதல் முறை...''

''ஐய்யே.. நீங்க என்ன பச்சைப் புள்ளையா.. மீசை வளர்ந்த ஆண்பிள்ளை.. இப்படி கண்கலங்கலாமா?''

மாலினி அவனது மீசையை முறுக்கிச் சிரித்தாள்.

பிரபாகரன் அவளை இழுத்துக் கொள்ள.. அவனது மடியில் அமர்ந்து அவன் கழுத்தில் கைகளை மாலையாக் கினாள். சுழல்நாற்காலியில் சுழன்று திரும்பிய பிரபாகரன் அறைக்கு முதுகைக் காட்டி.. மாலினியின் கன்னத்தில் முத்தமிட்டான்.

''ஹப்பா.. ஒரு சின்ன சான்ஸ் கிடைத்தால் போதுமே.. உடனே சந்துக்குள்ளே சிந்து பாடிடுவீங்களே..'' மாலினி பொய் கோபத்துடன் விலகிக் கொண்டாள்.

அவர்கள் இருவரும் சேர்ந்து காரில் ஏறிச் செல்வதை பார்த்த மில்லில் வேலை செய்த ஆள்கள்.. அவர்களின் ஜோடிப் பொருத்தத்தை மெச்சி தங்களுக்குள் பேசிக்கொண் டனர்.




*ஊர் கூடிய கூட்டத்திலே..*
*உன்னை மட்டும் தேடும் மனதை...*
*என்னவென்று நான் சொல்ல..?*

வெள்ளை நிறத்தில் சோப்புக் குமிழ்கள் மொத்தமாய் கொட்டுவதைப் போல அருவி கொட்டிக் கொண்டிருந்தது. அருவியிலிருந்து தெறித்து விழுந்த நீர்.. மத்தாப்பூ போல பொரிவதைக் கண்ட மாலினிக்கு குதூகலம் தாங்கவில்லை.

''ஹௌ நைஸ் பிரபா..'' என்று ஆர்ப்பரித்தாள்.

கொட்டுகின்ற நீர்வீழ்ச்சியில் கைகளை நீட்டிக் குதித்துக் கொண்டிருந்த மாலினியைப் பார்த்த பிரபாகர னுக்கு இவளும் ஒரு நீர்வீழ்ச்சிதான் என்று தோன்றியது.

அன்போ.. பாசமோ.. நட்போ.. காதலோ.. அதை முழு மனதாகக் கொட்டுகின்ற நீர்வீழ்ச்சி.

''பிடித்திருக்கா?'' இரு பொருள்பட வினவிக் கண் சிமிட்டினான் பிரபாகரன்.

அவனது கரம்.. அவளது இடுப்பில் பதிந்து அழுந் தியது. அவனது கேள்வி போகும் திக்கை அறிந்த அவள் வெட்கி முகம் சிவந்தாள்.

''பிடிச்சிருக்கு...'' அவன் பாணியிலேயே கிறக்கத் துடன் பதில் சொன்னாள்.

இப்போது அவன் கரம் நகர.. அதை அசையவிடாமல் அவளது கரம் பற்றிக் கொண்டது.

''ஏண்டி?''

''ஏனா... வரவர நீங்க பொல்லாத ஆளா மாறிக்கிட்டு வருகிறீங்க பிரபா..''

''நான் பொல்லாதவன்...''

பிரபாகரன் ராகம் போட்டு பாட... அவன் கையில் நறுக்கென்று கிள்ளினாள் மாலினி.

''ஹிட்லர் பண்ணுகிற அடாவடித்தனம் இருக்கே.. அப்பப்பா..''

''அப்படி என்னடி நான் அடாவடித்தனம் பண்ணி விட்டேன்?''

''தக்கலைக்கு மில்லில் வேலைபார்க்கப் போக



வேண்டியவளை திருத்தரப்பு அருவிக்கு கடத்திக் கொண்டு வந்திருக்கீங்களே... இதை என்னன்னு சொல்கிறது?''

''வேறு என்ன செய்யலாமுன்னு நீயே சொல்லு.. நானும் இரண்டு வாரமாக கெஞ்சிப் பார்க்கிறேன்.. ஞாயிற்றுக்கிழமையன்னிக்கு நீ கால்ஷீட்டே கொடுக்க மாட்டேன்கிற...''

''எப்படிக் கொடுக்க முடியும் பிரபா.. அருவிக்கு வாடின்னு நீங்கபாட்டுக்கு கூப்பிட்டு வைக்கறீங்களே.. அத்தை கேட்டால் என்ன பதிலைச் சொல்வது?''

''அருவிக்கு போகிறோமுன்னு சொல்றது..''

''ஒரு குடும்பத் தலைவர் பேசுகிற பேச்சா இது?''

''ஏன்.. என் பேச்சுக்கென்னவாம்?''

''ஏங்க.. கல்யாண வயதில் ஒன்றுக்கு மூன்று பெண் கள் உங்க வீட்டில் இருக்காங்க.. அவங்க முன்னாலே நாம் ஜோடி போட்டுக்கிட்டு அருவிக்கு கிளம்பினா நல்லாத்தான் இருக்கும்..''

''இரு.. இரு.. நீபாட்டுக்கு மூணு பொண்ணுகன்னு சொல்கிறாயே.. காயத்ரி மட்டும்தானே கல்யாண வயதில் எங்க வீட்டில் இருக்கிறா.. அவளுக்கும் கல்யாணம் நிச்சயம் ஆயிருச்சே..''

பிரபாகரன் சந்தேகம் கேட்க...

''ஐயோ.. கடவுளே..'' என்று தலையில் கை வைத்துக் கொண்டாள் மாலினி.

''இப்ப ஏண்டி.. கடவுளை டிஸ்டர்ப் பண்றே..''

''நீங்க பேசற லட்சணத்துக்கு அவரை எப்படி நிம்மதி யாய் இருக்க விடறது..?''

''சரி... சரி.. அவரை விட்டு விடு.. என்கிட்டேயே என்னன்னு சொல்லு...''

''ஸ்வேதாவும் பவித்ராவும் உங்க கண்ணில் படலையா?''

''அவங்க எங்க வீட்டுப் பெண்களா?''

''இப்ப உங்க வீட்டில் இருக்கிற பெண்கள். பிரபா.. நீங்க எல்லோருக்கும் முன்னுதாரணமா இருக்கிறவர். நீங்க என்னை மட்டும் தனியே கூப்பிட்டுக் கொண்டு ஆபீஸிற்கு வரலாம்.. அவுட்டிங் போகக் கூடாது.''

பிரபாகரனுக்கும் அது புரிந்திருந்தது. அதனால்தான் வேலை நாளில் வேலைக்கு மட்டம் போட வைத்துவிட்டு மாலினியைக் கடத்திக் கொண்டு திருத்தரப்பு அருவிக்கு வந்து விட்டான்.

''இப்ப புரியுதா.. ஏன் உன்னை ஆபீஸுக்கு பர்மிஷன் போட வைச்சேன்னு...'' அவன் விளம்பரப் பாணியில் வினவ...

''பேஷ்.. பேஷ். ரொம்ப நன்னா புரியுது..'' என்று அதே விளம்பரப் பாணியிலேயே பதில் கொடுத்துச் சிரித்தாள் மாலினி.

அருவித் தண்ணீரில் கை நனைத்துப் பார்த்துக் கொண்டிருந்தவளை பற்றி இழுத்துக் கொண்டு அருவிக்குள் புகுந்தான் பிரபாகரன்.

'சோ'வென்று கொட்டிய அருவி நீரில் எதிர்பாராமல் நனைந்தவள்.. அதை விட்டு விலக மனமின்றி ரசித்து நின்றாள்.

ஒருவழியாக.. சொட்டச்சொட்ட நனைந்த உடலுடன் அருவியை விட்டு வெளியே வந்தவள்.. ஈரச்சேலை கால் தடுக்க குனிந்து அதைப் பிழிந்து விட்டுக் கொண்டாள்.

''ரொம்ப மோசம் பிரபா நீங்க...''



முகத்தில் வழிந்த நீரைத் துடைத்துக் கொண்டே அவள் குற்றம் சாட்டி சிணுங்க...

''அப்படி என்னடி செய்துவிட்டேன்?'' என்று அவன் கண்களை சிமிட்டினான்.

''இது அதைவிட மோசம்...''

அவனது மார்பில் கை வைத்து அவனைப் பொய் கோபத்துடன் தள்ளிவிட.. அவன் பலமாக சிரித்தவாறு அவளது கையை விலகவிடாமல் இறுக்கிப் பற்றி அதில் முத்தமிட்டான்.

''இதுக்கொண்ணும் குறைச்சலில்லை.. ஹிட்லர்னு உங்களுக்கு தப்பாக பெயர் வைத்து விட்டேன்..''

''சரியான பெயர் என்னவோ...''

''ம்ம்.. காதல் மன்னன்.. இப்போ டிரஸ் இப்படி சொட்டச் சொட்ட நனைஞ்சு போச்சே.. இதை எப்படிக் காய வைக்கிறதாம்?''

''நீ கிராமப் பக்கத்தில் பார்த்ததே இல்லையா?''

''என்னத்தைப் பார்க்க?''

''இப்படி சேலையோட அவங்க குளிச்சிட்டா.. எப்படி அதை காய வைப்பாங்கன்னு..''

''நான் பிறந்து வளர்ந்தது சென்னையில் ஹிட்லர் சார்.. கிராமத்தை நான் எங்கே கண்டேன்?''

''அவங்க.. முந்தானைச் சேலையை மட்டும் சுற்றிக் கிட்டு.. இன்னொரு முனையை மரத்தில் கட்டிவிட்டு தள்ளி நின்னுக்குவாங்க.. அடிக்கிற காத்தில சேலை ஐந்தே நிமிஷத்தில் காய்ந்து விடும்..''

மாலினி நின்று பிரபாகரனை முறைத்தாள். அவன் அவளது கோபத்தின் காரணம் புரியாமல் புருவம் உயர்த்தி னான்.

''அடப்பாவி மனுஷா.. இதையெல்லாம்கூட நீங்க பார்ப்பீங்களா.. உங்களைப் போய் நான் காதலிச்சேனே...''

''நீ அப்படி வருகிறயா.. நான் எங்கேடி இதையெல்லாம் பார்த்தேன்.. எல்லாம் சினிமாவில் பார்த்ததை வைத்து அளந்துவிட்டதுதான்...''

''கப்ஸா விடாதீங்க..''

''நிஜமாகவே நான் ஏகபத்தினி விரதன் மாலினி. இந்தப் பிறவியில் உன்னை நினைத்த மனம்.. வேறொருத்தியை நினைக்காது. உன்னைத் தொட்ட இந்தக் கை வேறொருத்தியைத் தொடாது...''

பிரபாகரனின் குரலில் தெரிந்த உண்மையும் தீவிரமும் மாலினியின் உள்ளத்தைத் தொட்டன.

இப்படிப்பட்ட ஒருவனின் காதல் கிடைத்ததில் அவள் மனதிற்குள் சந்தோஷப்பட்டுக் கொண்டாள்.

வெளியே விளையாட்டாக தலைசாய்த்து சிரித்துக் கொண்டு..

''ஸோ.. நீங்க ராமன்னு சொல்கிறீங்க...'' என்றாள்.

''ஆமாம்..''

''அப்போ என்னைக் காட்டுக்கு அனுப்பிருவீங்கன்னு சொல்லுங்க...''

அவள் விளையாட்டாய் பேசியதற்கு அவனிடமிருந்து பதில் வராமல் போகவும்... அவள் அவனை நிமிர்ந்து பார்த்தாள்.

அவன் விழிகளில் அதிர்வு தெரிந்தது.

''பிரபா...'' அவன் தோளைத் தொட்டாள்.

''ஏண்டி அப்படிச் சொன்னே?'' அவன் அவளை வெறித்தான்.



''நான் விளையாட்டுக்கு சொன்னேன் பிரபா..'' அவள் திகைத்தாள்.

''விளையாட்டுக்குக்கூட அப்படிச் சொல்லலாமாடி..''

''இல்லை பிரபா...''

''பேசாதே... என்னை யாருன்னு நினைச்சே.. நீ வாழ்ந்தால் என் கூட வாழ்ந்தாகணும். இல்லை.. காட்டுக்குப் போகணுமுன்னு சொன்னா.. என் கூடத்தான் போய் ஆகணும்.. தனியாய் உன்னை விடுவேன்னு நினச்சயா...''

''ஐ ஆம் ஸாரி.. ஐ ஆம் ஸோ ஸாரி..''

மாலினி திரும்பத் திரும்ப தன்னிலை விளக்கம் சொன்னாள்.. மன்னிப்புக் கேட்டாள். அவன் ஒரு வழியாக சமாதானமான பின்னால்தான் அவளுக்கு உயிரே வந்தது.

'இரும்பு மனிதன்' எனப் பெயர் பெற்றவனின் காதலில் இருந்த தீவிரம் கண்டு அவள் அயர்ந்து போயிருந்தாள்.

'இந்த அளவுக்கு இவன் என்னைக் காதலிக்கிறானா?' அவள் மனம் பொங்கியது.

அவனது காதலுக்குப் பதிலாக அவளது மனதிலும் காதல் ததும்பியது..

அவள் விழிகளில் அதை உணர்ந்தவன் கண்சிமிட்டி சிரித்தான்.

''என்னடி.. பார்வையிலேயே சாப்பிட்டுவிடுவது போல இருக்கே..''

அவன் இயல்பு நிலைக்கு திரும்பிவிட்டான் என்ற நிம்மதியுடன் அவள் அவன் பாணியிலேயே பதிலுக்கு கண் சிமிட்டி..

''ஆமாம்.. அதுக்கு இப்ப என்னாங்கறீங்க..'' என்று கேட்டாள்.

''ஏய்ய்.. கிளப்பிவிடாதே.. காயத்ரியின் கல்யாணம் ஊடே இருக்கு...''

''எதுக்கு ஊடே இருக்கு?''

''உன் கழுத்தில் நான் தாலிகட்டுவதற்கு ஊடே இருக்கு..''

''ம்ஹூம்.. நீங்கள் தாலி கட்டும் வரை பொறுத்திருக்கிற ஆள்போல எனக்குத் தெரியவில்லை...''

''பின்னே...''

''இந்தக் காட்டுக்குள்ளேயே.. காந்தர்வ மணம் புரிந்து ஃபர்ஸ்ட் நைட் நடத்திவிடுகிற ஆள் போலத் தெரிகிறது...''

''பரவாயில்லையே.. நல்ல ஐடியா கொடுத்திருக்கிறாயே.. ம்ம்.. அக்கம் பக்கமும் யாருமில்லை.. கிட்டே வா..''

பிரபாகரன் அவளை இழுத்து அணைத்து அவளது இதழ்களைத் தேட.. அவள் முகம் விலக்கிச் சிரித்தாள்.

''ஹை... ஆசை.. தோசை.. அப்பளம்.. வடை...''

''ஏன்.. எனக்கு மட்டும்தான் ஆசையிருக்கா? உனக்கு இல்லையா? உன் மனதில் இருக்கிறதைத்தானே ஜாடையில் சொன்ன? வா.. இப்பவே காந்தர்வ கல்யாணம் பண்ணிக் கொள்வோம்..''

பிரபாகரன்.. அவன் கழுத்திலிருந்த வைர முகப்பு வைத்த சங்கிலியை அவிழ்த்து.. கண்ணிமைக்கும் நேரத்திற்குள் அவள் கழுத்தில் போட்டு விட்டான்.

''அத்தான்.. என்ன இது?'' மாலினி அதிர்ச்சியுடன் கேட்டாள்.



''என்னைப் பொறுத்தவரை இது நான் உன் கழுத்தில் கட்டியிருக்கும் தாலி...''

அவன் பேசியபடியே.. அவளது கையை இழுத்து தனது சுண்டு விரலில் போட்டிருந்த வைரமோதிரத்தை கழட்டி அவள் விரல்களில் போட ஆரம்பித்தான்.

''வைரம்...'' மாலினி விரலை உருவிக்கொள்ள முயன்றாள்.

''ஊஹூம்..'' அவன் கண்டிப்பான குரலில் அதட்டினான்.

''என்ன வேலை செய்கிறீர்கள் அத்தான். காலையிலேயே நான் நினைத்தேன்.. இது என்ன இவர் என்றைக்குமில்லாமல் சுண்டுவிரலில் மோதிரம் போட்டிருக்காரேன்னு..''

''அந்தக் காலத்தில் பணப் பெருமையைக் காட்டிக்க.. ஐந்து விரல்களிலும் மோதிரம் போடுவாங்களாம்..''

''இந்தக் காலத்திலும் அப்படி ஆளுக இருக்காங்க..''

''அதைப் போல என்னையும் நினைத்துக்கிட்டாயா?''

''ஊஹூம்.. என் பிரபாவுக்கு நகை போடும் பழக்கமே கிடையாதுன்னு எனக்குத்தான் தெரியுமே...''

அவள் 'என் பிரபா...' என்று உரிமையாகச் சொன்ன விதத்தில் அவன் கிறங்கிப் போனான்.

75

*சிங்கமாக இருக்கும் உன்னை...*
*என் சிரிப்பினிலே மயக்கும் பொழுதை.....*
*என்னவென்று நான் சொல்ல...?*

அவன்.. அவள் கன்னத்தில் தன் மூக்கை உரசி வாசம் பிடிக்க ஆரம்பிக்க..

''ஊம்.. ஊம்.. ஊஹூம்..'' என்று சிரித்தபடி அவள் விலகி நின்றாள்.

''ஏய்ய்.. கிட்டே வா..''

''இந்தப் பஞ்சாயத்தெல்லாம் அப்புறம்தான்.. முதலில் நம்ம பஞ்சாயத்துக்கு வாங்க..''

''த்ச்சு.. என்ன பேச்சு இது மாலினி.. நமக்குள் என்ன பஞ்சாயத்து?''

''இந்த நகைப் பஞ்சாயத்துதான்.. வேறு என்ன?''

''இதைப் பத்தி என்னடி பஞ்சாயத்து?''

''நான் உங்க கிட்ட நகை வாங்கிக் கொடுங்கன்னு கேட்டேனா?''

''நீ கேட்டால்தான் நான் கொடுக்கணுமா? நீ கேட்டா என் மனதை உன்கிட்ட கொடுத்தேன்?''

மாலினி பேச்சிழந்தாள். எப்போதுமே பேச்சென்று வந்துவிட்டால்.. வெற்றிக்கொடியை நாட்டுகிறவள் அவ ளாகத்தான் இருப்பாள். இன்று அவன் கேட்ட கேள்விக்கு அவளிடம் பதில்லை.

''இருந்தாலும்.. வைர நகைகளை...'' அவள் இழுவை யாக முணுமுணுத்தாள்.

''ஏய்ய்.. என்னடி பேச்சு இது?'' பிரபாகரன் அவள் முகத்தை கைகளில் ஏந்தி விழிகளுக்குள் ஊடுருவிப் பார்த்தான்.

அவன் பார்வையை எதிர்கொள்ள முடியாமல் அவள் திணறிப் போனாள். அவனது பார்வை ஆயிரம் கதைகளைக் கூறியது. அந்தத் தருணத்தை வாழ்வினில் என்றுமே மறக்க முடியாது என்று அவளுக்குத் தோன்றியது.



வானவில்லைப் பார்க்கும் அரிய தருணம்.. மழை பெய்யும் மாலையில்.. மரத்தின் அடியில் நிற்கும்போது.. பூ மரத்தின் கிளைகள் உதிர்க்கும் சாரல் விழும் தருணம்... தவழ்ந்து வந்த குழந்தை கை தொட்டு இழுத்து கன்னம் குழியச் சிரிக்கும் தருணம்.. கோபுரத்தின் மாடத்திலே.. மாலையிளம் நேரத்திலே அடைவதற்காக கூட்டிற்குத் திரும்பும் புறாக்களின் சிறகொலியைக் கேட்கும் தருணம்.. முழு நிலவின் ஒளியினிலே வீட்டின் முற்றத்திலே.. அன்னை அமர்ந்திருக்க அவளைச் சுற்றி அமர்ந்து குடும்பத் தின் நிலவொளியில் நிலாச்சோறு உண்ணும் தருணம்...

வாழ்க்கை அறிமுகப்படுத்துகிற அழகான பல தருணங்களில் இது மிக முக்கியமான தருணம் என்று அவளுக்குத் தோன்றியது.

இந்த நொடியில் உறைந்து.. புதையுண்டு போக அவள் விரும்பினாள். அவளது முகத்தை ஏந்தியிருக்கும் பிரபாகரனின் கரம்.. அவள் முகத்தை விட்டு விலகக் கூடாது.

அவளது விழிகளுக்குள் ஊடுருவும் அவனது பார்வை வேறு திசை நோக்கக்கூடாது.

அப்படியே இருவரும் உறைந்துவிட வேண்டும்.. யுகங்கள் கடந்தாலும் அவர்களின் உறைவு கலையக் கூடாது.

அவளது கண்கள் கலங்கி அதிலிருந்து ஒரு கண்ணீர்த் துளி சிதறி அவன் கை மீது விழுந்தது.

''ம்ப்ச்.. எதுக்கு இந்தக் கலக்கம்?'' அவன் அன்புடன் கடிந்து கொண்டான்.

''என் பிரபா...'' அவள் விசும்பினாள்.

''உன் பிரபாதான்.. அதில் உனக்கு சந்தேகமே வேண்டாம்..'' அவன் அவளை மார்பில் சாய்த்துக் கொண்டான்.

''எனக்கு பயமாக இருக்கு பிரபா..''

''எதுக்கு?''

'தெரியலை...''

''இதைச் சொல்வது என் மாலினியா.. பைத்தியம்..''

''வைரமெல்லாம் வேண்டாம் பிரபா...''

''ம்ச்ச.. இதை வைரம்ங்கிறதுக்காக வேண்டாம் என்கிறாயே. இது நான் கொடுத்தது என்று ஏன் உனக்கு நினைவில்லாமல் போனது மாலினி?''

''பிரபா...''

''எனக்கு உன் மனது தெரியும்டி.. நான் கொடுத்த ரோஜாவை தலையில் வைத்திருந்தாயே.. சாயங்காலம் அது வாடிப் போயிருக்குமே.. தூக்கி எறிந்துவிட்டாயா?''

''அது உங்களுக்கு எப்படித் தெரியும்?''

''எதுக்கு இப்ப முட்டைக்கண்ணை விரித்து இப்படிப் பார்க்கிற.. அதை என்ன செய்தாய்ன்னு நான் சொல்லவா..?''

''சொல்லுங்களேன் பார்ப்போம்..''

''எனது யூகம் சரின்னா.. அது உன் லாக்கரில் இருக்கும். நகைப்பெட்டியில் பத்திரமாக இருக்கும்..''

'கண்டுபிடித்து விட்டானே...' முகம் சிவந்துபோனாள் மாலினி.

''அது.. நீங்க.. முதன்முதலாக கொடுத்த பூ பிரபா..''

''அது இந்த வைரத்தைவிட உனக்கு உசத்தி தானே?''



''ம்ம்ம்..''

''அப்படியிருக்க.. இதுக்கு எதுக்கு அலட்டிக்கிற மாலினி.. இந்த சங்கிலியை நான் ஏன் உனக்குக் கொடுத்தேன் தெரியுமா?''

மாலினியின் முகவாயைப் பிடித்து பிரபாகரன் வினவ.. மாலினி தெரியாது என்ற பாவனையில் தலையை அசைத்தாள்.

''இந்த வைர முகப்பு டாலரைப் பார்த்தால் சாதாரண பூ டிசைன் போலதான் இருக்கும்.. பட்.. இது லாக்கெட்.. இதோ பாரேன்..''

பிரபாகரன் அவள் கழுத்தில் தங்க சங்கிலியின் வை'ர முகப்பு டாலரை திறந்து காண்பித்தான். அந்த லாக்கெட்டின் இரு பக்கங்களிலும் பிரபாகரனும் மாலினியும் சிரித்தார்கள்.

''நம்ம போட்டோ பிரபா..'' மாலினி குதூகலித்தாள்.

''யெஸ்.. இது எப்பவும் உன் கழுத்திலேயே இருக்கணும். அதில் நீயும் நானும் சேர்ந்திருக்கிற போட்டோக்கள் இருக்கணும்.. இப்ப சொல்லு.. இதுக்கு வைர முகப்பைச் செய்யாமல் நான் எப்படி இருப்பேன்?''

மாலினியால் இதற்கு பதில் சொல்ல முடியவில்லை. மௌனித்தாள்.

''மோதிரத்திலும் இதே கதைதான். வெளியே பார்த்தால் இது டிசைன் மோதிரம்.. இதை நீ உற்றுப் பார்த்தால் உண்மை விளங்கும்..''

மாலினி உற்றுப் பார்த்தாள்.. அவளது விரலில் இருந்த மோதிரத்தில் இரண்டு கொடிகள் இலைகளுடன் பின்னிப் பிணைந்திருப்பதைப் போன்ற தோற்றம் காணப்பட்டது. சாதாரணமாகப் பார்த்தால்.. இலைகளுடன் இருந்த

கொடியின் தோற்றம் பிரபாகரன் சொன்னதை மனதில் வைத்துக் கொண்டு உற்றுப் பார்க்கும்போது.. 'பி' என்ற ஆங்கில எழுத்தும்.. 'எம்' என்ற ஆங்கில எழுத்தும் பின்னிப் பிணைந்திருப்பது புலப்பட்டது.

''வாவ்..'' என்றாள் மாலினி. அவளது கண்கள் மின்னின.

''ஃபென்டாஸ்டிக் அத்தான்.. நான் இதை எதிர்பார்க்க வில்லை..''

''இப்பத் தெரியுதா.. நான் ஏன் இதை வைரத்தில் செய்தேன்னு...'' பிரபாகரன் மீண்டும் விளம்பரப் பாணி யில் கேட்டுவிட்டு சிரித்தான்.

அவர்கள் மரத்தின் மீது சாய்ந்து நின்று பேசிக் கொண் டிருந்தார்கள். ஊடே தன்னிச்சையாய் புடவையைச் சரி செய்து கொண்ட மாலினி.. உடைகள் உலர்ந்துவிட்டதைக் கவனித்தாள்.

''டிரஸ் காய்ந்திருச்சே...'' மாலினி உற்சாகமாக சொன்னாள்.

''ச்சே.. இப்படி என்னைக் காற்று கவிழ்த்திருச்சே..'' பிரபாகரன் ஏமாற்ற முகத்துடன் கூறவும்..

''ஏன்.. என்ன ஆச்சு?'' என்று மாலினி புரியாமல் விழித்தாள்.

''நீ புடவையைக் காய வைக்கும் அழகை என்னால் பார்க்க முடியாமல் போச்சே.. இந்தக் காற்று எனக்கெதிரா சதி வேலை பண்ணுது பார்த்தியா?''

''ஆஹா.. உங்க மனசில் இப்படியெல்லாம் எண்ண மிருக்கா? உங்களைப் போய் கண்ணியவான்னு இந்த ஊரே சொல்லுது..''



''காதலிகிட்ட போய் யாராவது கண்ணியம் காட்டு வானா?''

பிரபாகரன் கைகள் அத்துமீற.. அவற்றைத் தட்டி விட்டு மாலினி உதட்டைச் சுளித்துச் சிரித்தாள்.

அவளது சிரிப்பில் மனதைப் பறிகொடுத்தவனாக பிரபாகரன்...

''இந்தப் புன்னகை என்ன விலை?'' என்று பாடி னான்.

''உன் இதயம் சொன்ன விலை..'' மாலினி அருவி நீர் ஓடிய நீரோடையில் வரிசையாக இருந்த கற்களின் மீது தாவி ஓடினாள்.

''ஏய்.. மாலினி.. மெல்ல விழுந்துவிடப் போகிறாய்..'' பிரபாகரன் அவள் பின்னால் ஓடினான்.

காரை அடைந்து காரில் ஏறி அமர்ந்ததும்..

''பசிக்குது அத்தான்..'' என்றாள் அவள் குழந்தை யாக.

''நினைத்தேன்.. இப்படி ஒரு சாப்பாட்டுராமியைக் கூப்பிட்டுக் கொண்டு வருகிறோமேன்னுதான் முன்னேற் பாடாக ஹோட்டலில் இருந்து வெரைட்டியாக வாங்கிக் கொண்டு வந்தேன்.. முழுங்கு..''

பிரபாகரன்.. பேப்பர் கப்பில் இருந்த ஃப்ரைடு ரைஸ் ஸில் ஸ்பூன் போட்டு அவளிடம் கொடுத்தான்.

''எப்படி அத்தான்?'' அவள் ஆச்சரியத்துடன் கேட்ட படி வாங்கி ஆவலாக சாப்பிட ஆரம்பித்தாள்.

''எப்படின்னு என்கிட்ட கேட்டால் எப்படி? இதை நான் செய்யவில்லை. ஹோட்டலில் வாங்கினேன்..''

''ஐய்யே.. நான் அதைச் சொல்லவில்லை..''

''வேறு எதைச் சொன்ன?''

''இப்படி வாங்கிட்டு வரணும்னு உங்களுக்குத் தோணி யிருக்கே.. அதைச் சொன்னேன்..''

''அதுக்கு முதலிலேயே விளக்கம் சொல்லிட்டேன்.. நீ கொட்டிக்க..''

அவளுக்கு அவன் மேல் காதல் அதிகமாகிவிட.. அவள் அவனையே பார்த்தவாறு சாப்பிட்டுக் கொண்டிருந் தாள்.

''என்னடி.. ஒரு மார்க்கமா பார்க்கிற?'' அவன் தான் சாப்பிட்டுக் கொண்டிருந்த ஃப்ரைடு ரைஸ்ஸை அவளுக் கும் ஊட்ட.. அவள் வாய்திறந்து வாங்கிக் கொண்டாள்.

''என்னமோ தெரியலை அத்தான்.. எனக்கு உங்க மேல காதல் காதலா வருது...''

அவள் சொல்லிய விதத்தில் அவன் கண்கள் மின் னின. சாப்பிட்டுக் கொண்டிருந்த ஃப்ரைடு ரைஸ்ஸை அப்படியே வைத்துவிட்டு அவளருகே நெருங்கிவிட்டான்.

''அத்தான்.. வேண்டாம்... சொன்னா கேளுங்க..''

சொல்லிப் பார்த்த மாலினி.. சொல்லால் பிரயோசன மில்லையென்று அவன் கைகளில் புகுந்து கொண்டாள்.

அவளைத் தழுவிக்கொண்ட பிரபாகரனின் இரும்புப் பிடியில் மாலினியின் எலும்புகள் கலகலக்க அவள் இன்ப வலியை உணர்ந்தாள்.

அருவியிலிருந்து திரும்பும்போது.. அவர்களுக்கு இடையே பேச்சுக்களற்ற ஆழ்ந்த மௌனம் நிலவியது.

அது ஒருவரையொருவர் இணைக்கும் மௌனம்.. அவர்களின் உள்ளங்கள் மட்டும் பேசும் மௌனம்..

மாலினி தன் கையிலிருந்த மோதிரத்தையே சிந்தனை யுடன் பார்த்துக் கொண்டிருந்தாள்.



''ஏன்.. அதை அப்படிப் பார்க்கிற?''

''இல்லை.. துஷ்யந்தன்கூட சகுந்தலைக்கு இப்படித் தான் மோதிரம் போட்டான்..''

''மாலினி...''

பிரபாகரன் போட்ட அதட்டலில் மாலினியின் உடல் குலுங்கிவிட்டது.. காரை நிறுத்திவிட்டு.. அவள் பக்கம் திருப்பி பார்த்த பிரபாகரனின் கண்கள் தீக்கங்குகளாக ஜொலித்தன.

''எதுக்கு எதை இணைகூட்டுகிற?''

''இல்லை பிரபா.. அது வந்து?''

''பேசாதே.. நானும் அப்போதிலிருந்து பார்க்கிறேன்.. உனக்கு காட்டுக்குச் சீதையை அனுப்பிய ராமனும் கையிலே மோதிரத்தை மாட்டிவிட்டு சகுந்தலையை மறந்த துஷ்யந்தனும்தான் நினைப்புக்கு வருகிறாங்க. உனக்கு நினைத்துப் பார்க்க வேறு நல்ல கேரக்டர்களே கிடைக் கலியா..''

''ஏன் அத்தான்.. ராமனும் துஷ்யந்தனும் நல்ல கேரக்டர்கள் இல்லையா?''

''அவங்க நல்ல கேரக்டர்கள்தான்.. ஆனால்.. உன் மனசுதான் அலைபாய்கிற மனசா இருக்கே...''

''அத்தான்...''

அதுவரை போட்டுக் கொண்டிருந்த வேஷம் கலைந் தவளாக மாலினி பொங்கி அழுதாள். பிரபாகரனின் முகம் மாறியது. அவளை அருகில் இழுத்துக் கொண்டான்.

''பயமாய் இருக்கு அத்தான்.. நம் காதல் ஜெயிக்கு மான்னு பயமாய் இருக்கு...''

அவள் வெகுநேரம் அழுது கொண்டேயிருந்தாள்.




*பொத்தி வைத்து உன் நினைவை...*
*பொக்கிஷமாக காக்கும் மனதை*
*என்னவென்று நான் சொல்ல..?*

''ராமனைப் போலவும் துஷ்யந்தனைப் போலவும் சிறந்த காதலன் வேறு யாரும் நம் இதிகாசங்களில் இல்லை மாலினி... ராமன், சீதையைப் பார்த்த முதல் பார்வையை கம்பர்..

அண்ணலும் நோக்கினான்...

அவளும் நோக்கினாள்ன்னு வர்ணித்திருப்பார். அந்தக் காலத்தில் சைட் அடிப்பதை முதன்முதலில் ஆரம்பித்து வைத்தவன் ராமன்தான்..''

பிரபாகரன் பேசிய விதத்தில் மாலினியின் இதழ்களில் லேசாக புன்னகை மலர்ந்தது.

''நம்ம துஷ்யந்தனை எடுத்துக்கயேன்...''

ஏதோ பக்கத்து வீட்டுக்காரனைச் சொல்வதைப் போல மாலினியின் பாணியிலேயே பிரபாகரன் சொல்ல ஆரம்பித்தான்.

''அவனும் ராமனைப் போல சகுந்தலையைக் கண்டதும் காதல் கொண்டவன்தான். என்ன ஒண்ணு, ராமன் மிதவாத காதல்வாதி... துஷ்யந்தன் தீவிரவாத காதல்வாதி...''

மாலினியின் சிரிப்பு இன்னும் கொஞ்சம் விரிந்தது.

''சைட் அடித்த ராமன்.. சீதையைத் தேடிப் போகாமல் முறைப்படி அவளைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளும் வழியைத் தேடி சுயம்வர மண்டபத்துக்குப் போனார்.. சீதையைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள என்ன வழின்னு



பார்த்தார். நம்ம பாட்டிக்கு பாட்டி காலத்தில் கிராமப் பக்கம் ரெண்டு மூணு வழக்கம் இருக்குமாம்.. அது உனக்குத் தெரியுமோ என்னவோ..''

''சந்தேகமே வேண்டாம்.. தெரியாது..''

''அதுதானே... நீதான் மழைக்குக்கூட கிராமத்துப் பக்கம் ஒதுங்காத ஆளாச்சே...''

''என் பெருமை இருக்கட்டும். நீங்க சீதையின் பெருமைக்கு வாங்க...''

''கிராமத்துப் பக்கம்.. பெரிய பாறாங்கல்லைக் கட்டி அதைத் தூக்குகிறவனைத்தான் கட்டிக்குவேன்னு என் பாட்டிக்கு பாட்டி காலத்தில் சொல்வாங்களாம். இல்லைன்னா... அடங்காத காளையை அடக்குகிறவனைத்தான் கல்யாணம் பண்ணிப்பேன்னு அடம்பிடிப்பாங்களாம். அதைப் போல ஜனக மகாராஜாவும்.. யாராலும் அசைக்க முடியாத வில் ஒண்ணை வைத்துக்கிட்டு இந்த வில்லை வளைத்து நாணேற்றுகிறவனுக்குத்தான் என் பெண்ணைக் கொடுப்பேன் அடம்பிடிச்சுக்கிட்டு இருந்தாராம்..''

''இந்தக் கதை எனக்குத் தெரியாது பாருங்க.. நீங்க எனக்கு கதை சொல்ல வந்துட்டீங்க..''

''நீதான் இதிகாச சுந்தரியாச்சே.. உனக்கு கதை சொல்ல வரவில்லை.. ராமனின் கேரக்டரைச் சொல்ல வந்தேன்..''

'இரண்டும் ஒண்ணுதானே...''

''இல்லை.. இரண்டுமே வேறு வேறு. நீ ராமனையும் துஷ்யந்தனையும் பார்க்கும் கோணம் வேறு. நான் சொல்லும் கோணம் வேறு...''

மாலினி அவன் என்ன சொல்ல வருகிறான் என்ற எதிர்பார்ப்புடன் அவன் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

''ராமன் போனான்.. வில்லை எடுத்தான்.. அதை கம்பர்

*எடுத்தது கண்டனர்...*
*இற்றது கேட்டனர்ன்னு*

அழகாக சொல்லியிருக்கிறார். நொடிப்பொழுதில் வில்லை உடைத்து சீதைக்கு வுட்பியாகி விட்டான்...''

மாலினியின் முகத்தில் இருந்த பயம் அகன்று அவள் மெல்லச் சிரித்தாள்.

''அதுவே நம்ம துஷ்யந்தன் என்ன பண்ணினான்... இந்த சுயம்வரத்தில் எல்லாம் அவனுக்கு ஆர்வமில்லை. டகார்ன்னு கையில் இருந்த மோதிரத்தைக் கழட்டி அவள் விரலில் போட்டு விட்டான். நீதாண்டி என் பெண்டாட்டின்னு உடனே முதல் பகலை கொண்டாடி விட்டான்..''

''முதல் பகலா?''

''காட்டுக்குள்ளே வேட்டையாட வந்தவன் ராத்திரியிலா வருவான்.. அவன் சகுந்தலையை பகல் நேரத்தில் தான் காட்டில் பார்த்தான். உடனே கொண்டாடினால் அது முதலிரவாகவா இருக்கும்.. முதல் பகல்தானே?''

''உங்க புத்தி இருக்கிறதே...''

பிரபாகரனைச் செல்லமாக கடிந்துகொண்டே முகம் சிவந்தாள் மாலினி. அவளது முகச்சிகப்பை ரசித்தபடி பேச்சைத் தொடர்ந்தான் பிரபாகரன்.

''ராமன் அப்படிச் செய்யவில்லை.. சைட் அடித்த பெண்ணை முறைப்படி பெண் கேட்டு.. அப்பா அம்மா முன்னால் வைத்து தாலிகட்டி பெண்டாட்டியாக்கிக் கொண்டான். துஷ்யந்தன் யாருக்கும் தெரியாமல் காந்தர்வக் கல்யாணம்னு சொல்லி.. சகுந்தலையும் காட்டுக்குள் முதல் பகலையும் ஹனிமூனையும் கொண்டாடிவிட்டு சமர்த்தாய் நாட்டுக்கு திரும்பிவிட்டான்..''



''திரும்பியவன் சகுந்தலையை மறந்து போனானே...''

''அது துர்வாச முனிவரின் சாபத்தினால்தானே மாலினி.. மறந்துதானே போனான்? அவனுக்கு துரோகம் நினைக்கவில்லையே.. அவன் அந்தக் காலத்திலேயே அம்னிஷியாவினால் பாதிக்கப்பட்டவன்.. இந்த கஜினி படத்தில் நம்ம சூர்யா நடித்திருக்கும் நோயாளி கேரக்டர் போல மறதியினால் பாதிக்கப்பட்டவன். அவன் தெரிந்தே தப்பு செய்தானா.. சொல்லு.. கேட்டுக்கறேன்..''

''அது இல்லைதான்..''

''நீயே சொல்லு... அந்தக் காலத்தில் மகாராஜாவின் பட்டத்து ராணியாக அரியணை ஏறணும்னா.. அந்தப் பெண் ராஜ வம்சத்தில் பிறந்திருக்க வேண்டும். சிக்கலில்லாத குடும்பப் பின்னணி இருக்க வேண்டும். சகுந்தலைக்கு இது இரண்டுமே இல்லை...''

''அட.. நிஜம்தான்.. இதை எப்படி நான் யோசிக்காமல் போனேன்?''

''நீதான் இதைத் தவிர எல்லாத்தையும் யோசித்து விட்டாயே.. ஆமாம் இப்ப 'அட'ன்னு சொன்னாயே.. யாரைச் சொன்ன... என்னையா?''

''போங்கத்தான்!''

''எங்கே போகச் சொல்கிற... இந்த அருவிக்கரை காட்டுக்கா?''

''ப்ளீஸ், பிரபா...''

''ம்ஹூம்... நீ எந்த நேரம் அத்தான்னு கொஞ்சுவாய்.. எந்த நேரம் பிரபான்னு கெஞ்சுவாய்ன்னு எனக்குப் பிடிபட மாட்டேங்குது. என்னவோ செய்.. நான் கதையை கன்டினியூ பண்றேன்.. சகுந்தலைக்கு அப்பா விசுவாமித்திரர்.. அம்மா மேனகை... இரண்டு பேருமே பிறந்த குழந்தையை

அம்போன்னு விட்டுவிட்டு அவங்கவுங்க வழியில் போயிட்டாங்க..''

''ஆமாமில்ல...''

''இப்ப சொல்லு... குழந்தை பிறக்கும் வரை குடும்பம் நடத்திவிட்டு குழந்தை பிறந்ததும்... தவம் செய்யப் போகிறேன்னு விசுவாமித்திரர் எங்கோ போயிட்டார்.. தேவலோகத்தில் டான்ஸ் ஆடப் போகணுமுன்னு மேனகையும் எங்கோ போயிடுச்சு. கடைசியில் மாட்டிக்கிட்டது துர்வாசர்தான்.. அவரும் 'பிடி சாபம்' கேஸு... இப்படிப் பட்ட ஃபேமிலி பேக்ரவுண்டு இருக்கிற பெண்ணை... நினைவு திரும்பியதும் துஷ்யந்தன் தேடிப் போய் மனைவியாக்கிக் கொண்டானா இல்லையா.. அவள் வயிற்றில் இருந்த குழந்தையை தன் வாரிசாக ஏற்றுக்கொண்டானா இல்லையா?''

''அந்தக் குழந்தைதான் பரதன்.. அதனால்தான் நம்ம இந்தியா பாரத நாடுன்னு ஆச்சு..''

''சின்ன வயதில் படித்த பாடத்தை ஒப்பிக்கிறாயாக்கும். போகுது போ. இப்ப என் கேள்விக்குப் பதிலைச் சொல்லு. துஷ்யந்தன் துரோகியா?''

''இல்லை...''

''அவன் காதலித்த பெண்ணை கைவிட்டானா?''

''இல்லை...''

''அப்புறம் எதுக்கு அவனைப் பத்தி சொல்லி பயப் படுகிற?''

மாலினி பேசாமல் இருந்தாள். பிரபாகரன்.. அவள் யோசிப்பதை புரிந்துகொண்டவனாக ராமனின் கதைக்கு தாவினான்..

''ராமன், சீதையைக் காட்டுக்கு அனுப்பினான்தான்..



அவனுடைய அப்பாவுக்கு அறுபதாயிரம் பெண்டாட்டிகளாம்..''

''நீங்கள் கண்டீங்க..''

''இதுக்கு மட்டும் உடனே பதில் பேசிருவியே.. மூணு பெண்டாட்டிகள்ங்கிறதாவது கன்ஃபர்ம்தானே.. இல்லை.. அதையும் இல்லைன்னு சொல்லுவியா..''

''எனக்கு அதெல்லாம் தெரியாது. ஊருக்குள்ள அறுபதாயிரம் பெண்டாட்டி கட்டியவன்.. ஒருத்தி மீது கூடச் சந்தேகப்படவில்லை. இந்த ராமன் ஒரே ஒருத்தியைக் கட்டிக்கிட்டு அவளைப் படுத்திய பாடு இருக்கிறதே.. அப்பப்பா...''

''அவன் மட்டும் நிம்மதியாக இருந்தானாடி.. அவன் செய்த யாகத்துக்கு பெண்டாட்டி கூடத்தான் உட்காரணும்னு சொல்லிட்டாங்க. அவன் என்ன... இன்னொரு பெண்டாட்டியா கட்டினான்.. சீதையைப் போல தங்கத்தால் சிலை பக்கத்தில் வைத்துக் கொண்டான்டி..''

''அவளைத்தான் உயிரோட இருக்கும்போதே சிலையாக்கி விட்டானே...''

''அவன் ஏகபத்தினி விரதன் மாலினி...''

''சீதை மட்டும் என்ன... அசோக வனத்தில் அவள் பட்ட சித்ரவதைகள் எத்தனை.. ராவணனை ஏறெடுத்தும் பார்த்தாளா?''

''சீதை பெற்ற பிள்ளைகளை... பட்டத்து இளவரசர்களாக ராமர் ஏற்றுக்கொள்ளவில்லையா?''

''அதுக்காக சீதை.. பூமியில் புதையுண்டு போக வேண்டியிருந்தது. அதை மறந்துட்டீங்களா..?''

''சீதை போன துக்கத்தில்.. ராமனும் சரயு நதியால் மூழ்கி நீருக்குள் புதையுண்டு தன்னைத்தானே சாகடித்துக் கொண்டான். அதையும் நீ மறந்துபோனாயா?''

''பிரபா..''

''ராமன், சீதையை சந்தேகித்திருந்தால் அவள் நினைவிலேயே வாழ்ந்து அவள் உயிரை விட்டவுடன் தானும் அதைப் போலவே உயிரை விட்டிருக்க மாட்டான். அவன் சீதையை உயிருக்குயிராய் காதலித்தாண்டி அவன் மிகச் சிறந்த காதலன்...''

மில்லின் முன்னால் இறங்கிக் கொண்டபோது.. மாலினியின் முகம் தெளிவாக இருந்தது. அவள் குனிந்து பிரபாகரனைப் பார்த்து புன்னகைத்தாள்.

''தேங்க்ஸ்...''

''எதுக்குடி?''

''எல்லாத்துக்கும்..''

அவள் சட்டென்று திரும்பி மில்லிற்குள் சென்று மறைந்துவிட்டாள். பிரபாகரனின் காதுகளில் வெகுநேரம் அந்த வார்த்தை ஒலித்துக் கொண்டேயிருந்தது.

'எல்லாவற்றிற்கும் நன்றி சொல்கிறாளா?' அவன் தனக்குள் சிரித்துக் கொண்டான்.

அவன் மனம்.. மாலினியுடன் தனித்திருந்த பொழுதுகளை நினைத்துப் பார்த்தது.

'எல்லாத்துக்கும்' என்று அவள் சொன்ன சொல்லுக்கு புதுப்புது அர்த்தங்களைக் கண்டுபிடித்து மகிழ்ந்தது.

அவனுக்கு அப்போதே மில்லிற்குள் போய் மாலினியின் கைபிடித்து அழைத்துக் கொண்டு வந்துவிட வேண்டும் போல இருந்தது.

'என்ன கேபி.. எங்க மில்லுக்குள் வந்து.. எங்க இன்ஜினியரின் கையைப் பிடித்து இருக்கறீங்க...'

'இவள் என் பெண்டாட்டி தங்கப்பன்...'



சொல்லிவிட்டால்தான் என்ன என்று தோன்றியது அவனுக்கு.

இவள் என் மனைவி... என்னில் பாதி.. இல்லை யில்லை.. இவளே நான்.. நானே இவள். என்னில் முழுமையாக கலந்து விட்டவள்.. இவளை விட்டுத் தனித்திருக்க என்னால் முடியாது. இப்போதே என்னுடன் கூப்பிட்டுக் கொண்டு போகிறேன்..

பிரபாகரன் செல்போனை எடுத்தான். மறுமுனையில் மாலினி எடுத்தவுடன்..

''வா...'' என்றான்..

''அத்தான்...'' அவள் திகைத்தாள்.

''வந்துவிடு...''

''என்ன இது?''

''ம்ச்சு.. வாடின்னா..''

''என்னதான் ஆச்சு...''

''எனக்கு நீ வேண்டும்...''

''ஆரம்பிச்சாச்சா... இவ்வளவு நேரமும் உங்களுடன் தானே ஊர் சுற்றிக்கிட்டு இருந்தேன். இப்பவாவது வேலையைப் பார்க்க வேண்டாமா?''

''உனக்கெதுக்கு வேலை?''

''உங்க பக்கத்தில் இருக்கத்தான்..''

''விளையாடுகிறயா?''

''ஊஹூம்.. நம்ம நிலைமையை நினைப்பூட்டுகிறேன். நான் என்ன ஸ்வேதாவா.. காரணமில்லாமல் உங்கள் வீட்டில் நான் தங்க முடியுமா.. வேலைக்குப் போகிறேன்னுதானே உங்க வீட்டுக்கு தங்க வந்தேன். நான் வேலை பார்க்கணு முன்னுதானே எங்க வீட்டிலிருந்து உங்க ஊருக்கு அனுப்பி

வைச்சாங்க.. சென்னையிலிருந்து மார்த்தாண்டத்திற்கு எதுக்காக வந்தேனோ.. அதையும் நான் பார்க்கணுமில் லையா?''

''நீ என் வீட்டு மகாராணிடி...''

'''இப்போதைக்கு.. உங்க காதலி மட்டும்தான். ஊரறிய நீங்க என் கழுத்தில் தாலியைக் கட்டின பின்னால் தான். நான் உங்க வீட்டு மகாராணியாக முடியும்...''

''அதுவரைக்கும் பொறுத்திருக்க என்னால முடியாது.''

''பொறுத்திருக்கணும்... நீங்க.. கோட்டையூர் ஜமீன் தாரர். உங்க அப்பா... அம்மாவின் மூத்த மகன். கருணா.. தினா.. காயத்ரிக்கு மூத்த அண்ணன். தி கிரேட் கேபி.. இரும்பு மனிதன்.. நீங்க போய் இப்படித் தடுமாறலாமா?''



## 77

*இமைப்பொழுதும் விலக முடியாமல்...*
*உன்னுடனே இருக்கும் மனதை...*
*என்னவென்று நான் சொல்ல...?*

மாலினி குழந்தைக்குச் சொல்வதைப் போல இதமாகச் சொன்னாள். அவன் ஒருவழியாக சமாதானமாகி போனை வைத்ததும் செல்போனைப் பார்த்துக் கொண்டே அசைவற்று அமர்ந்திருந்தாள்.

'என்ன மாதிரியான காதல் இது...' அவள் உடல் சிலிர்த்தது.

அவனது காதலின் வீச்சைக் கண்டு அவள் ஸ்தம்பித் தாள். அசுர வேகத்தில்.. ஆக்டோபஸ் போல அவளைச் சுற்றி வளைத்த அவனது காதலின் வேகத்தில் அவளுக்கு மூச்சுத் திணறியது. அவனது இரும்பு மனதின் உறுதியைப் போல அவனது காதலும் உறுதியுடன் அசைக்க முடியாத வலிமை யுடன் அவள் மேல் விழுந்து பாரமாய் அவளை அழுத் தியது.



அவள் அந்த பாரத்தில் கரைந்துபோகத்தான் விரும் பினாள். யாராலும் அசைக்க முடியாத அந்த இரும்பு மனிதனின் மனதை அடைத்துவிட்டதில் கர்வம் கொள்ளத் தான் செய்தாள். மூச்சுத் திணற வைத்த அவனது காதலில் மூழ்கிவிடத்தான் துடித்தாள். அவனது காதலின் வேகத் திற்கு.. அவளது காதலின் வேகம் கொஞ்சம்கூட குறைந்த தல்ல என்று அவனுக்கு காட்டத்தான் நினைத்தாள்.

இது அத்தனையையும் தாண்டிய ஏதோ ஒன்று, அவளது மனதைப் போட்டுப் பிசைந்தது. என்னவென்று சொல்ல இயலாத ஏதோ ஒன்று அவள் முன் நின்று பயமுறுத் தியது.

அது என்னவாக இருக்கும். அவளால் யூகிக்க முடிய வில்லை.

பிரபாகரனின் மிகப் பெரிய எட்டாத உயரமா? அவனது ராஜவம்ச பின்புலமா? அவையிரண்டையும் தாண்டித்தானே சசிரேகாவும் கருணாகரனை அடைந்தாள்?

கருணாகரன், சசிரேகாவின் மேல் கொண்ட காதலுக்கு சளைத்தல்ல பிரபாகரனின் காதல். இன்னும் சொல்லப் போனால் அதைவிட கோடி மடங்கு வலுவான காதலை மாலினியின் மேல் பிரபாகரன் காட்டினான். கொட்டினான்.

இருந்தும் மாலினி மனம் தவித்தாள்.

அது.. அவளது ஆழ்மனம் மட்டுமே அறியும் ரகசியம். அது.. அவளது நம்பிக்கை. அது.. அவள் சிறுவயதி லிருந்தே கண்கூடாக கண்டு வந்த நிகழ்வு. அது.. அவள் மனம்விட்டுச் சிரிக்கும் போதெல்லாம்.. இந்த சிரிப்பு

நிலைக்குமா என்று நெஞ்சில் முள்ளாய் நெஞ்சில் நிரடும் கேள்வி. அது.. அவள் யார் மீதும் பிரியம் வைக்கப் பயப் படும் அச்சம்.

சிறுவயதில் மாலினி ஆசைப்பட்ட பொம்மையை ஜானகிராமன் உடனே வாங்கிக் கொடுத்துவிட்டார்.. இரவும்.. பகலும் அந்த பொம்மையைப் பிரியாமல் பக்கத் தில் வைத்தக் கொண்டே மாலினி உண்டாள். உறங்கினாள். விளையாடினாள்.

ஒரு நாள் அவள் வீட்டிற்கு ஜானகிராமனின் தங்கை குடும்பத்தினர் விருந்தினராக வந்திருந்தார்கள். அவருடைய அத்தையின் மகள் மாலினி பொம்மையை ஆர்வமாகப் பார்த்தாள். அவர்கள் ஒரு வார காலம் மாலினியின் வீட்டில் தங்கியிருந்தார்கள். அவர்கள் ஊருக்குக் கிளம்பிய அதிகாலையில் பொம்மை.. அவளது கையணைப்பில் இல்லை. அவளுடைய அத்தையின் மகள் அதைக் கவர்ந்து சென்றிருந்தாள்.

'எனக்குப் பிடித்திருக்கிறது.. இந்தப் பொம்மையை எனக்குத் தந்துவிடு' என்று ஒரு வார்த்தை அவள் வாய் திறந்து மாலினியிடம் கேட்கவில்லை.

கேட்காமலே களவாடிச் சென்றுவிட்டாள். களவு கொடுத்த மாலினியின் குழந்தை உள்ளம் அந்த அதிர்ச்சி யிலிருந்து மீள வெகு நாள்களாயின.

அன்றிலிருந்து மாலினி பொம்மையின் மீது ஆசை வைப்பதை நிறுத்திவிட்டாள்.

அவள் பள்ளிக்குச் செல்ல ஆரம்பித்தபோது... ஈஸ்வரி என்ற சிறுமி அவளுக்கு நெருக்கமான தோழியாக இருந் தாள். இருவரும் தின்பண்டங்களை பகிர்ந்து உண்பார்கள். பக்கத்து பக்கத்து பெஞ்சுகளில் அமர்ந்து கொள்வார்கள். சேர்ந்தே பாடம் படிப்பார்கள்.



மாலினி, ஈஸ்வரியை மிகவும் நேசித்தாள். ஒரு நாள் அந்த ஈஸ்வரி அழுதுகொண்டே பள்ளிக்கு வந்தாள்.

''ஏண்டி அழுகறே..'' மாலினி பரபரத்தாள்.

''எங்க அப்பாவுக்கு வெளிநாட்டிலே வேலை கிடைச் சிருக்காம். நாங்க குடும்பத்தோட அவர்கூடப் போகிறோம் மாலினி..''

''அப்போ.. நாளையில இருந்து நீ இந்த ஸ்கூலுக்கு வரமாட்டாயா?''

''வரமாட்டேன்.. டி.ஸி. வாங்கத்தான் இப்ப வந்திருக் கேன்.

அன்று பார்த்த ஈஸ்வரியை மீண்டும் மாலினி சந்திக் கவே இல்லை. ஆழமாய் பழகிய நட்பு.. ஒரு நாள் காலை யில் அவளை விட்டுப் பிரிந்து சென்றதை அவளது பிஞ்சு மனம் மறக்க வெகு நாள்கள் ஆகின.

அதற்குப் பின்னால்.. யாருடனும் ஆழ்ந்த தோழமை யுடன் பழக.. பயப்பட ஆரம்பித்தாள் மாலினி.

'இந்த ஃப்ரெண்ட்ஷிப் எத்தனை நாள் நிலைக்குமோ?'

அவள் ஆசையாக வாங்கிய சுடிதார் கடையிலிருந்து வீட்டுக்கு வரும் வழியில் காணாமல் போனது. அவள் ஆர்வமாக டிஸைன் செய்து அணிந்த தங்க அட்டிகை... போட்ட முதல் நாளிலேயே அறுந்து விழுந்தது. அவள் பார்த்துப் பார்த்து வளர்த்த ரோஜாச் செடியை மாடு தின்று விட்டது.. என்று அவளது கனவுகள் சிதிலப்பட்ட கதைகள் ஏராளம் அவளிடம் உண்டு..

இன்று பிராபகரனின் மேல் அவள் காதல் கொண் டிருக்கிறாள். அவனது ஆண்மை பொங்கும் கம்பீரமான தோற்றத்தில் மனம் மயங்கியிருக்கிறாள். அவனது தொடு கையை விரும்பி அவனுடன் கலக்கத் துடித்துக் கொண்

டிருக்கிறாள். அவனது பேச்சில்.. சிரிப்பில்.. கோபத்தில்.. வசீகரத்தில் காதல கொண்டிருக்கிறாள்.

'இது எத்தனை நாளுக்கு நிலைக்கும்?'

இதுதான் அவள் மனதை இப்போது ஆட்டிப் படைத்துக் கொண்டிருந்த கேள்வி.

குழந்தையாக இருந்தபோது பொம்மையின் மீது வைத்த பாசத்தைவிட அதிகமான பாசத்தை பிரபாகரனின் மீது அவள் வைத்திருந்தாள். சிறுமியாக இருந்தபோது பள்ளித் தோழியிடம் காட்டிய நட்பைவிட அதிகமான நட்பை பிரபாகரனிடம் காட்டினாள். அவள் ஆசையாய் வாங்கிய அணிமணிகளைவிட அதிகமான ஆசையை அவன் மேல் வைத்திருந்தாள். இவ்வளவு ஏன்.. அவளைப் பெற்றவர்களைவிடவும் கூடப் பிறந்தவனைவிடவும் அதிகமாக பிரபாகரனை நேசித்தாள்.

மொத்தத்தில் மாலினி, பிரபாகரனை தன் உயிருக்கு மேலாக காதலித்தாள். அவன் மேல் உயிரையே வைத்து இருந்தாள்.

அவள் அன்பும்... ஆசையும் வைத்த மற்ற இழப்புக் களுக்குப் பின்னாலும்... அவளால் அவற்றை மறந்து வாழ முடிந்தது. பிரபாகரனின் காதலை இழந்துவிட்டால் அப்படி வாழ முடியுமா என்ற கேள்வி மட்டும்தான் அவள் நெஞ்சில் நின்றது.

'செத்துவிடுவேன்..'

மாலினி வேதனையுடன் மனதிற்குள் சொல்லிக் கொண்டாள்.

'அவனது காதல் இல்லையென்றால் செத்துவிடு வேன்.. பிரபாகரன் இல்லாமல் மாலினி இல்லை...'

''என்ன மாலினி... யார்கிட்ட பேசிக்கிட்டு இருக் கீங்க... காற்றுக்கிட்டயா?''



ரமேஷின் கேள்வியில் தூக்கிவாரிப் போட்டு தன் உணர்வுக்கு மீண்டாள் மாலினி.

அலுவலக வேலையை மறந்து.. மனது யோசனைக் குள் மூழ்கிவிட்டதை நினைத்து அவளுக்குள் வெட்கம் எழுந்தது.

''சும்மா.. ஒரு குருட்டு யோசனை...'' முணுமுணுத்த படி தலைகவிழ்ந்து கொண்டாள்.

''எதைப் பற்றி.... அருவியைப் பற்றியா?'' அவன் சிரித்தான்.

மாலினி சட்டென்று அவனை நிமிர்ந்து வியப்புடன் பார்த்தாள்.

''உங்களுக்கு எப்படித் தெரியும்..?''

''காலையில் அஃபிஸியலா.. நான் வெளியே போக வேண்டியிருந்தது. வொர்க்கை முடித்துவிட்டு திருத்தரப்பு அருவி வழியாகத்தான் ஜீப்பில் வந்தேன்..''

''கடவுளே... உங்க கூட வேறு யாரும் இருந்தாங் களா?''

''ஏ.ஈ இருந்தார்.. அப்புறம் டிரைவர்..''

''அவங்களும் பார்த்தார்களா?''

''ஏன்.. பார்த்தால் என்ன?''

ரமேஷ் புரியாமல் கேட்டான். மாலினி பதில் சொல்லவில்லை. ரமேஷ், மாலினியின் எதிரே அமர்ந்து... அவள் முகம் பார்த்தான்.

''யூஸீ மாலினி... கேபி சாருக்கு இன்னொரு பெயர் உண்டு..''

''தெரியும்.. இரும்பு மனிதர்..''

''தெரிந்துமா பயப்படுகிறீங்க.. அவர் ஒன்றை

நினைத்துவிட்டால் கடைசிவரை அதிலிருந்து மாறவே மாட்டார்..''

'மாறாமல் இருக்க வேண்டும்..' மாலினியின் மனம் பயந்தது.

''அவரின் காதல் கிடைக்க நீங்க கொடுத்து வைத்திருக்க வேண்டும்..''

ரமேஷின் குரலில் தென்பட்ட பொறாமையை உணர்ந்தவளாக.. மாலினி வாய்விட்டுச் சிரித்தாள்.

''ரமேஷ்... நீங்க என்ன பிரபாகரனைக் காதலிக் கிறீங்களா?''

''பெண்ணாகப் பிறந்திருந்தால் கட்டாயம் அவரைக் காதலித்திருப்பேன். அவருடைய ஹீரோ இமேஜின் மேல் எனக்கு அந்த அளவுக்கு வெறிபிடித்த ஆராதனை உண்டு..''

ரமேஷின் கண்கள் மின்னின. மாலினி இன்னும் அதிகமாக சிரித்தாள்.

''நல்லவேளை.. நான் பிழைத்தேன்..''

மாலினியின் முகத்தையே பரிவுடன் பார்த்துக் கொண் டிருந்த ரமேஷின் முகம் கனிந்தது.

''நீங்க கொடுத்து வைத்தவங்க. கேபி சாரின் பெயரைச் சொல்லி கூப்பிடுகிற அளவுக்கு அவர்மேல் உங்களுக்கு உரிமையிருக்கு. அவரும் கொடுத்து வைத்தவர் தான். உங்களைப் போல ஒரு பெண் அவரை உயிருக் குயிராய் காதலிக்கும் அதிர்ஷ்டம் அவருக்குக் கிடைத் திருக்கு. நீங்க இரண்டு பேரும் பொருத்தமான ஜோடி மாலினி. வாழ்த்துகள்...''

மாலினிக்கு அந்த மாத குடும்ப நாவலில்.. ஆசிரியர் அறையில் அதன் ஆசிரியர் ஜி. அசோகன் எழுதியிருந்த வார்த்தைகள் நினைவுக்கு வந்தன.



'வாழ்த்துகளே பலம். முகம் தெரியாத ஒருவரின் வாழ்த்து உற்சாகப்படுத்தும். முகம் தெரியாத மனிதரை நமது வாழ்த்து உற்சாகப்படுத்தும். மனிதரை ஒருவரை ஒருவர் மனமார வாழ்த்துங்கள்...'

அசோகனின் சொற்கள்தான் எத்தனை உண்மை யானவை என்று நினைத்துக் கொண்டாள் மாலினி.

அவளுக்கு ரமேஷின் வாழ்த்து மனபலத்தைக் கொடுத்து அது நேரம் வரை அவள் மனதை அரித்த கவலை மறைந்துபோக... அவள் வெள்ளையாக சிரித்தாள்.

''தேங்க்ஸ் ரமேஷ்..''

அதன் பின்னால் வேலையில் ஈடுபட அவளுக்குச் சிரமமாக இல்லை.

மாலையின் வீடு திரும்பும்போது.. ரமேஷின் நினை வில் பொங்கிச் சிரித்தாள்.

கண்களில் காதல் வழிய.. பிரபாகரன்.

''என்னடி?'' என்று வினவினான்.

''ரமேஷை நினைத்துக் கொண்டேன்.. சிரிப்பு வந்தது..''

''அடிவாங்கப் போகிறாய்... என் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு அவனின் நினைவா?''

''பொறாமை... ம்ஹூம்.. ஆக்சுவலாய் எனக்குத்தான் ரமேஷின் மேல் பொறாமை வர வேண்டும். ஆனால்.. ரமேஷ் என் மேல் பொறாமைப்படுகிறார்..''

''எதற்காம்..''

''ரமேஷ் மட்டும் பெண்ணாகப் பிறந்திருந்தால் உங்களைத்தான் காதலித்திருப்பாராம்...''

இப்போது மாலினியின் சிரிப்பு பிரபாகரனையும் தொற்றிக் கொண்டது.

''போடி.. வாயாடி..''

மாலினி நகர்ந்து பிரபாகரனின் தோள் மீது சாய்ந்து அவனது கையை வளைத்துப் பிடித்து கண்மூடிக் கொண்டாள்.

## 78

*உன் தோள் சாயும் அந்நேரம்...*
*புலியாளும் என் மனதை...*
*என்னவென்று நான் சொல்ல..?*

பூஜையறையில் கண்மூடி அமர்ந்திருந்தாள் நர்மதா.. அங்கே போன மாலினி சந்தடி செய்யாமல் கைகுவித்து வணங்கிவிட்டு திரும்பப் போனாள்.

''மாலினி..'' நர்மதா விழி திறக்காமலே அழைத்தாள்.

''அத்தை..'' மாலினி ஆச்சரியப்பட்டுப் போனாள்.

''ஏன் அவசரமாய் போகிறாய்.. உட்கார்..''

நர்மதாவின் எதிரே அமர்ந்த வண்ணம்...

''நான் வந்திருக்கிறேன்னு எப்படித் தெரிந்தது அத்தை.. நீங்க தியானத்தில் இருந்தீங்களே..''

''உள்ளுணர்வு சொல்லியது..''

நர்மதா விழி திறந்து புன்னகைத்தாள். கற்பூர ஆரத்தி காட்டிய வண்ணம்..

''எப்படியிருக்கும்மா வேலையெல்லாம்?'' என்று வினவினாள். இத்தனை நாளாக இல்லாமல் இன்றைக்கு ஏன் இப்படிக் கேட்கிறாள் என்று மாலினியின் மனம் சஞ்சலப்பட்டது.



''எப்போதும் போல இருக்கு அத்தை...''

''நேற்று திருத்தரப்பு அருவிப் பக்கம் உன்னைப் பார்த்ததாக யாரோ ஒருத்தங்க சொன்னாங்க.. நீ வேலைக்குத் தானே போனாய்?''

''அத்தை...''

மாலினிக்கு பேச முடியவில்லை. நர்மதா புன்னகை மாறாமல் அவளிடம் கற்பூர ஜோதியைக் காட்ட.. தொட்டுக் கண்ணில் ஒற்றிக்கொண்டாள்.

பூஜையறையை விட்டு நர்மதா வெளியே வந்தாள். மாலினி அவளைப் பின்தொடர்ந்தாள். தனது அறைக்குள் சென்ற நர்மதா.. அறைவாசலில் தேங்கி நின்றுவிட்ட மாலினியைத் திரும்பிப் பார்த்து புருவம் உயர்த்தினாள்.

''ஏன் நின்றுவிட்ட மாலினி.. உள்ள வா...''

என்றாவது ஒரு நாள் நர்மதாவுக்கு பதில் சொல்ல நேரும் என்று மாலினிக்கு நன்றாகத் தெரியும்தான். ஆனால், அந்த ஒரு நாள் இவ்வளவு சீக்கிரமாக வரும் என்று அவள் எதிர்பார்த்திருக்கவில்லை. அத்துடன் இந்த நாளை பிரபாகரன் இல்லாமல் தனியாக எதிர்கொள்ள நேரிடும் என்றும் அவள் நினைத்துப் பார்த்ததில்லை.

அவள் கைவிரல்கள் நடுங்கியதைப் பார்த்தவாறே சோபாவில் அமர்ந்த நர்மதா.. மாலினிக்கு எதிரேயிருந்த சோபாவைக் காட்டினாள்.

மாலினி தயக்கத்துடன் அமர்ந்து கொண்டாள்.

நர்மதாவின் விழிகள் கூர்மையுடன் அவள்மேல் படிந்தன.

''இதை நான் பிரபாவிடம்தான் கேட்டிருக்கணும்.. அதுதான் நியாயம். ஆனால், நான் அவனிடம் கேட்கவில்லை. உன்னிடம் கேட்கிறேன் ஏன் தெரியுமா?''

பிரபாகரனின் பேச்சு வந்ததுமே மாலினி இன்னும் அதிகமாக பதற்றமடைந்தாள். அதனால் பேச நா எழும் பாமல் ஏனென்று கேள்வி கேட்கும் பாவனையில் விழி யுயர்த்தி நர்மதாவைப் பார்த்தாள்.

''அவன் தகப்பனுக்கே பாடம் சொல்லும் சுப்பிர மணியம் சுவாமி.. அவனிடம் கேள்வி கேட்க என்னால் முடியாது..''

'அதுசரி... காதல் சொல்லிய உங்கள் மகனிடம் கேள்வி கேட்காமல் தகப்பன்சாமி கதை சொல்லி தப்பித்து விடுவீங்க.. மாட்டிக்கிட்டது மட்டும் நானா..?'

''அருவிக்கரையில் உங்களை நிறையப் பேர் பார்த் திருக்கிறாங்க...''

'அருவின்னா அப்படித்தான் கூட்டம் இருக்கத்தான் செய்யும்.. வந்தவங்க பார்த்திருப்பாங்க..'

''எனக்கென்னன்னா... இதை மத்தவங்க சொல்லி நான் தெரிஞ்சுக்க வேண்டியதாயிடுச்சேங்கிறதுதான்..''

'வேறு என்ன செய்யணும்னு சொல்கிறீங்க.. காதலிக் கிறவங்க வீட்டில் சொல்லிவிட்டா காதலிக்க முடியும்?'

''பிரபாகரனை விடு..''

'நீங்க அதிலேயே குறியாக இருங்க..'

''நீ என்னிடம் சொல்லியிருக்கணுமா.. இல்லையா?''

'இது நல்ல கதையாய் இருக்கே.. உங்கள் மகனை விட்டுவிடுவீங்க.. என்கிட்ட நியாயம் கேட்பீங்களா.. அப்பா.. பிரபாகரா! உங்க அம்மாகிட்ட இருந்து என்னைக் காப்பாத்த வாங்க சாமி. உங்களுக்கு கோடி புண்ணியமாய் போகும்..'

அவளின் அபயக் குரல் காதில் விழுந்ததைப் போல..



''அம்மா..'' என்று அழைத்தபடி அறைக்குள் வந்தான் பிரபாகரன். வந்தவன் மாலினியைப் பார்த்ததும் ஆச்சரியத் துடன்..

''ஹேய்.. நீ இங்கேயா இருக்க.. உன்னை எங்கே யெல்லாம் தேடுவது?'' என்றும் கேட்டு வைத்தான்.

'இவன் ஒருத்தன் நானிருக்கும் நிலைமை புரியாமல் பேசி வைப்பான்.. வாயை வைத்துக் கொண்டு இவன் சும்மா இருக்கக்கூடாதா..' மாலினி மானசீகமாய் தலையில் கை வைத்தாள்.

''என்ன விஷயம் பிரபா..'' நர்மதா மகனிடம் கேட்டாள்.

'இந்த அத்தை.. மகனிடம் எதைப் பற்றிக் கேட்கி றாங்க. என்னை எதுக்காக தேடினான்னு கேட்கிறாங்களா...' மாலினி நகம் கடித்தாள்.

''இப்ப எதுக்கு நகத்தை எச்சில் பண்ணுகிற?'' பிரபாகரன் அதட்டியபடி மாலினியின் அருகே சோபாவில் அமர்ந்து கொள்ள... மாலினி திகிலடைந்து போனாள்.

'கடவுளே.. நீதானே என்னைக் காப்பாற்றணும்..' அவசரமாய் அவள் எழுந்து கொள்ளப் போக...

''எங்கே போகிற? உட்கார்..'' என்று அவள் கைபிடித்து தடுத்தான் பிரபாகரன்.

மாலினியின் கண்கள் நர்மதாவிடம் இறைஞ்சின. அவள் யோசனையுடன் மகனை பார்த்தாள். மாலினி சங்கடத்துடன் மீண்டும் அமர்ந்தாள்.

''பிரபா...''

''என்னம்மா?''

''நீ ஏதோ கேட்க வந்தாயே...''

''அது ஒன்றுமில்லை.. காயத்ரியின் கல்யாணத் திற்கு மண்டபம் புக் பண்ணியாகி விட்டது. சமையல்

காண்ட்ராக்டரை வரச் சொல்லி இருக்கிறேன்.. அவங்க வந்ததும் மெனுவைக் கேட்டு சரிபார்த்திருங்க..''

''எப்போ வருவார்?''

''சாயங்காலம் ஆறு மணிக்கு...''

பிரபாகரன், மாலினியின் பக்கமாக சரிந்து எதையோ கேட்க... அவள் பயத்துடன் நர்மதாவைப் பார்த்தாள்.

''அவ்வளவுதானே பிரபா..''

நர்மதா மகனைக் கிளப்பிவிடுவதில் மும்முரமாக இருந்தாள்.

''அவ்வளவுதான். அப்புறம்.. மாலினி.. இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறாய்?''

''என் கூடப் பேசிக்கொண்டிருந்தாள்..''

''நானும் ஜாயின் பண்ணிக்கலாமா?''

''பெண்ணின் பேச்சு உனக்கெதற்கு பிரபா?''

''இப்படிச் சொல்லியே ஆண்குலத்தை கழட்டி விடுங்க..''

வேடிக்கையாக பேசிய வண்ணம் பிரபாகரன் எழுந்து கொள்ளப் போகையில்.. மாலினி... அவசரமாக அவனை நிமிர்ந்து பார்த்தாள்.

அவளது பார்வையில் தெரிந்த ஏதோ ஒன்று பிரபாகரனுக்கு எதையோ அறிவுறுத்த... அவன் யோசனையுடன் திரும்பவும் அமர்ந்தான்.

''என்ன பிரபா.. உட்கார்ந்துட்ட?''

''மாலினியிடம் என்னம்மா பேசிக்கிட்டு இருந்தீங்க...''

''நான்தான் சொன்னேனே.. அது பெண்கள் விஷயம்னு..''

''இங்கிருக்கும் இரண்டு பெண்களும் எனக்கு இரண்டு கண்கள். அதனால் என்னிடம் சொல்லலாம் தப்பில்லை..''



''பிரபா...''

''அம்மா.. தாய்க்கு பின் தாரம்.. உங்களுக்குப் பின்னால் எனக்கு மாலினி. இப்போது சொல்லுங்க.. எனக்குத் தெரியக்கூடாத ரகசியப் பேச்சு உங்களுக்குள் உண்டா?''

அந்த நொடியில் பிரபாகரனைக் காதலித்ததற்காக மனதிற்குள் கர்வப்பட்டாள் மாலினி.

'இவன் எனது ஆண்...' அவள் மனம் பெருமிதத்துடன் சொல்லிக் கொண்டது.

எந்தவிதத் தயக்கமும் இல்லாமல் எந்த முன்னுரையும் சொல்லாமல் தெளிவாக போட்டானே ஒரு போடு.

'தாய்க்கு பின் தாரம்.. உங்களுக்குப் பின்னால் எனக்கு மாலினி' என்று.. எத்தனை பேருக்கு இப்படி ஒரு வரம் கிடைக்கும்? யாருக்கு இப்படிப்பட்ட காதலன் கிடைப்பான்.

வளவளவென்ற பேச்சு இல்லை.. புரியவைக்கும் முயற்சி இல்லை.. நான் இவளைக் காதலிக்கிறேன் என்று கூடச் சொல்லவில்லை. 'இவள் என் மனைவி.. அப்புறம்.. வேறு என்ன பேச்சு இருக்கிறது' என்று நிமிர்ந்து நிற்கிறானே.. இவனுடன் ஒரு நாள் வாழ்ந்தால்கூடப் போதுமே.

மாலினி அவனிடம் வாய்விட்டு அவளிருக்கும் நிலைமையைச் சொல்லவில்லை. பார்வையிலேயே அவளது பரிதவிப்பைப் புரிந்து கொண்டு உடனே அவளை அவளிருந்த இக்கட்டான நிலைமையிலிருந்து காப்பாற்றி.. கௌரவமும் கொடுத்து விட்டானே.

*'ஓராயிரம் பார்வையிலே...*
*உன் பார்வையை நானறிவேன்...'*

அவளது பார்வையில் அவன் என்ன கண்டான்? உடனடியான தீர்வை உறுதியுடன் அவனால் எப்படி எடுக்க முடிந்தது?

அதுதான் அவன்! தி கிரேட் பிரபாகரன்! மாலினிக்கு அவன் கைபிடித்து தோள் சாய்ந்து கொள்ள வேண்டும் போல தோன்றியது.

ஒரு பெண் தனது ஆணிடம் முதலில் வேண்டுவது பாதுகாப்பை. அதை அவள் கேட்காமலேயே பிரபாகரன் கொடுத்துவிட்டான். நர்மதாவின் கேள்விக்கணைகள் அவளைத் தாக்காமல் காப்பாற்றிவிட்டான். அவனது தாய் வாய் திறந்து எதையும் கேட்க முடியாமல் செய்துவிட்டான்.

நர்மதாவின் முகம் மாறியது. அவளுக்கு மாலினியைப் பிடிக்கும். அவளது இனிமையான சுபாவம்.. அவளது சுறுசுறுப்பு... அவளின் அழகு.. அவளின் அறிவு என்று மாலினிடம் கொண்டாட வேண்டிய நிறைய அம்சங்கள் இருப்பதை நர்மதா அறிவாள்.

ஆனால்... இதற்காகவெல்லாம் மாலினியை அந்த வீட்டின் மூத்த மருமகளாக ஆக்கிவிட முடியுமா என்றுதான் அவளது உள்ளம் கேள்வி கேட்டது.

மாலினியிடம் பிரபாகரன் காட்டுவது அதிகப்படி ஈடுபாடுதான் என்றால்.. மாலினியிடம் பேசும் விதமாகப் பேசி அவளை ஒதுங்கிக் கொள்ளச் செய்துவிடலாம் என்றுதான் அவள் நினைத்திருந்தாள்.

மாலினியும் ரோஷக்காரப் பெண் என்பதால் அவளது வேலை எளிதாக முடிந்துவிடும் என்பது அவளது கணக்கீடாக இருந்தது.

ஆனால்.. எல்லாவற்றையும் ஒரே வார்த்தையில் பிரபாகரன் முடித்து வைத்துவிடுவான் என்று அவள் எதிர்ப்பார்க்கவில்லை..

எதிர்ப்பாராதது வாழ்க்கை?

நர்மதா எதிர்பாராத வண்ணம் பிரபாகரன் அறைக்குள் வந்தான். அவனை வெளியே அனுப்ப நர்மதா முயற்சி செய்து வெற்றி பெறப் போகும் நேரத்தில் மாலினி இமை



உயர்த்தி ஒரே ஒரு பார்வைதான் பிரபாகரனை பார்த்து வைத்தாள். அவன் அப்படியே அமர்ந்து.. நர்மதாவிடம் அவனது திருமணத்தைப் பற்றிய முடிவை அறிவித்து விட்டான்.

பிரபாகரனின் பேச்சுக்கு எதிர்பேச்சு பேச இனி இயலாது என்ற உணர்வில் நர்மதா பெருமூச்சு விட்டாள். பிரபாகரன் முடிவு எடுத்துவிட்டான். இனி மாலினிதான் இந்த வீட்டுக்கு மூத்த மருமகளாக வந்தாக வேண்டும். அதில் எந்தவித மாற்றமும் வரவே வராது.

பிரபாகரனின் முடிவு என்பது மாற்ற முடியாத ஒன்று.

சசிரேகாவின் உறவுக்காரப் பெண்ணே தனக்கு மூத்த மருமகளாக வருவதில் நர்மதாவுக்கு சில சிக்கல்கள் இருந்தன.

ஏற்கெனவே கருணாகரனுக்கு அந்நியத்தில் பெண் எடுத்திருந்ததால்.. அவளது உறவினர் வட்டாரத்தில் அவள் மேல் மனத்தாங்கலுடன் இருந்தார்கள். இப்போது பிரபாகரனுக்கும் வெளியே பெண் எடுத்தால்.. அவள் ஆளவந்தாரின் கோபத்திற்கு ஆளாக வேண்டி வரும்.

அதைத் தவிர்க்க நர்மதாவினால் முடியாமல் போய் விட்டது.

## 79

*உன்னுடன் பேசும் போது...*
*உன் மனதில் தோன்றும் மகிழ்வை...*
*என்னவென்று நான் சொல்ல...?*

பிரபாகரனின் மனதுக்குப் பிடித்த பெண்தான் அவனுக்கு மனைவியாக வரவேண்டும் என்பதில் நர்மதா தீர்மானமாக இருந்தாள்..

அதேசமயத்தில் அவனது மனதுக்குப் பிடித்த பெண் தன் உறவினர் வட்டாரத்தில்தான் அமைய வேண்டும் என்பதில் அவள் தீவிரமாக இருந்தாள்.

ஸ்வேதாவை மாணிக்கவாசகம் கொண்டு வந்து விட்ட போது அவள் ஆட்சேபிக்காமல் இருந்ததற்கு அதுதான் காரணம்!

ஸ்வேதாவினால் பிரபாகரனின் மனதை ஜெயிக்க முடிந்தால் நல்லதுதானே.. அதற்கு அவளுக்கு ஒரு வாய்ப் பினை ஏற்படுத்திக் கொடுக்க வேண்டும் என்பதுதான் அவள் எண்ணம்.

ஸ்வேதாவினால் அந்தக் காரியம் இயலாமல் போய் விட்டது என்றதுமே அவள் மனம் பவித்ராவை குறிவைத்தது.

அதற்குள் பிரபாகரனின் மனவியாக வருகிறவளுக்கு நர்மதாவிற்கு இணையான ஏன்.. நர்மதாவைவிட அதிக மான அதிகாரம் அந்தக் குடும்பத்தில் வந்து சேரும். இது தவிர்க்க முடியாத ஒன்று.

அப்படிப்பட்ட பதவிக்கு மாலினி வருவதில் நர்மதா வுக்கு உடன்பாடு இல்லை.

அவளுக்கோ கணவன் இல்லை. அவளுடைய மகளுக்கு கடைசிவரை ஜமீன் வீட்டிலிருந்து தாய்வீட்டுச் சீர்வரிசை செல்ல வேண்டும். இல்லாவிட்டால் கோட்டை யூர் ஜமீன் வம்சத்தில் பெண் எடுத்ததற்கான அர்த்தமே காயத்ரியின் கணவனுக்கு இல்லாமல் போய்விடும்.

அந்தச் சீர்வரிசை நர்மதாவின் காலத்திற்கு பின்னாலும் அவளுடைய மகளுக்கு நிற்காமல் நடக்க வேண்டுமென் றால்.. அதற்கு நர்மதாவின் உறவுக்காரப் பெண்ணொருத்தி பிரபாகரனுக்கு மனைவியாக வந்து வாய்க்க வேண்டும்.

''இப்போ.. என் முன்னால் மாலினியிடம் பேச வேண்டி யதைப் பேசுங்கம்மா..''

'இனிப் பேசி ஆகப்போவதென்ன?' நர்மதா பெரு மூச்சை விட்டாள்.



''ஒன்றுமில்லை பிரபா.. நீங்க போங்க..''

''ஏதோ பேச ஆரம்பித்தீங்களே...''

''காயத்ரியின் கல்யாணத்திற்கு சேலைகள் எடுக்கனு மில்லையா.. அதைப் பற்றி பேச நினைத்தேன்..''

''அதுக்கு ஏன் என்னைப் போகச் சொன்னீங்க?''

''உனக்கு எத்தனையோ வேலைகளிருக்கும். சேலை யைப் பற்றிப் பேசி உன் வேலையைக் கெடுக்கக் கூடா துன்னுதான் பார்த்தேன்..''

''இனி இதையெல்லாம் நானும் பழகிக்க வேணும் தானே அம்மா... சும்மா சொல்லுங்க...''

அவன் உல்லாசமாக மாலினியைப் பார்த்துச் சிரித் தான். இப்போது அவனது சிரிப்பிற்கு பதில் சிரிப்புச் சிரிக்க மாலினி தயங்கவில்லை. அதை நர்மதாவும் கவனித்தாள். அவள் முகம் இறுகியது.

''சொல்லுங்கம்மா.. என்ன என்ன கலரில் சேலை எடுக்கலாம்.. மாலினி அதிலெல்லாம் எக்ஸ்பர்ட்டும்மா... நம்மோட தக்கலை மில்லில் மாலினியின் யோசனைப்படி தான் எல்லா இடங்களிலும் அழகுபடுத்தியிருக்கிறோம்..'' பிரபாகரனும் உற்சாகமாய் சொல்ல..

'ஓ.. இப்போதிருந்தே இவளது அதிகாரத்தை காட்ட ஆரம்பித்து விட்டாளா?' என்ற நினைவில் நர்மதா வெறுமை யாக பார்த்தாள்.

பிரபாகரனின் செல்போன் ஒலித்து.. எடுத்துப் பேசி யவன் எழுந்தான்.

''அம்மா.. எனக்கு அர்ஜெண்ட் வொர்க் இருக்கு.. மாலினி வா...''

''அவள் எதற்கு பிரபா?''

''கொஞ்சம் பேச வேண்டியிருக்கும்மா...''

நர்மதாவின் பதிலை எதிர்பார்க்கமால் பிரபாகரன், மாலினியை பார்வையால் அழைத்தபடி வெளியே செல்ல.. வேறுவழியின்றி மாலினி அவனைப் பின்தொடர்ந்தாள்.

வாசலில் இறங்கியவன் தோட்டத்துக்கு அருகே வந்ததும் நின்று அவள் முகம் பார்த்தான்.

''என்னடி?'' என்று கனிவாக வினவினான்.

''பிரபா..'' மாலினியின் கண்கள் கலங்கிவிட்டன.

''ம்ப்சு.. எதுக்கு கண்ணீர் விடணும்..''

''எதுக்கு பயம்?''

''அத்தை .. திடீர்னு விசாரிக்க ஆரம்பிச்சுட்டாங்க..''

''விசாரித்தால் சொல்ல வேண்டியதுதானே?''

''எப்படிச் சொல்வதாம்?''

''வாயால்தான் சொல்லணும்..''

''போதுமே.. ஜோக்கடிக்கிற நேரத்தைப் பாருங்க..''

''அவர்களுக்கு எப்படித் தெரிந்ததாம்?''

''அருவிக்கரையில் நம்மைப் பார்த்த யாரோ இவங்களிடம் வத்தி வைத்திருக்காங்க..''

''யாராக இருக்கும்?''

''தெரியவில்லையே.. ஆனால், ஒன்று பிரபா..''

''என்ன?''

''நம்மை யாருமே கவனிக்கலைன்னு நாம நினைச்சுக்கிட்டு இருப்போம். ஆனால்.. நம்மை ஊரே கவனிச்சிருக்கும்..''

''கவனிச்சால் கவனிச்சுட்டுப் போகட்டும். இதில் என்ன ரகசியம் வந்து விட்டது? என்னிக்கு இருந்தாலும் இதை நாம் வீட்டில் சொல்லித்தானே ஆகவேண்டும். அதை இன்னிக்கே சொல்லி விட்டேன்... டோண்ட் ஒர்ரி..''



''உங்களைப் போல ஒரு புருஷன் கிடைத்த பின்னால் நான் ஏன் கவலைப்படப் போகிறேன்.. எனக்கு கவலையில்லை.''

'புருஷன்' என்ற அந்த வார்த்தையில் கிறங்கிப் போனான் பிரபாகரன்.

''ஏய்ய்.. என்னடி.. நேரம் காலம் தெரியாம என்னை மயக்கற.. எனக்கு அர்ஜெண்டா ஒரு வேலை இருக்குடி. நான் இப்ப கன்யாகுமரிக்கு போகணும்...''

''போயிட்டு வாங்க...''

''இப்படிக் கிறங்கடிச்சா எப்படிப் போவது?''

''காரில் போங்க...''

''நீயும் கூட வா...''

பிரபாகரனின் கண்களில் தாபம் தெரிந்தது. மாலினிக்கே காதல் பொங்கியது. அவள் உதடு கடித்து தன் உணர்வுகளைக் கட்டுக்குள் கொண்டு வந்தாள்.

''எல்லாம் போய்விட்டு வந்து கொஞ்சிக்கலாம். இப்ப கிளம்பப் பாருங்க..''

பிரபாகரனை தள்ளிவிடாத குறையாக மாலினி கிளப்ப முனைய.. அரைமனதாய் காருக்குள் ஏறப்போனவன், நின்று திரும்பிப் பார்த்தான்.

''என்னங்க?''

''நீயும் உன் வீட்டில் சொல்லிவிடு மாலினி...''

''இப்ப வேண்டாம்..''

''ஏன்..?''

''இப்போதே தெரிந்தால்... கல்யாணத்துக்கு முன்னால் ஒரே வீட்டில் பெண்ணும் மாப்பிள்ளையும் சேர்ந்து இருக்கக்கூடாதுன்னு சொல்லி என் அப்பா... என்னைக் கிளப்பிக் கொண்டு போய் விடுவார். நான் கிளம்ப வேண்டியிருக்கும் பரவாயில்லையா?''

''வேண்டாம்.. வேண்டாம். இத்தனை நாளும் இங்கே இருந்தவள்தானேடி நீ..''

''அப்பாவைப் பொறுத்தவரைக்கும் இது சசியின் புகுந்த வீடு. என் புகுந்த வீடில்லை. நீங்கள் யாரோ.. நான் யாரோன்னு அப்பா நினைச்சிருப்பார்..''

''இனிமேல் நீ வேறு.. நான் வேறில்லைன்னு புரிஞ்சுக் குவார் என் மாமனார்...''

பிரபாகரன் கையசைத்துவிட்டுக் காரைக் கிளப்பிக் கொண்டு போனான். மாலினி வீட்டுக்குள் சென்று நர்மதா வின் அறைவாசலில் நின்று அழைப்புமணியைஅழுத் தினாள்.

''யாரு?''

''நான்தான் அத்தை...''

''உள்ளே வா..''

மாலினி உள்ளே போனபோது.. நர்மதா அமர்ந்திருந்த இடத்தை விட்டு எழுந்திருக்காமல் தலையைப் பிடித்துக் கொண்டு அமர்ந்திருப்பதைக் கண்டாள்.

அவளுக்கு குற்ற உணர்ச்சி எழுந்தது.

''உட்காரும்மா...'' நர்மதா தலை நிமிராமல் சொன் னாள்.

மாலினி அவளுக்கு எதிரேயிருந்த சோபாவில் உட் கார்ந்தாள்.

''என்ன விஷயம்மா?''

''நீங்க என்னிடம் கேள்வி கேட்டுக்கிட்டு இருந்தீங்க அத்தை..''

''இனிதான் அதுக்கு அவசியமே இல்லையே. பிரபா அவனுடைய முடிவைச் சொல்லிவிட்டானே. இந்த வீட்டில்



பிரபாகரன் எதைச் சொல்கிறானோ.. அது எழுதப்படாத சட்டம்.. அதை மாற்ற முடியாது.. மாற்றவும் நாங்க யாரும் நினைக்க மாட்டோம்..''

நர்மதாவின் குரலில் ஒட்டாத தன்மையை மாலினி கண்கொண்டாள். அவள் முகத்தில் யோசனை வந்தது.

''ஏன் அத்தை... என்னை உங்க மருமகளாக்கிக் கொள்ள உங்களுக்கு விருப்பமில்லையா?'' என்று மெது வான குரலில் கேட்டு விட்டாள்.

நர்மதா சட்டென்று நிமிர்ந்து மாலினியைப் பார்த் தாள். நேர்கொண்ட பார்வையுடன் நர்மதாவின் பார்வை யைச் சந்தித்தாள் மாலினி.

அவளின் நிமிர்வைக் கண்ட நர்மதாவிற்கு உள்ளுக் குள் கோபம் துளிர்விட்டது.

'இவளுக்கு பிரபாகரனைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போகும் திமிரா?'

''இல்லைன்னு சொன்னால்... நீ விலகிவிடுவாயா?'' பதிலுக்கு நிதானமாகக் கேட்டாள் நர்மதா.

மாலினி ஒரு வகையில் இதை எதிர்ப்பார்த்தாள். அதனால் அவளுக்கு அதிர்ச்சி ஏதும் ஏற்படவில்லை.. நர்மதாவிடம் தென்பட்ட அதே நிதானத்தை அவளும் கடைபிடித்தவளாக பதில் சொன்னாள்.

''நிச்சயம் விலகி விடுவேன். உங்களுக்கு இஷ்டமில் லாத மருமகளாக இந்த வீட்டிற்குள் இருக்க எனக்கு இஷ்ட மிருக்காது...''

''இப்படி நினைக்கிறவள்.. முதலிலேயே என்னிடம் இது பற்றிப் பேசியிருக்கணும்..''

''காதல்.. பேசி முடிவு பண்ணிவிட்டு செய்யும் விஷய மில்லை அத்தை.. அத்தோடு.. நான் உங்கள் மகனிடம் காதல் சொல்லவில்லை. அவர்தான் என்னிடம் சொன்னார்..''

''அதையும் என்னிடம் சொன்னாயா?''

''எப்படிச் சொல்ல முடியும்.. என் காதலைப் பற்றி என் வீட்டில் நான் சொல்லலாம். உங்கள் மகனின் காதலைப் பற்றி அவர்தானே உங்களிடம் சொல்லணும்..''

''நீ வந்து அன்றே நான் ஒன்று சொன்னேன்... அது உனக்கு நினைவிருக்கிறதா?''

''எப்படி மறக்கும்?''

''தினா உன்னை ஆர்வமாக பார்த்தான்..''

'சைட் அடித்தான்னு சொல்லுங்க...'

''ஆசையாய் உன்னிடம் பேசினான்...''

'கடலை போட்டார் அத்தை...'

''அப்போதே நான் உன்னிடம் சொன்னேனா இல்லையா.. நீயும் உன் மனதில் அதை நினைவில் வைத்துக் கொள்வதாகச் சொன்னாயே...''

''இப்பவும் என் மனதில் நினைவிருக்கு.. நான் தினகரனிடம் அளவுக்கதிகமாக பேசியதே இல்லை அத்தை...''

''அப்புறம் எப்படி பிரபாகரனிடம் பழகினாய்?''

''தினகரன் வேறு.. பிரபாகரன் வேறு அத்தை...''

அந்த வீட்டிலும் சரி.. வெளியிலும் சரி.. அவர்களுடைய உறவினர் வட்டாரத்திலும் சரி.. பிரபாகரனை யாரும் பெயர் சொல்லி அழைத்ததில்லை.

நர்மதாவிற்கு மட்டுமே இதுவரை இருந்து வந்த அந்த உரிமை, மாலினியிடமும் போய்விட்டதை ஒருவித பொறாமை உணர்வுடன் உணர்ந்தாள் நர்மதா.

''இரண்டு பேரும் என் மகன்கள்தான்ம்மா.. தினகரனைப் பற்றி என்ன சொன்னேனோ.. அது பிரபாகரன் விஷயத்திலும் பொருந்தும்..''



''அது எப்படி அத்தை.. தினகரன் விளையாட்டுத் தனமானவர்.. தீராத விளையாட்டுப்பிள்ளை.. பிரபாகரன் அப்படியில்லை.. ஒன்றை நினைத்துவிட்டால் அதிலேயே நிற்கும் ரகம்.. இரண்டு பேரும் எதிர்மறை துருவங்கள் அத்தை.. எப்படி இவங்களை ஒன்றுபோலன்னு நீங்க சொல்கிறீங்க?'' மாலினியின் புத்திசாலித்தனத்தின் மீது நர்மதாவிற்கு கோபம் வந்தது.

## 80

*உன்னை கண்களால் சிறைபிடிக்க முயன்று...*
*உன் கண்களுக்குள் நான் சிறைபட்ட கதையை..*
*என்னவென்று நான் சொல்ல...?*

'இவள் இவ்வளவு புத்திசாலியாய் இருந்து தொலைக்கக்கூடாது..' நர்மதா எரிச்சலுற்றாள்.

அதை அறிந்தும் அறியாதவள் போல் மாலினி பேச்சை வளர்த்தாள்.

''தினகரன் என்னைக் காரில் தக்கலைக்கு கூப்பிட்டுக் கொண்டு போவதாக சொன்னார். நீங்க மறுத்துவிட்டீங்க. அதையே பிரபா சொல்லியபோது நீங்க ஏன் மறுத்துப் பேசலை அத்தை?''

''அது... அது... வந்து...''

''ஏன்னா.. பிரபாகரனின் பேச்சுக்கு எதிர்பேச்சு நீங்க பேச மாட்டீங்க... அதுதானே அத்தை...''

''இப்பவும் அப்படித்தான்ம்மா.. உன் கல்யாணத்தைப் பத்தி நான் எதிர்பேச்சு பேச மாட்டேன்..''

''ஆனால்... மனசுக்குள் எதிர்ப்பா நினைப்பீங்க... அப்படித்தானே..''

''ம்ஹூம்... கோட்டையூர் ஜமீன்தார் கார்த்திகேயனின் பெண்டாட்டிக்கு அதற்குக்கூட உரிமையில்லையா.. என்ன?''

''உங்களுக்கில்லாத உரிமையா?''

''நீ கொடுத்து உரிமையை வாங்க வேண்டிய நிலைமையில் நானில்லைம்மா..''

''நானும் கொடுக்கப் போவதில்லை.. அதேசமயம் நீங்க கொடுக்காம இந்த வீட்டின் மருமகள்கிற உரிமையை நான் எடுத்துக்கவும் மாட்டேன்..''

''பிரபா கொடுத்திருக்கும் உரிமையை ஒரு நாளும் நான் பறிக்க மாட்டேன். மறுக்க மாட்டேன்..''

''அதை மனப்பூர்வமாக நீங்க செய்கிறீங்களா அத்தை?''

''என் மனதைப் பற்றி நான் பெற்ற பிள்ளையே கவலைப்படவில்லை.. நீ யாரு கவலைப்பட?''

நர்மதாவின் குரலில் தெரிந்த விரக்தியும் சோகமும் மாலினியை மிக அதிகமாக பாதித்தன.

கம்பீரம் குலையாத... அந்த வீட்டின் மகாராணியைப் போன்ற அந்த வயோதிகப் பெண்மணியின் கம்பீரம் தளர்ந்திருப்பதை முதன்முதலாக கண்டாள் மாலினி.

அவள் அந்த வீட்டில் காலடி எடுத்து வைத்தபோது பார்த்த நர்மதாவின் கம்பீரம் குலைவதைப் பார்க்க மாலினிக்கு பொறுக்கவில்லை.

அவள் எழுந்து நர்மதாவின் காலடியில் தரையில் அமர்ந்தாள். அதை எதிர்பார்த்திராத நர்மதா பதறிப் போனாள்.

''என்னம்மா இப்படி உட்கார்ந்திருக்கிற... எழுந்திரு...''



''இருக்கட்டும் அத்தை... நான் உங்களுக்கு இந்த நொடியில் வாக்கு கொடுக்கிறேன்.. உங்களுக்கு இந்த அளவுக்கு மனக்கஷ்டம் இருந்தால் நான் விலகிக் கொள்கிறேன். நீங்க வருத்தப்படாதீங்க...''

''மாலினி...''

நர்மதாவிற்கு தன் காதுகளையே நம்ப முடியவில்லை. ஒரு மிகப் பெரிய சாம்ராஜ்ஜியத்தின் அதிபதி.. மாலினியைக் காதலிக்கிறான். அவனோ இரும்பு மனிதன். தொட்டதை சாகும் வரை விட்டு விடாத ரகம்.

அவனின் மனைவியானால்.. சமுதாயத்தில் மிகப் பெரிய உயரத்திற்கு மாலினி போய்விடுவாள். அந்த வாய்ப்பை விட்டு விலகுவதாக அவள் நர்மதாவிடம் கூறுகிறாள்.

''எனக்கு நீங்க முக்கியம் அத்தை... உங்க கம்பீரம் முக்கியம்.. உங்க நிமிர்வு முக்கியம். உங்களிடம் எனக்குப் பிடித்த விஷயங்கள் இது அத்தை... இது குறைய ஒரு நாளும் நான் சம்மதிக்க மாட்டேன்..''

''அம்மாடி...''

''எனக்கு உங்க பணம்.. சொத்து.. செல்வாக்கு.. ஜமீன் பரம்பரைங்கிற அந்தஸ்து... இது எதுவுமே வேண்டாம் அத்தை... என் பிரபாவை அதற்காக நான் காதலிக்கவில்லை. உங்களுக்கே தெரியும். இந்த அத்தனை அடையாளங்களும் இல்லாமலேயே அவர் மிகப் பெரிய ஹீரோவாக இருக்கிறவர். அவரைப் போல ஒரு ஆணை நான் இதற்கு முன்னால் பார்த்ததில்லை. இனிமேலும் பார்க்கப் போவதில்லை...''

''இது எனக்கும் தெரியும்மா..''

''அவரை அவருக்காகத்தான் நான் காதலித்தேன்

அத்தை... அவரும் அப்படித்தான்.. என்னை எனக்காகவே காதலித்தார்...''

''இதெல்லாம் இப்ப எதுக்கு.. விட்டுவிடு.''

''விலகிவிடுகிறேன் அத்தை... அவரை விட்டு விடுகிறேன். எங்காவது கண்காணாத தொலைவிற்குப் போய் விடுகிறேன். நீங்க மட்டும் சந்தோஷமா இருங்க. இப்படி சோகமா இருக்காதீங்க..''

நர்மதாவின் மனம் நெகிழ்ந்துவிட்டது.

பிரபாகரனின் பேச்சுக்கு எதிர்பேச்சு இல்லை என்று நர்மதாவே வாய் திறந்து சொல்கிறாள். பிரபாகரனோ.. மாலினியுடன்தான் அவனது திருமணம் நடக்கும் என்பதை அறிவித்துவிட்டான். அந்த பேச்சிற்கு எதிர்பேச்சை நர்மதா சொல்லப் போவதில்லை... அதை மாலினி நன்கு அறிவாள்.

இருந்தும் அவள் நர்மதாவின் முன் மண்டியிட்டு அமர்ந்திருக்கிறாள். மனப்பூர்வமாக நீ அனுமதி கொடுத்தாள் மட்டுமே உன் வீட்டில் மருமகளாக வருவேன்.. இல்லாவிட்டால்.. விலகிக் கண்காணாமல் போய்விடுகிறேன் என்று சொல்கிறாள்.

அவளின் அந்தச் செயல் நர்மதாவின் மனத்தில் இருந்த கலக்கத்தை ஒட்டிவிட்டது.

''அத்தை.. எனக்கு சசிரேகாவைப் பார்க்கும்போது பொறாமையாக இருக்கும்.. இப்படிப்பட்ட பணக்கார வீட்டில் அவள் மருமகளாக வந்திருக்கிறாளேன்னு இல்லை... உங்களைப் போல பெரிய மனம் படைத்தவங்களுக்கு மருமகளாய் வந்திருக்கிறாளேன்னுதான்..''

நர்மதாவின் முகத்தில் கனிவு மீண்டிருந்தது.

''அன்றைக்கு சசிக்காக உங்க அண்ணன் மகளையே திட்டிப் பேசினீங்க.. 'என் மகன்'.. 'என் மருமகள்' இப்படி



விட்டுக் கொடுக்காத பாசத்தை எந்த மாமியார் கொடுக்கிறாங்களோ.. அந்த மாமியாருக்கு மருமகளாக வருபவள் புண்ணியம் செய்தவள்..''

நர்மதாவின் இதயம் பாகாய் உருகியது..

''அந்தப் புண்ணியம் செய்தவளாக நானிருக்கணும்னுதான் நான் ஆசைப்படுகிறேன் அத்தை.. பிரபாகரனுக்கு மனைவியானால் உங்க மனத்தாங்கலுக்கு ஆளாவேன்னா.. எனக்கு அந்த வாழ்க்கையே வேண்டாம் அத்தை...''

மாலினி அழுதுவிட்டாள். இப்போது நர்மதா பழைய நர்மதாவாக நிமிர்ந்துவிட்டாள்.

'இவள் எனக்கு மருமகளாக வருவதற்கு முழுத் தகுதி படைத்தவள்..' என்ற எண்ணம் மட்டுமே அவளுக்கு ஓடிக் கொண்டிருந்தது.

இந்த சொத்து சுகம் எதுவும் வேண்டாம்.. உன் மருமகள் என்று முழு மனதாக நீ ஏற்றுக்கொண்டாலே போதும் என்று சரணடைகிறவளா.. நர்மதாவிற்கு போட்டியாக அந்த வீட்டின் அதிகாரத்தைக் கைப்பற்றுவாள்?

பெரிய மனம் படைத்தவங்க வீட்டில் வாழப் புண்ணியம் செய்திருக்க வேண்டும் என்று சொல்பவளா... நர்மதாவின் மகளுக்கு.. தாய்வீட்டுச் சீர்வரிசையை கடைசி வரை அனுப்பும் கடமையை மறப்பாள்?

ஸ்வேதாவைக்கூட இந்த விஷயங்களில் சந்தேகப் படலாம்.. மாலினி சந்தேகத்திற்கு அப்பாற்பட்டவள்.

நர்மதா மனம் தெளிந்தாள். பழைய கம்பீரம் மீண்டவளாக மாலினியின் தலையை பாசத்துடன் வருடினாள்.

''எழுந்திரும்மா. பிரபாகரனின் தேர்வு என்றைக்குமே சோடை போகாதுங்கிறதை நீ நிரூபித்துவிட்டாய். இந்த வீட்டுக்கு மூத்த மருமகளாக வருகிறதுக்கு முழுத் தகுதியும் உனக்கு மட்டும்தாம்மா இருக்கு..''

அப்படியே நர்மதாவின் மடிசாய்ந்தபோது மாலினி அழுதுவிட்டாள்.

'இதைவிட பெரிய பேறு வேறு என்ன இருக்கப் போகிறது?'

''தேங்க்ஸ் அத்தை..''

''அழாதே.. திடீர்னு உங்க விஷயத்தைக் கேள்விப் பட்டதும் எனக்கு கொஞ்சம் அதிர்ச்சியாகிருச்சு. ஆயிரம் தான் இருந்தாலும் பெற்ற மனசு இல்லையா.. அது நாலையும் யோசிக்கத்தானே செய்யும்?''

''ஐ ஆம் ஸாரி அத்தை.. நான் மறைக்கணும்னு நினைக்கலே..''

''போகுது விடு.. இப்போதைக்கு இதை யாரிடமும் சொல்லிக்க வேணாம்...''

காயத்ரியின் திருமணத்தை மனதில் வைத்துக் கொண்டு நர்மதா கூற...

''நானும் அதையேதான் பிரபாவிடம் சொன்னேன் அத்தை..'' என்றாள் மாலினி.

''என்ன சொன்னேம்மா?''

''காயத்ரியின் கல்யாணம் முடிகிற வரை இதை வெளியே சொல்லிக்க வேணாம்னு நினைத்தேன்..''

எப்படி இந்த ஒருமித்த சிந்தனை வந்தது என்று திகைத்துப் போனாள் நர்மதா. மாலினியின் மீது அளவு கடந்த அன்பும் நம்பிக்கையும் அவளுக்கு உண்டானது.

அவர்கள் இருவரும் சேர்ந்து சிரித்துப் பேசியபடி அறையை விட்டு வெளியே வருவதைக் கண்ட ஸ்வேதாவின் கண்கள் ஆச்சரியத்தில் விரிந்தன.

அதுவரை அவளே நர்மதாவின் அறைக்குள் இயல்பாக போனது கிடையாது.



'சொர்க்கவாசல்' என்றுதான் நர்மதாவின் அறையைப் பற்றி மாணிக்கவாசகத்திடம் ஸ்வேதா கிண்டலாக குறிப்பிடுவாள்.

அவ்வளவு எளிதாக நர்மதா அவளது அறைக்குள் மற்றவர்களை அனுமதித்து விட மாட்டாள்.

அவளுடைய பிள்ளைகள் மட்டுமே உரிமையுடன் அவளுடைய அறைக்குள் சென்று வருவார்கள். சசிரேகாவே கருணாகரன் இல்லாமல் தனியாக நர்மதாவின் அறைக்குப் போக மாட்டாள். வேலையாள்கள்.. நர்மதா அழைத்தால் தான் போவார்கள்.

அப்படிப்பட்ட சொர்க்கவாசல் மாலினிக்கு மட்டும் எப்படி எளிதாகத் திறந்தது என்ற கேள்விக்கான விடை மட்டும் ஸ்வேதாவிற்கு கிடைக்கவேயில்லை.

பிரபாகரனின் காதல் விஷயம் நர்மதாவின் காதுக்கு இன்னும் போகவில்லை என்றே அவள் நம்பினாள்.

அவளுக்கு நர்மதாவின் குணம் தெரியும்.. சசிரேகாவை அவ்வளவு எளிதாக அவள் மருமகளாக அங்கீகரித்து விடவில்லை. பிரபாகரனின் பிடிவாதத்திலும் தலையீட்டிலும் அது நடந்து முடிந்தது.

அந்தக் கதை தொடர்கதையாவதை நர்மதா ஒருபோதும் விரும்ப மாட்டாள் என்பதுதான் ஸ்வேதாவின் கணிப்பு.

குறைந்தபட்சம் பிரபாகரனின் காதல் தெரிந்துவிட்டால் நர்மதா, மாலினியிடம் முகம் கொடுத்துப் பேசுவதையாவது தவிர்த்துவிடத்தான் முயலுவாள்.

ஆனால்.. அவர்கள் இருவரும் அவ்வளவு பிரியத்துடனும் பாசத்துடனும் பேசியபடி வந்ததைக் கண்ட ஸ்வேதா...

'இன்னும்.. அத்தையம்மாவுக்கு விஷயம் தெரியலை போல இருக்கு.. விஷயம் தெரியும்போது.. இருக்குடி மாலினி உனக்கு..' என்று கறுவிக் கொண்டாள்.

அவளுக்கு மட்டும் நர்மதாவின் விஷயமும் தெரிந்து அவள் மாலினியை மருமகளாக ஏற்றுக்கொள்ளத் தயாராகி யும் விட்டாள் என்று தெரிந்திருந்தால் என்னவாகி இருப் பாளோ.

அது தெரியாமல்... நர்மதாவிற்குத் எதுவும் தெரிய வில்லை என்ற எண்ணத்தோடு ஒருவிதமான சிரிப்புடன் எதிரே வந்தாள் அவள்.

''என்ன அத்தை.. மாலினி உங்களையும் விடவில் லையா?'' என்று அவள் கேட்டதும்..

''எதைச் சொல்கிறாய்?'' என்று விழித்தாள் நர்மதா.

''அதுதான்.. இந்த வீட்டின் காமெடி ஷோ நடத்து வதில் மாலினி எக்ஸ்பெர்ட்டாகிக்கிட்டு வருகிறாளே... அது உங்களுக்குத் தெரியாதா? இந்த வீட்டு வேலைக்காரர்கள் எல்லோரும் இவளுக்கு பரம ரசிகைகள் தெரியுமா?''

ஸ்வேதா விஷமப் புன்னகையுடன் பேசிக்கொண்டே போக, நர்மதாவின் முகம் மாறிவிட்டது.

## 81

*வாய் உதிர்க்கும் பேச்சுகள்.. பேச்சுகளாக உயிர்ப்பது.. உள்ளிடத்தில் மட்டும்தான் என்பதை... என்னவென்று நான் சொல்ல..?*

இதற்கு முன்னாலும் மாலினிக்கு ஆதரவாக ஸ்வேதா வைக் கண்டித்து பேசியிருக்கிறாள் நர்மதா. அப்போது நிலைமையே வேறு. மாலினி அந்த வீட்டின் விருந்தாளி.. ஸ்வேதா.. நர்மதாவின் அண்ணன் மகள்.. நர்மதாவின் மகன்கள் மனம் திரும்பினால் அந்த வீட்டின் மருமகளாக வருகின்ற வாய்ப்பு உள்ளவள்.



அதனால்.. வீட்டுப் பெண்ணாக இருப்பவள்.. விருந் தாளியாக வந்திருப்பவளிடம் அவமரியாதையாய் நடந்து கொள்ளலாமா என்ற எண்ணத்துடன்தான் அப்போதெல் லாம் நர்மதா, ஸ்வேதாவைக் கண்டிப்பாள்.

கோட்டையூர் ஜமீன் வமிசத்தில் சிறிய மனம் படைத் தவர்களாக யாரும் இருக்கக்கூடாது என்பதும் அவளுடைய கோபத்திற்கு காரணமாக இருந்தது.

ஆனால்.. இன்றைய நிலைமையே வேறு. இன்று மாலினி அந்த வீட்டின் மருமகளாக வரவிருந்தாள். ஸ்வேதாவை நர்மதாவின் இரண்டு மகன்களும் மறுத்து விட்டனர்.

இப்போது.. ஸ்வேதாதான் அடுத்த வீட்டுப் பெண். மாலினிதான் வீட்டுப் பெண்.

தன் மருமகளை ஸ்வேதா கேலி பேசுவதா என்ற கொதிப்பு நர்மதாவிற்கு அதனால்..

''என்ன உளறுகிறாய்? '' என்று அதட்டினாள்.

''உளறலா.. உண்மை அத்தை.. உண்மை.. மாலினிக்கு வாயைத் திறந்தால் காமெடி பேச்சுத்தான் வரும். அதனால் தான் உங்களிடம் என்ன காமெடி பண்ணினாள்னு கேட் டேன்?''

ஸ்வேதா ஏளனமாய் கூறியபடி மாலினியைப் பார்க்க... அவள் முகம் மாறாமல் அமைதி காத்தாள். அதே சமயத்தில் காயத்ரியுடன் ஏதோ பேசியபடி ஹாலில் அமர்ந்திருந்த சசிரேகா முகம் கறுத்தாள்..

''சிரிக்கத் தெரிந்தவர்கள்தான் மனிதப் பிறவிகள் ஸ்வேதா. மாலினிக்கு அதையும் தாண்டி சிரிக்க வைக்கத் தெரிந்திருக்கு. உனக்கு சிரிக்கவும் தெரியலை. சிரிக்க வைக்கவும் தெரியலை. உன்னையெல்லாம் எந்தக் கணக் கில் எடுத்துக் கொள்கிறது?''

நர்மதா நறுக்கென்று கேட்டுவிட்டாள். ஸ்வேதாவின் முகம் பேயறைந்ததைப் போல ஆகிவிட்டது. அவள் ஜாடையாக சுற்றுமுற்றும் பார்த்தாள்.

மாடிப்படிகளில் பவித்ரா இறங்கி வந்து கொண்டிருந்தாள். ஏதோ வேலையிருப்பதைப் போல பொன்னியும் செந்தாமரையும் அங்கே நின்றிருந்தார்கள். பரந்தாமனுடன் பேசியபடி தினகரன் உள்ளே வந்து நின்றிருந்தான்.

அவர்கள் அத்தனை பேரும் நர்மதா பேசியதைக் கவனித்துவிட்டதை உணர்ந்தவளுக்கு அவமானமாகப் போய்விட்டது.

தினகரன் சும்மாவே மாலினிக்கு ஜால்ரா அடிப்பான். ஸ்வேதாவைக் கண்டாலே அவனுக்கு ஆகாது.

இன்று இரண்டுக்கும் சேர்த்து ஒன்றுபோல் சந்தர்ப்பம் கிடைத்துவிட..

''ஹா... ஹா...'' என்ற சிரிப்புடன் நர்மதாவின் பேச்சில் கலந்துகொண்டான்..

''ஏம்மா.. சிரிப்பதைப் பத்தி ஸ்வேதாவிடம் கேட்டால் இவளுக்கென்ன தெரியும்.. கடுப்படிப்பதைப் பத்திக் கேளுங்க.. பிட்டுப் பிட்டு வைப்பாள். மொட்டை ரம்பம் போடுவதைப் பத்தி ஆராய்ச்சிக் கட்டுரையே எழுதி விடுவா. சாகஸப் பேச்சைப் பற்றி பிஹெச்.டி. பட்டமே வாங்கி விடுவா. மத்தவங்களை மட்டம் தட்டுகிறதைப் போலப் பேசுவதற்கு பல்கலைக்கழகமே நடத்திவிடுவா... இத்தனையையும் விட்டுவிட்டு சாதாரண மனித ஜீவன்கள் செய்கிற செயலைப் பற்றியெல்லாம் இவகிட்ட போயா கேட்கிறது.. அதையெல்லாம் மனிதப்பிறவிகள் கிட்டக் கேட்கணும்மா..''

ஸ்வேதாவின் முகம் விகாரமானது. இவனே அவள் வேண்டாமென்று தூக்கி எறிந்துவிட்டான். அதற்கப்புறமும் இவன் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருக்க வேண்டுமென்று அவளுக்கென்ன தலையெழுத்தா.

அதனால்.. ''அத்தான்?'' என்று ஆத்திரத்துடன் அழைத்தாள்.

''தினா அத்தான் ஸ்வேதா.. அதெல்லாம் மறந்து விட்டதா.. இல்லை இனி வேலைக்காகாதுன்னு தெரிந்து போய்விட்டதா?''

''ஷட் அப் அத்தான்...தேவையில்லாம பேசாதீங்க..''

''உன்னைச் சொன்னால் மட்டும் இப்படி மூக்குக்கு மேல் கோபம் வருகிறதே... இதை போலத்தானே மத்தவங்களுக்கும் இருக்கும்?''

''மத்தவங்கன்னு ஏன் சொல்கிறீங்க? மாலினிக்கும்னு சொல்லுங்க...''

ஸ்வேதா இடக்காக பேசியபடி மாடிப்படியில் நின்று கொண்டிருந்த பவித்ராவைப் பார்த்தாள். அவள் முகம் வெளுத்தது.

'நிஜம்தானே.. மாலினிக்காக பரிந்துக்கிட்டுத்தானே.. தினா அத்தான் ஸ்வேதாவைத் திட்டுகிறார்..' என்று அவள் நினைத்தாள்.

''அப்படியா.. நீ மாலினியை மட்டுதான் வம்புக்கு இழுக்கிறாயா?'' என்ற குரல் வாசல் பக்கமிருந்து வந்தது.

அனைவரும் திரும்பிப் பார்த்தார்கள். பிரபாகரன் கடினமான முகத்துடன் வந்து கொண்டிருந்தான். அவன் பார்வை ஸ்வேதாவைத் துளைத்தது. அவள் வெறுப்புடன் வேறு பக்கம் முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

''உன்னால் கலகம் செய்யாமல் ஒரு நிமிடம்கூடச் சும்மா இருக்க முடியாதா ஸ்வேதா..'' பிரபாகரன் நிதானமாகக் கேட்டான்.

''நான் என்ன செய்தேன்?'' ஸ்வேதா எதிர்த்துக் கேட்டாள்.

''எதைச் செய்யவில்லை?'' அதே அழுத்தத்துடன் பிரபாகரனின் கேள்வி வந்து விழுந்தது.

''நான் செய்ததைச் சொல்லுங்க?''

''சொல்ல மாட்டேன்கிற தைரியமா உனக்கு?''

''எனக்கா தைரியமில்லை?''

''ஹ... உனக்குத் தைரியமில்லை என்று கூமுட்டை கூடச் சொல்லமாட்டான்.. நான் ஏன் அப்படிச் சொல்லப் போகிறேன்.'' உன் தைரியத்தின் அளவைத்தான் நான் பார்த்திருக்கிறேனே..''

''அத்தான்... கேட்பதற்கு ஆளில்லை என்பதைப் போல நீங்கள் மேலே மேலே பேச வேண்டாம். எனக்கு ஒன்று என்றால்.. கருங்கல்லே கிளம்பி வந்துவிடும்..''

இது நர்மதாவிற்கு ஸ்வேதா விடுத்த மறைமுக எச்சரிக்கை. இதைப் புரிந்துகொள்ளாமலிருக்க நர்மதா ஒன்றும் முட்டாள் இல்லையே.. அவள் முகம் மாறியது. பிரபாகரன் கோபமானான்.

''உங்க அண்ணன் மகள் சொல்வதைக் கேட்டீங் களாம்மா...''

''விடு பிரபா.. அவளுக்குப் பேசத் தெரிந்தது அவ்வ ளவுதான்..''

''ஊஹூம்.. அவ்வளவுதான்னு இவளை ஈஸியா எடை போட்டுறாதீங்க.. இவள் பேச ஆரம்பித்தால் அதற்கு எல்லையே கிடையாது..''

''இத்தனை நாள் பொறுத்தோம்.. காயத்ரியின் கல்யா ணம் வரைக்கும் பொறுத்து தொலைவோம்..''



''இத்தனை நாள் பொறுத்ததே அதிகம்மா... இவள் வந்த பின்னால் வீடு.. வீடாக இல்லை. வெளியே உழைத்து விட்டு வருகிற ஆண்பிள்ளைகள்.. வீட்டுக்குள் நுழைந்தால் நிம்மதியாக உட்கார வேண்டும். இப்படிப் பெண்களின் வம்பளப்புக்கு பஞ்சாயத்து பண்ணிக் கொண்டிருக்கக் கூடாது. வீட்டை வீடாக இருக்க இவள் விடுகிறாளா?''

பிரபாகரனின் வார்த்தைகளில் இருந்த உண்மையை நர்மதாவின் மனம் உணர்ந்தது. தன்னால் அல்லவா பெரிய மகன் இப்படி வேதனைப்பட்டு ஒரு வார்த்தையைச் சொல்லிவிட்டான் என்று அவள் மனம் வருந்தினாள்.

''பெரிய வார்த்தையை எல்லாம் பேசாதே பிரபா... நீ இவ்வளவு தூரத்திற்கு யோசித்தால் நான் இப்போதே போன் போட்டு பெரியப்பாவிடம் சொல்லிவிடுகிறேன்...''

''இதை அன்னிக்கே நீங்க சொல்லியிருக்கணும்.. இவளை அவங்க கூடவே நீங்க அனுப்பிருக்கணும்..''

''இப்ப என்ன கெட்டுப் போச்சு பிரபா. நான் கொண்டு போய் விட்டுவிட்டு வந்து விடுகிறேன்...''

''எதுக்கும்மா.. இவளே நம்மைக் கேள்வி கேட்க கருங்கல்லில் இருந்து ஆள்களை வரவழைக்கணும்னு சொல்லிட்டா.. உங்க பெரியப்பாவுக்கு போன் போடுங்க.. கருங்கல்லில் இருந்து எத்தனை ஆள் வேண்டுமானாலும் கிளம்பி வரட்டும்.. இந்த பிரபாகரனை எதிர்கேள்வி கேட்க இனி ஒரு ஆள் பிறந்துதான் வரணும்.. நானும் என்னன்னு ஒருகை பார்த்து விடுகிறேன்..''

ஸ்வேதாவிற்கு முகம் சிறுத்துவிட்டது. அவளை வீட்டை விட்டு அனுப்ப நர்மதா முயன்றது வேலையாள்கள் வரை அனைவருக்கும் தெரிந்துவிடும் என்று அவள் எதிர் பார்க்கவில்லை. ஏன்... பவித்ராவிற்கே அந்த செய்தி

அப்போதுதான் தெரிந்தது.. அவள் ஒருவிதமாக ஸ்வேதாவை பார்த்து வைத்தாள்.

அவள் மாலினியை மட்டம் தட்ட நினைக்க.. அதுவே அவளுக்கு வினையாக வந்து முடிந்துவிட்டது.

இப்போது கருங்கல்லுக்கு செய்தி போனால்.. ஆளவந் தார் அவளை உண்டு. இல்லையென்று பண்ணிவிடும் அபாயம் அவளுக்கு இருந்தது. எப்போதுமே ஆளவந்தா ருக்கு பெற்ற பிள்ளைகளைவிட... தம்பி மகளின் மீதுதான் பாசம் அதிகம்.

'பெரியப்பா' என்று ஆரம்பித்து நர்மதா.. எல்லா வற்றையும் சொல்லிவிட்டால்.. தன் குடும்பத்திலிருந்தே மாணிக்கவாசகத்தை தள்ளி வைத்துவிட அவர் யோசிக்க மாட்டார்.

பிரபாகரனின் குடும்பத்தில் குழப்பம் விளைவிப் பதற்காக ஸ்வேதா, காயத்ரியின் திருமணத்தை சாக்காக வைத்து தங்கியிருந்தாலும்... இடையிலேயே அவள் கிளம் பிப் போனால் எல்லோரும் ஏதேனும் ஒரு காரணத்தை யூகித்து கதை பேச வாய்ப்பு இருக்கிறது.

இது பணிந்து போக வேண்டிய நேரம் என்பதை அவள் உணர்ந்து கொண்டாள்.

''அத்தை... இப்ப நான் என்ன சொல்லிவிட்டேன்னு அத்தான் இவ்வளவு கடுமையாகப் பேசுகிறார். நான் விளை யாட்டுக்குத்தானே பேசினேன்?'' என்று நர்மதாவிடம் அவள் நியாயம் கேட்டாள்..

நர்மதாவிற்கு தலையில் அடித்துக் கொள்ளலாம் போல இருந்தது. இப்படியொரு பெண்ணைப் பெற்றி ருக்கும் மாணிக்கவாசகத்தை மனதிற்குள் திட்டினாள் அவள்.

''விளையாட்டு வினையாகும்னு தெரியாதா உனக்கு?''



''எனக்கு அதெல்லாம் தெரியாதே அத்தை.. நீங்க பெரியவங்க, நீங்க சொல்லிக் கொடுங்க. கேட்டுக்கறேன்..''

''சொல்லிக் கொடுக்கும் அளவிற்கு நீ குழந்தையும் இல்லை.. சொல்லிக் கொடுக்க எனக்குப் பொறுமையும் இல்லை...''

''இனி இப்படி நடக்காது அத்தை... என்னை நம்புங்க...''

''ஊஹூம்.. எனக்கு அந்த நம்பிக்கை போய் விட்டது..''

''எனக்காக பார்க்கலைன்னாலும்... அப்பாவுக்காக பாருங்க அத்தை...''

''அதை நான் பார்த்துக்கிட்டு இருந்தால்.. என் மகனுக்கு யார் பதில் சொல்வது?''

''சரி.. எங்க அப்பாவுக்காக பார்க்கலைன்னாலும் உங்க பெரியப்பாவுக்காவாவது பாருங்க..''

ஆளவந்தாரின் பேச்சு வந்ததும் நர்மதா கொஞ்சம் கோபம் குறைந்தாள்.

''பிரபா.. காயத்ரியின் கல்யாணத்துக்கு இன்னும் ஒரு மாதம்தான் ஊடே இருக்கு... எண்ணி இருபது நாள்...''

''அம்மா.. மாதத்துக்கு முப்பது நாள்கள்.. மறந்து விட்டீங்களா?''

''பத்து நாள்களுக்கு முன்னாடியே காயத்ரியின் கல்யாணத்தை நடத்தி வைக்க என் பெரியப்பாவும் அண்ணன்களும் கிளம்பி வந்து விடுவாங்களே...''

''ஓ.. நீங்க அப்படி வருகிறீங்களா?''

''ஆமாம்... இருபது நாள் நாம் இவளைச் சமாளித்தால் போதும். இவள் வீட்டு ஆள்கள் வந்த பின்னால்.. அது அவங்க பொறுப்பு. நமக்கென்ன வந்தது?''

# 82

*சிட்டுக் குருவியைப் போல...*
*உனைச் சுற்றி சிறகடிக்கும் மனதை....*
*என்னவென்று நான் சொல்ல...?*

'எப்படியிருந்த நான் இப்படியாகி விட்டனே...' ஸ்வேதா மனம் வெதும்பினாள்.

இருபது நாள்கள் இவளைச் சமாளிக்க வேண்டும் என்று கோட்டையூர் ஜமீன் வமிசத்தை கவலை கொள்ளச் செய்ததை அவளது வெற்றி என்று எடுத்துக் கொள்வதா.. இல்லை.. வீட்டிலிருக்கும் வேலையாள்கள் முன்னிலை யிலேயே அவள் அந்த வீட்டில் இருக்கப்போகும் நாள் களை விரல் விட்டு எண்ணிய கொடுமையை நினைத்து விக்கி விறைப்பதா?

இது வெற்றியா.. தோல்வியா?

எதையும் கணக்கிட்டு விடும் ஸ்வேதாவினால் இதை மட்டும் கணக்கிட முடியவில்லை.

எது எப்படியாக இருந்தாலும்.. மாலினியின் வரவுக்குப் பின்னால் அவளது செல்வாக்கு அந்த வீட்டில் சரியத் தொடங்கியதை மட்டும் அவளால் மறக்க முடியவில்லை.

அதற்கு முன்னாலேயும்.. அவளுக்கு அந்த வீட்டில் பெரிதாக செல்வாக்கு இருந்து விடவில்லைதான். ஆனால்.. வீட்டை விட்டு அவளை வெளியேற்றும் அள வுக்கு.. யாரும் அவளை வெறுக்கவில்லை..

'எல்லாம் இவளால்தான்...'

மாலினியை நினைத்துப் பல்லைக் கடித்தாள் ஸ்வேதா. அவளுடைய மார்த்தாண்ட வாசம்.. மாலினி



வருவதற்கு முன்... மாலினி வந்ததற்குப் பின் என்று இரண்டு பாகமாக பிரிந்து அவளது மனக்கண்ணில் ஓடியது.

''சரி.. சரி.. எல்லோரும் காலாகாலத்தில் படுத்து தூங்கப் போங்க. நாளைக்கு விடிவதற்கு முன்னாலேயே திருவனந்தபுரம் ஸ்ரீபத்மநாப ஸ்வாமி கோயிலுக்குக் கிளம்ப ணும்..'' நர்மதா உத்தரவிட்டாள்.

'சபை கலைந்ததாக்கும்..' என்ற நினைவுடன் அசட்டையாக மாடிப்படி ஏற முனைந்த ஸ்வேதவை.. நர்மதாவின் குரல் தடுத்து நிறுத்தியது.

''ஸ்வேதா...''

''அத்தை?''

''நாளைக்கு கோயிலுக்கு நீயும் கிளம்ப வேண்டும். இன்றைக்கு சண்டையை இங்கேயே விட்டு விட்டு.. காலையில் பதவிசாக கிளம்பப் பார்...''

''சரிங்க அத்தை...''

எங்கே தன்னை வேண்டாமென்று சொல்லிவிடுவார் களோ என்ற கவலையுடன் இருந்த ஸ்வேதாவின் முகம் மலர்ந்துவிட்டது.

அவள் புள்ளிமானைப் போல துள்ளிக் குதித்து மாடிக்கு ஓடினாள். பிரபாகரன் அதிருப்தியுடன் தாயின் முகம் பார்த்தான்.

''அவ எதுக்கும்மா?''

''கோயிலுக்குப் போகும்போது அவளை ஒதுக்கி விட்டு நாம் மட்டும் போகக்கூடாது பிரபா. அது நியாய மில்லை...''

''என்னவோ செய்ங்க...''

பிரபாகரன், மாலினியின் மேல் ஒரு பார்வையைச் செலுத்திவிட்டு.. அவனது அறைக்குப் போய்விட்டான்.

மறுநாள்.. விடிவதற்கு முன்னாலேயே மார்த்தாண்டத்திலிருந்து கார்கள் புறப்பட்டு விட்டன.

பிரபாகரன் காரோட்ட... அவனது காரில் மாலினியும் கருணாகரனும் சசிரேகாவும் ஏறிக்கொண்டார்கள்.

தினகரன் ஓட்டிய காரில்.. பவித்ராவும் நர்மதாவும் காயத்ரியும் ஏறிக் கொண்டனர்.

ஸ்வேதா.. இரண்டு கார்களில் எந்தக் காரில் ஏறிக் கொள்வது என்று யோசிக்க ஆரம்பித்தாள்.

அவளுக்கு மாலினியை பிரபாகரனிடம் இருந்து பிரிக்க வேண்டும்.. அதே சமயம்.. பவித்ராவையும் தினகரனிடமிருந்து பிரித்தாக வேண்டும்.

அவள் 'பிங்கி.. பிங்கி... பாங்கி..' என்று இரண்டு காரிகளில் எந்தக் காரில் ஏறுவது என்று முடிவெடுக்கும் முன்னதாகவே அவள் தங்கள் காரில் ஏறிவிடக்கூடாது என்ற திட்டத்துடன் பிரபாகரனும் தினகரனும் போட்டி போட்டுக் கொண்டு காரைக் கிளப்பி விட்டார்கள். விட்டு விட்டுப் போய்விடுவார்களோ என்று திகிலடைந்து போய்விட்டாள் ஸ்வேதா. நல்லவேளையாக... நர்மதா தலையை நீட்டி...

''ஸ்வேதா.. இந்தக் காருக்கு வா..'' என்று அழைத்துக் கொண்டாள்.

தினகரனுக்கு மாலினி போகும் காரில் போக முடியாத எரிச்சலோடு.. அவன் பக்கத்தில் ஸ்வேதா அமர்ந்து கொண்ட எரிச்சலும் சேர்ந்து கொண்டது.

கிளப்பிய காரை அவன் நிறுத்தியே விட்டான்.

''என்னடா?'' என்று வினவினாள் நர்மதா.

''அம்மா.. நீங்களோ.. இல்லை காயத்ரியோ முன் ஸீட்டுக்கு வாங்க...'' கண்டிப்பான தொனியால் கூறினான் அவன்.

''தினா அத்தான்..'' ஸ்வேதா செல்லமாய் சிணுங்க...



''இதோ பார்.. நான் ஏற்கெனவே கடுப்பில் இருக்கிறேன்.. இதில நீ வேற.. ஆர்ட்டிஃபிஷியலா பேசி உயிரை எடுக்காதே. பேசாம பின் ஸீட்டுக்குப் போய்விடு..'' என்று எரிந்து விருந்தான் தினகரன்..

''ஏன்.. நான் உங்க பக்கத்தில் உட்கார்ந்தால் கார் ஓடாதா?''

''அதுக்குப் பதில் நான் ஓடிவிடுவேன்.. போதுமா?''

ஸ்வேதாவின் முகம் சிறுத்துப்போனது. அவள் வேறு வழியில்லாமல் இறங்கி பின் ஸீட்டிற்கு வந்தாள். காயத்ரிக்கு தூக்க கலக்கம். அவள் நர்மதாவின் மடியில் சாய்ந்து தூங்க ஆரம்பிக்க.. திருமணமாகப் போகும் செல்ல மகளை எழுப்பிவிட நர்மதாவிற்கு மனமில்லை..

''இவன் ஒருத்தன்.. தேவையில்லாம வம்பிழுப்பான். ஸ்வேதா அவனிடம் வாய் கொடுக்காம நீ பின்ஸீட்டுக்கு வாம்மா... பவித்ரா! நீ முன் ஸீட்டுக்குப் போ..'' என்று அவள் ஆணையிட்டு விட்டாள்.

ஸ்வேதா அசைவற்று நின்றுவிட.. பவித்ராவிற்கு கைவிரல்கள் தந்தியடிக்க ஆரம்பித்தன.. எதிர்பாராத அந்த இனிய வாய்ப்பை நினைத்து அவளது நெஞ்சம் இனித்தது.

ஸ்வேதாவின் கண்ணுக்கு முன்னிலேயே பவித்ரா முன் ஸீட்டிற்கு சென்று தினகரனுக்கு அருகில் அமர்ந்து கொண்டாள்.

''சீக்கிரமாக வா ஸ்வேதா...''

நர்மதா, இன்னொவா காரின் பின் பக்க ஸீட்டைச் சுட்டிக் காட்டினாள்.

முன் பக்கத்தில் தினகரனும் பவித்ராவும் அமர்ந்திருக்க.. நடுப்பக்கத்தில்.. நர்மதா ஓரமாய் அமர்ந்திருக்க.. அவளது மடியில் தலை வைத்து காயத்ரி உறங்கிக் கொண்டிருக்க.. பின் பக்க ஸீட்டில் ஸ்வேதா மட்டும் தனியாக அமர்ந்தாள்.

'தனித்து விட்டேன்..' அவள் மனதில் துயரம் பொங்கியது.

கார் ஒருவழியாக கிளம்பியது. முன்னால் சென்ற பிரபாகரனின் கார் போன சுவடே தெரியவில்லை. தினகரன் காருக்கு வேகத்தைக் கூட்ட.. அது பறந்தது.

''எதுக்குடா இவ்வளவு வேகமாய் காரை ஓட்டுற?'' நர்மதா கடிந்து கொண்டாள்.

''அண்ணனின் காரை பிடிக்க வேண்டாமா? என்ன பவி.. நான் சொல்வது கரெக்ட்தானே...'' தினகரன் பக்கத்திலிருந்த பவித்ராவைப் பார்த்துச் சிரித்தான்.

''பவியா.. அவள் பெயர் பவித்ராடா..'' என்றாள் நர்மதா.

''மாலினி இப்படித்தான் கூப்பிடுகிறாள். என்ன பவி... அவள் மட்டும்தான் உன்னை செல்லமாய் கூப்பிடணுமா? நான் கூப்பிட்டால் ஆகாதா?''

தினகரன், பவித்ராவைப் பார்த்து கண்சிமிட்ட... பவித்ராவின் முகம் சிவந்துவிட்டதை அந்த இருளிலும் நர்மதாவால் உணர முடிந்தது.

'பெருமாளே.. இந்த அருமையான பெண்ணை.. பெரியவனுடன் சேர்ந்து வைக்க நினைத்தேன். இப்ப இளையவனுக்கு நீ கண் காட்டுகிறாய். எல்லாம் உன் திருவிளையாடல்...'' நர்மதா மனதிற்குள் சிலிர்த்துப் போனாள்.

''என்னம்மா.. உங்க அண்ணன் மகள் என்னைப் பார்த்தால் ஊமையாகி விடறா.. இவளென்ன பேசாமடந்தையா?'' தினகரன், நர்மதாவிடம் கேட்டான்.

''அவ பாவம்.. அத்தை மகனிடம் பேச வெட்கப்படுகிறாள்டா.. இப்ப உனக்கு என்ன வேணும்.. பவின்னு இவளைக் கூப்பிடணும்.. அவ்வளவுதானே.. நீயாச்சு.. உன் மாமன் மகளாச்சு... உனகில்லாத உரிமையா.. தாராளமாய் கூப்பிட்டுக்க..''

நர்மதா, தினகரிடம் விளையாட்டுப் போலக் கூறவும், அவன் பவித்ராவைத் திரும்பிப் பார்த்தான்.

அதிகாலை குளிர்காற்று அவன் உடலைத் தொட்டுச் செல்ல, அப்போதுதான் பூத்த புதுமலர் போல பவித்ரா அழகாக இருந்தாள். அவளது கூந்தலில் இருந்து முல்லைப் பூவின் மணம் காற்றில் மிதந்து வந்து அவனது நாசியை வருடியது. அவன் மனம் மயங்கினான்.

'ஸோ.. என் மாமன் மகளிடம் எனக்கு வானளாவிய உரிமை இருக்குன்னு என் அம்மாவே டிக்ளேர் பண்ணியாச்சு.. கேட்டுக்கிட்டியா பவி.. எனக்கு உன் மேல இருக்கும் உரிமையின் அளவை...''

இதைக் கேட்ட பவித்ரா.. நாணத்துடன் ஜன்னல் பக்கம் திரும்பிக் கொள்ள.. இந்த நாடகத்தைப் பார்த்துக் கொண்டிருந்த ஸ்வேதா வயிறு எரிந்தாள்.

'ஒரு நாளாவது இந்த அத்தைக்காரி.. என்னை இப்படி இந்தம்மாவின் மகன்ளோடு கோத்துவிட்டிருக்குமா? இப்ப இந்த வேலை செய்யுதே... பவித்ரா மட்டும்தான் தினகரனுக்கு மாமன் மகளா.. நான் யார்? நான் என்ன தினகரனுக்கு சித்தப்பன் மகளா?''

தினகரன் முன்னால் சென்றுகொண்டிருந்த பிரபாகரனின் காரைப் பிடித்துவிட்டான்.. கண் பார்வை வட்டத்துக்குள் பிரபாகரனின் கார் வந்ததும்.. காரின் வேகத்தை சீராக்கினான்.

''அப்படி... '' நிம்மதிப் பெருமூச்சுவிட்ட நர்மதா.. கண்களை மூடித் தானும் தூங்க ஆரம்பித்தாள்.

புலர்ந்தும் புலராத அந்த அதிகாலை நேரத்தில் கார்

சென்றுகொண்டிருக்க, அருகிலிருந்து பவித்ராவை பார்வை யிட ஆரம்பித்தான் தினகரன்.

அவனது பார்வையை உணர்ந்த பவித்ரா.. கைவிரல் களால் காரின் ஸீட்டில் கோலமிட்டாள். கால் பெருவிரலால் காரில் கால் வைக்கும் பரப்பில் கோலமிட்டாள்.

அவள் கோலமிடும் அழகை ரசித்தபடி.. காரில் பழைய பாடல்களில் சிடியை போட்டு ஓடவிட்டான் தினகரன்..

*"ஒரு பக்கம் பார்க்கிறா....*
*ஒரு கண்ணை சாய்க்கிறா...*
*அவ.. உதட்டைக் கடிச்சுக்கிட்டு*
*மெதுவா சிரிக்கிறா.. சிரிக்கிறா.. சிரிக்கிறா.."*

பவித்ரா உண்மையிலேயே உதட்டை கடித்துக் கொள்ள, தினகரனின் பார்வை அவளது உதட்டின் மீது படிந்தது.

*"காலலே... நிலத்திலே...*
*கோலம் போட்டுக் காட்டறா...*
*கம்பி போட்ட ஜன்னலிலே..*
*கன்னத்தை தேய்க்கிறா..."*

இப்போது தினகரன் பாடலுடன் இணைந்து பாடிய வாறு பவித்ராவைக் குறும்புடன் பார்த்தான். அவள் முகம் சிவக்க பின்னலை எடுத்து.. முன்பக்கம் போட்டுக்கொண்டு.. அதை நீவ ஆரம்பித்தாள்.

*"பின்னலை முன்னால் போட்டு*
*பின்னிப் பின்னிக் காட்டறா..."*

பாடலின் வரிகளைக் கேட்டதும் அவசரமாக அவள் பின்னலை பின்னால் விட்டுக் கொள்ள... தினகரன் வாய் விட்டுச்சிரித்தான்.



"ஏன் பவி.. இப்படி வெட்கப்படறே..."

"அப்... அப்.. அப்..."

"பொறு.. எதுக்கு இப்ப தந்தியடிக்கிற... அப்படி யெல்லாம் இல்லைன்னு சொல்கிற... அதுதானே..."

"ம்ம்ம்..."

தினகரனுக்கு பவித்ராவின் அந்த நாணத்தை பிடித்துப் போய் விட்டது. அவன் மாலினி அந்தக் காரில் ஏறிக் கொள்ளாததை மறந்தே விட்டான்.

## 83

*உனைத் தேடும் மனத்துடிப்பில்....*
*என் உலகம் சுழல்வதையே....*
*என்னவென்று நான் சொல்ல..?*

கேரளாவின் மிகப் பெரிய கோயிலான ஸ்ரீ பத்மநாப ஸ்வாமி கோயில்... திருவனந்தபுரத்தின் முக்கிய அடை யாளம்.. கி.பி. பத்தாம் நூற்றாண்டில் ஆய் வம்சத்தினர் ஸ்ரீபத்மநாப ஸ்வாமி கோயிலைக் கட்டினார்கள்.. கி.பி. ஆயிரத்து எழுநூற்றி ஐம்பதாம் ஆண்டில் மன்னன் மார்த் தண்டவர்மன் தன் அரசையே கோயிலுக்கு தானமளித்தார்.

அகிலத்தை அளந்த அந்த உலகளந்த பெருமாளையே திருவிதாங்கூர் அரசின் அரசனாக்கி.. தன்னை கடவுளின் சேவகனாக ஆக்கி... கோயிலை ஆட்சியின் மையமாக் கினார். இது அவருடைய விஷ்ணு பக்தியின் ஆழ்ந்த வெளிப்பாடு.

திருவிதாங்கூர் வம்சத்தை நிறுவி.. தெற்கு கேர ளத்தை ஐக்கியப்படுத்திய மார்த்தாண்ட வர்மா, சிற்றரசு களை கையகப்படுத்தினார். ஒருமுறை டச்சுப் படை

யினரை வீழ்த்தி கேரளாவுக்கும் ஐரோப்பாவுக்கும் இடை யிலான மிளகு வர்த்தகத்தை வசப்படுத்தினார்.

தங்கம் அவருக்கு தண்ணீராகக் கொட்டியது. கி.பி. ஆயிரத்து எழுநூற்றி ஐம்பதில் அவர் கோயிலை புதுப்பித்து இறைவனை அரசனாக அறிவித்தார். வர்மாவின் வம்சாவளி யினர் தங்களை பத்மநாப தாசர்கள் என்றே அழைத்துக் கொண்டார்கள்.

தமிழகத்தில்கூட.. மதுரையை ஆண்டது மீனாட்சி யும் சோமசுந்தரக் கடவுளும்தான் என்று புராணம் கூறு கின்றது.

ஆனால்.. திருவிதாங்கூர் அரசை பத்மநாப ஸ்வாமி யின் பெயரால்.. மார்த்தாண்ட வர்மாவும் அவருடைய சந்ததியினரும் ஆண்டதை வரலாறு கூறுகின்றது.

முன்னது பக்தி... பின்னது நிஜம். அடுத்து வந்த அந்நிய படையெடுப்புகள் அனைத்தும் கோயிலை குறி வைத்தன. ஆயிரத்து எழுநூற்றி தொண்ணூறில் திப்பு சுல்தான் இந்தக் கோயிலை ஆக்கிரமிக்க படையெடுத்து தோற்றார்.

அப்பேர்ப்பட்ட கோயிலின் உள்ளே அவர்கள் காலடி எடுத்து வைத்தார்கள்.

''இந்தக் கோயிலில்தானே.. ஒரு லட்சம் கோடிக்கு மேலே பொக்கிஷம் கிடைத்தது..'' என்று விசாரித்தாள் ஸ்வேதா.

''ஒரு லட்சம் என்பது அதன் தற்கால மதிப்பீடு.. அதன் தொன்மையை வைத்துக் கணக்குப் பார்த்தால்.. இதைவிட பல மடங்கு அதிகமாக வரும்..'' என்கிறாள் காயத்ரி.

''இந்தத் தங்கத்தை என்ன செய்வாங்க?'' அப்பாவி யாய் வினவினாள் பவித்ரா.



''என்ன செய்யப் போகிறாங்கன்னு தெரியலை.. என்னைக் கேட்டால்... இதை கவர்மெண்ட் எடுத்துக்கணும்'' என்றான் தினகரன்.

''இதை எடுத்துக் கொள்ள அவங்க யார்?'' மாலினி யின் விழிகள் சிவந்தன.

மாலினியுடன் வாதாட சந்தர்ப்பம் கிடைத்துவிட்ட உற்சாகத்தில் தினகரன் தீவிரமாக வாதாடத் தொடங்கினான்.

''என்ன மாலினி இப்படிக் கேட்டுவிட்டீங்க... இந்தியா ஏழை நாடு...''

''இதைச் சொல்வது ஒரு பரம்பரை கோடீஸ்வரா..''

''என்னை வைத்தே மற்றவங்களை எடை போட்டால் எப்படி?''

''உங்க குடும்பத்து பரம்பரை குடும்ப நகைகளை கவர்மெண்ட் கிட்டே கொடுக்கச் சொல்லி நான் சொன் னால் நீங்க கொடுத்து விடுவீங்களா?''

''இது தனி மனித சொத்து...''

''மனிதனுக்கே இவ்வளவு உரிமை இருக்கும்போது. இறைவனுக்கு எவ்வளவு உரிமை இருக்கும்? இந்த பொக்கிஷம் ஸ்ரீபத்மநாப ஸ்சுவாமியைச் சேர்ந்தது...''

''இதை வைத்து இந்தியாவின் கடனை அடைக்க லாமே...''

''இது மட்டும்தான் உங்க கண்களை உறுத்துகிறதா.. ஊழல் செய்த அரசியல்வாதிகள் ஒவ்வொருவரும் அவங்க ளுக்கு உரிமையில்லாமல் எத்தனை லட்சம் கோடிகளை சுருட்டியிருக்காங்கன்னு நாம தினமும் பேப்பரில் படிக்கி றோமே.. அதைப் பறிமுதல் செய்தால் அதை வைத்து இந்தியாவின் கடனையும் அடைத்துவிடலாம்.. உலக வங்கிக்கு நாம் கடன் கொடுத்து வட்டி வாங்க ஆரம்பிக் கலாம்...''

''இருந்தாலும்.. இந்த அளவு சொத்து கோயிலுக்கு இருப்பதைவிட மக்களுக்குப் போய்ச் சேரலாமே...''

''என்ன பேசறீங்க நீங்க... இது அத்தனையும் மன்னர் மார்த்தாண்டவர்மா விட்டுக் கொடுத்தது. ஆசைகளுக்கு பிறப்பிடமான அரச வம்சத்தில் வந்த ஒரு அரசர்.. தன்னை கடவுளின் சேவகனாக அறிவிக்கிறார். விஷ்ணுவை.. இந்த கோயிலின் பத்மநாப ஸ்வாமியை அரசன் என்று சொல்கிறார். அவருக்கு இருந்த பற்றில்லாத தன்மை உங்களுக்கு இல்லையா? இந்தச் சொத்துக்களை கோயிலுக்கு விட்டுக் கொடுத்தது திருவிதாங்கூர் ராஜ வம்சம். அவர்கள் விட்டுக் கொடுத்தது கடவுளுக்கு. பத்மநாப ஸ்வாமிக்கு.. அரசாங்கத்துக்கு இல்லை.. இதை மனதில் வைத்துக் கொண்டு பேசுங்க...''

''மக்களின் நல்வாழ்வைப் பற்றி நீங்க யோசிக்க மாட்டீங்களா?''

''மக்களின் வாழ்வைக் கவனிக்க அரசாங்கம் இருக்கு. அரசாங்கத்தைப் பலப்படுத்த ஆயிரம் வரிகள் இருக்கின்றன. இத்தனை நாளாய் எப்படி இருந்ததோ அப்படியே இனியும் இருக்கவேண்டியதுதானே..''

''இதுவரை சரி.. இப்போது கோயிலின் ரகசியம் வெளிப்பட்டு இருக்கிறதே...''

''இது வெளிப்பட்டிருக்கக் கூடாது என்பதுதான் என் கருத்து...''

''புரியவில்லை மாலினி...''

''இந்திய ஆன்மிகம் பலம் வாய்ந்தது தினகரன். இதன் வேர்களோடு நாம் விளையாடக் கூடாது. இந்தியக் கோயில்கள் பழமையின் சின்னங்கள். போற்றிப் பாதுகாக்கப்பட வேண்டியவை. இத்தனை நாளாக.. இத்தனை கோடி பெறுமானமுடைய பொக்கிஷம்.. கோயிலின் நிலவறையில் பத்திரமாக இருந்திருக்கிறது.. இதிலிருந்தே இந்தக் கோயிலில் இருப்பவர்களின் கடவுள் நம்பிக்கை உங்களுக்கு தெரியவில்லையா? அவர்கள் ஆசைகளுக்கு அப்பாற்பட்டவர்கள்...''



''நீங்க முடிவா என்னதான் சொல்ல வரீங்க..''

''இந்தப் பணம் கடவுளின் பணம். எப்படி ஒரு சர்ச்சுக்கு சொந்தமான சொத்துகளின் மீது கை வைக்க அரசாங்கத்துக்கு உரிமையில்லையோ.. எப்படி ஒரு மசூதிக்கு சொந்தமான சொத்துகளின் மீது கை வைக்க அரசாங்கத்துக்கு உரிமையில்லேயோ.. அப்படித்தான் இந்த பொக்கிஷங்களின் மீதும் கைவைக்க அரசாங்கத்துக்கு உரிமையில்லை. இது பத்மநாப ஸ்வாமி கோயிலின் சொத்து..''

''நீங்க மத உணர்வோடு பேசுகிறீங்க..''

''நான் நியாயத்தோடு பேசுகிறேன்.. இதுவே பத்மநாப ஸ்வாமி கோயிலாக இல்லாமல்... வேளாங்கண்ணி சர்ச்சாகவோ.. நாகூரின் தர்காவாகவோ இருந்தாலும் நான் இப்படித்தான் பேசியிருப்பேன். எனக்கு பெருமாளும்.. யேசுவும்... அல்லாவும் ஒன்றுதான். நமக்கு மேலே ஒரு சக்தி நிச்சயமாய் இருக்கிறது. அது தெய்வசக்தி. அதற்கு நாம் உருவம் கொடுத்து.. பெயரையும் கொடுத்து அவரவர் வழியில் வணங்குகிறோம். அதற்கு ஆளுக்கொரு மதத்தின் பெயரைச் சொல்லிக் கொள்கிறோம். அவ்வளவுதான். எல்லா மதமும் உயர்ந்ததுதான். எல்லாமே இறைவனின் காலடியை அடைவதைப் பற்றி நமக்குச் சொல்லிக் கொடுப்பதுதான்...''

''நம் இந்தியாவிலதான் இப்படி.. ஏழைகள் பசியோடு இருக்க கோயிலுக்குள் பணம் குவிந்திருக்கும்..''

''இதையே எத்தனை காலம் நீங்க சொல்வீங்க.. நம்ம இந்தியாவில் மட்டும்தான் ஏழைகள் இருக்கிறாங்களா.. வெளிநாட்டில் இல்லையா? எல்லா நாடுகளிலும் வறுமைக்

கோட்டுக்கு கீழே வாழும் மக்கள் இருக்கத்தான் செய்கி றாங்க. அங்கேயும் ஆலயங்களில் பணமும் சொத்துகளும் குவிந்துதான் இருக்கின்றன...''

''அப்படியா சொல்கிறிங்க?''

''பின்னே இல்லையா.. நாம் நம்ம நாட்டை விட்டுக் கொடுத்து பேசுவதால்தான் இப்படி ஒரு தவறான பிரசாரம் இருந்து கொண்டிருக்கிறது. ஆயிரத்து தொள்ளாயிரத்து நாற்பத்து ஏழில் சுதந்திரம் வாங்கினோம். சுதந்திரம் வாங்கி.. எழுபது வருஷங்கள்கூட ஆகவில்லை. ஒரு நூற்றாண்டை தாண்டுவதற்கு முன்னாலேயே உலக அளவில் இந்தியா முதல் பத்து நாடுகளில் ஒரு நாடாக வளர்ந்திருக்கிறது. இதை மறந்துவிட்டீங்களா?''

''இதுவும் ஒரு பாயிண்டுதான்..''

''ஒரு காலத்தில் நம்ம நாட்டின் வறுமையை படம் பண்ணி புகழையும் பணத்தையும் சம்பாதித்தார்னு சத்ய ஜித்ரேயின் மேல் குற்றச்சாட்டே இருந்தது.. தெரியுமா?''

''அவர்தானே முதன்முறையாக 'ஆஸ்கர் அவார்டு' வாங்கிய இந்தியர்?''

''ஆமாம்.. இன்றைக்கு நம்ம நாட்டின் வறுமையைப் பற்றிச் சொல்லாமல்.. அதன் உயர்வு.. கலாசாரம்.. இதைப் பற்றிப் பேசும் படங்கள் நிறைய ஆஸ்கர் அவார்டு தேர்வு கமிட்டிக்குப் போகுது...''

''ஏ.ஆர். ரஹ்மான்தான் ஜெயித்துவிட்டாரே.. 'ஆஸ்கர்' அவார்டை வாங்கி விட்டாரே...''

''தெரிந்தால் சரி.. இனியாவது இந்தியா ஏழை நாடுன்னு ஏலம் போடாமல்.. அவங்கவங்க வேலையைப் பார்க்கலாம்..''

நர்மதா மருமகளாக வரப்போகிறவளின் வாக்கு சாதுர் யத்தை மெச்சியவளாக முன்னால் நடக்க.. பிரபாகரன்



பின்தங்கினான். குறிப்பறிந்த மாலினி வேகம் குறைக்க... அவர்கள் இருவரும் இணைந்து மெதுவாக நடந்தார்கள்.

''ஹப்பா... உனக்கு இவ்வளவு கோபம் வருமா?'' பிரபாகரன் வியப்புடன் வினவினான்.

''ரொம்ப நாளாகவே எனக்குள் இந்த கோபம் இருக்கு பிரபா. குடிசையோ.. மாளிகையோ அவரவர்க்கு தோதாக ஒரு உரிமைப்பட்ட சொத்து இருக்கில்லையா.. அதையே கடவுள்னு வரும்போது மட்டும் ஏன் பொதுச் சொத்தாக்கு கிறாங்க?''

''தினாதான் காரணம் சொன்னானே..''

''அதுக்குத்தான் அரசாங்கம் இருக்கே.. கோயிலுக் குன்னு பக்தர்கள் கொடுத்த பணம் கோயிலைச் சேர்ந்தது பிரபா...''

''ஆனாலும் ஏதாவது நலத்திட்டம் செய்துதான் ஆகணும் மாலினி.. என் வாதம் இதுதான்...''

''நம்ம ஆன்மிகம் காப்பாற்றப்படணும் பிரபா.. நம்ம நாட்டின் கோயில்கள் ஒவ்வொன்றும் கலைப் பொக்கிஷங் கள். அதன் தூண்களில் உள்ள கல்வெட்டு சித்திரங்கள். யுகங்கள் கடந்தும் நிலைத்து நிற்கக்கூடியவை. அதன் கோபுரங்களின் வேலைப்பாடுகள் கிடைக்காதவை. இதை யெல்லாம் பாதுகாக்கலாம்! சிதிலமடைந்து கொண்டிருக்கும் கோயில்களை புதுப்பிக்கலாம். வருமானம் அதிகமில்லாத கோயில்களுக்கு பூஜை நடத்த ஏற்பாடு செய்யலாம்.. இப்படி கோயில் சம்பந்தமாக எத்தனையோ வேலைகளைச் செய்யலாமே...''

மாலினியின் இந்த புதிய கோணம் பிரபாகரனைச் சிந்திக்க வைத்தது. அவள் சொன்ன பின்னால்தான் நிறைய ஊர்களில் ஆலயங்கள் பராமரிப்பின்றி சிதிலப்பட்டுக் கொண்டிருக்கும் நிலைமை அவனுக்கு நினைவுக்கு வந்தது.

அவன் தன் காதலியை புதிதாக பார்த்தான்.

## 84

*என்னுயிரே.. உன்னுயிரில்...*
*காதலோடு கலந்திடும் நிலையை...*
*என்னவென்று நான் சொல்ல..?*

''ரயிலிலோ.. பஸ்ஸிலோ போகும்போது நான் எப்பவும் ஜன்னல் பக்கத்திலேயே உட்கார்ந்துக்குவேன் பிரபா.. அது எனக்கு ரொம்பப் பிடிக்கும்..''

திடீரென்று ஏன் மாலினி இதைச் சொல்கிறாள் என்ற நினைவுடன் அவள் முகத்தைப் பார்த்தான் பிரபாகரன்.

''அப்போதெல்லாம்.. ஏதாவது ஒரு ஊரில் இடிந்து போய் விழுகிற நிலைமையில் இருக்கும் கோயில்களைப் பார்ப்பேன். மனசு வலிக்கும். கோயிலின் மதில் சுவரில் செடி முளைத்து.. கோயிலைச் சுற்றி முள் வளர்ந்து.. காணக் கிடைக்காத கலைப் பொக்கிஷங்கள் இப்படி கவனிப்பாரில்லாமல் கிடக்குதேன்னு மனது அடிச்சுக்கும்...''

''நிஜம்தான்...''

'அதையெல்லாம் கவர்மெண்ட் சரிசெய்ய முடியாது பிரபா... அவங்க மக்களைக் கவனிக்க வேண்டியிருக்கு. ஆனால்.. கோயில்களில் இருந்து வரும் வருமானத்தை இதுபோல இருக்கும் கோயில்களைக் காப்பாற்றலாமில்லையா...''

''செய்யலாம்தான்..''

''செய்யணும்னு சொல்லுங்க.''

'உத்தரவு தேவி...''

''ம்ஹூம்... நடிக்காதீங்க... நீங்க ரொம்பத்தான் பயந்தவர்..''



''பின்னே இல்லையா?''

''இரும்பு மனிதர் பேசுகிற பேச்சைப் பாரேன்.''

''பேச்சைக் கேட்கத்தான் முடியும்.. பார்க்க முடியுமா?''

''காலையில் ஒரு பார்வைகூடத் திரும்பிப் பார்க்காமல் காரை ஓட்டிவிட்டு.. இப்ப தேவின்னு குழைகிறார்... போங்க பிரபா.. உங்க பேச்சு காய்...''

தீவிரமாக நாட்டில் உள்ள கோயில்களைப் பற்றி விவாதித்துக் கொண்டிருந்தவள்.. காதலியாக மாறி.. கொஞ்சிப் பேச ஆரம்பித்ததை உணர்ந்துகொண்ட பிரபாகரனின் மனம் மயங்கியது.

''ஏய்ய்... கருணா என் பக்கத்தில் இருந்தாண்டி. இவ்வளவு பேசுகிறவள்.. என்னிடம் ஒரு வார்த்தையாவது பேசினயா. சசியுடன் வாயடித்துக் கொண்டே வந்தாய். மார்த்தாண்டத்தில் திறந்த வாயை திருவனந்தபுரம் வந்த பின்னால்தான் மூடினீங்க. பேச்சு.. பேச்சு.... பேச்சுத்தான்... உனக்கு வாயே வலிக்காதா மாலினி...''

மாலினி, பிரபாகரனை முறைக்க ஆரம்பித்தபோது முன்னால் சென்றுகொண்டிருந்த சசிரேகா அவளை அழைத்தாள்.

''கோயிலுக்கு சாமி கும்பிட வந்திருக்கிறோம்ங்கிறதால் சும்மா விடுகிறேன்... நாளைக்கு இருக்கு உங்களுக்கு..''

மாலினி, சசிரேகாவிடம் விரைந்துவிட.. பிரபாகரன் கருணாகரனுடன் பேசியபடி நடந்தான்.

தங்கத்தால் செய்யப்பட்ட அனந்தசயனப் பெருமாளான பத்மநாப ஸ்வாமியின் திருக்கோலத்தை.. கற்பூர ஒளியில் பார்க்கும்போது கண் நிறைந்து போனது மாலினிக்கு.

காலடியில் மகாலட்சுமி... தொப்புள் கொடியின் தாமரை மலரில் பிரம்ம தேவன் சகிதம் காட்சி கொடுத்தார், ஆதிசேஷனின் மேல் பள்ளிகொண்டிருந்த பரந்தாமன்..

கோயிலைச் சுற்றி வலம் வரும்போது. ஒவ்வொரு தூண்களில் அருகேயும் நின்று மாலினி ரசித்துக் கொண்டே வர.. அவளின் கலையார்வத்தை ரசித்துக் கொண்டிருந்தான் பிரபாகரன்.

காலை உணவுக்கு ஹோட்டலுக்குச் சென்றார்கள்.

''இனி வீட்டுக்குத்தானேம்மா?'' கருணாகரன் செல் போனை கையில் எடுத்தபடி நர்மதாவிடம் கேட்டான்.

''ஆமாம் கருணா..'' என்று நர்மதா சொல்லிக் கொண் டிருந்தபோதே பிரபாகரன் இடைமறித்தான்.

''வீட்டுக்கு நைட் போய்க்கலாம்மா.. இப்ப திருவனந்த புரத்தை சுற்றிப் பார்க்கலாம்...''

இதைச் சொன்னது தன் மூத்த மகன்தானா என்ற ஆச்சரியத்துடன் பிரபாகரனைப் பார்த்தாள் நர்மதா. ஏனென் றால் பிரபாகரன்.. இருபத்து நான்கு மணி நேரமும் வேலை.. வேலையென்று அலைகிறவன். காயத்ரியின் திருமணம் நல்ல முறையில் நடைபெற வேண்டும் என்பதற்காக.. பத்மநாப ஸ்வாமி கோயிலுக்கு குடும்பத்துடன் போய் அர்ச்சனை.. அபிஷேகம் நடத்த வேண்டுமென்று நர்மதா ஆசைப்பட்டாள். தங்கையின் மேல் உள்ள பாசத்தால் பிரபாகரனும் அதற்கு ஒப்புக்கொண்டான்.

மற்றபடி.. மணியைப் பார்த்துக் கொண்டே பேச நேரமின்றி ஓடுகிறவன் அவன்.

அப்படிப்பட்ட பிரபாகரன்தான் இன்று ஒரு நாள் முழுவதையும் ஊர் சுற்றிப் பார்ப்பதில் செலவழிக்க வேண்டும் என்று விரும்புகிறான்.

இந்த மாற்றத்தை அவனுக்குள் கொண்டு வந்து இருப்பது மாலினி என்பதை நர்மதாவால் புரிந்துகொள்ள முடிந்தது. அவளோடு திருவனந்தபுரத்தை சுற்றிப் பார்க்க மகன் விரும்புவதும் அவளது உள் மனதிற்குத் தெரிந்தது.



''வேலை இருக்கிறதே அண்ணா...'' கருணாகரன் தயக்கத்துடன் சொன்னான்.

''நமக்கு எப்போதும் வேலைதான். அதுக்காக அதிலேயே மெஷினைப் போல மூழ்கிக் கொண்டிருந் தால் எப்படி கருணா.. முதன்முதலாக வீட்டுப் பெண்கள் எல்லோரையும் கூப்பிட்டுக் கொண்டு வந்திருக்கிறோம்.. உடனே போய் அவங்களை அரண்மனைச் சிறையில் அடைக்கணுமா என்ன? இன்று ஒரு நாளாவது அவங்க ஊரைச் சுற்றிப் பார்க்கட்டுமே...''

பிரபாகரன் கூறியதைக் கேட்ட கருணாகரன் ஜாடை யாக சசிரேகாவின் முகத்தைப் பார்த்தான். அவள் கண் களில் தெரிந்த மகிழ்ச்சியைக் கண்டதும் அவனது மனம் இளகிவிட்டது..

'பாவம் .. எவ்வளவு ஆசைப்படுகிறாள். அதை வாய் விட்டுச் சொல்லாமல் மனதுக்குள்ளேயே வைத்துக் கொள் கிறாள்... நானும்தான் அவளை ஒரு நாளாவது வெளியே கூப்பிட்டுக் கொண்டு போயிருக்கிறேனா...'

கருணாகரன் தன் வேலைகளைத் தள்ளிப்போட உடனடியாக முடிவு செய்தான்.

நர்மதா, காயத்ரியின் முகம் பார்த்தாள். தினகரனுடன் விளையாட்டுச் சண்டை போட்டுக் கொண்டிருந்த மகளைக் கண்டதும் மனம் கனிந்தாள்.

'நாளைக்கு கல்யாணமாகி இன்னொரு வீட்டிற்கும் போய்விட்டால்.. அவள் புருஷன்கூடத்தான் வந்தாகணும்.. இன்றைக்காவது அண்ணன்களுடன் சந்தோஷமாக பேசிச் சிரிக்கட்டுமே...'

நர்மதா.. பிள்ளைகள் அனைவரும் ஒன்றுகூடி ஊர் சுற்றிப் பார்ப்பதை ஆதரித்தாள்.

தினகரன் ஜாடையாக மாலினியையும் நேரடியாக பவித்ராவையும் பார்வையிட்டான்.

'எப்பேர்ப்பட்ட சான்ஸ் கிடைச்சிருக்கு. மாலினியுடன் ஒரே வீட்டில் இருக்கிறோமுன்னுதான் பெயர். அவள் முகத்தை டைனிங் ஹாலில் மட்டும்தான் பார்க்க முடியுது. அங்கேயும் சுற்றியும் அண்ணனும் அம்மாவும் இருப்பாங்க. பேச முடியாது. இன்றைக்கு ஒரு நாள் பூராவும் அவள் அருகில் இருக்கப் போகிறேன். சைக்கிள் கேப் கிடைத்தால்கூடப் போதும்... என் மனதை அவளிடம் சொல்லி விடுவேன். போரடித்தால் பார்த்துக் கொள்ள கண்ணுக்கு குளிர்ச்சியா இந்த பவித்ராவும் இருக்கிறாள். இந்த நாள் அல்லவோ திருநாள்..'

அவன் உற்சாகத்துடன் அந்த ஊர்சுற்றலை மனதிற்குள் வரவேற்றான். தன் மனதிலிருப்பதை பிரபாகரன் வாய்விட்டுச் சொல்லிவிட்டதில் சசிரேகாவிற்கு மட்டற்ற மகிழ்ச்சி.

'பெரியத்தான் இந்த அளவுக்கு பெண்களின் உணர்வை புரிந்து வைத்திருக்கிறாரா.. எவ்வளவு சரியாகச் சொன்னார். அரண்மனைச் சிறைன்னு. தங்கக் கூண்டாக இருந்தாலும் சிறைபட்டிருக்கும் கிளிக்கு அது கூண்டு தானே...'

அந்த ஒரு நாள் முழுவதும் கணவன் அவளருகேயே இருக்கப் போகிறான் என்பதில் அவளுக்கு அளவில்லாத ஆனந்தம் உண்டானது.

தினகரனை ஒளிந்தும் மறைந்தும் பார்க்காமல் நேரடியாகவே பார்க்கலாம் என்ற குதூகலம் பவித்ராவிற்கு.

''வாவ்... எவ்வளவு அருமையான டூர்.. பெரியத்தானுக்கு கோடி நன்றிகள் சொல்லணும். என் தினா அத்தானின் பக்கத்திலேயே இருக்கப் போகிறேன். அவர் வேறு இன்னிக்கு செமத்தியா என்னை சைட் அடிக்கிறார்.



மனம் விரும்பியவனின் பார்வை தன்மேல் படிவதில் அவளுக்கு அவ்வளவு சந்தோஷம் மனதில் பூத்தது.

மாலினிக்கு அந்த கேரளத்து மண்ணின் இதமான தட்ப வெப்ப நிலை மிகவும் பிடித்திருந்தது. அந்த ஊரை விட்டு உடனடியாக கிளம்ப அவளுக்கு மனமில்லை. அவள் மனதை உணர்ந்தவனாக பிரபாகரன் சொன்னது அவளை சந்தோஷத்தில் ஆழ்த்தியது...

'அத்தைக்குத் தெரிந்த பின்னால் இவர்கூட ஊரைச் சுற்றவும் எனக்கு மனமில்லை.. அதேசமயம்.. இந்த ஊரின் அழகைப் பார்த்ததும்.. இந்த ஊர் பூராவும் இவர்கூடச் சேர்ந்து சுற்றி வரணும்னும் ஆசையாய் இருக்கு. எப்படித்தான் என் மனசை இவர் படிச்சாரோ.. தனியாகவும் சுற்றாமல் அதேசமயம் என் கூடவே இவரிருக்கிறதைப் போலவும் திட்டம் போட்டுவிட்டாரே...'

அவள் மற்றவர்கள் அறியாத காதல் பார்வையை பிரபாகரனின் மேல் செலுத்தினாள்.

அவளது பார்வையை எதிர்பார்த்திருந்தவன் கண்கள் மின்ன.. அதே பதில் பார்வையை அவளுக்குத் திருப்பிக் கொடுத்தான். காயத்ரிக்கு.. தன் தாயுடனும் கூடப் பிறந்தவர்களுடனும் நாள் பூராவும் சேர்ந்து ஊர்சுற்றப் போவதில் குதூகலம் உண்டானது...

'இன்னும் எண்ணி முப்பதே நாள்கள்தான்.. நான் இன்னொருவரின் சொத்தாக மாறிப் போய் விடுவேன். நாற்றங்காலைப் பறித்து வேறு இடத்தில் நடுவதைப் போல என்னை என் குடும்பத்திலிருந்து பெயர்த்தெடுத்து வேறு குடும்பத்தில் சேர்த்துவிடுவாங்க. இன்றைக்கு எல்லோரோடும் இருக்கப் போகிறதை என் செல்போனில் படம்பிடித்து பத்திரம் பண்ணிக்குவேன்..'

அவள் அப்போதே தன் பிறந்த வீட்டின் ஞாபகங்களைச் சேகரிக்க துவங்கி விட்டாள்.

எப்போதுமே ஒற்றுமையாக இருக்கிறவர்களைக் கண்டால் ஆகாத ஸ்வேதாவிற்கு அந்த சுற்றுலா வேம்பாக கசந்தது.

'இங்கேயிருக்கிற மூன்று ஆண்பிள்ளைகளும் என்னை சைட் அடிக்கப் போவதில்லை. ஒவ்வொருத்தனுக்கும் அவனுக்கான ஆள் இந்தக் கூட்டத்திலேயே இருக்கிறா. நான் வேஸ்டா.. இதுக சைட் அடித்துக்கிறதைப் பார்த்து வயிறு எரியணுமா?'

அவளுக்கு எல்லோரையும் இழுத்துக் கொண்டு வீட்டுக்கு ஓடிவிட வேண்டும் போல இருந்தது. அதை வெளியே சொன்னால் நர்மதா அவளைச் சும்மா விட மாட்டாள் என்பதால் பல்லைக் கடித்துக் கொண்டு மௌன மாக இருந்தாள்.

மனித மனங்கள்தான் எத்தனை விசித்திரமான குணங் களைக் கொண்டது.

அங்கே கூடியிருந்த ஒவ்வொருவரின் மனதில் ஒவ் வொரு விதமான எண்ணம் இருந்தது. அவர்கள் சேர்ந்து தான் ஊரைச் சுற்ற ஆரம்பித்தார்கள். ஆனால், அவர்களின் எண்ணங்கள் தனித்தனியாக இருந்தன.

ஆளுக்கொரு ஆசை என்று சும்மாவா பெரியவர்கள் சொல்லி வைத்தார்கள்.

## 85

*நீரோடும் ஓடையிலே.. நின்றாடும் மீனைப்போல..*
*உன்னோடு என் மனது... ஒட்டி உறவாடுவதை...*
*என்னவென்று நான் சொல்ல...?*

பச்சைப் பசேலென்று கொடி வீடுகள் அடர்ந்திருந்த பூங்காவில் நுழைந்தபோது... மனம் சிறகடித்துப் பறப்பதை



உணர்ந்தாள் மாலினி. கடைக்கண்ணால் பிரபாகரனைத் தேடினாள். அவன் சன்னமான விசில் சத்தத்துடன் அருகே வந்தான்.

''ஸ்ஸ்.. எல்லோரும் உங்க மேல மரியாதை வைத்து இருக்காங்க..''

''அதுக்கென்ன இப்ப?''

''இப்படி விசிலடித்தால் உங்க இமேஜ் என்ன ஆகும்?''

''இமேஜ்ங்கிற முகமூடியெல்லாம் நமக்குள் வேணாம். இங்கே நான் உன்னுடைய பிரபாகரன் மட்டும் தான். நீ என்னுடைய மாலினி மட்டும்தான்...''

மாலினிக்கு அது புரியாமல் போகுமா... உடனடியாக பிரபாகரனின் மனதை சமாதானப்படுத்த வேண்டிய அவசி யத்தை உணர்ந்தவளாக பேச்சை மாற்றினாள்.

''எனக்கு இந்த ஊரை ரொம்பப் பிடிச்சிருக்கு அத்தான்.''

''எனக்கும்தான் நீ அத்தான்னு கொஞ்சுவது பிடித் திருக்கு..''

''அப்போ பிரபான்னு நான் கூப்பிட்டால் பிடிக்காதா?''

''அது இதைவிட பிடிச்சிருக்குடி...''

''பேச்சில் மயக்க உங்களை மிஞ்ச யாருமில்லை..''

''நீ மயங்கிட்டாலும்....''

''ஏன் அலுத்துக்கறீங்க...''

''இப்படி நான்கடி தள்ளி நடந்து வந்தா விளங்கிடும்..''

''ஸ்ஸ்... அத்தை... காயத்ரி... கருணா அத்தான்னு இத்தனை பேர் நம்மைச் சுத்தி இருக்காங்க. மறந்துர வேணாம்..''

''அங்கே கருணாவையும் சசியையும் பார்த்துவிட்டு பேசு...''

அத்தனை நாளாக மற்றவர்கள் முன்னால் மனைவி யுடன் நெருக்கமாக நின்று பேசாத கருணாகரன்... கேரளத்துப் பசுமையில் தன் விரதத்தை கைவிட்டவனாக மனைவியுடன் உராய்ந்து நடந்து கொண்டிருந்தான்.

காதலிக்கும்போது தந்த நெருக்கத்தை அதற்குப் பின்னால் மறந்துபோனவனாக இருந்த கணவன்... அந்த நிலாக்கால நினைவுகளைத் திரும்பவும் அளித்துவிட்ட சுகத்தில் மெய்மறந்து போன சசிரேகா.. கருணாகரனின் கைவிரல்களோடு தன் விரல்களைப் பிணைத்துக் கொண் டாள்.

அதைப் பார்த்த மாலினிக்கு பிரபாகரனின் விரலோடு விரல் பிணைத்துக் கொள்ளும் ஆசை வந்தது. அவளது கண்கள் அதை வெளிப்படுத்த.. பிரபாகரன் சுற்றுப்புறத்தை மறந்து ஆர்வமாக அவளருகில் வந்தான்.

''அண்ணா.. இந்தக் கொடிவீட்டுப் பக்கத்தில் நீங்க ளும் நானும் சேர்ந்து நிற்கிறதைப் போல ஒரு பிக்சர் எடுத்துக்கலாமா?''

மாலினியின் அருகே மயக்கத்துடன் நெருங்கி நின்ற வன் சுதாரிக்கும் முன் மாலினி சுதாரித்துக் கொண்டு விலகி நின்றாள்.

''மாலினி.. எங்க இரண்டு பேரையும் படம்பிடியுங் களேன், ப்ளீஸ்..''

கொடி வீட்டருகில் தமையனின் தோள் சாய்ந்து நின்ற காயத்ரியைப் பார்த்தபோது மாலினியின் மனதிற்குள் ரஞ்சித் தின் நினைவு வந்தது.

பெண்டாட்டி தாசனாக இருப்பவன்.. தங்கையின்



விஷயத்தில் மட்டும் மனைவியின் சொல்லை சட்டை செய்யாதது மனதில் எழுந்தது.

''பத்திரமாக இருக்கணும் மாலினி..''

ஆயிரம் முறை தலையைத் தடவிக் கொடுத்து அறிவுரை சொன்னவனின் வார்த்தைகள் நினைவுக்கு வர...

'பத்திரமா இருக்கேன் அண்ணா...' என்று மனதிற் குள் சொல்லிக்கொண்டாள் மாலினி.

செல்போனில் கோணம் பார்த்தபோது பிரபாகரன் அவளைப் பார்த்து கண்ணடித்து வைத்தான். மாலினி யின் முகம் சிவந்துவிட்டது. கடிந்து கொள்ளும் ரகசியப் பார்வையை அவனை நோக்கி வீசினாள்.

கருணாகரனும் தினகரனும் நெருங்கி வர.. நர்மதா, பவித்ராவுடன் பேசியவாறு ஒதுங்கி நின்றுகொண்டிருந் தாள்.

அண்ணன்மார் மூவரின் நடுவில் நின்று காயத்ரி படம்பிடித்துக் கொள்ள... சசிரேகா அதை ரசித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

''அண்ணா...'' என்று கருணா மெதுவான குரலில் எதையோ வினவ... அவனுக்கு பதில் சொல்லியவண்ணம் மாலினியைப் பார்வையால் தொடர்ந்து கொண்டிருந்தான் பிரபாகரன்.

''இதைப் பாரேன் மாலினி...'' அருகிலிருந்த குளத் தில் நீந்திக் கொண்டிருந்த வாத்துக்களை சசிரேகா காட்ட.. அதைப் பார்த்த வண்ணம்... ரகசியமாக பிரபாகரனின் பார்வையை சந்தித்துக் கொண்டிருந்தாள் மாலினி.

*'ரகசியமானது காதல் - மிக.. மிக..*
*ரகசியமானது காதல்....*
*முகவரி சொல்லாமல்....*
*முகத்தினை மறைக்கும்....*

*ஒருதலையாகவும்....*
*சுகம் அனுபவிக்கும்....*
*சுவாரஸ்யமானது காதல்.... மிக மிக*
*சுவாரஸ்யமானது காதல்'*

காலையில் காரில் ஒலித்த பாடல் வரிகள் இப்போது மாலினியின் மனதில் ஒலித்தது.

அவளுக்கு உலகமே மிக அழகாக இருப்பதைப் போலத் தோன்றியது.

மிருகக்காட்சிச்சாலையில் குரங்கைக் காட்டி...

''அண்ணா.. அதோ உன் இரட்டைப் பிறவி..'' என்று தினகரனிடம் சொல்லிச் சிரித்தாள் காயத்ரி.

''இல்லை காயத்ரி... அது அச்சு அசல் உன் ஜாடை யாகவே இருக்கிறதால் நிச்சயம் உன்னோட இரட்டைப் பிறவிதான்...'' என்று சிரிக்காமல் சொன்னான் தினகரன்.

''அண்ணா...'' சிணுங்கியவாறு அவனை அடிக்கத் துரத்தினாள் காயத்ரி.

மதிய உணவுக்கு இயற்கையோடு ஒட்டிய ஒரு கார்டன் ரெஸ்டாரெண்டிற்கு போனார்கள். ஏரியில் படகு சவாரி செய்தார்கள். மாலையில் கோவளம் கடற்கரையின் ஓர தென்னந்தோப்புகளில் நடந்தார்கள்.

எல்லா நேரங்களிலும் பிரபாகரன், மாலினியின் அருகிலேயே இருப்பதைப் போலப் பார்த்துக் கொண்டான்.

ஹோட்டலில் சாப்பிட உட்காரும்போது மிகத் தற்செயலாக உட்காருவதைப் போல மாலினியின் பக்கத்தில் அமர்ந்து கொண்டான்.

படகுச் சவாரி செய்யும்போது... மாலினியும் அவனும் மட்டும் படகில் இருக்குமாறு செய்து கொண்டான். மற்றவர்கள் பெரிய படகுகளில் ஏறியபோது ஏறாமல் பின்தாங்கி..



''இடமில்லை போல இருக்கே.. மாலினி இந்தப் படகிற்கு வா..'' என்று அழைத்துக் கொண்டான்.

''நீங்க பண்ணும் அழும்பு இருக்கே...'' மாலினி முணுமுணுத்தபோது..

''அநியாயமாய் பேசாதேடி.. அப்படி நான் என்ன அழும்பு பண்ணிட்டேன். உன் கையைப் பிடித்தேனா... இடுப்பில் கிள்ளினேனா.. தோளில் கை போட்டேனா.. இன்னும்...'' என்று சன்னக்குரலில் அடுக்கிக் கொண்டே போனான்.

''அப்பா சாமி.... நான் தெரியாமல் சொல்லிவிட்டேன். அடங்குங்க...'' என்று மாலினி கெஞ்சிய பின்னால்தான்..

''அஃது... அந்த பயம் இருக்கட்டும்..'' என்று எச்சரித்தபடி பேச்சை நிறுத்தினான்.

மாலினி அவனை ரசித்தாள். அவனது அடாவடித் தனத்தை ரசித்தாள். அவளுக்காக அவன் செய்த தகிடு தத்தங்களை ரசித்தாள்.

'இவன் என்னுடையவன்.. எனக்காக எதையும் செய்கிறவன்..'

அந்த நினைவே அவளுக்கு இனித்தது.

கோவளம் கடற்கரையின் மணலில்.. நீச்சல் உடையுடன் வெள்ளைக்காரர்கள் நிழல்குடையின்கீழ் படுத்திருந்தார்கள். தினகரன் உற்சாகமாகி.. தன் செல்போனில் அவர்களைப் படம்பிடிக்க ஆரம்பித்தான். அவனது அந்த அலைபாய்தலைக் கண்டு பவித்ராவின் முகம் கூம்பி விட்டது....

''அண்ணா...'' காயத்ரி சிரித்தபடி ஒற்றை விரலைக் காட்டி தினகரனை எச்சரித்தாள்.

''இதையெல்லாம் கலைக் கண்ணோடு பார்க்கணும்

காயும்மா..'' அவன் அதற்கு அழகாக விளக்கம் வேறு சொன்னான்.

''கலைக்கண்ணோடு பார்க்கறியா.. அதுவம் நீயா... யாருகிட்ட காது குத்தற... நீ போடும் கடலைக்கு பயந்து.. நான் என் ஃப்ரெண்ட்ஸையே வீட்டுக்கு இன்வைட் பண்ணமாட்டேன்.. நீ என்கிட்டயே கதை விடறே...,'' காயத்ரி அவன் காலை வாரினாள்.

''அப்படியே நீ உன் ஃப்ரெண்ட்ஸ்ஸை அழைச்சுட்டு வந்துட்டாலும்.. நான் அந்த உலக அழகிகளிடம் மயங்கித் தான் விடுவேன். போவியா பேசாம... உன் ஃப்ரெண்ட்ஸின் மூஞ்சிகளில் எந்த மூஞ்சியும் பார்க்கிற மூஞ்சிகளாவே இல்லை.. இதில் அவளுகளை என் கண்ணில் காட்டாமல் இவள் பாதுகாத்தாளாம்...'' தினகரன் அலட்சியமாக தோள் களைக் குலுக்கிவிட்டு காரியத்தில் கண்ணாக இருந்தான்.

பவித்ராவின் முகம் இன்னும் வாட.. ஸ்வேதாவிற்கு மனதிற்குள் சந்தோஷ ஊற்று பெருக்கெடுத்தது.

'நீ சைட் அடிக்கும் உன் அத்தானின் லட்சணத்தைப் பார்த்துக் கொள்..' என்று மனதிற்குள் சிரித்துக் கொண் டாள்.

கலக்கமடைந்திருந்த பவித்ராவின் மனதை இன்னும் கொஞ்சம் கலக்குவதற்காக.. தனித்து ஒரு தென்னை மரத்தின் மீது சாய்ந்து நின்றுகொண்டிருந்தவளின் அருகே சென்றாள்.

''என்ன பவித்ரா.. தனியாய் நிற்கிற...'' வேண்டு மென்றே குரலில் பரிதாபத்தை வரவழைத்துக் கொண்டு ஸ்வேதா கேட்டாள்.

''ஒன்றுமில்லையே...,'' சமாளித்துக் கொண்டு பதில் சொன்னாள் பவித்ரா.

''ஒன்றுமில்லைன்னு உன் வாய்தான் சொல்லுது.. முகம் சொல்ல மாட்டேங்குதே...''



''இப்ப உனக்கு என்ன வேணும் ஸ்வேதா..''

''எனக்கு எது வேணுமோ.. எனக்குத் தெரியாது.. ஆனால், உனக்கு நிம்மதி வேணும்.. அது மட்டும் தெரியும்..''

''டூர் வந்த இடத்தில் தேவையில்லாம என் மூடை ஸ்பாயில் பண்ணாதே...''

''ஏற்கெனவே உன் மூடு அவுட்டாகிவிட்டது பவித்ரா. அதை நான் புதிதாய் ஒன்றும் ஸ்பாயில் பண்ணவில்லை..''

''கொஞ்சம் பேசாம இருக்கியா?''

''ஏன்?''

''எனக்கு தலையை வலிக்குது...''

''என் பேச்சைக் கேட்டு வந்த தலைவலியா.. இல்லை உன் ஆள் வெள்ளைக்காரிகளை விதம் விதமாய் போட்டோ பிடிக்கிறானே.. அதைப் பார்த்ததில் வந்த தலைவலியா?''

''ஸ்வேதா...''

''ஏன் கத்துகிற பவித்ரா.. உனக்குத்தான் சாமர்த்தியம் போதாதுன்னு நான் சொல்லுவேன்..''

''என்ன உளறுகிறாய்?''

''இது உளறல் இல்லை.. உண்மை... உன் இடத்தில் மட்டும் மாலினி இருந்திருந்தாள்னு வை... தினகரனின் பார்வையை வேறுபக்கம் அலையவிட்டிருக்கவே மாட் டாள்..''

பவித்ராவின் தன்னம்பிக்கையைக் குழிதோண்டி புதைத்துக் கொண்டிருந்தாள் ஸ்வேதா. அவளின் நிமிர்வு குலைந்து கொண்டிருந்தது.

''என்னால் முடியாதது மாலினியால் மட்டும் எப்படி முடியும்?'' குரல் நடுங்க கேட்டாள் பவித்ரா.

''இது என்ன பவித்ரா, முட்டாள் போல இப்படி ஒரு கேள்வியைக் கேட்டு வைக்கிற... மனதுக்குப் பிடித்த பெண்

என்ன சொன்னாலும் ஒருத்தன் கேட்டுக் கொள்வானா இல்லையா?''

ஸ்வேதாவின் இதழ்களில் குரூரப் புன்னகை நெளிந்தது. பவித்ராவின் முகமோ ரத்தத்தை இழந்து வெளுத்தது.

## 86

*உன் ரகசியப் பார்வையிலே..*
*என் ராத்திரி பறிபோவதையே...*
*என்னவென்று நான் சொல்ல..?*

உயிருக்குயிராய் ஒருவனைக் காதலிக்கும் பெண்ணிடம்.. உன் காதலனின் மனதுக்குப் பிடித்த பெண் நீ இல்லையென்று சொன்னால் அவள் மனம் என்ன பாடு படும்?

பவித்ராவின் மனமும் அந்தப் பாட்டைப் பட்டது..

அதை அறியாத பேதையா ஸ்வேதா.. அவள் ஒரு வகையில் மேதை. என்ன ஒன்று.. தன் மேதாவித்தனத்தை இதுபோன்ற சின்னத்தனமான காரியங்களில் மட்டுமே அவள் செலவழித்து தொலைத்தாள்.

அவள் மட்டும் தன் மேதாவித்தனத்தை ஆக்கப்பூர்வமான வழியில் பயன்படுத்தியிருந்தால் வாழ்க்கையில் மிக உயர்ந்த இடத்தில் இருந்திருப்பாள்.

அதை விட்டுவிட்டு.. அல்பத்தனமான குறிக்கோளுக்காக தன் வாழ்க்கையின் இரண்டு மூன்று வருடங்களைத் தொலைத்துவிட்டு அதற்கு காரணமானவர்களை தொலைத்துக் கட்டியே தீருவேன் என்று சபதம் போட்டுக் கொண்டு செயல்பட்டுக் கொண்டிருந்தாள்.



''போய்விடு ஸ்வேதா...''

''எங்கே போகச் சொல்கிறாய் பவித்ரா... அந்தக் கடலில் போய் விழச் சொல்கிறாயா.. எனக்கென்ன தலைவிதியா.. அந்தக் கடலில் போய் விழ? நானென்ன உன்னைப் போல காதலனைத் தோற்றுக் கொண்டிருக்கிறேனா?''

''என்ன சொன்ன?''

''நீயென்ன செவிடா.. நான் பேசுவது உன் காதில் விழுகவில்லையா?''

''காதலைப் பற்றி உனக்கென்ன தெரியும்?''

''அந்தக் கண்றாவியைப் பற்றித் தெரிந்து கொண்டு நீ படும்பாடு போதாதா.. எனக்கென்ன தலைவிதியா... அந்தப் புதைகுழியில் போய் மாட்டிக்கொள்ள?''

''உனக்கு என்னைப் பார்த்தால் கேலியாக இருக்கிறதா?''

''இல்லை.. பாவமாக இருக்கிறது.''

''நீ பரிதாபப்படும் அளவிற்கு எனக்கென்ன ஆகிவிட்டது...''

''அடி.. போடி பைத்தியக்காரி... நீ காதலிக்கிறவன்.. உன்னை பக்கத்தில் வைத்துக்கிட்டே வேறு ஒரு பெண்ணை உருகி உருகி பார்க்கிறான். அரையும் குறையுமாக இருக்கிற வெள்ளைக்காரிகளை விழுந்து விழுந்து போட்டோ எடுத்துத் தள்ளுகிறான். இதை பார்க்கிற எனக்கு உன் மேல் பரிதாபம் வருமா... வராதா..''

''கடுப்படிக்காதே ஸ்வேதா..''

''நீயும் ஜோக்கடிக்காதே பவித்ரா. நான் உள்ளதைச் சொன்னால்.. உனக்கெதற்கு உடம்பு எரிகிறது.. இந்தக் கருமத்திற்குதான் நான் இவன்களை காதலிக்கும் வேலையை வைத்துக் கொள்ளவில்லை...''

''நீ காதலித்திருந்தாலும்.. அவங்க திரும்பிப் பார்த்து விட்டுத்தான் வேறு வேலை பார்ப்பாங்க..''

பொறுத்துப் பொறுத்துப் பார்த்த பவித்ரா, பதிலடி கொடுத்துவிட்டாள். இடக்காகப் பேசிக்கொண்டிருந்த ஸ்வேதாவிற்கு முகம் விழுந்து விட்டது.

ஆனால்.. இதற்காகவெல்லாம் பின்வாங்கினால் அவள் ஸ்வேதா அல்லவே.

முதல் நாளிரவு.. பிரபாகரனும் நர்மதாவும் வீட்டைக் கூட்டி... அத்தனை பேரின் முன்னாலேயும் ஸ்வேதாவை கிழிகிழியென்று கிழித்தார்கள். அதை அப்படியே துடைத்து போட்டுவிட்டு விடியற்காலையில் அவர்களுடன் தொற்றிக் கொண்டவள் ஆயிற்றே...

இந்த பவித்ரா படுத்தும் அவமானமெல்லாம் அவளுக்கு வெறும் ஜுஜுபி!

''உனக்கு இன்னும் உலகம் தெரியவில்லை பவித்ரா...''

''உனக்கு தெரிந்திருக்கிறதே போதும்..''

'இப்படியே இருந்தால் கட்டாயம் ஒரு நாள் நீ ஏமாந்து விடுவாய்...''

''நீயும்தான் கெட்டிக்காரத்தனமாக இருந்து என்னத்தை அள்ளிக் கட்டிக் கொண்டாய்?''

''என் கதையை விடு... உன் கதைக்கு வா...''

''அது எப்படி.. நீ மட்டும் என்னைப் பற்றி கதை பேசலாம். அதுவே நான் பேசினால் தப்பா?''

''இதோ பார்.. நான் பிரபாகரனையும் காதலிக்கவில்லை. தினகரனையும் காதலிக்கவில்லை...''

''அவர்களும் உன்னைத் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை..''



''அதனால் எனக்கொண்ணும் குறைந்து போகாது...''

''எனக்கு மட்டும் குறைந்து போகுமா?''

''பின்னே இல்லையா.. நீதான் அந்த தினகரனின் மேல் பைத்தியமாக இருக்கிறாயே...''

அது நேரம் வரை பதிலுக்குப் பதில் பேசிக் கொண்டிருந்த பவித்ரா, ஊமையாகி விட்டாள். வெற்றிக்குறி முகத்தில் தோன்ற, ஸ்வேதா பேச்சைத் தொடர்ந்தாள்..

''இவ்வளவு நேரமாக தென்னை மரத்தின் மேல் சாய்ந்துக்கிட்டு ஒற்றைக் காலில் தவம் செய்கிறாயே.. அந்த தினகரன் உன்னைத் திரும்பியாவது பார்த்தானா?''

'இல்லையே' மனம் வருந்தினாள் பவித்ரா.

அவளாக அருகில் போனால் முகமலர்ச்சியுடன் பேசத்தான் செய்கிறான் தினகரன். ஆனால்.. விலகி நின்றால் தேடி வருவதில்லையே.

அவனை வரச் செய்யும் உபாயம் அறியாமல் பவித்ரா தவித்துப் போனாள்.

''நான் திரும்பிப் பார்க்க வைக்கவா?''

''நீயா.. ஹ...''

பவித்ரா அலட்சியமாக உதட்டைப் பிதுக்கினாள்...

அவளது அலட்சியத்தை அலட்சியம் செய்தாள் ஸ்வேதா.

''அவனை என்னைத் திரும்பிப் பார்க்க வைப்பதாக நான் சொல்லவில்லை... உன்னைத் திரும்பிப் பார்க்க வைக்கவான்னுதான் கேட்டேன்...''

''எரிச்சலைக் கிளப்பாதே ஸ்வேதா...''

''உண்மையை ஏற்றுக்கொள்கிற மனப்பக்குவம் உன்னிடமில்லை...''

''நீ என்ன உண்மையைக் கண்டுவிட்டாய்?''

''நான் கண்டதை உன்னையும் காண வைக்கவா?''

''வேண்டாம்னா நீ விட்டு விடவா போகிறாய்... என்னத்தையோ செய்து தொலை...''

''நான் இதைச் செய்ய முடியாது... நீதான் செய்ய ணும்..''

''எதைச் செய்யச் சொல்கிற?''

''மாலினியைக் கூப்பிடு...''

''நீ நிற்கும் இடத்துக்கு அவ வரமாட்டா..''

''அவ வரும் இடத்தில் நானும் நிற்க மாட்டேன். அதோ அந்த மரத்துக்குப் பின்னால் போய் நின்று பார்க் கிறேன்..''

''எதைப் பார்க்கப் போகிற?''

''வேடிக்கையைத்தான்..''

''என்ன வேடிக்கை?''

''எனக்கு அது வேடிக்கை... உனக்கோ.. வாழ்க்கை..''

ஸ்வேதா அங்கிருந்து நகர்ந்து விட்டாள். பவித்ரா விற்கு தலையும் புரியவில்லை. வாலும் புரியவில்லை.

என்னதான் நடக்குமென்று பார்க்கலாமே என்ற நினை வுடன் அவள் மாலினியை அழைத்தாள்.

சசிரேகாவுடன் பேசிக் கொண்டிருந்த மாலினி திரும்பிப் பார்த்தாள்.

''பவி கூப்பிடுகிறா சசி.. போய் என்னன்னு கேட்டு விட்டு வந்து விடுகிறேன்...''

பவித்ராவின் அழைப்பை மதித்து.. மாலினி உடனே வந்ததை நினைத்து பவித்ராவிற்கு பெருமையாக இருந்தது.

''என்ன பவி?''



''நீபாட்டுக்கு ரூருக்கு வந்துவிட்டு கண்டுகொள் ளாமல் இருக்கிறாயே.. எனக்கு போரடித்தது. அதுதான் கூப்பிட்டேன்..''

''சரிதான் போ.. நான் உன்னைக் கண்டுகிட்டு என்ன ஆகப்போகுது.. உன் ஆள் உன்னை கண்டுகொள்ளணுமே... அதனால்தான் ஒட்டுப்புல் போல உன்னோடு ஒட்டிக்கிட்டு அலையாமல் எட்ட நின்றேன்...''

மாலினியின் விளக்கத்தைக் கேட்ட பவித்ராவின் மனம் நெகிழ்ந்தது. இவள்தான் எப்பேர்ப்பட்டவள்.

''அவர் என்னையெங்கே கண்டுகொள்கிறார். அங்கே பார்.. வெள்ளைக்காரிகளை கண்டுகொண்டிருக்கிறார்..''

மாலினி யதார்த்தமாக பவித்ரா கை காட்டிய திசை யில் பார்க்க.. தினகரன் அவள் பார்ப்பதை பார்த்துவிட்டான்.

அவ்வளவுதான்... வெள்ளைக்காரிகளை மறந்து வேக நடையுடன் அவர்களை நோக்கி வந்தான்.

''பவி.. உன் ஆள் உன்னைத் தேடிக்கிட்டு வருகிறார்..''

மாலினியின் வார்த்தைகளை நம்பாமல் தினகரன் இருந்த திக்கில் பார்த்த பவித்ரா, திகைத்துப் போனாள்.

'தினா அத்தான் வருகிறாரே...'

குதூகலிப்பதற்குப் பதில் அவளுக்கு மனம் வலித்தது. அவளது பெண் மனதிற்கு உண்மை தெரிந்தது. மாலினி சொல்வதைப் போல அவன் ஒன்றும் அவளைத் தேடி வர வில்லையே.

அவ்வளவு நேரமும் அவள் தனியாக நின்றுகொண் டிருந்ததை அவன் பார்த்துக் கொண்டுதான் இருந்தான். அவளது பார்வை அவனை விட்டு விலகாமல் இருந்ததை உணர்ந்துதான் இருந்தான்.

இருந்தும் அவன் அவளை நாடி வரவில்லை.

மாலினி அவளருகில் வந்து நின்ற அடுத்த நொடியிலேயே அவன் அவளைத் தேடி வருகிறான் என்றால் என்ன அர்த்தம்.

உள்ளங்கை நெல்லிக்கனியைப் போல அவனது மனம் அவளுக்குப் புரிந்தது.

அவன் தேடி வருவது மாலினியை.

அதுவரை மாலினியிடம் தோழமையாக இருந்த பவித்ரா... அந்த நொடியிலிருந்து மாலினியை மனதிற்குள் வெறுக்க ஆரம்பித்தாள். அவளுடைய தினகரனின் மனதை கவர்ந்துகொள்ளப் பார்க்கும் ராட்சஸியென்று மனதிற்குள் மாலினியைத் திட்டித் தீர்த்தாள்.

''என்ன மாலினி.. கோவளம் பீச் எப்படியிருக்கிறது?'' மாலினியின் கண்ணோடு கண் பார்த்து தினகரன் கேட்டான்.

பவித்ரா என்ற ஒரு ஜீவன் அங்கு நிற்பதை அவன் கண்டுகொண்டதாகவே தெரியவில்லை. பவித்ரா மனம் நொந்து வெறுத்தாள்.

''கோவளம் பீச்... கோவளம் பீச்சைப் போல இருக்கிறது..'' மாலினி அவனது பார்வையை நேர்கொண்ட பார்வையால் சந்தித்தபடி கூறினாள்.

''ஹா.. ஹா.. இப்படி டைமிங் ஜோக் அடிக்க உங்களால் மட்டும்தான் முடியும்...'' தினகரன் பலமாக சிரித்தான்.

'இப்படி நேரம் காலம் தெரியாமல் வழிவதற்கும் உன்னால் மட்டும்தான் முடியும்...' மனதிற்குள் எரிச்சல் பட்டுக் கொண்டாள் மாலினி.

பவித்ராவைப் போன்ற மென்மையான பெண் அவனுக்காக உருகிக் கொண்டிருக்கிறாள். அவளை விட்டு விட்டு கடற்கரைக்கு வந்திருக்கும் வெள்ளைக்கார பெண்களின் பின்னால் 'ஜொள்' விட்டுக் கொண்டு அலையும்



இவனை என்ன செய்தால் தகும் என்று அவளது மனம் கோபம் கொண்டது.

''இவ்வளவு நேரமாக நீங்க கோவளம் பீச்சின் அழகைத்தான் ரசித்துக் கொண்டிருந்தீங்களா?'' மாலினி கிண்டலாக கேட்டாள்.

'இயற்கையின் அழகு கடலில் மட்டும்தானா இருக்கு?'' தினகரனின் கேள்வியில் இருந்து பதிலை புரிந்து கொண்டவளின் முகம் மாறியது. மனம் அருவருத்தது..

''சசியிடம் போகிறேன் பவி...'' அவள் சட்டென்று அந்த இடத்தை விட்டுப் போய்விட்டாள்.

மாலினியின் பின்னாலேயே தினகரனின் பார்வை தொடர்வதை மனதிற்குள் துக்கத்தோடு பார்த்துக் கொண்டிருந்தாள் பவித்ரா.

''மாலினி இஸ் ஸோ நைஸ்.. இல்லையா பவித்ரா?'' என்று அவளிடம் கேள்வி வேறு கேட்டு வைத்தான் தினகரன்.

'ஆமாம்டா... நீ எனக்கு முன்னாலேயே.. இன்னொருத்தியை சைட் அடித்துவிட்டு.. அவளுடைய அழகைப் பற்றி என்னிடம் அபிப்பிராயம் வேறு கேட்டு வைப்பாய்.. நான் உடனே பதில் சொல்லிவிட வேண்டும்..'

பவித்ரா பதில் சொல்லாமல் வெறுமையாக பார்க்க. அவளது பதிலை எதிர்பார்க்காமல் தினகரன் விலகி.. மீண்டும் வெள்ளைக்கார பெண்களை நோக்கி நடந்தான்.

மரத்தின் மறைவிலிருந்து வெளிப்பட்ட ஸ்வேதாவின் பார்வையைத் தாங்க முடியாமல் பவித்ரா கண்கலங்கி தலைகுனிந்தாள்.

'இன்றைய நாள் அருமையான நாள்...' அன்றைக்குப் பொழுதிற்கான கலகத்தை மூட்டி விட்டுவிட்ட திருப்தியுடன் ஸ்வேதா மனம் குளிர்ந்தாள்.

87

*எனைச் சுற்றியுள்ள மனிதகும்பலில்..*
*உன்னை மட்டும் சுற்றும் என் மனதை*
*என்னவென்று நான் சொல்ல...?*

வீட்டில் கல்யாணக் களை ஆரம்பமாகி விட்டது என்று சசிரேகா நினைத்துக் கொண்டாள்.

ஆளவந்தார் தனது மூன்று மகன்களின் குடும்பத்துடன் சொன்னபடியே காயத்ரியின் திருமணத்திற்கு பத்து நாள்கள் முன்னாடியே வந்து இறங்கிவிட்டார்.

அவர்களின் கார்கள் அணிவகுத்து பங்களாவிற்குள் நுழைவதை மாடி பால்கனியிலிருந்து பார்த்த கருணாகரன், மனைவியிடம்...

''ஊருக்கெல்லாம் பத்திரிகை கொடுத்தாலும்.. வீட்டை நிறைப்பது இவங்கதான். தாத்தா பாட்டி.. மாமாக்களின் குடும்பங்கள் என்று சபையை நிறைத்துவிடுவாங்க...' என்று சொல்லி சிரித்தான்.

''தாத்தாவும் பாட்டியும் அன்பானவங்க...''

அவர்கள் பெற்ற மகன்களிடம் அந்த அன்பு இல்லை என்று மனதிற்குள் நினைத்தபடி கூறினாள் சசிரேகா.

''இது இங்கேன்னு இல்லை. எல்லா குடும்பத்திலும் இருப்பதுதான். சொந்தத்தில் பெண்கள் இருக்க.. காதலித்துக் கல்யாணம் பண்ணிக் கொண்டால்.. வருகிற அந்தப் பெண்ணிடம் வெறுப்பை காண்பிப்பாங்க. இதையெல்லாம் கண்டும் காணாமல் விட்டுவிட வேண்டும். அதிகமாக போக நான் விடமாட்டேன்.. அது உனக்கே தெரியுமில்லையா?'' கருணாகரன் மென்மையாக கூறினான்.



கணவனின் அன்பில் மனம் நெகிழ்ந்தாள் சசிரேகா. எத்தனை பேருக்கு இப்படிப்பட்ட கணவன் கிடைப்பான் என்று அவள் மனம் கர்வம் கொண்டது.

''நான் எதுவும் சொன்னேனா?'' அவள் கொஞ்சலாக கேட்டாள்.

''நீ சொன்னால்தான் பரவாயில்லையே... சொல்லாமல் மனதிற்குள் வைத்துக் கொண்டு மருகும் ரகமாச்சே.'' கருணாகரன், மனைவியின் கன்னத்தைக் கிள்ளினான்.

''அப்படியெல்லாமில்லை... நீங்களாக கேலிபண்ணாதீங்க..'' கருணாகரனின் சட்டையின் பொத்தானை நிரடியபடி சசிரேகா முகம் சிவந்தாள்.

திருமணமாகி ஒரு வருடம் கடந்தும்... அன்றுதான் பார்த்த புதுப் பெண் போல முகம் சிவக்கும் சசிரேகாவின் தன்மை கருணாகரனை மயக்கியது. அவன் மயங்கினான். அந்த மயக்கத்தோடு கிறங்கிய குரலில்,

''சசி...'' என்று அழைத்தான்.

அவனது முகம் பார்த்த சசிரேகா உதட்டைக் கடித்துக் கொண்டாள்.

''எப்படிடீ.. நீ எப்போது என்னைப் பார்த்தாலும்.. நான் காதல் சொல்லியபோது பார்த்த பார்வையையே பார்க்கிற?''

''போதுமே.. வீட்டில் விருந்தாளிகள் வந்திருக்கிறாங்க..'

''இன்னும் வருவாங்க...''

''காயத்ரியின் கல்யாணம் வந்துவிட்டது..''

''அதுக்குத்தானே விருந்தாளிக கூட்டம் கூட்டமா வந்து இறங்கிக்கிட்டு இருக்காங்க..''

''அவங்க முன்னால் நாம இப்படிக் கொஞ்சிக்கிட்டு இருந்தா நல்லாயிருக்குமா?''

''அப்போ.. வா.. ரூமுக்குள் போய் விடலாம்..''

இதைக் கேட்டதும் சசிரேகாவிற்கு சிரிப்பு வந்து விட்டது.

மனைவியின் மலர்ந்த சிரிப்பை ரசித்துக் கொண்டிருந் தவன்,

''இத்தனை நாளாக இந்தச் சிரிப்பை பூட்டி வைத்திருந் தாயோ...'' என்று கனிவோடு கூறினான்.

சசி பேசவில்லை. மௌனமாக இருந்தாள். அவளது பூ விரல்களை தனது வலிமையான விரல்களால் நீவிவிட் டவன்,

''மாலினி வந்துதான் உன் சிரிப்பை சிறைமீட்டிருக் கிறாள்..'' என்றான்.

''அப்படியெல்லாமில்லை அத்தான்... நீங்களாக எதையாவது நினைத்துக்காதீங்க....''

''இல்லை சசி... எனக்குத் தெரியும்.. என் மனதுக்குள் அண்ணனுக்கு முன்னால் நான் கல்யாணம் பண்ணிக் கொண்டுவிட்ட குற்ற உணர்ச்சி இருந்தது...''

''அதில் தப்பில்லையே...''

''என் அம்மாவுக்கு மகனாகவும் அண்ணன் தம்பி தங்கைக்கு கூடப் பிறந்தவனாகவும் இருக்குணும்கிற துடிப் பில் உனக்கு ஒரு நல்ல கணவனாக இருக்க தவறி விட்டே னோன்னு என் மனச்சாட்சி என்னைப் பார்த்து கேள்வி கேட்கிறது..''

''நீங்கள் என்றைக்கும் நல்ல காதலர்.. அது எனக்குத் தெரியும்..''

''ஐ லவ் யூ சசி...''

''நானும்தான்..''



''இதைக்கூட நாம் மனம்விட்டுச் சொல்லிக் கொள்ள மாலினி சென்னையிலிருந்து வர வேண்டியதாக இருந்தது...''

சசிரேகா.. ஏதோ ஒரு யோசனையுடன் கணவனின் முகம் பார்த்தாள். அவன் அதை அறியாதவனாக தன் போக்கில் பேசிக் கொண்டிருந்தான்.

''உன்னை மட்டுமில்லை.. அவள்.. அண்ணனுக்கும் சிரிப்பை மீட்டுக் கொடுத்துவிட்டாள்...''

கணவனின் பேச்சுப் போகும் திசையைப் புரிந்து கொண்ட சசிரேகாவின் முகம் மலர்ந்துவிட்டது. அவளும் அதைத்தானே யோசித்துக் கொண்டிருந்தாள்?

''உனக்குத் தெரியாது சசி.. அண்ணன் சிறுவயதில் ரொம்பவும் கலகலப்பா இருப்பார். என்றைக்கு அப்பா எங்களை விட்டுப் போனாரோ அன்றைக்கே என் அண்ண னிடமிருந்து சிரிப்பும் போய்விட்டது...''

சசிரேகாவிற்கும் அது தெரியும். அவள் பிரபாகரனின் மேல் அளவுகடந்த மரியாதையையும் மதிப்பையும் வைத்திருப்பவள்.

''அண்ணன் சிரிப்பை மறந்து போனார். இந்தக் குடும்பத்தின் பெயரைக் காப்பாற்ற அவர் இரவும் பகலும் தூக்கமில்லாமல் பசி தாகத்தை மறந்து எப்படி வெறி பிடித்த தனமாக உழைத்தார்னு தெரியுமா?''

அதுவும் சசிரேகாவிற்கு தெரியும். அதை ஒரு நாளுக்கு ஒரு முறையாவது கருணாகரன் சொல்லாமல் இருந்ததில்லையே.

''அப்படிப்பட்ட அண்ணனிடம் தொலைந்த சிரிப்பு மீண்டு வந்திருக்கிறது. அதைச் சாதித்தவள் உன் சகோதரி..''

சசிரேகா.. மாலினியைப் பற்றி இன்னும் சொல்ல மனம் துடித்தாள். எனினும், அவளால் பேச முடியவில்லை.

''அண்ணன் மாலினியைப் பார்க்கும் பார்வையில் காதல் இருக்கு சசி...''

எதை கணவனிடம் சொல்ல முடியாமல் சசிரேகா மனம் தவித்தாளோ.. அதை அவன் சொல்லவும்.. அவள் துடிப்புடன் தலை நிமிர்ந்தாள். அவளது விழிகள் பிரகாசித்தன.

கருணாகரன் வாஞ்சையுடன் மனைவியின் தலையைத் தடவிக் கொடுத்தான்.

''இதை என்னிடம் நீ சொல்ல மாட்டாய்.. இதைப் பத்தி பேசவும் மாட்டாய்.. மனதுக்குள் உன் சிரிப்பை பூட்டி வைத்துக் கொண்டதைப் போல இதையும் பூட்டி வைத்துக் கொள்வாய். உன்னை எனக்குத் தெரியாதாடி?''

''அத்தான்..''

சசிரேகா உணர்ச்சி மிகுதியில் அழுது விட்டாள். அவளது கண்ணீர்த் துளிகளை தன் விரலில் துடைத்த கருணாகரன், அன்போடு அவள் கன்னம் தட்டினான்.

''நானும் காதலித்தவன்.. காதலித்துக் கொண்டிருப்பவன். எனக்கு அண்ணனை கண்டுபிடிக்கத் தெரியாதா.. அவர் மாலினியிடம் காட்டும் நெருக்கத்தை எங்களிடம் கூடக் காட்டியதில்லை...''

''மாலினி இயல்பாகத்தான் பழகினாள்..''

''அந்த இயல்பே அண்ணனைக் காதலிக்க வைத்து இருக்கும்..''

''அவள் பணம்.. சொத்து.. செல்வாக்கு.. இதையெல்லாம் பெரிசாக நினைக்க மாட்டாள்..''

''அப்படிப்பட்ட ஒருத்திதான் வேணும்னு அண்ணனும் அடிக்கடி சொல்லுவார்...''

''இதை நானும் எதிர்பார்க்கவில்லை. மாலினியும் எதிர்பார்க்கவில்லை..''



''இதை நீ சொல்லித்தான் நான் தெரிந்துக்கணுமோ.. என்னடி நீ...''

''நீங்க இதைப் பற்றி யோசிக்கலைன்னாலும் மத்தவங்க யோசிப்பாங்க...''

''அண்ணனுக்கு முன்னால் எந்த யோசனையும் நிற்காது. அவர் இரும்பு மனிதர். தெரியுமில்லையா? அந்த இரும்பையும் இளக்கக்கூடிய சக்தி மாலினியிடம் மட்டும் தான் இருக்கு சசி...''

''அப்படின்னா?''

''காயத்ரியின் கல்யாணம் முடியட்டும்.. அம்மாவிடம் இதைப் பற்றி நானே பேசுகிறேன்..''

நன்றியுடன் கணவனின் முகத்தைப் பார்த்தாள் சசிரேகா.

அவளை நம்பி அந்த வீட்டிற்குள் வந்த மாலினியின் காதலை காப்பாற்றிவிட்ட நிம்மதி அவள் மனதில் எழுந்தது.

'உன்னை நம்பி எங்க பெண்ணை உன் வீட்டுக்கு அனுப்பி வைத்தோம்.. இப்போது இவள் காதல் கீதல்னு இழுத்துக் கொண்டு வந்து நிற்கிறாளே...' என்று ஜானகி ராமனும் காவேரியும் அவளைப் பார்த்துக் கேட்டுவிட்டால்.. அவள் மனது தாங்காது.

அதற்குப் பதிலாக.. தங்கள் வீட்டுப் பெண்ணை.. சசிரேகா தன் மைத்துனனுக்கே திருமணம் செய்து வைத்தாள் என்ற பெருமைதான் அவளுக்கு கிடைக்கும்.

மாலினியின் காதலை வெளிப்படுத்தாமல்.. முறைப்படி அவளை பெண் கேட்கும் வேலையை நர்மதாவைக் கட்டாயம் கருணாகரன் செய்ய வைப்பான் என்ற நிம்மதி மனதில் தோன்ற.. அவள் விருந்தினர்களை வரவேற்க கீழே சென்றாள்.

காயத்ரி தன் முன்னால் பரப்பப்பட்டிருந்த புடவைக் குவியலை பார்த்தபடி யோசனையுடன் அமர்ந்திருந்தாள்.

'மே... ஐ கமின்..'' என்று மாலினியின் குரல் ஒலித்தது.

''இது என்ன அண்ணனின் ஆபீஸ் ரூமா.. உள்ளே வாங்க மாலினி..'' காயத்ரி உற்சாகத்துடன் சொன்னாள்.

உள்ளே வந்த மாலினி.. புடவைகளுக்கு மத்தியில் அமர்ந்திருந்த காயத்ரியை கண்டதும் திகைத்தாள்.

''என்ன காயத்ரி.. ஜவுளிக் கடை ஆரம்பிக்கப் போகிறாயா?''

''இல்லைங்க.. ஜவுளிக் கடைதான் இங்கே வந்து இறங்கியிருக்கு..'' அலுப்புடன் காயத்ரி கூறினாள்.

''புரியலையே...''

''எனக்கு கல்யாண ஜவுளி எடுக்கணுமில்லையா?''

''ஆமாம்.. அதுக்குத்தான் முகூர்த்த சேலை.. ரிசப்ஷன் சேலை. இன்னும்.. 'அந்த நேரத்திற்கான சேலை'ன்னு உன் மாமியார் வீட்டில் எடுத்துத் தள்ளிட்டாங்களே...''

முதலிரவு நேரத்திற்கான சேலையை அந்த நேரத் திற்கான சேலையென்று மாலினி சொல்லிய விதத்தில் காயத்ரி வெட்கினாள்.

''ஹேய்.. என்ன ஆச்சு.. கல்யாணப் பெண்.. கனவு காண ஆரம்பிச்சாச்சா?'' மாலினி கேலி செய்தாள்.

''போங்க.. மாலினி..''

''எங்கே போக காயத்ரி? சென்னைக்குப் போகச் சொல்கிறாயா? இவ்வளவு நல்ல வேலையை விட்டுவிடச் சொல்ல உனக்கு எப்படி மனம் வந்தது காயத்ரி.. சொல்.. காயத்ரி.. சொல்..''



முதல் நாள் இரவு அவர்கள் நர்மதாவுடன் சேர்ந்து பார்த்த கறுப்பு வெள்ளை திரைப்படத்தில் அதன் கதா நாயகி பேசியதைப் போல மாலினி பேசிக் காட்டவும், காயத்ரிக்கு சிரிப்பு வந்துவிட்டது.

''உங்களை..! அச்சு அசல் சரோஜாதேவியேதான்.. எப்படித்தான் இப்படிப் பண்ணுகிறீங்களோ..''

''அத்தை பெற்ற பெண்ணே இப்படிச் சொன்னா... இந்த மாலினியின் மனசு தாங்குமா?''

அடுத்து விளம்பரத்திற்கு மாலினி தாவ.. காயத்ரிக்கு சிரித்துச் சிரித்து வயிறே புண்ணாகிவிட்டது.

''போதும் மாலினி போதும்..''

''இப்ப சொல்லு.. இந்தச் சேலைகளை யார் வாங்கிக் கொடுக்கிறது?''

''வேறு யார்? அம்மாவும் பெரிய அண்ணனும் தான்..''

''அதுக்காக ஜவுளிக்கடையை இங்கே கொண்டு வந்து இறக்கணுமா?''

''அது வந்து மாலினி.. எங்க பக்கத்தில்.. நகைகள்.. சீர்வரிசைகளைப் போல எத்தனை ரூபாய் விலையில் எத்தனை பட்டுச் சேலைகளை நாங்க கொண்டு போகிறோ முன்னும் பார்ப்பாங்க...''

காயத்ரி தங்களின் பணப் பெருமையைத் தயக்கத் துடன் சொல்ல.. அதை கண்டுகொள்ளாமல் இயல்பாக..

''அப்படியா'' என்றபடி அருகில் அமர்ந்தாள் மாலினி..

சற்றுமுன் அறைக்குள் வந்த ஸ்வேதாவின் கண் களில் தெரிந்த பொறாமைக் கனலையும் மாலினியின் இயல்பான பார்வையையும் ஒப்பிட்டுப் பார்த்த காயத்ரி மனம் கனிந்தாள்.

பவித்ராகூட ஒரு நொடி ஆவலுடன் பார்த்த சேலைக் குவியலை இவளால் மட்டும் எப்படி பற்றில் லாமல் பார்க்க முடிகின்றது?

88

*நீ சொல்லுகின்ற சொல்லில்..*
*சொக்கி நிற்கும் என் மனதை..*
*என்னவென்று நான் சொல்ல....?*

சுற்றியிருந்த புடவைகளின் மேல் பார்வையை ஓட்டினாள் மாலினி.

''சரி, காயத்ரி.. இதையெல்லாம் கடைக்குப் போய் செலக்ட் பண்ணலாமே.. உனக்கும் பிரஷ்ஷாக இருக்குமே...''

''அம்மா வேண்டாம்னு சொல்கிறாங்க மாலினி. இந்தப் புடவைகள் எல்லாமே விலை அதிகமானவை. குறைந்த விலையே அறுபதாயிரத்தில் இருந்து ஆரம்பிக் குது. இதை எடுக்க ஜவுளிக்கடைக்கு கிளம்பினால்.. நான் வருகிறேன் நீ வருகிறேன்னு எல்லோரும் வருவாங்க. வீடு பூராவும் விருந்தாளிங்க கூட்டம்தான். கடை தாங்காது. அத்தோடு...''

'ஒரு கண்ணைப் போல் இன்னொரு கண் இருக்காது. கண் பார்வை பட்டுவிடும்' என்று நர்மதா சொல்லியவை.. மாலினியிடம் எப்படிச் சொல்வது என்று தயங்கினாள் காயத்ரி.

''கண் பார்வை பட்டுவிடும்னு அத்தை நினைச்சிருப் பாங்க..'' என்று மாலினி இயல்பாக கூற... காயத்ரி மீண்டும் திகைத்தாள்.



''அத்தை நினைப்பதைப் போல்தான் என் அம்மா வும் நினைப்பாங்க. பிறந்ததிலிருந்து இப்படி எத்தனை அட்வைஸை அவங்ககிட்ட இருந்து கேட்டிருக்கிறேன்? அதனால் எனக்கு பெரியவங்களோட நினைப்பு எப்படி யிருக்கும் என்பதெல்லாம் அத்துப்படி. ஆனால்.. நீ கடைக் குப் போனால்.. இன்னும் வெரைட்டியாக நிறைய டிஸைன் பார்த்து வாங்கலாமே காயத்ரி...''

''கன்யாகுமரியிலேயே பெரிய ஜவுளிக் கடை. இந்த ஜவுளிக் கடை. அங்கேயிருந்த அத்தனை விலை உசத்தியான சேலைகளும் வந்துவிட்டன. நான் செலக்ட் பண்ணணும்.. அது மட்டும்தான் பாக்கி...''

'செலக்ட் பண்ணிவிட வேண்டியதுதானே...''

''எங்கே மாலினி...''

காயத்ரி அலுத்துக் கொள்ள...

''உனக்கு எந்தச் சேலையையும் பிடிக்கவில்லையா?'' என்று அனுதாபத்துடன் வினவினாள் மாலினி.

''ஊஹூம்.. எல்லாச் சேலைகளையும் பிடித்திருக்கே..'' என்று காயத்ரி கூறவும்.. இப்போது விழுந்து விழுந்து சிரிப்பது மாலினியின் முறையாகிப் போனது.

''சரிதான்.. இதுதானா உன் பிரச்னை?''

''ஆமாம்..''

''நான் ஒன்று சொல்லவா?''

''சொல்லுங்களேன்..''

''மொத்தமாக இருக்கிறதில் பிடிக்காத சேலைகளை ஒதுக்கிவிட்டு.. பிடிச்சதா எடுக்கலாம். எல்லாமே பிடிச் சிருந்தா என்னதான் பண்றது?'

'அதைத்தானே உங்ககிட்ட கேட்டுக்கிட்டு இருக் கேன்..''

''எல்லாமே பிடிச்சிருந்தா.. அதுக்குள்ள ரொம்பப் பிடிச்ச சேலைகளை எடுத்து வை...''

''அது பாதிக்கு மேல் தேறுமே..''

''முதலில் அதைச் செய்வோம் வா...''

மாலினியின் ஐடியாவின்படி மிகவும் பிடித்த சேலைகளை காயத்ரி தேர்வு செய்தாள். மற்றவற்றை உடனடியாக பெட்டிகளில் வைத்து ஓரமாக அடுக்கிவிட்டாள் மாலினி.

''அதைக் கடைசியில் செய்துக்கலாமே மாலினி?''

''ஊஹூம்.. ஒன்றை செலக்ட் செய்துட்டா அதிலேயே நிலைத்து நின்றுவிட வேண்டும். அதேபோல.. ஒன்றை வேண்டாமுன்னு தள்ளிவைத்து விட்டால்.. அதை திரும்பவும் நினைத்தே பார்க்கக் கூடாது..''

மாலினியின் வார்த்தைகளை வியப்புடன் கேட்டாள் காயத்ரி. அந்த வார்த்தைகள் மாலினியின் குண இயல்பை அப்படியே உணர்த்துவதைப் போல இருந்தன.

''ம்ம்ம்.. இப்போ.. ரொம்ப ரொம்ப பிடிச்ச சேலைகளை செலக்ட் பண்ணு..''

காயத்ரி ஆச்சரியத்துடன் மாலினி சொன்னதைச் செய்தாள். முன்பு போலவே காயத்ரி தேர்வு செய்தது போக மிதியிருந்த சேலைகளை மாலினி வைத்து விட்டாள்.

''இப்போ ஃபைனல் செலக்ஷன்... உன் கையில் இருப்பது இந்தச் சேலைகள்தான். இதில் உன்னால் விட்டுக் கொடுக்க முடியாதுன்னு தோணுகிற சேலைகளையெல்லாம் தூக்கிக்க..''

மாலினி சொல்லிய விதம் கண்டு காயத்ரி சிரித்தாள்.

''பிடித்த சேலைகள்னு சொல்வதைக் கேட்டிருக்கேன்.. அது என்ன.. விட்டுக் கொடுக்க முடியாத சேலைகள்?''



''இப்ப வேண்டாம்னு தள்ளி வச்சயே.. அந்தச் சேலைகளைப் போல இந்தச் சேலைகளில் உனக்கு வேண்டாமுன்னு தள்ளி வைக்க முடியாத சேலைகள் இருக்குமே.. அதுதான் விட்டுக் கொடுக்க முடியாத சேலைகள்..''

காயத்ரி தேர்வு செய்துவிட்டாள். மற்றவைகளை உடனடியாக காயத்ரியின் பார்வையிலிருந்து அப்புறப் படுத்திவிட்டு அவள் தேர்வு செய்திருந்த சேலைகளை மட்டும் பரப்பி வைத்த மாலினி.. அவைகளின் அழகை ரசிக்க ஆரம்பித்தாள்.

''வாவ்.. அருமையான டிஸைன்.. இந்தச் சேலையின் கலர் பட்டுக்களில் கிடைக்காதது. இந்தச் சேலையைப் பாரேன் காயத்ரி.. முந்தானையின் டிஸைன் அற்புதம். இந்தச் சேலையின் பார்டர் கலர் காம்பினேஷன் எக்ஸலண்ட்..''

''நான் செலக்ட் செய்யும்போது நீங்க இதைப் பத்தியெல்லாம் ஒன்றுமே சொல்லலையே...''

மாலினி நிமிர்ந்து காயத்ரியைப் பார்த்துச் சிரித்தாள்.

''ஊஹூம்.. அப்போது நான் சொன்னால்.. என் விருப்பத்தை உன் மேல் திணிப்பதைப் போல இருக்கும். கட்டுகிற சேலையைக்கூட மத்தவங்க விருப்பத்துக்காக கட்டக்கூடாது. அதுதான் என் கொள்கை....''

இவள்தான் அடுக்கடுக்காக எத்தனை வியப்புகளைத் தருகிறாள் என்று நினைத்துக் கொண்டாள் காயத்ரி.

''இப்ப நீ சேலைகளை செலக்ட் பண்ணி முடித்து விட்டாய். இவையெல்லாம் இனி உன்னுடைய சேலைகள். இப்ப இதைப் பத்தி தாராளமா விமரிசனம் செய்யலாம்..''

அவர்கள் இருவருமாக சேலைகளைப் பார்த்துக் கொண்டிருந்தபோது.. அறைக்குள் பிரபாகரன் வந்தான்.

''அண்ணா...'' என்று தான் சேலைகளை தேர்வு செய்துவிட்ட விவரத்தைக் கூற, தமையனின் முகம் பார்த்த

காயத்ரி.. அவனுடைய கண்களில் மாலினியைக் கண்டதும் மின்னிய மின்னலைக் கண்டுவிட்டாள்.

பிரபாகரன் பெண்களிடம் நின்று பேசாதவன். அவன் மாலினியின் முகம் பார்த்துப் பேசியதே உலக மகா அதிசயம் என்ற நினைவில் காயத்ரி இருந்தாள்.

இன்று அவன் விழிகளில் தெரிந்த மின்னலைக் கண்டதும் சட்டென்று மாலினியின் முகம் பார்த்தாள்.

எதையும் இயல்பாக எதிர்கொள்ளும் மாலினியின் முகத்தில் வெட்கச் சிகப்பு வந்திருந்தது. கண்களில் ஆவல் தெரிந்தது. அவளது உடலில் ஒருவித பரவசம் உற்பத்தி ஆகியிருப்பதை காயத்ரியால் உணர்ந்து கொள்ள முடிந்தது.

இவையெல்லாம் ஷியாம்சுந்தரைப் பார்க்கும்போது காயத்ரியிடம் தோன்றும் அடையாளங்கள்.

இனத்தை இனம்தான் இனம் கண்டுகொள்ளும் காதலனைக் கண்டுவிட்டால்.. பெண்மையிடம் தோன்றும் தவிப்பை அதே நிலையில் உள்ள இன்னொரு பெண்மை எளிதாக கண்டுபிடித்துவிடும்.

காயத்ரி.. பிரபாகரனையும் மாலினியையும் கண்டு கொண்டு விட்டாள்.

''என்ன காயத்ரி.. மெக்கானிக்கல் இன்ஜினீயரம்மா இங்கே உட்கார்ந்திருக்கிறாங்க?'' தங்கையிடம் கேள்வி கேட்டபடி மாலினியைப் பார்த்தான் பிரபாகரன்.

''ஞாயிற்றுக்கிழமையில்கூட உன் அண்ணனின் மில்லில் ஆள்கள் வேலை செய்வார்களான்னு கேட்டுச் சொல் காயத்ரி...'' வெட்டும் விழிப் பார்வையுடன் பதிலைச் சொன்னாள் மாலினி.

''அதுக்கும் நான் கேட்டதற்கும் என்ன சம்பந்தமாம்?'' பிரபாகரனின் பார்வை மாலினியை விழுங்கியது.



''இன்றைக்கு ஞாயிற்றுக்கிழமைங்கிறதுதான் சம்பந்தம்..'' மாலினி அவன் பார்வையின் வேகம் தாளமுடியாமல் தலை கவிழ்ந்தாள்..

''ஓ.. மேடம் சன்டேயை என்ஜாய் பண்ணுகிறாங்களாக்கும். இங்கே சேலைகளை வைத்துக்கிட்டு என்ன செய்கிறாங்க?''

''எனக்கு சேலை செலக்ட் பண்ண கைட் பண்ணிக்கிட்டு இருந்தாங்கண்ணா..''

''மெக்கானிக்கல் இன்ஜினீயருக்கு மெஷின்களைப் பத்தித்தான் தெரியும்.. சேலைகளைப் பத்தி என்ன தெரியும்?''

''மில் முதலாளிக்கு குடும்பத்தைப் பற்றித் தெரியும் போது.. எனக்கு சேலையைப் பத்தித் தெரியாதா காயத்ரி..''

''போச்சுடா... மேடம் போர் முரசு கொட்ட ஆரம்பிச்சுட்டாங்க. எங்கே நீ செலக்ட் பண்ணிய சேலைகளைக் காட்டு..''

பிரபாகரன் சுவாதீனமாக மாலினியின் அருகில் அமர்ந்து கொள்வதைப் பார்த்தாள் காயத்ரி.

அதை மாலினி ஆட்சேபிக்கவில்லை என்பதும்.. அவள் இயல்பாக அவன் முகம் பார்த்துப் பேச ஆரம்பித்தாள் என்பதும் அவளது கவனத்தில் பதிந்தது.

''ஸோ.. நைஸ் காயத்ரி.. எல்லாச் சேலைகளும் அழகாக இருக்கு.. இது போதுமா.. இன்னும் வேண்டும்கிறதை எடுத்துக்கம்மா..''

பிரபாகரன் கனிவாகக் கூறியதை.. அவனை விடக் கனிவாக கவனித்துக் கொண்டிருந்த மாலினியைக் கண்டு காயத்ரி மனம் நிறைந்தாள்.

''பிரபாதான் இந்த வீட்டுக்குத் தூண் காயத்ரி.. எனக்குப் பின்னால் அவனுடைய பெண்டாட்டிதான் உனக்குத் தாய்...'' நர்மதா அடிக்கடி இவ்வாறு கூறுவாள்.

மாலினியைப் பார்க்கப் பார்க்க.. இந்தத் தாயாக இருக்க அவளைவிட தகுதி வாய்ந்தவள் வேறு ஒருத்தி இருக்க முடியாது என்று காயத்ரிக்கு தோன்றியது.

மறந்தும் 'நீ ஒரு புடவையை எடுத்துக் கொள்' என்று கண்ஜாடையில் பிரபாகரன் உணர்த்தவில்லை..

'உன் தங்கைக்கு இத்தனை சேலைகளை எடுத்துத் தருகிறாயே... எனக்கு இல்லையா...' என்று மாலினி ஜாடையாகக் கேட்கவில்லை.

அந்தவிதமான கொச்சைத்தனங்கள் இல்லாமல் அவர்கள் ஆழ்ந்த அன்புடன் பார்த்துக் கொண்டார்கள்.

எதையும் எதிர்ப்பார்க்காமல் காதலை மட்டுமே வேண்டும் காதலியின் பார்வையை மாலினியிடம் கண்டாள் காயத்ரி.

எதையும் பணத்தால் வாங்கி வல்லமை படைத்த கோடீஸ்வர பிரபாகரன்... காதலை மட்டுமே கொடுத்து மாலினியின் காதலை வாங்கிக் கொண்டிருந்த விதத்தை அங்கே கண்டாள் காயத்ரி.

தங்கையிடம் பேசிக்கொண்டே மாலினியை பார்வையால் வருடிக் கொண்டிருந்தான் பிரபாகரன்.

அவனது பார்வையின் வீச்சில் தன் வசம் இழந்து கொண்டிருந்தாள் மாலினி.

''காயத்ரி...'' என்று அழைத்துக் கொண்டே அறைக்குள் வந்த சசிரேகா, பிரபாகரனைக் கண்டதும் தயங்கிய நின்றாள்.

''அப்போ ஜவுளிக்கடைக்கு போன் பண்ணி மீதி சேலைகளை எடுத்துக் கொண்டு போகச் சொல்லிவிடவா?''



என்று கேட்டுவிட்டு பிரபாகரன் அறையை விட்டு வெளியே சென்றுவிட்டான்.

போகும்போது மாலினியின் மீது ஒரு பார்வையை வீச அவன் தவறவில்லை..

அன்று மாலை சசிரேகாவுடன் பேசிக் கொண்டிருந்த போது...

''என் கல்யாணம் முடிந்ததும் நாமெல்லாம் ஒரு வேலை செய்ய வேண்டும் அண்ணி..'' என்றாள் காயத்ரி.

''என்ன வேலை?''

''மாலினியை பெரியண்ணனுக்கு பெண் கேட்கும் வேலை..''

'காயத்ரி...''

சசிரேகா ஆச்சரியத்துடன் நாத்தனாரைப் பார்த்தாள்.

'மாலினி இவள் மனதையும் ஜெயித்து விட்டாளா?'

## 89

*சுட்டும் விழிச்சுடரில்... சொக்கும் என் மனதை...*
*கட்டிப் போட்டிருக்கும்... கந்தர்வ காதலையே...*
*என்னவென்று நான் சொல்ல..?*

''நான் முடிவே பண்ணிட்டேன் அண்ணி... எனக்கு மாலினிதான் பெரியண்ணியாக வரணும்..'' காயத்ரி தீர்மானமாக கூறினாள்.

''அந்த அளவுக்கு அவள் மேல் உனக்கு அன்பா காயத்ரி..''

''அந்த அளவுக்கு என் அண்ணன் மேல் அவங்களுக்கும்.. அவங்க மேலே என் அண்ணனுக்கும் அன்பிருக்குன்னு நான் நினைக்கிறேன்..''

'இவளும் கண்டுபிடித்துவிட்டாளா...'

''ரெண்டு பேரும் பார்வையிலேயே சாப்பிட்டுக்கிறாங்க... நானும் ஷியாமும் அடிக்கிறதெல்லாம் என்ன சைட்.. இவங்க அடிக்கிற சைட்தான் தூள்..''

சசிரேகாவின் மனம் அமைதியடைந்தது. அவளுக்கு நர்மதாவிற்கு இந்த விவரம் தெரியும் என்பது தெரியாது. காயத்ரி நர்மதாவின் செல்லப் பெண்.. அவள் சொல்லி நிச்சயம் நர்மதா மறுக்க மாட்டாள் என்ற எண்ணம் அவளுக்கு நிம்மதியைக் கொடுத்தது.

'சித்தப்பா... என் வீட்டுக்காரருடைய அண்ணனுக்கு மாலினியைப் பெண் கேட்கிறாங்க.. நீங்க என்ன சொல்கிறீங்க?'

ஜானகிராமனிடம் இந்தக் கேள்வியை கேட்கப் போகும் நாளை ஆவலுடன் எதிர்பார்க்க ஆரம்பித்தாள் சசிரேகா.

என்னதான் நர்மதாவும் அவள் பெற்ற பிள்ளைகளும் பெருந்தன்மையின் மறுஉருவமாக இருந்தாலும் நர்மதாவின் உறவினர்களின் முன் தான் ஒரு நடுத்தரக் குடும்பத்திலிருந்து வந்தவள் என்ற எண்ணம்தான் சசிரேகாவுக்குள் எழுந்தது.

அவள் மனதில் மிகத் தனிமையாக உணர்ந்தாள். அவளது மனத்திற்கு இதமாக இருந்த நாத்தனார் காயத்ரி திருமணம் செய்து கொண்டு போய்விடப் போகிறாள் என்பதும் அவளது தனிமை உணர்வை அதிகப்படுத்தியது.

தோழமையுடன் இருந்த நாத்தனாரும் புகுந்த வீட்டிற்கு போய்விட... பிரபாகரனுக்கும் தினகரனுக்கும் திருமணமாகி..



அவர்களைப் போலவே கோடீஸ்வர வீட்டுப் பெண்கள் மருமகள்களாக அந்த வீட்டிற்குள் வந்துவிட்டால்.. சசிரேகாவின் நிலைமை என்ன ஆகும்?

ஏற்கெனவே நர்மதாவின் உறவினர் கூட்டம்.. வாய்ப்புக் கிடைக்கும்போதெல்லாம் சசிரேகாவின் மனதை புண்படுத்தத் தயங்குவதில்லை.

சசிரேகா மட்டுமே வீட்டு மருமகளாக இருக்கும் போதே இந்த நிலைமை எனும்போது.. வேறு கோடீஸ்வரப் பெண்கள் இருவர் மருமகள்களாக வந்து.. அவர்கள் ஒன்று சேர்ந்துவிட்டால் சசிரேகா என்ன ஆவாள்?

இந்த எண்ணங்கள் மனதில் இருந்தாலும்.. அதற்காக பிரபாகரனுக்கும் தினகரனுக்கும் பெரிய இடத்திலிருந்து பெண் அமைந்துவிடக் கூடாது என்று சசிரேகா கனவிலும் நினைத்ததில்லை.

அவளுக்குத் தெரியும்.. அவளுக்கு அமைந்தது அதிர்ஷ்டமான வாழ்க்கை என்று நர்மதாவின் உறவினர்கள் சொல்லிக் காட்டுவதில் உண்மை இருக்கிறது என்பதை அவள் அறிவாள்.

கருணாகரனின் காதல் பார்வை அவள் மேல் விழாமல் இருந்திருந்தால்.. சசிரேகாவிற்கு இப்பேர்ப்பட்ட குடும்பத்தில் மருமகளாக வந்து வாழும் பாக்கியம் கிடைத்திருக்காது.

பிரபாகரனுக்கும் தினகரனுக்கும் நிச்சயம் பெரிய கோடீஸ்வரக் குடும்பத்தில் இருந்துதான் பெண்கள் அமைவார்கள் என்பதை அவள் அறிவாள்.

வருவதை எதிர்கொள்ளும் மனப்பக்குவம் என்றைக்குமே அவளுக்கு உண்டு.

மூச்சு முட்டும் கோடீஸ்வர வீட்டு மருமகள் என்ற வாழ்க்கையில்... மாலினியின் வரவை ஒரு மாற்றமாக நினைத்துதான் அவள் வரவேற்றாள்.

அவளது தனிமையுணர்வை உடைத்து தன்னம்பிக்கையைக் கொடுக்கும் தோழியின் துணையாகத்தான் அவள் நினைத்தாள்.

இப்போது.. அந்தத் தோழியே அவளது புகுந்த வீட்டில் இன்னொரு மருமகளாக மாறிவிடும் நிலைமை உருவாகுகையில் சசிரேகா மனப்பூர்வமான மகிழ்ச்சியைக் கொண்டாள்.

அவளும் மாலினியும் ஒரே வீட்டில் மருமகள்களா..? நினைக்கும்போதே அவளுக்குள் உற்சாகம் ஊற்றெடுத்தது. மாலினி இருக்கும் இடத்தில் அன்பு இருக்கும்.. அடக்குமுறை இருக்காது.. தன்னம்பிக்கை இருக்கும்.. தனிமை இருக்காது. மொத்தத்தில் சசிரேகாவின் வாழ்வில் கடைசிவரை தாங்கிப் பிடிக்கும் பிறந்தவீட்டு உறவாக.. உற்ற தோழியாக.. மாலினி கூடவே இருப்பாள்.

அன்று இரவு சசிரேகா நிம்மதியுடன் உறங்கினாள்.

'மல்லிகை' என்ற பெயர் பலகை இருந்த வரிசையில்.. மல்லிகைக் கொடியை நட்டு.. அந்தப் பெயர்ப் பலகையின் மேல் படரவிட்டாள் மாலினி.

''அசத்தறடி..'' என்றான் அருகிலிருந்து கவனித்துக் கொண்டிருந்த பிரபாகரன்.

''எதைச் சொல்கிறீங்க..'' வேலையில் கவனமாக இருந்தபடி மாலினி கேட்டாள்.

''மல்லிகையின் வரிசைக்கு மல்லிகைக் கொடி... முல்லையின் வரிசைக்கு முல்லைக் கொடி... ரோஜாவின் வரிசைக்கு பெயர்ப் பலகையைச் சுற்றி ரோஜாப் பூச்செடிகள். கலக்கறடி கண்ணம்மா..'' கண்ணடித்தான் பிரபாகரன்.

''கொஞ்சம் கேப் கிடைத்தால் போதுமே.. புகுந்து விளையாடுவீங்களே..'' மாலினி செல்லமாய் முறைத்தாள்.



''எதைச் சொல்கிற நீ?'' அறியாதவனைப் போல கேட்டான் பிரபாகரன்.

''அடடா.. இவர் அறியாப் பிள்ளைதான்..''

''பின்னே இல்லையா?''

''இதை உங்க தங்கைகிட்ட சொல்லுங்க நம்பிருவா. நான் நம்ப மாட்டேன்..''

''ஏண்டி?''

''உங்க வேலையெல்லாம் எனக்குத்தானே தெரியும்?''

''அப்படி என்ன டகுல்பாச்சி வேலையைக் கண்டுவிட்ட?''

''அசத்தறேன்னு சொன்னீங்களே.. எதைச் சொன்னீங்க..''

''பூங்கொடியைப் பார்த்துச் சொன்னேன்..''

''பூங்கொடியைப் பார்த்துச் சொன்னீங்களா.. இல்லை.. அதை நட்டு வைத்துக் கொண்டிருக்கிறவளைப் பார்த்துச் சொன்னீங்களா?''

''இரண்டையும்தான்.. இப்ப என்னாங்கிற?''

''ரௌடி..''

''அப்போ ஹிட்லர்.. இப்ப ரவுடியா?''

''ஆமாம்.. நேற்று எதுக்கு அந்த ஆளை அப்படி அடிச்சீங்க?''

''அவன் என்ன செய்தான்னு உனக்குத் தெரியுமா?''

''எதைச் செய்தாலும்.. தவறுக்கு தண்டனை கொடுக்கணும்.. அடிக்கலாமா?''

''சிமெண்ட் மூட்டைகளை விற்றிருக்கிறான் மாலினி..''

''வேலையை விட்டு நிறுத்தலாமே...''

''அது எனக்குப் போதாது..''

''இது அசுரத்தனம் பிரபா..''

''எது?''

''அடிப்பது...''

''அவன் செய்தது அயோக்கியத்தனம்.. என்னிடம் இருப்பவங்க வேலையில் முன்னே பின்னே இருக்கலாம். அதை நான் பொறுத்துக் கொள்வேன். திருட்டும் பொய்யும் துரோகமும் இருக்கக்கூடாது. தொலைத்துக் கட்டிவிடுவேன். இதை நீ அசுர குணம்னு சொன்னால்.. ஆமாம்.. நான் அப்படித்தான். அசுரன்தான்..''

அந்த அசுரன் அழகாக இருந்தான். முன் பக்க சிகை கலைந்து.. பார்ப்பதற்கு கவர்ச்சியாக இருந்து தொலைத் தான். அவனது கோபம்கூட அழகாக இருந்தது. அவனது கம்பீரம் அவனது அழகுக்கு அழகு சேர்த்தது.

அவனது கழுத்தில் கைகளை மாலையாக்கி.. அவன் கன்னத்தில் முத்தமிட வேண்டும் போல அவளுக்கு இருந் தது. மனதை மறைக்க அவள் போராடிக் கொண்டிருக்கை யிலேயே மீண்டும் அவன் கண்சிமிட்டினான்.

''என்னடி அப்படிப் பார்க்கிற? என் மேல் ஆசைப்படு கிறாயா?''

''நினைப்புதான்.. அசுரனின் மேல் யாருக்கு ஆசை வரும்?''

''உனக்கு வரும்..''

''வராது..''

''பார்ப்போமா...''

அவன் சவால் விட்டான். அவனது ஆண்மை அவளை காந்தமாய் அவனுக்கருகில் இழுக்க.. அவள்..



''பார்ப்போம்..'' என்று பதிலுக்கு சவால் விட்டாள்.

அவனிடம் தோற்க வேண்டும் என்ற ஆவல் அலை கடலாய் மனதுக்குள் பொங்குவதை இன்பத்துடன் அனுபவித்தாள்.

அவளது புருவங்கள் ஏறி இறங்கி அவனை சவாலுக்கு அழைத்தன. அவன் முழுக்கை சட்டையின் கை பாகத்தை மடக்கி விட்டுக் கொண்டான்.

''அட.. முஸ்தீபெல்லாம் பலமாயிருக்கு..'' அவள் சீண்டினாள்.

''இருடி.. உனக்கு நான் யாருன்னு காட்டறேன்..'' அவன் அவளை நெருங்கினான்.

''அது எனக்குத் தெரியாதா? நீங்கதான் அசுரனாச்சே..''

''இந்த அசுரன்.. இந்த அழகியை ஸ்வாஹா பண்ணப் போறான்..''

அவன் நெருங்கி வர.. அவள் விலக முயலாமல் எதிர் பார்ப்போடு நிற்க.. அவளது முகத்தை இறுக்கிப் பிடித்து அவன் குனிய முயன்றபோது.. கட்டடத்தின் அந்தப் பக்கம் பேச்சுக்குரல் கேட்டது. தொடர்ந்து காலடியோசை அவர்களை சமீபிக்க.. மாலினி சட்டென்று விலகிக் கொண்டாள். பூங்கொடியைப் பார்ப்பதைப் போல அவள் குனிந்து கொள்ள.. பிரபாகரன் ஏமாற்றத்துடன் வந்தவர் களிடம் பேசப் போய் விட்டான்.

மாலையில் வீடு திரும்பும்போது காரில் கருணா கரனும் இருக்க.. மாலினி பின்ஸீட்டில் ஏறிக்கொண்டாள். அண்ணனும் தம்பியும் காயத்ரியின் திருமண ஏற்பாடு களைப் பற்றிப் பேசிக் கொண்டே வர.. மாலினி தன்னை அந்நியமாக உணர்ந்தாள். அவளது மனம் பிரபாகரனின் அண்மை கிடைக்காத ஆதங்கத்தில் சிணுங்கியது...

முன்பக்க கண்ணாடி வழியாக மாலினியின் வாடிய முகத்தைப் பார்த்தவாறே தம்பியிடம் பேசிக் கொண்டிருந்தான் பிரபாகரன்.. வீட்டுக்கு வந்ததும் கருணாகரன் இறங்கிப் போய்விட.. தேங்கி நின்றான். பின்ஸீட்டிலிருந்து இறங்கிய மாலினியிடம்..

''நாளைக்கு உன் மில்லுக்கு லீவ் சொல்லிவிடு...'' என்றான்.

''எதுக்கு..'' புரியாமல் விழித்தாள் மாலினி.

பதில் சொல்ல அவன் அங்கு நின்றால்தானே.. புயல் வேகத்தில் வீட்டுக்குள் போய்விட்டான். வீடு பூராவும் விருந்தினர் நடமாடிக் கொண்டிருக்க.. அதற்குப் பின்னால் மாலினியால் அவனைப் பார்க்க முடியாமல் போய்விட்டது.

தலை வலிப்பதைப் போல தோன்ற.. இரவு உணவை அறைக்குக் கொண்டு வரச் சொல்லிவிட்டு சுருண்டு படுத்துவிட்டாள் மாலினி.

சூடான பாலோடு தேடி வந்தாள் சசிரேகா.

''என்னடி செய்யுது? ஏன் சாப்பிட கீழே வரலை?''

''கூட்டமா இருக்கு சசி.. அவங்க உனக்கு சொந்தக்காரங்க. எனக்கு அந்நியம்தானே.. ஐ ஃபீல் அன் ஈஸி..''

''இனி என் சொந்தக்காரங்க.. உனக்கும் சொந்தக்காரங்கதான்.. இந்த பாலைச் சாப்பிடு..''

மறைபொருளாய் பேசிவிட்டு சசிரேகா போய்விட்டாள். மாலினி படுத்துத் தூங்க முயன்றாள். ஏன் தன் மனம் சோர்வடைகிறது என்று அவளால் உணர முடிந்தது.

அவளது உடலும் மனமும் பிரபாகரனைத் தேடின. அவன் கிடைக்காத ஏமாற்றத்தில்தான் அந்த சோர்வு.






*என்றேனும் ஒரு நாளில்.. உன் நிழலில் வாழவேண்டி..*
*ஏங்குகின்ற என் மனதை...*
*என்னவென்று நான் சொல்ல..?*

''ஏன் லீவ் போடச் சொன்னீங்க?''

''காரணமாகத்தான்..''

''என்ன காரணம்?''

''அதைச் சொன்னால்தான் என்கூட வருவியா?''

''இந்த விளையாட்டுக்கு நான் வரலே..''

''நான் இன்னும் விளையாட்டையே ஆரம்பிக்கலையே..''

''ம்ச்சு.. இதுக்கொன்றும் குறைச்சலில்லை..''

''ஏண்டி.. இப்ப என்ன ஆச்சு...''

''ஒண்ணும் ஆகலை...''

மாலினி ஜன்னல் பக்கமாய் திரும்பிக் கொண்டாள். அவளது கோபத்தை வேடிக்கையாகப் பார்த்தான் பிரபாகரன்.

''எதையும் வாய்விட்டு சொல்லணும்..''

''சொல்லிட்டாலும்..''

''எதுக்கு இப்ப ராகம் போடுகிறவ..''

மாலினி அவனை முறைத்தாள். வாய்க்குள் முணுமுணுத்தாள்.

''ஆமாம்.. கிட்டே வரவேண்டியது.. ஆள் வந்தால் வேலையைப் பார்க்க கிளம்பிப் போய்விட வேண்டியது. காரில் பேசலாமுன்னு பார்த்தா.. தம்பியைக் கூப்பிட்டு சீராட்டிக்கிட்டே வர வேண்டியது..''

''ஏய்ய்...''

பிரபாகரன் காரை நிறுத்திவிட்டான்..

''எதுக்கு இப்ப காரை ஓரம் கட்டுகிறீங்க?''

''என்னடி சொன்ன?''

''ஒண்ணும் சொல்லலை..''

''எல்லாம் என் காதில் விழுந்தது...''

மாலினி தூரத்தில வந்து கொண்டிருந்த காரைப் பார்த்தாள்.

''இங்கே ஒருத்தன் பேசிக்கிட்டே இருக்கேன்.. அங்கே என்னடி பார்வை?''

''இல்லை.. நீங்க கிட்ட வருவீங்க.. அந்தக் காரும் கிட்ட வரும்..''

''என்ன.. சினிமா கினிமா எடுக்கப் போகிறாயா? ஓபனிங் ஸீனைப் போல கதையளக்கிற?''

''கிட்ட வரும் காரிலிருந்து உங்க சொந்தக்காரங்க யாராவது இறங்கி வருவாங்க. நீங்களும் பாசப்பறவையை பறக்கவிடுவீங்க. அப்புறம் நான் வெறும் பார்வையாளரா உட்கார்ந்து வேடிக்கை பார்க்கணும்.. தேவையா?''

''உன்னை...''

பிரபாகரன் வேட்கையுடன் அவளை நெருங்க.. அவர்களது காரை நெருங்கிய அந்தக் கார் நின்றது.

''பிரபாகரா..'' என்ற குரலுடன் ஒருவர் இறங்கினார்.

''நான் சொல்லலை?'' மாலினி எரிச்சலுடன் விலகிக் கொண்டாள்.

''மாமா..'' உண்மையிலேயே பிரபாகரன் பாசத்துடன் அவரை அழைத்தவாறு காரை விட்டு இறங்கினான்.



மாமனும் மருமகனும் தழுவிக் கொண்டனர். காயத்ரியின் திருமணத்தைப் பற்றி அவர் விசாரிக்க ஆரம்பிக்க.. மாலினி காரில் இருப்பதை அவர் கவனித்து விடாமலிருக்க.. அவரது தோள் தழுவி.. மறைத்து நின்று பதில் சொல்லிக் கொண்டிருந்தான் பிரபாகரன்.

ஒருவழியாக அவர் கிளம்பிப் போனதும் காரில் ஏறியவன்..

''ஊ..ப்..ப்..'' என்று வாயைக் குவித்து ஊதினான். மாலினி சலனமில்லாமல் வெளியே பார்த்துக் கொண்டிருக்க..

''ஸாரிடி..'' என்று அவள் தோளில் கை வைத்தான்.

''காரைக் கிளப்புங்க..''

''ஸாரி சொல்லிட்டேனில்ல..''

''இப்ப காரைக் கிளப்புகிறீங்களா.. இல்லை நான் இறங்கி நடந்து போய்விடவா?''

வேறுவழியின்றி காரைக் கிளப்பினான் பிரபாகரன்.

''மில்லுக்கு காரை விடுங்க...''

''நான் லீவு போடச் சொன்னேனே.. உன் காதில் விழுகவில்லையா?''

''விழுந்தது...''

''நீ லீவு போட்டிருக்கிறதைச் சொன்னதும் என் காதில் விழுந்தது. அப்புறம் எதுக்கு மில்லுக்கு காரை விடச் சொல்கிற...''

''லீவை கேன்சல் பண்ணப் போகிறேன்..''

''அதுக்கு என் பர்மிஷன் வேண்டாமா?''

''நீங்க யார் எனக்குப் பர்மிஷன் கொடுக்க?''

''உன் புருஷன்..''

மாலினிக்குள் உணர்வுகள் பொங்கின. இவன் பாட்டுக்கு இப்படிப் பேசிக் கிளப்பி விடுவான். கொஞ்ச நேரத்தில் அவனுடைய சொந்த பந்தங்களோடு கதை பேச போய்விடுவான். இவன் பேச்சில் எல்லாம் மயங்கக் கூடாது என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள்.

''என்னடி.. என் பெண்டாட்டி.. வாயைத் திறந்து பேச மாட்டேன்கிற.. இன்னிக்கு என்ன மௌன விரதமா?''

''பிரபா.. வேண்டாம்..''

''என்ன வேண்டாம்.. நான் உனக்கு வேண்டாமா?''

'ஏண்டா இப்படி என்னைப் பாடாய் படுத்தற?' அவளுக்கு கண்ணீர் முட்டிக்கொண்டு வந்தது.

அவனது மார்பில் முகம் புதைத்து அவனது முதுகில் கைவிரல்கள் பரவ, அவனைத் தன்னோடு இறுக்கிக் கொள்ள வேண்டும் என்ற தவிப்பு அவளுக்குள் எழுந்தது.

என்று.. காயத்ரியின் திருமணத்தை முன்னிட்டு வீட்டுக்குள் உறவினர் வந்து குழும ஆரம்பித்தார்களோ அன்றிலிருந்து பிரபாகரனை அவளால் வீட்டுக்குள் தனிமையில் சந்திக்க முடியாமல் போய்விட்டது.

தோட்டத்துக்குப் போனால் அங்கே உறவினர்கள் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். மொட்டை மாடிக்குப் போனால் அங்கே விச்ராந்தியாக... வந்திருந்த கார்களின் டிரைவர்கள் பாய் விரித்துப் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தார்கள்.

மாலினி பதறியடித்து கீழே வந்துவிட்டாள். ஸ்வேதா கூடக் கேட்டுவிட்டாள்.

''என்ன மாலினி.. முன்போல நீ தோட்டத்திலேயும்.. மொட்டை மாடியிலேயும் வாக்கிங் போகிறது இல்லை போல..''



''அதுதான் உனக்குத் தெரிந்திருக்கே.. தெரிந்து கிட்டே ஏன் கேட்கிற?''

''சும்மா.. உனக்கு ஆறுதல் சொல்லலாமேன்னுதான்..''

''இதில் ஆறுதல் சொல்ல என்ன இருக்கு?''

''நிறைய இருக்கு...''

''எனக்குப் புரியலை...''

''உன்க்கா புரியாது?''

ஸ்வேதா விஷமச் சிரிப்புடன் போய்விட்டாள். என்றுமே அவளது பேச்சை அலட்சியம் செய்துவிடும் மாலினிக்கு அன்று ஏனோ மனம் துணுக்குற்றது.

அதற்கேற்றாற்போல பிரபாகரனுடன் பேச அவளுக்கு தனிமை கிடைக்காமல் போனது.

காரில் போனாலும் கூட யாராவது வந்தார்கள். முன்ஸீட்டில் அவன் பக்கத்தில் அமர்ந்து வார்த்தையாடிக் கொண்டே போன காலம் போய் மாலினி பின் ஸீட்டில் அமர வேண்டியதாய் போய்விட்டது.

மாலினிக்குள் கலக்கம் சூழ்ந்தது. ஒரு நிமிடம்.. ஒரே ஒரு நிமிடம்.. அவனுடன் தனிமை கிடைத்தால் போதும். அவனது கை அணைப்பில் கட்டுண்டு நின்றால் போதும். அவளது மனக்கலக்கம் பறந்துவிடும்.

அந்த ஒரு நிமிடத் தனிமை வாய்க்காமல் தள்ளிக் கொண்டே போக.. மாலினி வாடிப் போனாள்.

அவளுக்குள் இருக்கும் துடிப்பு ஏன் பிரபாகரனுக்கு இல்லை?

இதுதான் அவளது மனச் சிணுக்கத்திற்கான காரணம்.

''ஏண்டி.. காயத்ரியின் கல்யாணம் பக்கத்தில் இருக்குதுல்ல?''

''யார் இல்லைன்னு சொன்னது?''

''நீதானே என்னை பெரியண்ணனாய் லட்சணமாய் இருங்கணும்ன்னு சொன்ன?''

''அடேங்கப்பா.. நான் சொன்னதனாலதான் ஐயா பொறுப்போட இருக்கீங்களாக்கும்.. இல்லைன்னா பொறுப்பில்லாம ஊர் சுத்துவீங்களாக்கும்..''

''இந்த 'உக்கும்..' போடுகிற வேலையை விட்டு விட்டு உருப்படியாய் ஒரு வேலை செய்கிறயா?''

''எனக்கும் வேலை கொடுத்தாகிறதா?''

''பின்னே.. சும்மா விடுவேனா.. நீ யாரு..''

''அதையும் நீங்களே சொல்லிருங்க சாமி..''

''என் பெண்டாட்டி..''

மாலினி பல்லைக் கடித்தபடி அவனை முறைக்க ஆரம்பிக்க.. அவனோ...

''என்னடி.. ஒரு மார்க்கமாய் பார்க்கிற?'' என்று விசாரித்து வைத்தான்.

''வேண்டாம்.. என் கோபத்தை கிளறாதீங்க.. சொல் லிட்டேன்..''

''அடச்சீ.. அடங்கு.. இப்ப என்ன ஆச்சுன்னு இந்த குதி குதிக்கிற.. ஏண்டி.. நீ காயத்ரிக்கு அண்ணியில் லையா?''

இதை இல்லையென்று எப்படிச் சொல்வது.. மாலினி மௌனித்தாள்.

''இதுக்கு மட்டும் வாயைத் திறந்து பதிலைச் சொல்ல மாட்டாயே.. உனக்கு ஏண்டி அவ மேல பொறாமை?''

''வேண்டாம் பிரபா.. என்னிடம் வம்புக்கு வராதீங்க.. எனக்கு நல்லா வந்திரும் வாயில...''



''வந்தால் பேசு.. இப்ப நான் பேசலையா?''

''உங்க தங்கை மேல எனக்கெதுக்கு பொறாமை.. நீங்க வாங்கிக் கொடுத்திருக்கிற வைரத்துக்கும் பட்டுக்கும் பொறாமைப்படப் போகிறேனா?''

''அதெல்லாம் உனக்கு வேண்டாமேடி.. உனக்கு வேண்டியது நான் மட்டும்தானே. நான் உன்னை மறந்துட்டு காயத்ரியின் கல்யாண வேலையில் மூழ்கிட்டேன்.. அந்த கோபம்தானே உனக்கு?''

''பிரபா...''

அவள் மனத்தைப் படித்ததைப் போல அவன் பேச வும்.. அவளுக்கு கண்கலங்கிவிட்டது. விழுகப் போகிறேன் என்று பயமுறுத்திக் கொண்டிருந்த கண்ணீர்த் துளிகள் கன்னத்தில் விழுந்து சிதற.. பிரபாகரன்..

''மாலினி..'' என்று காரை நிறுத்தப் போனான்.

''வேண்டாம்.. நிறுத்தாதீங்க..''

''ஏண்டி..''

''போய்க்கிட்டே இருங்க பிரபா.. இந்தக் காரில் இப்ப நீங்களும் நானும் மட்டும்தான்! இந்த தனிமைக்காக நான் ஏங்கிப் போயிருக்கிறேன்.. இப்ப நீங்க எனக்கு மட்டும் சொந்தம். காரை நிறுத்தினால்.. உங்க வீட்டுக்கும் இந்த ஊருக்கும் சொந்தமாகிடுவீங்க..''

பிரபாகரன் காரை நிறுத்தாமல் வேகம் கூட்டினான். அவள் நகர்ந்து அவன் தோள் மீது சாய்ந்து கொண்டாள். தூரத்தில் ஒரு அணைக்கட்டு தெரிந்தது. மாலினி வியப் போடு நிமிர்ந்து அமர்ந்தாள்.

''அது டேம் போல இருக்கே..''

''டேம்தான்.. பேச்சிப்பாறை டேம். இன்னும் கொஞ்ச தொலைவில் பெருஞ்சாறை டேம் இருக்கு. இன்னிக்கு

பூராவும் நாம இந்த இரண்டு டேம்களைத்தான் சுற்றி வரப் போகிறோம்..''

''நாள் பூராவுமா?''

''ஆமாம்..''

''காயத்ரி கல்யாண வேலை இருக்கே...''

''அதை சாயந்திரம் போய்ப் பார்த்துக்கறேன்..''

அணைக்கட்டின் வாசலில் காரை அவன் நிறுத்தினான். மாலினி இறங்காமல் அவன் முகத்தைப் பார்த்தாள்..

''என்னடி?''

''எனக்காகவா பிரபா?''

''இல்லை.. எனக்காக..''

## 91

*என் முகம் பார்த்து என் உணர்வை...*
*நீ அறிகின்ற பொழுதை...*
*என்னவென்று நான் சொல்ல...?*

இரு பக்கமும் நீண்டிருந்த சுற்றுச் சுவர்களுக்கு மத்தியில்... பாலம் போல பரந்து விரிந்து நீண்ட பாதையாக கண்முன் இருந்தது அணைக்கட்டு.

அதன் கைப்பிடிச் சுவரின் மீது சாய்ந்து அணைக்கட்டை வேடிக்கை பார்த்தாள் மாலினி.

ஒரு பக்கம் அகன்று பரந்த ஆறு.. கடலை நினைவுறுத்த.. மறுபக்கம் திறந்துவிடப்பட்டிருந்த மதகுகளில் பொங்கி வழிந்த தண்ணீர்.. அருவியை நினைவுபடுத்தியது.



''வாவ்..'' என்று அவள் ரசிக்க.. காற்றில் பறந்த முந்தானையோடு.. கலைந்திருந்த குழல் கற்றையை ஒதுக்கி விட்டபடி தேவதையைப் போல் நின்றிருந்த அவளை ரசித்தான் பிரபாகரன்.

அவனது பார்வையை உணர்ந்தவளாக முகம் சிவந்து சிணுங்கினாள் மாலினி.

''எதுக்கு அப்படிப் பார்க்கறீங்க?''

''என்கிட்ட என்னடி இருக்கு?''

''பிரபா..''

''கோடி கோடியாய் பணமிருக்குன்னு சொல்லாதே. அதை நீ திரும்பிக்கூடப் பார்க்க மாட்ட. நான்கு நாளாய் உன்னோடு தனியாய் நான் பேசலை. அதுக்காக இந்த அளவுக்கு வாடிப் போயிட்டயே. என் மேல் அவ்வளவு ஆசையாடி உனக்கு?''

பேண்ட்டின் இரு பக்க பாக்கெட்டுகளிலும் கைகளை விட்டுக் கொண்டு காற்றில் முடி பறக்க அவன் நின்ற கோலம் அவளைக் கவர்ந்து இழுத்தது.

''ஆமாம்.. ஆசைதான்..'' என்றாள் அவள்.

''மாலினி...'' அவன் அருகே வர..

''ஸ்ஸ்.. இது பப்ளிக் பிளேஸ்..'' என்று விலகினாள்..

மரங்கள் அடர்ந்த பகுதியில் அப்படி விலக அவளால் முடியவில்லை. யாருமற்ற தனிமையில்.. வெளிச்சம் நுழையாத காட்டுக்குள்.. நீரோடையின் அருகே அவன் அவளைத் தொட்டு தழுவிக் கொண்டபோது அணை உடைந்த வெள்ளமாய் அவன் முகம் பற்றி முத்தங்களைப் பதித்தாள்.

''மாலினி..''

அந்த வேகத்தை எதிர்பார்த்திராதவன் திகைத்தான். வேட்கையுடன் அவளை இழுத்து அணைத்தான். அவனது கைகள் அவள் மேல் பரவிப் படர.. அவள் கண்மூடி அதை அனுமதித்தாள்.

மரத்தின் கிளையில் சாய்ந்திருந்தவளின் மேல் அவன் சாய்ந்து முத்தம் பதிக்க..

''ஐ லவ் யூ அசுரா..'' என்றாள்.

''அசுரனின் வேகத்தை இன்னும் நீ தெரிந்துகொள்ளலை..''

''நீங்க தெரிய வைக்கலைன்னு சொல்லுங்க..''

''ஏய்ய்..''

அவன் வேகத்துடன் இன்னும் அவளை நெருங்கி இறுக்கிக் கொள்ள.. அவனது காதோரமாக அவள் பாடினாள்..

*''அழகிய அசுரா.. அழகிய அசுரா..*
*அத்துமீற ஆசையில்லையா..?*
*கனவில் வந்து.. எந்தன் விரல்கள்..*
*கிச்சு கிச்சு மூட்டவில்லையா..?''*

அவளது பாடல் அவனை அழைக்க.. அவன் அத்து மீறினான். அவளது விரல்கள் நிஜத்தில் அவன் மேல் படர்ந்து பரவின.

*''வட்ட.. வட்டமாக.. வானவில்லை வெட்டி..*
*குட்டி.. குட்டி மாலையாக்குவேன்..*
*புரவியேறி.. நீயும்.. என்னை*
*அள்ளிக் கொண்டால்..*
*மூச்சு முட்ட.. முட்ட.. கட்டுவேன்...''*

வானவில்லின் துணையில்லாமலே கைகளை மாலையாக்கி அவன் கழுத்தில் தொங்கினாள் அவள். அவன் புரவியேறி அவளை அள்ளிச் செல்லாமல்.. கைகளால் அவளது இடுப்பை வளைத்து அள்ளிக் கொண்டான்.



*''கூடுவிட்டு.. கூடு பாயும்..*
*வித்தை கற்று..*
*உன்னை அடைவேன்...''*

அவனது முகத்தோடு முகத்தை தேய்த்து.. அவனுக்குள் கலந்துவிட அவள் துடித்தாள். அவளைத் தன்னுடன் சேர்த்து இறுக்கி.. ஒருடலாகி விட அவன் துடித்தான்.

அவளது நீண்ட பின்னல் அவன் முகம் தொட்டுச் செல்ல.. அவன் விழி மூடி மயங்கினான். அவளது கண்களுக்குள் கண்கள் பார்த்து.. தவிப்புடன் மூச்சிரைத்தான்.

*''கடல் நீலத்தில் கண்கள்...*
*கொண்ட பெண்ணிடம்..*
*செல்வம் சேரும்...''*

அவள் கண்சிமிட்டிப் பாட.. அவன் அவளது இமை மீது முத்தம் பதித்தான்.

*''கருங்கூந்தல் உள்ள பெண்கள்*
*தொட்ட காரியம்*
*வெற்றி ஆகும்..''*

அவனைத் தொட்டு விளையாடிய அவளது பின்னலில் அவன் முத்தம் பதித்தான்.

*''உச்சந்தலையில் உள்ள*
*என் ஆருயிர் மச்சம் சொல்லும்..''*

அவளது உச்சந்தலையில் முத்தம் பதித்து அவள் முகம் பார்த்தான் அவன்.

*''என்னைச் சேர்பவன் யாரோ..*
*அவன் சகலமும் பெற்று*
*வாழ்வான் என்று...''*

அன்று அவளை அவன் சேரவில்லைதான். ஆனால்,

ஆண்டாண்டு காலமாய் சேர்ந்து வாழ்ந்துவிட்ட நிறைவும் மகிழ்வும் அவர்களுக்குள் வந்திருந்தது.

அது சேர்க்கையில்லாத சேர்க்கை. ஒருவரின் மேல் மற்றவருக்கு இருக்கும் ஆசையின் அளவை உணர்த்திய சேர்க்கை. பிரபாகரனால் மட்டுமே அவளது மனதையும் உணர்வுகளையும் உடலையும் ஆக்கிரமிக்க முடியும் என்று அன்று அவன் கண்டுகொண்டான். மாலினியால் மட்டுமே அவனது ஆண்மையைத் தட்டி எழுப்ப முடியும் என்பதையும் அவன் அன்று கண்டுகொண்டான். எந்தப் பெண்ணாலும் கிளற வைக்க முடியாத உணர்வுகளை அவனுக்குள் கிளர்ந்து எழச் செய்தாள் மாலினி.

அவளுக்கு அவன் மட்டுமே தேவையாக இருந்தான். ஊரெல்லாம் அவனது பெயரைச் சொல்லக்கூடத் தயங்கி மரியாதையுடன் இனிஷியலைச் சேர்த்த பெயரின் முதல் எழுத்தை சொல்லி விலகி நின்றபோது.. அவள் -

''அசுரா..'' என்று அவனை அழைத்தாள்.

அவனது குடும்பம்கூட அவனிடம் நிழலையும் பாதுகாப்பையும்தான் வேண்டியது. மாலினி அதைக்கூட அவனிடம் கேட்கவில்லை.

அவள் அவனைத்தான் அவளுக்காக கேட்டாள். அவனது காதலைத்தான் கேட்டாள். அவனது அண்மையைத்தான் கேட்டாள். அவனது அண்மையில் மெய்சிலிர்த்தாள்.

அவனை அவனுக்காக மட்டுமே நேசித்த பெண் அவள்.. அன்று அவளுடன் கழித்த அந்த ஒரு நாள் பொழுதை தன் வாழ்க்கையில் என்றுமே மறக்க முடியாது என்று உணர்ந்தான் பிரபாகரன்.

அவனது இதழ்களின் ஈரம் அவளது உடலெங்கும் படிந்தும்.. அவள் அதைத் தடை செய்யவில்லை. முழு மனதாய் அவனிடம் அவளை ஒப்புக்கொடுத்தாள்.



காதலின் வேகத்தை உணர்த்திய பிரபாகரன், அவளது அடைக்கலத்தை பயன்படுத்திக் கொள்ளாமல் கண்ணியம் காத்தான். ஆனாலும் அவளுடன் சேராமல் சேர்ந்தான். வாழாமல் வாழ்ந்தான்.

மாலை மயங்கியபோது.. மயங்கிய மனங்களுடன் அவர்கள் வீடு திரும்பினார்கள்.

*'அங்கே.. மாலை மயக்கம்..*
*யாருக்காக..?*
*இங்கே.. மயங்கும் இரண்டு*
*பேருக்காக...'*

காரில் பாடல் ஒலித்துக் கொண்டிருந்தது. மாலினி மனநிறைவுடன் அவன் மேல் சாய்ந்திருந்தாள். அடிக்கடி திரும்பி அவளது உச்சந்தலையில் முத்தமிட்டபடி மெதுவாக காரை ஓட்டினான் பிரபாகரன்.

தூரத்தில் வீடு தெரிந்தது. மாலினி விலகி எழுந்து அமர்ந்தாள். காரை வேகம் குறைத்தான் பிரபாகரன்.

''வீடு வந்துருச்சுடி...''

''ம்ம்ம்..''

''காயத்ரியின் கல்யாண வேலைகளில் இனி முழு மூச்சாய் நான் இறங்கிவிடுவேன் மாலினி...''

''அதுதானே நியாயம். ஆனா.. நேரா நேரத்திற்கு சாப்பிட்டு விடுங்க பிரபா. எனக்கு அதுதான் கவலையாயிருக்கு..''

'இதுதான்.. இவள்..' பிரபாகரன் காதலுற்றான்.

''என்னைக் கவனிச்சுக்கத்தான் நீ இருக்கயே..''

''வெளிப்படையாய் கவனிச்சுக்க முடியுமா?''

''எல்லாம் காயத்ரியின் கல்யாணம் வரைதான். அதற்கு அடுத்த முகூர்த்தத்திலேயே நான் உன் கழுத்தில் தாலியைக் கட்டி விடுவேன். அதுக்கப்புறம் நீ வெளிப் படையாய் என்னை சொந்தம் கொண்டாடலாம். கவனிச் சுக்கலாம்.. இன்னும்..''

''இன்னும்?''

''ராத்திரிகளில் என்னுடன் தூங்கலாம்..''

அவன் கண்சிமிட்டிச் சிரிக்க.. அவள் முகம் சிவந்தாள்.

''ச்சீ.. நீங்க அதிலேயே இருங்க..''

''மாலினி...''

''ம்ம்ம்...''

''நான் உன்னுடையவன்டி.. உன் பிரபாகரன்...''

''எனக்குத்தான் அது தெரியுமே...''

''உன்கூடப் பேச முடியாமல் போனாலும்.. ஏன்.. நின்று பார்க்க முடியாமல் போனாலும் நீ வருத்தப்பட்டுக்க கூடாது..''

''இந்த ஒரு நாள் போதும் பிரபா.. நான் காத்திருப் பேன்..''

''வீடு பூராவும் சொந்தம்.. பந்தம் வந்து இறங்கியிருக் குடி..''

''தெரியுது பிரபா..''

''தேவையில்லாமல் கதை கட்டி விடுவாங்க.. நாம புருஷன் பெண்டாட்டியாகப் போகும் நாள் அதிக தூரத்தில் இல்லைடி..''

''நம்புகிறேன் பிரபா..''

''காயத்ரி எங்கள் வீட்டுக்கு ஒரே பெண். எங்க செல்லத் தங்கை. அவள் கல்யாணம் குறை சொல்லாத படி நடக்கணும்..''



''ஷ்யூர்.. இப்ப அதுதான் நமக்கு முக்கியம்.. நான் என்னாலான உதவிகளைக் கட்டாயம் செய்வேன்..''

''இது.. இது. இதைத்தான் உன்னிடம் எதிர்பார்த் தேன்..''

''நீங்க எதிர்பார்க்கலைன்னாலும் நான் என் கடமை யைச் செய்வேன்..''

''எதிர்பார்க்காததையெல்லாம் எனக்கு அள்ளி அள்ளி கொடுத்தவளாச்சே நீ...''

''அடி வாங்கப் போறீங்க. படவா.. முதலில் தங்கை கல்யாணத்தைப் பாருங்க..''

''உனக்குக் கொஞ்சம்கூட என் மேல் பயமே இல்லைடி..''

''எதுக்குப் பயப்படணும்.. நீங்க என்ன சிங்கமா.. புலியா, இல்லை கரடியா..?''

''அசுரன்..''

அவன் சிரித்தான். அந்த அழகிய அசுரனின் சிரிப் பில் மனம் மயங்கினாள் மாலினி.

''இப்படிப் பார்த்து.. சிரித்து வைக்காதீங்க பிரபா..''

''ஏண்டி?''

''என்னை நான் கண்ட்ரோல் பண்ணிக்க வேணாமா? அது கஷ்டமாப் போயிடும்..''

''மாலினி...''

''ஐ லவ் யூ அசுரா...''

வீட்டு வாசலில் இறங்கியபோதே.. மறுபக்கம் கார் கதவைத் திறந்து இறங்கிய பிரபாகரனை உறவினர் கூட்டம் சூழ்ந்து கொண்டது. மாலினி தனியாக வீட்டுப் படியேறினாள்.

92

உறவாக உனைக் கண்ட என்னை...
பிரிவைச் சொல்லச் சொன்னால்..
என்னவென்று நான் சொல்ல..?

விழாக் கோலம் பூண்டிருந்த வீட்டில்.. வண்ணத்துப் பூச்சிகளாக வயதுப் பெண்கள் நடமாடிக் கொண்டிருந் தனர். வெளியே ஒரு பெண்ணைப் பார்த்தாலே காதல் கணையை வீசிவிடத் துடிக்கும் தினகரனுக்கு வீடு நிறையப் பெண்கள் இருந்தால் எப்படியிருக்கும்?

அவன் வீட்டை விட்டு நகராமல் செல்போனில் அவர் களைப் படம்பிடித்தபடி பின்னாலேயே அலைந்தான்.

பெரிய வீட்டுப் பெண்கள்.. இயல்பாகவே வைரமும் பட்டுமாக ஜொலிப்பார்கள். விழா நாளின் அதிகப்படி அலங்காரத்தில் தேவதைகளைப் போல் உலா வர.. தினகரன் தேன் குடித்த நரியானான்.

பவித்ராவிற்கு அதைப் பார்க்கப் பார்க்க பைத்தியம் பிடித்துவிடும் போல இருந்தது. மனம் வலிக்க.. அவள் பால்கனியில் நின்றுகொண்டிருந்தபோது.. வேலையி லிருந்து வீடு திரும்பிய மாலினி அவளைக் கண்டாள்.

வேலையிருக்கிறது என்று பிரபாகரன் முதலிலேயே சொல்லியிருந்தான். பரந்தாமன் அவளை அழைத்துக் கொண்டு வந்தார். வழியெல்லாம் அவர் பழம் பெருமை யைப் பேசிக் கொண்டே வர.. சிரத்தையுடன் அதைக் கேட்டுக்கொண்டே வந்தாள் மாலினி. சந்தேகம் வேறு கேட்டாள். அவள் கேட்ட கேள்விகளையும்.. துணைக் கேள்விகளையும் கேட்டு மகிழ்ந்து போனார் பரந்தாமன்..



''உங்களைப் போல்தான் இருக்கணும்மா..''

''என்னைப் போல எதில் இருக்கணும்ங்கறீங்க..''

''வந்தோம்.. தங்கினோம்ன்னு இல்லாம.. எங்க ஐயா வின் குடும்ப வரலாறை தெரிஞ்சுக்க இவ்வளவு ஆர்வம் காட்டறீங்களே... அதைச் சொன்னேன்...''

'என்ன செய்வது? 'உன் ஐயா'... இப்ப 'என் ஐயா' வாய் ஆகிவிட்டாரே...'

''உங்களைப் போல ஒவ்வொருத்தரும் இருந்தால் நாடு முன்னேறிவிடும்..''

'யோவ்.. இதுக்கும்.. நாட்டுக்கும் என்ன சம்பந்தம்?'

''மத்த பொண்ணுகளுக்கு உங்களைப் போல அக்கறை இல்லை..''

'பிழைத்தேன்...'

''வீடு பூரா உறவு ஜனம்தான்.. ஒரு பொண்ணாவது உங்களைப் போல வந்து விசாரிக்குதா?''

'வந்தால்.. கொன்றுவிட மாட்டேனா?'

''அதில பாருங்கம்மா... நம்ம ஐயா மேல நிறையப் பொண்ணுங்களுக்கு ஒரு கண்ணிருக்கு...''

'எனக்கு உங்க ஐயா மேல இரண்டு கண்ணே யிருக்கு...'

''ஆனால்.. நம் ஐயாதான் பிடிகொடுக்க மாட்டேங் கிறாரு.. ம்ஹூம்..''

'அதில உனக்கு ஏனய்யா இவ்வளவு வருத்தம்?'

''எங்க ஐயாவுக்கும் இதுபோல ஒரு கல்யாணம் நடந்து அவர் பெண்டாட்டி பிள்ளைகளோடு வாழ்வதைப் பார்த்துவிட்டால் எனக்கு அது போதும்...''

'எனக்கு அது போதாது.. அவரோட பெண்டாட்டியாய்

நான் இருக்கணும்.. அவருடைய பிள்ளைகளுக்கு அம்மாவாய் நான்தான் இருக்கணும்..'

''உங்களுக்கு ஏதாவது தோணுதாம்மா?''

அது நேரம் வரை பரந்தாமனின் தொணதொணப்புக்கு மனதிற்குள்ளேயே பதிலைச் சொல்லிக் கொண்டிருந்த மாலினி.. அவரது இந்தக் கேள்வியைக் கேட்டதும் திருதிருத்தாள்.

''எதைப் பற்றிக் கேட்கறீங்க..''

''வீட்டில வந்து முகாம் போட்டிருக்கிற பெண்களில் முக்கால்வாசிப் பெண்கள் ஐயாவோட முறைப்பெண்கள் தான்..''

''ஓஹோ..''

''அந்தப் பொண்ணுகளில் ஐயாவுக்குத் தோதான பொண்ணு யாருன்னு உங்களுக்கு தோணுது?''

''தோதான பொண்ணுன்னா?''

''இதென்னம்மா.. இதுகூடத் தெரியாத பச்சைப் பிள்ளையாய் இருக்கீங்க..''

''ஏதோ இருக்கேன்.. நீங்க விளக்கம் சொல்லுங்க..''

''தோதுன்னா.. பொருத்தமுன்னு அர்த்தம்மா..''

மாலினி பதில் சொல்லாமல் பரந்தாமனையே இமைக்காமல் பார்த்தாள்..

'யோவ்.. உனக்கு என்னைப் பார்த்தால்.. உங்க ஐயாவுக்கு தோதான பொண்ணுன்னு தோணலையா?'

''என்னம்மா அப்படிப் பார்க்கறீங்க..''

''இல்லை... இவ்வளவு பெரிய வேலையை என்னை நம்பி ஒப்படைச்சீங்களே.. அதில் மெய்சிலிர்த்துப் போய் விட்டேன். ஆமாம் பரந்தாமன் சார்.. என்னைப் பார்த்து இந்தக் கேள்வியைக் கேட்கணுமுன்னு உங்களுக்கு எப்படிச் தோணுச்சு..''



''நீங்கதானேம்மா.. ஐயாவோடவே முக்காவாசி நேரம் இருக்கீங்க. உங்களுக்கு இந்நேரம் ஐயாவோட குணம் அத்துப்படியாயிருக்கணுமே...''

'இதை மட்டும் உணக்கையாய் சொல்லிவிடு..'

''என்னம்மா யோசிக்கிறீங்க?''

''இல்லை.. நீங்க எவ்வளவு பெரிய அறிவுஜீவியாய் இருக்கீங்கன்னு யோசிக்கறேன்..''

''எல்லாம் ஐயாவோட டிரெயினிங்கும்மா..''

''நினைச்சேன்..''

'டேய் அசுரா... இதுக்கே உனக்கு செமத்தியாய் இருக்குடா..'

ஒருவழியாக பரந்தாமனின் தொணதொணப்பில் இருந்து தப்பி.. காரிலிருந்து இறங்கியவள், பவித்ரா பால்கனியில் நிற்பதைப் பார்த்துவிட்டாள். அவளது முகம் கலங்கியிருப்பதைப் போலத் தோன்ற, அண்ணாந்து பார்த்தாள். பவித்ரா அவளைப் பார்க்காமல் தோட்டத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

'தோட்டத்திலே யாரை இப்படிப் பார்க்கிறா...'

திரும்பிப் பார்த்த மாலினி திகைத்துப் போனாள். பெண்களின் மத்தியில் பிருந்தாவனத்து கிருஷ்ணனைப் போல தினகரன் நின்றுகொண்டிருந்தான்.

அவனுடன் பேச ஆர்வம் காட்டிய பெண்களிடம் அவர்களுக்கு குறையாத ஆர்வத்துடன் பேசிக் கொண்டிருந்தான்.

'ஓ.. இதைப் பார்த்துட்டுத்தான் இவ இப்படி நிற்கிறாளா?'

பவித்ராவின் முகவாட்டத்திற்கான காரணத்தை கண்டுபிடித்தவளாய் மாலினி, பவித்ராவைத் தேடிப் போனாள்.

''பவி...'' மாலினி அழைத்ததும்.. சட்டென்று கண்ணைத் துடைத்துக் கொண்ட பவித்ரா, திரும்பிப் பார்த்தாள்!

''ஹேய்.. அழுகிறாயா?'' மாலினி ஆச்சரியத்துடன் வினவினாள்.

தினகரனைப் போன்ற தீராத விளையாட்டுப் பிள்ளையைக் காதலிப்பவள் கண்கலங்கலாமா? என்று மாலினிக்குத் தோன்றியது.

''இப்ப எதுக்கு உன் கண்ணீரை வேஸ்ட் பண்ணுகிற..''

''கஷ்டமாயிருக்கு மாலினி...''

''கஷ்டமாத்தான் இருக்கும். அதுக்காக அழுதால் எல்லாம் சரியாகப் போய்விடுமா? தெரிந்துதானே காதலித்தாய்?''

''மாலினி...''

''சொல்லு பவி... தினகரனின் குணத்தைப் பற்றி உனக்குத் தெரியும்தானே... தெரிந்துதானே காதலித்தாய்?''

''இல்லை மாலினி எனக்குத் தெரியாது...''

''தெரியாதா?''

மாலினி மீண்டும் திகைத்தாள்.

''என்ன பவி சொல்கிற.. நீ அவரின் மாமன் மகள் தானே.. உனக்கு அவர் குணம் தெரியாதா?''

''தெரியாது.. நான் இவ்வளவு நாள்கள் இந்த வீட்டில் இருந்ததில்லை...''

''ஓ...''

''விஷேடங்களில் பார்ப்பதுதான்.. தூரத்திலிருந்து பார்ப்பேன்..''



''இதைத்தான் தூரத்துப் பச்சை கண்ணுக்கு குளிர்ச்சின்னு சொல்றாங்களோ...''

ஒரு கணம்.. மாலினி தன்னைக் கேலி செய்கிறாளோ என்று பவித்ராவிற்கு தோன்றியது.

'அப்படியெல்லாம் இருக்காது..' என்று தனக்குள் சொல்லிக் கொண்டவளாக.. அழமாட்டாத குறையாய் மாலினியின் முகம் பார்த்தாள்.

''நீ கூட என்னைப் புரிந்து கொள்ளவில்லையே...''

''சேச்சே.. அப்படியில்லை பவி.. இப்படி உடைந்து போய் நிற்கிறாயே... அதனால் கேட்டேன். தினகரன் ஒரு பிளேபாய் டைப்பும்மா. உன் காதலால் அவரை மாற்று...''

''முடியுமா?''

''முடியாது என்பது முட்டாள்களின் அகராதி.. நீ முட்டாளா?''

''எப்படி மாலினி?''

''நீ அவரைக் காதலிப்பது அவருக்குத் தெரியுமா?''

''தெரியாது...''

''ஏன் சொல்லவில்லை?''

''தயக்கம்.. பயம்.. நடுக்கம்.. இன்னும் நிறைய...''

''ஒகே.. லீவ் இட்... போனது போகட்டும். இனியாவது உன் காதலை அவரிடம் தெரியப்படுத்தி விடு..''

''ஏன் மாலினி?''

''முட்டாள் பெண்ணே... உன் காதலைச் சொல்லாமல்.. மத்தவங்களிடம் அவர் 'ஜொள்' விடுவதைப் பார்த்துக்கிட்டு.. ஒளிஞ்சு நின்று அழுவதில் என்ன பிரயோசனம் இருக்குன்னு சொல்லு. இதுவே.. உன் காதலை அவரிடம் சொல்லி.. அவரும் ஏற்றுக்கொண்டால்.. தைரியமாய் நீ அவரைத் தட்டிக் கேட்கலாமில்லையா?''

''நான் தட்டிக் கேட்டால்தான் அவர் இதை விடு வாரா?''

பவித்ராவின் ஏக்கம் மாலினிக்குப் புரிந்தது. இது காதல். இவள் காதல் கொண்டவள். அந்தக் காதலினால் தினகரனை சொந்தம் கொண்டவள். தன் காதலனை எப்படி மற்றவர்கள் சொந்தம் கொண்டாடலாம் என்ற கோபம் இவளுக்கு. தன் காதலன் எப்படி இதை அனுமதிக்கலாம் என்ற ஆற்றாமை இவளுக்கு.

''பவி.. இப்போ தினகரனைப் பொறுத்தவரை அவர் ஃப்ரீ பேர்டு.. சுதந்திரப் பறவை.. காதல் என்ற கமிட் மெண்டில் சிக்காதவர். இதுவே நீ காதலைச் சொல்லி.. அவரும் உன்னை பதிலுக்கு காதலிக்க ஆரம்பித்துவிட்டா ருன்னு வை.. அவரே இதையெல்லாம் செய்ய மாட்டார்...''

''நிஜமாகத்தான் சொல்கிறாயா?''

''ஆமாம்.. மனதில் வைத்துக்கிட்டு மருகுவதெல் லாம் மௌனி கதையிலும் சரத்சந்திரர் கதையிலும் வருகிற கேரக்டர்கள் செய்ய வேண்டிய வேலை. நீ எந்திரன் பட பீரியடில் இருக்கிற பொண்ணு... சும்மா வெளுத்துக் காட்ட வேணாமா?''

பவித்ரா விழி விரிய மாலினி சொல்வதைக் கேட்டு விட்டு நெற்றியில் ஒற்றை விரலைத் தட்டி யோசித்தாள்.

''என்ன யோசிக்கிற பவி.. எப்படி உன் காதலை தினகரனிடம் போய் சொல்வதுன்னா?''

''ஊஹூம்.. இந்த சரத்சந்திரர் கதையிலதான தேவ தாஸ் வருவாரு?''

''இப்ப தேவதாஸைப் பற்றி ஏன் கவலைப்படுகிற?''

''இல்ல.. அவர் மட்டும் போல்டா, நான் பார்வதியைத் தான் காதலிக்கிறேன்.. அவளைத்தான் கல்யாணம் பண்ணிக் குவேன்னு சொல்லியிருந்தா.. நல்லா இருந்திருக்குமில்ல?''

மாலினி இமைக்காமல் பவித்ராவைப் பார்த்தாள்.



''இப்ப இது உனக்கு தேவையா? தேவதாஸ் எப்படிப் போனால் உனக்கென்ன? நீ லேடி தேவதாஸாக மாறி விடாம உருப்படுகிற வழியைப் பாரு..''

''பார்வதி பாவம் மாலினி..''

''பார்வதியின் பாவத்தை விடு.. இப்ப பவித்ராவின் பாவத்தைப் பாரு...''

''நான் என்ன செய்யணும் சொல்லு?''

''என்னைக் கேட்டால்.. எனக்கென்ன தெரியும்? என்னைக் கேட்டுக்கிட்டா நீ தினகரனைக் காதலித்த?''

''ப்ளீஸ்.. ப்ளீஸ்.. மாலினி..''

''போகுது விடு.. இத்தனை ப்ளீஸ் போடுவதால் பிழைத்துப் போகட்டும்னு விட்டுவிடுகிறேன். இப்ப நீ தினகரனிடம் போய் உன் காதலைச் சொல்லிவிடு..''

''நான் போய் சொல்வதா?''

''உன் காதலை நீதான் போய் சொல்லணும்.. உனக்குப் பதிலாக ஸ்வேதாவா போய் சொல்லுவாள்?''

''ஐயையோ! அவளா.. அவள் போனால் தனக்குக் கணக்கு பண்ணிக் கொண்டு விடுவாளே...''

''இதிலெல்லாம் செம விவரமாய்த்தான் இருக்க.. நீ கவலையே படாதே. தினகரனைக் கணக்கு பண்ண அவளால் முடியாது..''

'உன்னால்தான் முடியும்னு சொல்ல வருகிறாயா?' ஏனோ பவித்ராவின் மனதில் இந்த நினைவு ஓடியது.

93

நொடிப் பொழுதில் என் உயிரைக் குடித்து..
நடக்கின்ற உந்தன் பிரிவினையே
என்னவென்று நான் சொல்ல..?

மாலினி என்னவோ பவித்ராவின் மேல் பிரியமாகத் தான் இருந்தாள். ஆனாலும் அவள் மீது ஒரு விரோத உணர்வு மனதிற்குள் எழுவதை பவித்ராவினால் தடுக்க முடியவில்லை.

தன்னால் கவர முடியாத தினகரனின் கவனத்தை மாலினி கவர்கிறாள் என்பதனாலேயே மாலினியை மனதிற் குள் வெறுக்க ஆரம்பித்திருக்கிறாள் பவித்ரா.

பாவம் மாலினி.. இதை அறியாத வெள்ளை மனத் துடன் பவித்ராவை 'பாவம்' பார்த்துக் கொண்டிருந்தாள்..

''இத்தனை நாளாய் இந்த வீட்டிலேயே டேரா போட் டிருந்தபோது கணக்குப் பண்ண முடியாத தினகரனை இப்போது போய் கணக்குப் பண்ணப் போகிறாளா.. அவ ளெல்லாம் ஆட்டத்திலேயே இல்லை.. நீ கவலையை விடு..''

பவித்ராவின் கவலை ஸ்வேதாவைப் பற்றி அல்ல.. மாலினியைப் பற்றியது என்று உணராதவளாக மாலினி பேசிக் கொண்டிருந்தாள்.

''என்னால் போய் தினா அத்தானிடம் காதல் சொல்ல முடியாது மாலினி..''

''அதுதான் ஏன்னு கேட்கறேன்..''

''அவர் முகத்தைப் பார்த்தாலே எனக்கு பேச்சு வந்து தொலைக்காது..''

''வெறும் காத்துத்தான் வருமா... நீ இஞ்சி இடுப் பழகி கேஸா?''

மாலினி கலகலவென்று சிரித்தாள். எங்கே அவளின் சிரிப்புச் சத்தம் தினகரனின் காதில் விழுந்து அவன்.. அவள் இருப்பதை பார்த்துவிடுவானோ என்ற பயத்துடன் பவித்ரா தோட்டத்தை ஒருமுறை பார்த்துக் கொண்டாள்..

''சரி, விடு.. நீ வாய் வார்த்தையாய் சொல்ல வேண் டாம்.. லெட்டர் எழுதிக் கொடுத்துவிடு...''



''அப்படியா சொல்கிறாய்?''

''அப்படித்தான் சொல்கிறேன்..''

''ஆனா.. எப்படி எழுதுவது?''

''கடுப்படிக்காதே பவித்ரா.. விழுந்து விழுந்து சைட் அடிக்க மட்டும் தெரியுது. ஆனா.. அதை எழுத மட்டும் தெரியாதுன்னு கதையளக்காதே. யாருகிட்ட காது குத்தறே...''

''ஸாரி.. ஸாரி...''

பவித்ரா ஒரு பேப்பரையும் பேனாவையும் எடுத்துக் கொண்டு தனித்து அமர்ந்துவிட... அவள் மனதிலுள்ள காதலை எழுத்தில் வடிக்க.. தனிமையை அவளுக்கு கொடுத்துவிட்டு மாலினி விலகி எழுந்து ஹாலுக்கு வந்தாள்.

சசிரேகா பரபரப்பாக போய்க் கொண்டிருந்தாள்..

''என்ன சசி.. நிற்க நேரமில்லாம பம்பரமாக சுத்தறே?''

''நாளைக்கு நீயும் சுத்துவ..''

''நாளைக்கு கதையை நாளைக்கு பார்க்கலாம். இப்ப எதுக்கு இந்த ஓட்டம் ஓடுகிற?''

''வீடு பூரா விருந்தாளிகள் கூட்டம்.. பார்த்துக்கிட்டுத் தான இருக்க?''

''பார்த்து என்ன செய்ய... எண்ண முடியவில்லையே..''

''ஒரு செகண்டுக்கு ஒரு ஆள் வந்து இறங்குது. அப்புறம் எப்படி உன்னால் எண்ண முடியும். இவங்களுக்கு டிபன்.. காபி.. கொடுத்து.. நேரா நேரத்துக்கு சாப்பிட வைப்பது என் பொறுப்புன்னு அத்தை சொல்லிட்டாங்க..''

''இப்ப உன் கஷ்டம் என்னன்னு எனக்குப் புரியுது..''

''காலையில் நாலு மணிக்கு காபி கொடுத்துவிட

ஆரம்பித்தால்.. ஒவ்வொருத்தரும் ஒவ்வொரு நேரத்துக்கு எழுந்து காபி சாப்பிட்டு முடிய எட்டு மணியாகி விடுது.."

"அடக்கடவுளே.. எட்டு மணிக்கு டிபன் வேளை ஆரம்பிச்சுருமே.."

"ஆமாம்.. டிபன் சாப்பிடுறதும் அதே கதைதான்.. எட்டு மணிக்கு ஆரம்பிக்கிற காலை பந்தி பன்னிரண்டு மணிக்குத்தான் முடியுது..."

"இங்கே பாரு.. அது லன்ச் டயமாச்சே..."

"அதுதான்.. அதேதான் நான் சொல்ல வருவதும்.. பன்னிரண்டு மணிக்கு ஆரம்பிக்கிற மதிய பந்தி முடிய மூணு மணியாகிவிடுது..."

"கிழிஞ்சது போ.. அது ஈவினிங் காபி டிபன் டயம்.."

"என்னத்தைச் சொல்ல.. மூணு மணிக்கு காபி டிபனை நான் கொடுக்க ஆரம்பிச்சு முடிக்கிறதுக்குள்ள ஏழு மணியாயிடுது.."

"அடுத்து நைட் டின்னர் ஆரம்பமா?"

"ம்ம்ம்.. ஏழு மணிக்கு ஆரம்பிக்கிற ராத்திரி பந்தி முடிய பன்னிரண்டு மணியாகுது.. மாலினி.."

"ஊடே கிடைக்கிற நான்கு மணி நேரத்தில்தான் நீ தூங்கி எழுந்திருக்கணுமா?"

"குளித்து டிரஸ் மாத்திக்க அதில் ஒரு மணி நேரம் போயிடுதே.."

"பாவம்தான் நீ.. தூக்கம் கெடுது உனக்கு.."

"அதை விடு.. என்னால் அத்தானைக் கவனிக்க முடியலை.. அவர் கூடப் பேசி ஒரு வாரமாச்சு தெரியுமா?"

"என்னடி இது அநியாயமாய் இருக்கு. இரண்டு பேருக்கும் ஒரே பெட்ரூம்தானே..."



"ச்சீ.. சத்தமாய் பேசாதே. நான் ரூமுக்குள் போகும் போது அவர் அசந்து தூங்கிக்கிட்டு இருப்பார். அவர் முழிக்கும்போது நான் ரூமில் இருக்க மாட்டேன்.."

"விளங்கிரும்.. இதுதான் நீ குடும்பம் நடத்தும் லட்சணமா?"

"என்ன செய்ய.. பெரிய வீட்டு மருமகள்ங்கிற பெயருக்கு இத்தனை பாடுபட வேண்டியிருக்கு. சரி.. சரி.. திருநெல்வேலியிலிருந்து வந்திருக்கும் தாத்தாவுக்கு அல்வா பிடிக்காதாம். வேற ஸ்வீட் எடுத்துக் கொடுத்து விடணும்.. நான் கீழே போகிறேன்..."

"திருநெல்வேலிக்கே அல்வா பிடிக்காதா.. என்னடி சசி இது? ஆச்சரியமாய் இருக்கே..."

சசிரேகாவிற்கு சிரிப்பு வந்துவிட்டது.

"நீ இருக்கியே.. போடி.. நேரம் காலம் தெரியாம ஜோக்கடிக்காதே..."

சசிரேகா கீழே விழுந்துவிட்டாள். மாலினி, பிரபாகரனைப் பற்றி நினைத்துக் கொண்டாள்.

அவனை அவள் பார்த்து மூன்று நாள்களாகின்றன. பந்தியில் உட்கார்ந்து சாப்பிட நேரம் இல்லாததால்.. மாலினி அறைக்கே சாப்பாடைக் கொண்டு வரச் சொல்லி சாப்பிட்டு விட்டு வேலைக்குப் போய்விடுவதை வழக்கமாக்கிக் கொண்டிருந்தாள்.

'இந்நேரம் அவன் என்ன செய்து கொண்டிருப்பான்?" என்ற நினைவு அவள் மனதில் எழுந்தது. அவள் தோளில் ஒரு கரம் படிய திரும்பிப் பார்த்தாள்.

"எழுதிட்டேன் மாலினி.. இனி என்ன செய்யணும்?" என்று கேட்டபடி அங்கே நின்றிருந்தாள் பவித்ரா..

"பூஜை ரூமிலே வைத்துப் பூஜை செய்யணும்.." மாலினி விளையாட்டாகக் கூற..

''அத்தை பார்த்து விட்டாங்கன்னா என்ன செய்யறது..'' என்று பவித்ரா கவலையாக கேட்டாள்.

''நிஜமாகவே அப்படி ஏதும் செய்துவிடாதே.. மனதுக்குள் சாமியை வேண்டிக்கோ..''

''வேண்டிக்கிட்டேன்..''

''நேரா போய் தினகரனிடம் கொடுத்துவிடு..''

''நானா?''

''நீதான் போகணும்..''

''என்னால் முடியாது மாலினி.. நான் காரியத்தையே கெடுத்துவிடுவேன். அவர் முகத்தைப் பார்த்தாலே எனக்கு கைகால் நடுங்கும். பேச்சு வராது. கடிதத்தை கொடுக்காமலே வந்துவிடுவேன்...''

''இப்படிச் சொன்னா எப்படி பவி..''

''ப்ளீஸ், மாலினி.. இன்றைக்கு விட்டால் இனி என்றைக்குமே தினா அத்தானிடம் என் காதலைச் சொல்ல முடியாது..''

''நாளை என்பது வரவே வராதா?''

''நாளை வரும்.. அது காயத்ரியின் கல்யாணத்திற்கு முதல் நாளாக வரும்..''

''என்ன சொல்ற பவி?''

''நாளைக்கு மறுநாள் காயத்ரியின் கல்யாணம்.. மறந்துவிட்டாயா?''

''மறக்கலை.. அதுக்கும் இதுக்கும் என்ன சம்பந்தம்?''

''நாளைக்கு மதியமே நாம எல்லோரும் கல்யாண மண்டபத்துக்கு போய்விடணும்..''

''அட, ஆமாம்..''



''காயத்ரியின் கல்யாணம் முடிந்த கையோடு அப்பா என்னைக் கருங்கல்லுக்கு கூப்பிட்டுக் கொண்டு போய் விடுவார் மாலினி...''

''ஓ... அப்படின்னா நீ உங்க ஊருக்குப் போன பின்னால் போஸ்டில் அனுப்பி வைத்து விடேன்..''

பவித்ரா நிராசையுடன் மாலினியைப் பார்த்தாள். அவளது பார்வையில் தெரிந்த துயரம் மாலினியின் மனதை உலுக்கியது.. அவளது துயரத்தைப் போக்க தன்னால் எதையாவது செய்ய முடியுமா என்று மாலினி யோசிக்க ஆரம்பித்தாள்.

''எங்க ஊரில் என்னைத் தனியே வெளியே அனுப்ப மாட்டாங்க மாலினி. அப்படியே நான் எதையாவது சாக்கைச் சொல்லி வெளியே போய் போஸ்டில் அனுப்பினாலும் அந்த தபால் தினகரனின் கையில்தான் சேரும்கிறதுக்கு என்ன உத்தரவாதம் மாலினி..''

''ஸ்பீடு போஸ்டில் அனுப்பு.. கையெழுத்து வாங்காமல் அதை டெலிவரி பண்ண மாட்டாங்க..''

''இன்னாரிடமிருந்து.. இன்னாருக்கு தபால் வந்திருக்குன்னு வீட்டில் சொல்வாங்களா.. மாட்டாங்களா?''

''நீ அப்படி ஏன் நினைக்கிற?''

''ஒருவேளை அப்படி நடந்துவிட்டால்?''

மாலினிக்கு பதில் சொல்லத் தெரியவில்லை. பவித்ராவின் பயத்தில் நியாயம் இல்லையென்று அடித்துப் பேச அவளால் முடியவில்லை. பவித்ரா சொன்னவை நடப்பதற்கான வாய்ப்பு நிறைய இருந்தது.

''இதில் இன்னொண்ணும் இருக்கு மாலினி..''

''என்ன?''

''என் காதலை அவர் ஏற்றுக்கொண்டுவிட்டால்.. இன்றைக்கு நைட் பதினோரு மணிக்கு மேலே.. தோட்டத்தில் வந்து என்னைச் சந்திக்கச் சொல்லி எழுதியிருக்கிறேன் மாலினி..''

''பவித்ரா..''

அவளது தைரியம் கண்டு மாலினி ஆச்சரியமடைந்தாள். மாலினியின் கதையே வேறு. அவளும் பிரபாகரனும் பார்த்த முதல் பார்வையிலேயே வசீகரிக்கப்பட்டார்கள். அவர்கள் மனதில் பொங்கிய காதலை உணர்ந்திருந்தார்கள். இருந்தும்.. தனிமையில் பேசிப் பழகவில்லை. ஏறக்குறைய ஏழு மாதங்கள் கழித்துத்தான் அவர்கள் மொட்டை மாடியில் சந்தித்துக் கொண்டார்கள்.

'ஊமையாய் இருக்கிற ஆளுகளை நம்பவே கூடாது..'

அவள் பவித்ராவை மேலும் கீழும் பார்த்தாள். அவளுடைய பார்வையை உணராத பவித்ரா, வேகமாக பேசிக் கொண்டே போனாள்.

''என் மனதிலிருப்பதை அவரிடம் நான் கட்டாயம் சொல்லியாகணும் மாலினி. நான் ஊருக்குப் போய்விட்டால் இதை நினைத்துக்கூடப் பார்க்க முடியாது. இதற்கு முதலில் என்றால்கூடப் பரவாயில்லை. தினா அத்தானை இழந்தாலும்.. நான் அதைப் பற்றி இந்த அளவுக்கு துன்பப்பட்டிருக்க மாட்டேன். மனதில் ஒருத்தர் மேல் ஆசை வைத்தோம்.. அது நடக்காமல் போய்விட்டதுன்னு மனதைத் தேற்றிக் கொண்டிருப்பேன். இப்ப அப்படி இல்லை. இந்த அறுபது நாள்களில் அவரை தினமும் பக்கத்தில் இருந்து பார்க்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது மாலினி. அவருடன் மனதில் குடும்பம் நடத்தவே ஆரம்பித்துவிட்டேன். இனி அவரை இழக்க வேண்டி வந்தால் என் மனது அதை தாங்காது. நான் செத்துவிடுவேன் மாலினி..''



''பவித்ரா..''

மாலினி அதிர்ந்துவிட்டாள். பவித்ரா இந்த வார்த்தைகளை உண்மையாகச் சொல்கிறாள் என்பதை அவளால் புரிந்து கொள்ள முடிந்தது. பவித்ராவின் காதல் நிறைவேற எதையாவது செய்ய வேண்டும் என்ற எண்ணம் அவளுக்குள் வலுத்தது.

''ஒண்ணு செய்யலாம் பவி..''

அவளையறியாமலேயே அவள் பவித்ராவுடன் கூட்டு சேர்ந்துவிட்டதை உணராதவளாக கேட்டாள் மாலினி.

''என்ன மாலினி?''

''இந்த வீட்டில் நிறைய வாண்டுகள் இருக்குதில்லையா..''

''கல்யாண வீட்டில் சிறுசுகள் இல்லாம இருக்குமா..''

''அதில எதையாவது பிடி..''

''பிடித்து?''

''அது கையில் இதைக் கொடுத்துவிடு..''

''ஐயையோ..''

''அடச்சீ.. அதுககிட்ட லவ் லெட்டரைக் கொடுக்கச் சொல்லலை பவி.. அதுக கையில கொடுத்து.. தினகரனிடம் போய் கொடுத்துவிடச் சொல்லு..''

''அவ்வளவுதான்.. அதுக வீடு பூராவும் தம்பட்டம் அடிச்சிரும்..''

''எல்லாத்துக்கும் பயந்தா எப்படி பவி..''

''மாலினி.. எனக்கொரு யோசனை தோணுது.. சொல்லவா?''

''அப்பாடி.. உன் பிரச்னையை நீயே பார்த்துக்கறதில் எனக்கு எவ்வளவு சந்தோஷம் தெரியுமா? சொல்லு.. சொல்லு..''

''நீயே போய் இந்த லெட்டரை அவரிடம் கொடுத்து விடேன்..''

மாலினிக்கு தூக்கிவாரிப் போட்டது. பவித்ரா இப்படி ஒரு வேண்டுகோளை வைப்பாள் என்று அவள் எதிர்பார்த் திருக்கவில்லை.

94

*அந்தி மழை நேரத்தில்...*
*என்னைத் தொட்ட சாரலை...*
*என்னவென்று நான் சொல்ல..?*

காதலுக்கு தூது போகலாம்.. தவறில்லை. ஆனால், காதலி கொடுக்கும் கடிதத்தை எப்படிக் கொண்டு போய் காதலனிடம் கொடுப்பது?

''ஊஹூம்... நான் மாட்டேன்..'' மாலினி மறுத்தாள்.

''ப்ளீஸ்! மாலினி.. நீ மாட்டேன்னு சொல்லிட்டா என் கதி என்னாகிறது?''

''ஒன்று செய்யலாம் பவி..''

''என்ன?''

''நான் தினகரனிடம் உனக்காகப் பேசுகிறேனே..''

''பேசி?''

''உன் காதலை எடுத்துச் சொல்கிறேனே...''

'இந்தச் சாக்கில் அவனை உன்னிடம் ஜொள்ளு விட வைக்கப் பார்க்கிறாயா.. நீ என் காதலைச் சொன்னால்.. அவன் உன் முகத்தைப் பார்ப்பானா? இல்லை.. என் காதலைக் கேட்பானா? அதுவே.. என் கடிதத்தைக் கொடுத் தாயானால்.. இதில் என் மனதைப் படிப்பான். நிச்சயம் என்னைத் தேடி வருவான்..'



பவித்ராவிற்கு மாலினியின் வசீகரத் தன்மையை நினைத்துப் பயமும் இருந்தது. அதேசமயம்.. தன் காதல் மற்றவர்கள் முன்னால் அம்பலம் ஆகாமல் தினகரனிடம் சொல்லப்பட வேண்டுமே என்ற தவிப்பும் இருந்தது.

அவளுக்குத் தெரிந்து தினகரனை நேரடியாக அணுகிப் பேசக்கூடிய செல்வாக்கு அந்த வீட்டில் மாலினி யிடம் மட்டும்தான் இருந்தது.

தினகரன் மற்றவர்களை மதித்து நின்று பேச மாட் டான். அவன் மதித்து நின்று பேசுவது ஆறு பேரிடம் மட்டும்தான். முதலாவது அவனைப் பெற்ற தாய்.. பவித்ரா வின் அத்தை.. அவளிடம் போய் பவித்ரா காதல் தூதுவிட முடியுமா?

இரண்டாவது நபர் பிரபாகரன்.. தினகரன் முன்னா லாவது பவித்ரா நின்று பேசுவாள். பிரபாகரனின் பெயரைக் கேட்டாலே மயக்கம் போட்டு விடுவாள். அவனிடமாவது பவித்ரா தன் காதலைச் சொல்லிவிடுவதாவது.

மூன்றாவது ஆள் கருணாகரன்... அமைதியானவன். பண்பானவன். பவித்ராவை நல்ல பெண் என்று நினைத்துக் கொண்டிருப்பவன். அவனைப் பார்க்கும்போது மரியாதை கொடுக்கத்தான் பவித்ராவிற்கு தோன்றும். அவனிடம் போய் அவளது மனதை திறந்து பேச முடியுமா? அதற்குப் பதில் பவித்ரா காலம் முழுவதும் கன்னியாகவே இருந்து விடுவாள்.

நான்காவது காயத்ரி.. பவித்ராவிற்கு இணையான வயதுத் தோழி. ஆனாலும்.. வீட்டில் உள்ள பெரியவர் களின் பேச்சுக்கு கட்டுப்பட்டு வளர்ந்த பெண். நர்மதா விடம் எதையும் மறைக்கும் வழக்கம் காயத்ரிக்கு கிடை யாது. அவளிடம் போய் பவித்ரா. தன் காதலை உளறி வைத்தால் அவள் என்ன நினைப்பாள்?

ஐந்தாவது சசிரேகா.. கருணாகரனின் மனைவி. அவளிடம் அதிகமாக பவித்ரா பேசியது கிடையாது. கணவனின் உறவினர் வீட்டுப் பெண் என்பதற்காக மரியாதையுடன் தலையசைத்துவிட்டுப் போய்விடுவாள். அவளிடம் போய் பவித்ரா காதலைப் பேசுவதா?

ஆறாவது ஆள் மாலினி.. பவித்ராவின் மனதை அறிந்தவள். பிரபாகரனின் காதலையும் பெற்றிருக்கிறாள். என்ன ஒன்று.. பிரபாகரனின் காதலோடு தினகரனின் சுவாரஸ்யமான பார்வையையும் பெற்றுத் தொலைத்துவிட்டாள். அதற்காக பவித்ரா பயந்தால்.. அவளின் காதலை தினகரனிடம் தெரிவிக்க முடியாமலே போய்விடக் கூடும்.

எனவே.. மாலினியிடம் கடிதத்தை கொடுத்து அனுப்பிவிட்டு அவள் ஏதாவது மாய்மால வேலை செய்தால் பிரபாகரனிடம் போட்டுக் கொடுத்துவிடலாம் என்ற எண்ணத்துடன் இருந்தாள் பவித்ரா.

அவளுக்கு ஸ்வேதா சொல்லியிருந்தது நன்றாக மனதில் பதிந்திருந்தது..

'இதுக இரண்டும் பிரபாகரனுக்கு மட்டும்தான் பயப்படும்கள். இதுகளைக் கூப்பிட்டு பிரபாகரன் ஒரு சத்தம் போட்டாருன்னு வை.. மாலினியும் தினகரனின் பக்கம் திரும்ப மாட்டா. தினகரனும் அவள் இருக்கும் திசைப் பக்கம் தலை வைத்துப் படுக்க மாட்டான்...'

தன்னுடைய கடைசி அஸ்திரமாக இதைச் செயல் படுத்தும் முடிவோடு இருந்தாள் பவித்ரா.

காதலுக்காக எதையும் செய்யலாம். ஆனால், நம்பிக்கைத் துரோகம் செய்யலாமா என்ற கேள்விகளை எல்லாம் அவள் யோசிக்கவே இல்லை.

அவளுக்காக மாலினி, தினகரனிடம் பேசப் போகிறாள். அவளுடைய காதலைச் சொல்லும் கடிதத்தை அவனிடம் கொடுக்கப் போகிறாள் என்பதைவிட.. மாலினியின் மேல் தினகரன் ஆர்வம் காட்டிவிட்டால்.. அதை முறியடிக்க என்ன செய்வது என்று யோசித்து வைத்துக் கொண்டாள் பவித்ரா.



இதை அறியாத மாலினி.. தூது போகும் வேலையை மிகத் தயக்கத்துடன் ஏற்றுக்கொண்டாள்.

''போ.. மாலினி.. அவர் தோட்டத்தில்தான் நிற்கிறார்..''

''கொஞ்சம் பொறு பவித்ரா. எனக்கு படபடன்னு வருது..''

''அதெல்லாம் எனக்குத்தானே வந்து தொலைக்கும்?''

''இப்போ.. எனக்கும் வந்து தொலைத்துவிட்டது..''

இவள் ஏன் தினகரனிடம் பவித்ராவின் காதலைச் சொல்ல இந்த பயம் பயப்படுகிறாள்?

பவித்ராவின் மனதில் சந்தேகம் துளிர்விட ஆரம்பித்தது. ஆனால், அவளை விட்டால் தினகரனிடம் அனுப்ப வேறு ஆள் இல்லாததால் வேறுவழியின்றி மாலினியிடமே கெஞ்ச ஆரம்பித்தாள்.

''சீக்கிரமாய் போ மாலினி.. அவர் வீட்டுக்குள் வந்து விட்டால் கடிதத்தை அவரிடம் கொடுக்க முடியாது..''

''ஏன்?''

''சுற்றி பத்துச் சொந்தக்காரங்க நின்னுக்கிட்டே இருப்பாங்க..''

''தோட்டத்தில் இருக்க மாட்டாங்களா?''

''இருட்டின பின்னால் தோட்டத்துப் பக்கம் போக நிறைய பேர் யோசிப்பாங்க..''

மாலினி மெதுவாக படியிறங்கினாள்.. பின் நின்று..

''நீயும் கூடவா பவித்ரா..'' என்று அழைத்தாள்.

''நான் எதற்கு? நீ போ..''

''புரியாம பேசாதே.. நீ தனியாகப் போகத்தானே பயப்படுகிறாய்.. நானும் துணைக்கு வருகிறேன். உன் சார்பாய் நானே கடிதத்தையும் கொடுக்கிறேன்...''

'ஒருவேளை.. தினகரன் என் காதலை மறுத்துவிட்டால்?' பவித்ராவின் மனம் சஞ்சலமானது.

அதை மாலினியின் முன்னால் அவன் சொல்லிவிட்டால் பவித்ராவால் அதைத் தாங்கிக் கொள்ள முடியுமா?

''வேண்டாம் மாலினி.. நீ மட்டும் போ. ப்ளீஸ், எனக்காக..''

பவித்ராவின் அந்த வார்த்தைக்காகத்தான் மாலினி போனாள். பவித்ராவிற்காகத்தான் அந்த வேலையை மேற்கொண்டாள்.

ஆனால், பவித்ரா..

மாலினி செய்து கொண்டிருந்த அந்த நன்றியை அவள் நினைத்துப் பார்க்கப் போவதில்லை என்று தெரிந்திருந்தால் மாலினி போயிருப்பாளா?

ஊரான் பிள்ளையை ஊட்டி வளர்த்தால்.. தன் பிள்ளை தானே வளரும் என்பார்கள். அங்கே.. ஊரார் காதலை மாலினி உதவி செய்து வளர்த்தாள்.

அதற்கு அவளுக்கு கிடைக்கப் போகும் பலனை அறிந்திருந்தால் அவள் அதைச் செய்திருப்பாளா?

பவித்ரா மாடிப் பால்கனியில் நின்று பார்த்துக் கொண்டிருந்தபோது.. அதுவரை பூனை போல பால்கனியின் தூண் மறைவில் நின்று நடந்தவற்றை பார்த்தும் கேட்டும் கொண்டிருந்த ஸ்வேதா வெளியே வந்தாள்.

'லட்டு போல சான்ஸ் கிடைச்சிருச்சு..'



'இத்தனை நாளாக எதற்காக அவள் காத்துக் கொண்டிருந்தாளோ.. அந்த வாய்ப்பு கிடைத்துவிட்ட மகிழ்ச்சியில் அவள் பவித்ராவிற்கு காலடிச் சத்தம் கேட்டுவிடாமல் மெல்லடி வைத்து.. மாடிப்படிகளில் இறங்கி மாலினியைத் தொடர்ந்து தோட்டத்திற்குச் சென்றாள்.

மாலினி முன்வாசல் வழியாக இயல்பாக இறங்கி.. தோட்டத்துக்குள் நின்றுகொண்டிருந்த தினகரனை நோக்கிச் சென்றாள். ஸ்வேதா வீட்டின் பக்கவாட்டு வாசல் வழியாக பால்கனியில் நின்றுகொண்டிருந்த பவித்ராவின் கண்களில் பட்டுவிடாமல் தோட்டத்துப் பக்கம் சென்று தினகரனின் பின்பக்க செடி மறைவில் நின்றுகொண்டாள்.

தினகரனை நெருங்கிய மாலினி.. அண்ணாந்து பால்கனியில் நின்றுகொண்டிருந்த பவித்ராவைப் பார்த்தாள். தனிமையில் நின்றுகொண்டிருந்த தினகரன் மாலினியைக் கண்டதும் எதிர்பாராத இன்ப ஆச்சரியத்தை கண்களில் பிரதிபலித்தவாறு...

''ஓ.. மாலினி.. நீங்களா? என்ன இந்த ஒரு வாரமாய் என் கண்ணிலேயே நீங்க படலையே?'' என்று கேட்டான்.

''அது.. வந்து.. மிஸ்டர் தினகரன்...'' தைரியமாக வந்துவிட்டு.. இப்போது பேச முடியாமல் மாலினி திணறினாள்.

''மிஸ்டரா.. இது என்ன புதுப்பழக்கம்?'' அவளது தடுமாற்றத்தை வியப்புடன் பார்த்தபடி வினவினான் தினகரன்.

''ஒன்றுமில்லை.. எனக்கு.. நான்.. உங்களிடம் ஒன்று.. பேச வேண்டும்..'' மாலினி முகம் வியர்த்தாள்.

''என்ன?'' தினகரனின் கண்கள் ஒளிர்ந்தன.

அவனைப் பார்த்த உடனேயே வசீகரித்தாள் மாலினி. அவன் இந்த அளவுக்கு படபடப்பாக.. தனியாக வந்து

பேசுகிறாள் என்றால்.. அது ஒன்றே ஒன்றாகத்தான் இருக்க வேண்டும் என்பது அவனது கணிப்பு.

''அது.. வந்து..''

மாலினி ஆரம்பிக்கும்போது.. ஸ்வேதா.. தான் மறைந்து நின்றுகொண்டிருந்த செடியை ஆட்டிவிட்டாள். போதாக் குறைக்கு.. தன் கால் கொலுசுகளை சப்தமெழச் செய்தாள்.

''யாரோ வருகிறாங்க போல இருக்கே..'' மாலினி சுற்றுமுற்றும் பார்த்தாள்.

இப்போது தினகரனுக்கு நிச்சயமாகிவிட்டது.. அவன் அறிந்த மாலினி.. இப்படி மறைவாக நின்று பேச மாட்டாள். முகம் பார்த்து நேர்கொண்ட பார்வையுடன் பேச மாட்டாள்.

காதல் வந்துவிட்டால் அங்கு கள்ளத்தனமும் வந்து விடும் என்பது அந்த தீராத விளையாட்டுப் பிள்ளைக்குத் தெரியாதா என்ன?

''வந்தால் வரட்டும்.. நானிருக்கும்போது என்ன பயம்?'' அவன் புதிதாக முளைத்த உரிமையுடன் கூறி னான்.

மாலினிக்கு இருந்த பதற்றத்தில் அவள் தினகரன் காட்டிய உரிமை கலந்த நெருக்கத்தைக் கவனிக்க வில்லை!

மற்றவர்கள் பார்க்கும் முன்னால் பவித்ராவின் கடிதத்தை தினகரனிடம் சேர்த்துவிட வேண்டும் என்பது தான் அவளுக்கு குறிக்கோளாக இருந்தது.

எப்படியும் மாலினி, தினகரனிடம் அவளது கடிதத்தை சேர்த்துவிடுவாள் என்று அவள் நம்பிக் கொண்டிருக்கிறாள். அந்த நம்பிக்கை வீணாகிவிடக் கூடாது.

சட்டென்று தன் கையில் இருந்த கடிதத்தை தினகர னிடம் கொடுத்துவிட்டாள் மாலினி.

''இது என்ன?'' என்று கேட்டவனிடம்..



''பிரிச்சுப் படிச்சுப் பாருங்க புரியும்..'' என்று வேகமாக சொன்னாள்.

''ஏன்.. அதை வாய்விட்டுச் சொன்னால் ஆகாதா?'' தினகரன் உல்லாசமாகச் சிரித்து வைத்தான்.

''அது வந்து.. தினகரன்..'' என்று மாலினி, பவித்ரா வின் காதலைப் பற்றிச் சொல்ல ஆரம்பித்தபோது..

''அட.. தினா அத்தான்.. நீங்க இங்கேயா இருக்க நீங்க?'' என்று கேட்டபடி ஸ்வேதா செடி மறைவிலிருந்து வெளிப்பட்டாள்.

சட்டென்று தினகரன் கடிதத்தை பேண்ட் பாக்கெட் டில் திணித்துக் கொள்ள.. மாலினி வேகமாக அந்த இடத்தை விட்டு அகன்றுவிட்டாள்.

'நல்ல நேரத்தில் பூஜை வேளைக் கரடி போல வந்து விட்டாளே..'

மாலினியுடன் பேச முடியாமல் செய்துவிட்ட ஸ்வேதாவை கோபப் பார்வை பார்த்தான் தினகரன்.

''தினா அத்தானுக்கு என்ன வைத்திருக்கிறாய்?''

''நல்ல நியூஸ் ஒன்றை வைத்திருக்கிறேன்..''

''என்ன நியூஸ்.. நீ எங்களை விட்டு ஒழியப் போகி றாயா?''

''எப்படி கரெக்டா சொன்னீங்க.. அதுதான் நியூஸ்..''

''போய்த் தொலை..''

''நான் தொலைவது இருக்கட்டும்.. நீங்க மாலினி யைக் கணக்கு பண்ணிட்டீங்க போல..''

''அடித்துப் பல்லைக் கழட்டிவிடுவேன்.. மாலினி காதல் பண்ண வேண்டிய பெண். கணக்குப் பண்ண வேண்டிய பெண்ணில்லை..''

தினகரன் வேகமாக போய்விட... அவன் எதற்காகப் போகிறான் என்பதை அறிந்து வைத்திருந்த ஸ்வேதா மனதிற்குள் சிரித்துக் கொண்டாள்..

'போடா.. போ.. அந்தக் கடிதத்தை தனிமையில் படிக்கத்தானே போகிறாய்.. அந்தக் கடிதத்தில் என்ன எழுதியிருக்குன்னு உனக்கு முன்னாலேயே எனக்குத் தெரியும்டா...'

ஸ்வேதா வெற்றிப் புன்னகையுடன் பால்கனியில் நின்றிருந்த பவித்ராவைப் பார்த்தாள்.

## 95

*பாராததைப் போல் உனைப் பார்ப்பதையே...*
*சேராதது போல் என் இதயம் உனைச் சேர்வதையே*
*என்னவென்று நான் சொல்ல..?*

'என் பிரியத்துக்குரியவரே...

நான் இரவும் பகலும் நினைப்பது உங்கள் முகத்தை மட்டும்தான் என்பது உங்களுக்குத் தெரியுமா? மனதில் நினைப்பதை சொல்ல முடியாமல் நாணம் தடுக்க.. எத்தனை இரவுகளில் தூங்காமல் தலையணையை நனைத்திருக்கிறேன் என்று தெரியுமா? என் காதலை நீங்கள் ஏற்றுக் கொள்வீர்களா என்ற பயம்.. தோற்றுப்போய் விடுவோமோ என்ற அச்சத்திலேயே என் காதலை வெளியில் சொல்லாமல் எனக்குள்ளேயே புதைத்துக் கொண்டு நடமாடிக் கொண்டிருக்கிறேன். இன்றைக்கும் நான் வாய்மூடிக் கொண்டிருந்தால்.. இனி என்றைக்குமே நீங்கள் எனக்குக் கிடைக்காமல் போய்விடுவீர்கள் என்ற பயம் என் மனதை வாட்டுகிறது.



அதனாலேயே நான் இந்தக் கடிதத்தை எழுதுகிறேன்.. என் காதலை நீங்கள் ஏற்றுக்கொள்வதாக இருந்தால்... இன்று இரவு பதினொரு மணிக்கு மேல் தோட்டத்திற்கு வாருங்கள்.

நம் எதிர்காலத்தைப் பற்றி நாம் பேசி முடிவு செய்யலாம்..

என்றென்றும் பிரியங்களுடன்
தங்கள் நினைவில்
வாடும் காதலி..'

கடிதத்தை ஒரு முறைக்கு பல முறை படித்துப் பார்த்த தினகரன்.. பதினொரு மணி எப்போது வரும் என்று அப்போதிருந்தே காத்திருக்க ஆரம்பித்தான்.

பால்கனியின் தூணில் சாய்ந்து அமர்ந்து பவித்ரா, காதல் கடிதம் எழுத ஆரம்பித்ததும் ஸ்வேதாவிற்கு வெறி ஏற்பட்டுவிட்டது. எங்கே அவள் காதல் சொல்லி.. தினகரன் அதை ஏற்றுக்கொண்டு விடுவானோ என்று அவள் பயந்து போனாள்.

அப்படி மட்டும் நடந்துவிட்டால் அவள் பவித்ராவைக் கொன்றே விடுவாள்.

அந்தக் கடிதத்தை தினகரனின் கைகளில் அவள் சேர்த்து விடாமலிருக்க என்ன பண்ணுவது என்ற யோசனையுடன் அவள் தூண் மறைவிலிருந்து பார்த்துக் கொண்டிருந்தபோது.. பவித்ரா கையெழுத்துப் போடாமல் கடிதத்தை முடித்து அவள் வயிற்றில் பாலை வார்த்தாள்.

'இந்த முட்டாள்.. இவள் பெயரை கடிதத்தில் எழுதவில்லை..'

பவித்ரா என்னவோ.. கடிதம் வேறு யார் கையிலாவது அகப்பட்டுக் கொண்டால் என்ன செய்வது என்ற பயத்துடன் தன் பெயரை கடிதத்தில் குறிப்பிடாமல் விட்டுவிட்டாள்.

ஆனால், பெயர் எழுதப்படாத அந்தக் கடிதத்தை வைத்து தான் விளையாட வேண்டிய விளையாட்டை ஸ்வேதா தீர்மானித்து விட்டாள்.

தினகரன் வீட்டுக்குள் போனவுடன் ஸ்வேதா வாசலிலேயே நின்றுகொண்டிருந்தாள். பிரபாகரன் வரும்போது வாசலிலேயே அவனை மடக்க வேண்டிய கட்டாயத்தில் அவள் இருந்தாள்.

அவன் வீட்டுக்குள் காலடி வைத்துவிட்டால்.. உறவினர் கூட்டமெல்லாம் அவனைச் சூழ்ந்துவிடும். என்பதை அவள் அறிவாள். அதன் பின்னால் அவனை ஸ்வேதா அணுகவே முடியாது.

அவள் எதிர்பார்த்தபடி பிரபாகரனின் கார் உள்ளே நுழைந்தது. மற்றவர்கள் வருவதற்கு முன்னால் பிரபாகரனை பிடித்துவிட வேண்டும் என்ற அவசரத்தில் இருந்தவள்..

''பெரியத்தான்..'' என்றபடி காருக்கு முன்னால் பாய்ந்தாள்.

கார் விலகிச் சென்று நின்றது. பிரபாகரன் காரை விட்டு இறங்கும்போது..

''ஒரு நிமிஷம் பெரியத்தான்..'' என்று அவன் வழியை மறித்தாள் ஸ்வேதா..

''த்சு.. உன் முகத்தைப் பார்க்கவே எனக்குப் பிடிக்கவில்லை.. அம்மாவின் வார்த்தைக்காக நான் பொறுத்துப் போகிறேன். வழியை விடு..'' என்று முகம் சுளித்தான் பிரபாகரன்.

''என் முகத்தைப் பார்க்க உங்களுக்குப் பிடித்தால் எனக்கென்ன... பிடிக்காவிட்டால் எனக்கென்ன ஆனால்.. மாலினியின் முகத்தை இன்றைக்கு நைட் பதினோரு



மணிக்கு பார்ப்பதற்காக தினகரன் தோட்டத்துக்கு வரப் போகிறார். இதைக் கேட்டுவிட்டு எனக்கென்னன்னு நீங்க போகப் போகறீங்களா?'' ஸ்வேதா எகத்தாளமான குரலில் கேட்டாள்..

சுற்றுமுற்றும் பார்த்த பிரபாகரன், சட்டென்று ஸ்வேதாவின் கழுத்தைப் பிடித்து நெரித்துவிட்டான். அவள் மூச்சு விட முடியாமல் திணறிய கடைசி நொடியில் அவளை விடுவித்தவன்..

''ஓடிப்போய் விடு.. இனி உன் ஊருக்கு நீ கிளம்பும் வரைக்கும் என் கண்ணிலேயே படக்கூடாது..'' என்று அடிக்குரலில் கர்ஜித்தான்.

வேக மூச்சுக்களை இழுத்துவிட்டு.. தன்னை சமாதானப்படுத்திக் கொண்ட ஸ்வேதா.. அலட்சியமாய் பிரபாகரனைப் பார்த்தாள்.

''என்னைக் கொன்றுவிட்டால்.. நான் சொன்னதில் உண்மை இல்லைன்னு ஆகிவிடுமா? பெண்ணிடம் உங்கள் வீரத்தைக் காட்ட வேண்டாம் அத்தான்.. இதை உங்க தம்பியிடம் காட்டுங்க..''

''ஏய்.. ச்சீ.. பெண்ணிடம்தான் வீரம் காட்டக்கூடாது.. நீயெல்லாம் பெண்ணில் சேர்த்தியில்லை.. பேய்...''

''அடேங்கப்பா.. நான் பெண்ணில் சேர்த்தியில்லை.. இன்றைக்கு தினகரனை பதினோரு மணிக்கு மேல் தோட்டத்துக்கு வரச்சொல்லி லவ் லெட்டர் கொடுத்திருக்கிறாளே, உங்க காதலி மாலினி.. அவ எதில் சேர்த்தி? பெண்ணிலா.. இல்லை பேயிலா?''

''வாய் வார்த்தைக்கு சொல்கிறேன்னு நினைக்காதே. நிஜமாகவே உன்னைக் கொன்று இந்த மண்ணில் புதைத்துவிடுவேன்..''

''தாராளமாய் அதைச் செய்யுங்க அத்தான்.. அதுக்கு முன்னால் நான் சொல்வது பொய்யின்னு நிரூபித்துவிட்டுச் செய்யுங்க..''

''உன் வேலையை எனக்குத் தெரியாதா.. தினகரன் கையிலிருந்த பூவை.. என் அம்மா கொடுத்ததாகச் சொல்லி மாலினியின் கைக்கு வர வைத்தவள்தானே நீ...''

''செய்தேன்தான். ஆனால்.. மாலினியின் கையில் ரோஜாப்பூவை பார்த்ததும்.. தினகரனின் முகத்தில் மத்தாப்பூ வந்ததே.. அதை நீங்க இல்லைன்னு சொல்லப் போறீங்களா?''

பிரபாகரன் நிதானித்தான். இன்னமும் தினகரனின் விழிகளில் மாலினியைக் கண்டால் மின்னல் வெட்டுவதை அவன் கவனித்துக் கொண்டுதான் இருந்தான். காயத்ரியின் திருமணம் முடியட்டும்.. மாலினியை மணக்கப் போகும் செய்தியை வெளிப்படையாக அறிவித்துவிட்டால் தம்பி மாறிவிடுவான் என்ற எண்ணத்தில் அவன் அதைக் கண்டும் காணாதவன் போல இருந்துவிட்டான்.

'இன்றைக்கு என்ன வினையை இவன் இழுத்து வைத்துத் தொலைத்திருக்கிறானோ..'

ஒரே தங்கையின் திருமண சமயத்தில் தேவையில்லாத குழப்பங்கள் எழுவதை நினைத்து மனதிற்குள் எரிச்சல் பட்டான் பிரபாகரன்.

''இப்போ நீ என்னதான் சொல்ல வருகிற?''

''தினா அத்தான் சாயங்காலம் தோட்டத்தில் தனியாக நின்றுகொண்டிருந்தார். மாலினி அவரிடம் வந்து ஒரு கடிதத்தை கொடுத்துவிட்டு.. 'நைட் பதினோரு மணிக்கு மேல் தோட்டத்திற்கு வாங்க.. மேற்கொண்டு பேசலா'முன்னு சொல்லிவிட்டுப் போயிட்டா. அதைத்தான் நான் உங்களிடம் சொன்னேன்..''



இதை பிரபாகரனால் நம்ப முடியவில்லை. எதற்கும் இரவு பதினோரு மணிக்கு தோட்டத்திற்கு வந்து பார்த்து விட வேண்டும் என்று அவன் மனதிற்குள் தீர்மானித்துக் கொண்டான்.

'மாலினி.. ஏதும் சிக்கலில் மாட்டியிருக்கிறாளோ..'

அவளிடம் விளக்கம் கேட்க செல்போனை எடுத்தவனை உறவினர் படை வளைத்துக் கொள்ள... திருமணத்தைப் பற்றிய ஏற்பாடுகளைப் பற்றிப் பேச ஆரம்பித்தவன் அதை மறந்து போனான்.

ஸ்வேதாவிற்கு அவன் கட்டாயம் இரவு பதினோரு மணிக்கு தோட்டத்திற்கு வருவான் என்று தெரியும்.

அவள் நமட்டுச் சிரிப்புடன் அடுத்த குறியான பவித்ராவைத் தேடிப் போனாள்.

அப்போதுதான் மாலினி வந்து தன் கடிதத்தை சேர்ப்பித்துவிட்ட செய்தியை பவித்ராவிடம் சொல்லி விட்டுச் சென்றிருந்தாள். முகமெல்லாம் ரகசியக் கனவு பரவ.. மெய்மறந்து அமர்ந்திருந்தவளின் எதிரே போய் அமர்ந்தாள் ஸ்வேதா.

''என்ன பவித்ரா.. நீ கனவு கண்டது நிறைவேறப் போகுதுன்னு பொய்யான சந்தோஷத்தில் இருக்கிறாயா?''

''என்ன கனவு.. என்ன சந்தோஷம்? நான் எப்போதும் போலத்தான் இருக்கிறேன்..''

''என்னிடமே மறைக்க நினைக்கிறாயா? போடி பைத்தியக்காரி.. உன் கனவு மாளிகை... வெறும் சீட்டுக் கட்டு மாளிகை. ஒரு சீட்டை உருவினாலும் போதும்.. மொத்தமும் சரிந்து கலைந்துவிடும்..''

''ஸ்வேதா..''

''அலறாதே.. நீ கோட்டைப் போட்டால்.. மாலினி ரோட்டைப் போட்டுவிட்டு வந்திருக்கிறா.. முட்டாள் போல

உன் காதலனை அவளிடம் கோட்டை விட்டுவிட்டு.. இங்கே ரகசியக் கனவை கண்டுகொண்டிருக்கிறாய்.. உன்னை என்ன சொல்ல.. நீயும் நானும் சித்தப்பா.. பெரியப்பா மகள்கள்தானே.. ஏமாறும் குணம்.. நம் ரத்தத்தில் ஊறிப் போயிருக்கு போல..''

''நீயா ஏமாறுகிறவள்.. நீ ஏமாற்றுகிறவள் ஆச்சே..''

''கிழிச்சேன்.. என் சாமர்த்தியத்தை நீதான் மெச்சிக்கணும்.. நானும் வருஷக்கணக்கில் பிரபாகரனை சுற்றி வந்து பார்த்துவிட்டேன். அவன் மனம் திரும்பவில்லை. இவனைச் சுற்றியதற்குப் பதிலாக.. அரச மரத்தைச் சுற்றியிருந்தாலாவது எனக்கு விமோசனம் கிடைத்திருக்கும். நவக்கிரகங்களைச் சுற்றியிருந்தால் நல்ல வாழ்க்கையாவது கிடைச்சிருக்கும். இப்போ எல்லாமும் வேஸ்டா போச்சு. எங்கிருந்தோ வந்த இந்த மாலினி.. என்னிடமிருந்து பிரபாகரனைப் பிடுங்கிக் கொண்டு போனாள். இப்போது உன்னிடமிருந்து தினகரனைப் பிடுங்கப் பார்க்கிறாள்..''

''இல்லை.. அப்படி நடக்காது. அவள் எனக்காக நான் எழுதிய காதல் கடிதத்தை தினா அத்தானிடம் கொடுத்துவிட்டு வந்தாள்..''

''அதை நீ எழுதிய கடிதம்னு சொல்லி அவள் கொடுக்கவில்லையே.. அவள் எழுதியதாகச் சொல்லித்தானே கொடுத்தாள்?''

இதைக் கேட்ட பவித்ராவின் முகம் பயங்கரமாக மாறியது. அவளுக்கும் இது போன்ற சந்தேகங்கள் முதலிலேயே இருந்தன.

''நீ என்ன சொல்கிறாய்.. உனக்கு எப்படி இது தெரியும்?''

''நான் தோட்டத்தில்தான் இருந்தேன். இவள் நேராக தினா அத்தானிடம் வரவும்.. என்ன பேசுகிறாள்னு ஒளிந்திருந்து பார்த்தேன்..''

''உன் புத்தி இப்படித்தானே இருக்கும்?''

''என் புத்தி அப்படி இருந்ததால்தான் இன்றைக்கு உனக்கு உண்மை தெரிய வந்திருக்கு..''

''சொல்வதை சரியாகச் சொல்லு..''

''இவள் தினா அத்தானிடம் கடிதத்தைக் கொடுத்தாள். அவர் பல்லைக் காட்டிக்கிட்டு வாங்கிக்கிட்டு என்ன இதுன்னு கேட்டார். இவள் உடனே 'என் மனசில் இருக்கிறதை எழுதியிருக்கேன் படிச்சுப் பாருங்க அத்தான்'னு சொன்னாள்..''

''வெயிட்.. வெயிட்.. அவள் மனதிலிருப்பதை அவள் எழுதியதாகச் சொன்னாளா?''

''அப்படித்தாண்டி சொன்னாள்..''

''என்னால் நம்பவே முடியவில்லையே.. அவளா அப்படிச் சொன்னாள்.. இந்த லவ் லெட்டர் ஐடியாவைக் கொடுத்ததே அவள்தானே...''

''நான்தான் ஏற்கெனவே அவளைப் பற்றிச் சொல்லிவிட்டேனே.. அவள் ஒரு ஸாடிஸ்ட் பவித்ரா. உன்னைத் தூண்டி விட்டுவிட்டு கடைசியில் பார் பவித்ரா.. 'உன் காதலனுக்கு உன் மூஞ்சியைப் பிடிக்கலையாம். என் மூஞ்சியைத்தான் பிடிக்கிறதாம்'னு வெற்றியை பறைசாற்ற நினைக்கிறாள் போல.. ஏண்டி.. உனக்கு காதல் தூதுவிட இவளை விட்டால் வேறு ஆளே கிடைக்கலியா.. இவள்தான் கிடைத்தாளா? யாராவது பொக்கிஷத்துக்கு காவல் காக்கிற வேலையை திருடன்கிட்டேயே கொடுப்பாங்களாடி? என்கிட்ட கொடுத்திருந்தால் நான் போய் கொடுத்திருக்க மாட்டேனா?''

''யார், நீதானே.. அவளாவது நான் எழுதிய கடிதத்தை அவள் எழுதியதாக மட்டும்தான் சொல்லியிருக்கிறா. நீ.. அதோட விடாமல் நான் வேறு யாரையோ காதலிக்கிறேன்னு என்மேல பழியைப் போட்டு என்னை அவர் நினைத்து விடாமலிருக்க என்னென்ன செய்யணுமோ அத்தனையையும் செய்துவிட்டுல்ல வந்துவிடுவ..''

இவள் தன் குணத்தை சரியாக கணித்திருக்கிறாள் என்ற நினைவில் பல்லைக் கடித்தாள் ஸ்வேதா. இவளோடு மோதுவதற்கு இது நேரமல்ல என்பதை உணர்ந்தவளாக பவித்ரா என்னவோ தன்னைப் புகழ்ந்ததைப் போல மலர்ச்சியாக முகத்தை வைத்துக் கொண்டாள்.

''இப்படி அவளை நம்பித்தானே இந்த நிலையில் வந்து நிற்கிறாய்? இப்பப் பாரு.. அவ அந்தக் கடிதத்தை தான் கொடுத்ததா தினகரன் கிட்ட சொல்லிட்டுப் போயிட்டா. எனக்கு என்னன்னா.. மாலினி ஆயிரம்தான் ஸாடிஸ்டா இருந்தாலும் புத்திசாலி. அது எப்படி நீ எழுதிய கடிதத்தை தான் எழுதியதாகச் சொல்கிறா. நீதான் இப்படிக்கு பவித்ரான்னு கையெழுத்து போட்டிருப்பியே.. அந்தக் கையெழுத்து காட்டிக் கொடுத்துவிடாதா?''

அறியாதவளைப் போல ஸ்வேதா வினவி வைக்க.. பவித்ராவின் முகம் வெளுத்தது. அதை ஓரக்கண்ணால் கவனித்த ஸ்வேதா, மனதிற்குள் சிரித்துக் கொண்டாள்.

''இல்லையே ஸ்வேதா..''

''எது இல்லை.. உன் மனதில் தினகரனின் மேல் காதல் இல்லையா?''

''அதுதான் மனது நிறைய இருக்கே.. அந்த லெட்டரில் நான் கையெழுத்து போடவில்லை..''

'இதுதான் எனக்குத் தெரியுமே..' ஒளிந்திருந்து



பார்த்திருந்த ஸ்வேதா வெளியே பதற்றமாய் முகத்தை வைத்துக் கொண்டாள்.

''என்னடி சொல்கிற.. அப்போ தினகரன் அதை மாலினி கொடுத்த லெட்டர்ன்னுதான் நினைப்பான். நீ கொடுத்த கடிதத்தை அவனிடம் கொடுப்பதற்கு முன்னால் மாலினி பிரித்துப் பிடித்திருப்பாள். கையெழுத்து இல்லைன்னு தெரிஞ்சதும் உன் வாழ்க்கையில் விளையாடிப் பார்த்துவிட்டாள்..''

பவித்ராவின் முகம் பயங்கரமாய் மாறியது. அவளது உடல் நடுங்கியது.

'விடமாட்டேன்..' அவள் மனதிற்குள் சொல்லிக் கொண்டாள்.

'மாலினி.. என் வாழ்க்கையில் விளையாட நான் விடமாட்டேன்...'

## 96

*சூழ்நிலைகள் தினம் மாறி.. சுட்டெரிக்கும் வாழ்க்கையிலே..*
*உன் நினைவே அதைத் தாங்கும் சக்தியினை கொடுப்பதையே..*
*என்னவென்று நான் சொல்ல..?*

'எது நடக்கிறதோ.. அது நன்றாகவே நடக்கிறது..' என்று திருப்தியுடன் நினைத்துக் கொண்டாள் ஸ்வேதா.

எந்தக் காரியத்தை முடிக்கும் பொருட்டு..

'வெள்ளையனே வெளியேறு..' என்ற ரீதியில்

'ஸ்வேதாவை கூப்பிட்டுக் கொண்டு போய்விடு..' என்று தீர்மானமாக பிரபாகரன் சொல்லிவிட்ட நிலையிலும் அந்த அவமானத்தை பொருட்படுத்தாமல் அறுபது

நாள்கள் பிடிவாதமாக அந்த வீட்டில் தங்கியிருந்தாளோ.. அந்தக் காரியம் அன்று நிறைவேறிவிட்டது.

'ஒரே கல்லில் இரண்டு மாங்காய்..' என்பது வழக்கு மொழி.

'ஒரே இரவில் இரண்டு பிரிவு..' என்பது ஸ்வேதாவின் புதுமொழி.

அந்த ஓர் இரவில் அவள் நினைத்ததை சாதித்து முடித்துவிட்டாள். மாலினியை பிரபாகரனிடமிருந்து பிரிக்க பவித்ராவை பிரபாகரனிடம் பேச வைத்துவிட்டாள்.

பவித்ராவிடமிருந்து தினகரனை பிரிக்க.. தினகரனின் வாய்மொழியாலேயே மாலினிதான் அவனை வரச் சொன்னதாக பிரபாகரனிடம் சொல்ல வைத்து.. அதை பவித்ராவை கேட்கவும் வைத்துவிட்டாள்.

காதல் கொண்ட பெண்மனம் எதற்கும் துணியும்.

அந்த துணிச்சலை பவித்ராவிற்கு ஸ்வேதா உண்டாக்கி விட்டாள். தன்னை விட்டுத் தன் காதலன் இன்னொரு பெண்ணைப் பார்க்கிறான் என்பதையே பொறுத்துக் கொள்ள முடியாத பெண்மனத்திடம்.. அவள் உன்னை நம்ப வைத்து உன் காதலனை தட்டிப் பறித்துக் கொள்ளப் பார்க்கிறாள் என்பதையும் சேர்த்துச் சொன்னால் என்ன ஆகும்?

பவித்ரா தன் வாழ்வையும் பாழடித்து மாலினியின் வாழ்வையும் பாழடிக்கத் துணிந்துவிட்டாள்.

அவள் மட்டும் பொறுமையாக அந்த ஓர் இரவை கடந்திருந்தால் இரவு முழுவதும் மாலினிக்காக காத்திருந்த தினகரன் மறுநாள் மாலினியிடம் போய்.. 'ஏன் நீ வரவில்லை?' என்று கேட்டிருப்பான்.

'அடேய் முட்டாளே... உன்னை வரச் சொன்னது



நானில்லை.. பவித்ராதான் வரச் சொன்னாள்..' என்று மாலினியும் சொல்லியிருப்பாள். அவளது காதல் கைகூடியிருக்கும்.

ஆனால், மாலினி துரோகம் பண்ணிவிட்டாள் என்று நினைத்துவிட்ட பவித்ரா பொறுமை காக்கவில்லை. அவள் எதையாவது செய்யத் துடித்தாள். அதற்கு ஸ்வேதாவும் வழி சொல்லிக் கொடுத்தாள்.

''நீ பதினோரு மணிக்கு முன்னாலேயே தோட்டத்துக்குப் போய் செடிமறைவில் நின்று கொள்..''

''அதுமட்டும் என்னால் முடியாது ஸ்வேதா.. அத்தான்.. என் காதலை ஏற்றுக்கொண்டிருந்தால் அவர் முன்னால் தைரியமாக போய் நிற்பேன். அவர் மாலினியை மனதில் நினைத்துக் கொண்டிருக்கும்போது வலியபோய் நான் நிற்பதா?''

''உன்னை யாருடி.. தினகரனிடம் நேராகப் போய் பேசச் சொன்னது?''

''வேறு என்னதான் நான் செய்ய?''

''எதுவும் செய்ய வேண்டாமா.. அந்த மாலினியை எதுவுமே செய்ய வேண்டாமா?''

பவித்ராவின் கண் கலங்கியது. முகம் சிவந்தது.

''ஏதாவது செய்ய வேண்டும்.. ஆனால், என்ன செய்வதுன்னுதான் எனக்குத் தெரியலையே..''

''நான் சொல்வதைச் செய்..''

''நீ நல்லதையே சொல்ல மாட்டாயே..''

''மாலினிக்குத்தானே அது கெடுதலாக முடியும். அவளைப் பற்றி இனி உனக்கென்ன கவலை..''

''நீ சொல்வதும் சரிதான்.. என்னன்னு சொல்லு..''

''நீ முதலில் போய் ஒளிந்து கொள். தினகரன் வருவான். காத்திருப்பான். ஆனால், மாலினி வரமாட்டாள்..''

''என்னிடம் மாட்டிக் கொள்வாள்னு பயந்துவிடுவாளா?''

''அவள் உன்னிடமும் என்னிடமும் பயப்பட மாட்டாள். அவள் பயப்படுகிற ஆளே வேறு.. அவர் யாருன்னு சொல்லு..''

''பெரியத்தானா?''

''ஆமாம்.. அவர் தினகரனிடம் பேச வருவார். அவர் இருக்கும்போது அவள் எப்படி வருவாள்?''

''பெரியத்தான் எப்படி கரெக்டா பதினோரு மணிக்கு அங்கே வருவார்?''

''என்னை என்னன்னு நினைத்தே?''

''என் நினைப்பைப் பற்றி நான் சொன்னேன்னா நீ தாங்க மாட்ட..''

''அப்போ சொல்லாதே. ஆயிரம்தான் இருந்தாலும் நீ என் சித்தப்பாவின் மகள்..''

''அந்தக் கொடுமையைத் திருப்பித் திருப்பி நினைவுபடுத்தாதே.. விஷயத்துக்கு வா..''

''என் காதில் மாலினி சொன்ன வார்த்தைகள் விழுந்ததுமே அதை பெரியத்தானிடம் சொல்லிவிட்டேன்..''

''பற்ற வைத்துவிட்டாய்னு சொல்லு..''

''அதைப் பற்றி உனக்கென்ன வந்தது. நீ செய்யாததை நான் செய்திருக்கேன்னு நினைத்து சந்தோஷப்படு..''

''என் நிலைமைக்கு எனக்கு சந்தோஷம் வருமா?''

''வராவிட்டால் விட்டுவிடு. பிரபாகரன், மாலினியை நம்புகிறார். அதனால் தினகரனிடம் விளக்கம் கேட்க கட்டாயம் தோட்டத்துக்கு வருவார். பெரியத்தானிடம் நல்லவள் போல் வேஷம் போடும் மாலினி அங்கே கட்டாயம் வரமாட்டாள். ஒரு வகையில் இதுவும் நல்லதுக்குத் தான்..''



''யாருக்கு நல்லது.. உனக்கா?''

''நம் இரண்டு பேருக்கும்தான்..''

''உன்னோடு என்னைக் கூட்டுச் சேர்க்காதே..''

''சேராவிட்டால் போ. ஆனால்.. தினகரனின் வாய் மொழியால் உண்மையை நீ தெரிந்துகொள்ள இது ஒரு நல்ல சந்தர்ப்பம். ஏன் நான் இதைச் சொல்கிறேன்னா.. இன்னும் உன் மனதின் ஒரு மூலையில் மாலினி இதைச் செய்திருக்க மாட்டாள் என்ற குருட்டு நம்பிக்கை ஒட்டிக் கொண்டிருக்கிறது. நீ காதாலேயே அதைக் கேட்டுவிட்டால்தான் நான் சொல்வது உண்மைன்னு நம்புவாய்..''

எப்படி தன் மனதில் உள்ளதை இவள் பிட்டுப் பிட்டு வைக்கிறாள் என்று ஆச்சரியப்பட்டுப் போனாள் பவித்ரா. மாலினியின் மீது அவள் மனதில் வன்மம் எழுந்தபோதும்.. இன்னும்கூட அவள் இதைச் செய்திருப்பாள் என்று பவித்ராவால் நம்ப முடியவில்லைதான்.

''நீ உண்மையை உணர்ந்து கொண்டதும் என்ன செய்யணும்னு நீயே முடிவு பண்ணிக்க..''

''என்ன ஆச்சு ஸ்வேதா.. இத்தனையும் சொன்னவள் கடைசி நிமிஷத்தில் கழண்டு கொள்ளப் பார்க்கிறயே.. என்ன விஷயம்?''

''நான் சொல்லித்தான் நீ எதையும் செய்யணுமா என்ன.. நீயே புத்திசாலி.''

''அது உனக்கு இப்போதுதான் தெரிந்ததா?''

''மீன்குஞ்சுக்கு நீந்தச் சொல்லிக் கொடுக்க வேண்டியதில்லை..''

''நான் மனுஷப்பிறவி.. மீன்குஞ்சு உவமானத்தை விட்டுவிட்டு விஷயத்துக்கு வா..''

''உனக்கே தெரியும்.. தினகரனையும் மாலினியையும் கண்டிக்க பிரபாகரன் ஒருவரால்தான் முடியும்..''

''ஆமாம்.. அதுக்கென்ன?''

''உன் கண் முன்னால் லட்டு போல பெரியத்தான் தனியே அகப்பட போகிறார். அவரிடம் உன் காதல் தோற்றுப்போன கதையைச் சொல்லி அழுது புலம்பணும்னு நான் சொல்லித்தானா உனக்குத் தெரியணும்..?''

''தினா அத்தானும் கூட இருப்பாரே...''

''உன் தினா அத்தான் பெண்கள் இருக்கும் இடத்தில் தான் நிற்பான்.. அவனுடைய பெரியண்ணனின் பக்கத்தில் ஒரு வினாடிகூட நிற்க மாட்டான். ஓடிவிடுவான். மற்ற நாள்களிலேயே இப்படின்னா.. நாளைக்கு மறுநாள் தங்கச்சி கல்யாணத்தை வைத்துக்கிட்டு.. மாலினி வரச் சொன்னாள்னு தோட்டத்தில் நிற்கிறவன் எப்படி அங்கேயே நிற்பான். அண்ணன்காரனுக்கு விளக்கத்தை சொல்லி விட்டு நடையைக் கட்டிவிடுவான்..''

''ஒருவேளை.. தினா அத்தான்.. பெரியத்தானிடம் உண்மையை மறைத்துவிட்டாருன்னா?''

''ஊஹூம்.. அது என்னவோ தெரியவில்லை. இந்த அண்ணன் தம்பிகள் மூணு பேரும் மகா ஒற்றுமை பவித்ரா. என்ன அயோக்கியத்தனம் செய்தாலும் அண்ணன்காரனிடம் தினகரன் அதை மறைத்து பொய் சொல்லமாட்டான்..''

''நல்ல குடும்பத்துக்கு அதுதான் அடையாளம்..''

''அந்த அடையாளத்தை அவங்களே வைத்துக் கட்டும். நமக்கு அது வேணாம். நீ ஆகிற வேலையைக் கவனி. பேசிப் பேசி மணி பதினொண்ணே ஆகப்போகுது.. நீ ஓடிப்போய் ஒளிந்து கொள்ளும் வழியைப் பார். ஒன்றை மட்டும் நினைவில் வைத்துக் கொள்..''



''என்ன?''

''இந்த சான்ஸை நீ விட்டுவிட்டா.. நீ காலத்துக்கும் பெரியத்தானிடம் இதைப் பற்றி பேச முடியாது..''

''உண்மைதான். கல்யாணம் முடிந்த கையோடு என்னை ஊருக்கு கூப்பிட்டுக்கிட்டு போயிடுவாங்க..''

''உன்னை அந்தப் பக்கம் அனுப்பிவிட்டு.. இந்தப் பக்கம் தினகரன், மாலினியைக் கல்யாணம் பண்ணிக் கொண்டாலும் பண்ணிக் கொள்வான்..''

''அப்படி நடந்துவிடுமா என்ன?''

''நடந்தால் ஆச்சரியப்படுவதற்கில்லை. ஏன்னா.. தினகரன் படுஸ்பீடான ஆள். மாலினி காதல் சொன்ன போதே கையைப் பிடிக்காவிட்டால் அண்ணன்காரன் முந்திக்குவான்னு மனதில் பயம் இருக்கும்...''

''பெரியத்தான் பாவமில்லையா?''

''பாவம்தான்.. அவர் பாவத்தை யார் பார்ப்பா. நீ மனது வைத்து பார்த்தால்தான் உண்டு. நீ பெரியத்தானிடம் மாலினியின் துரோகத்தைப் பற்றிச் சொல்லுவதால் உன் காதலை மட்டும் நீ காப்பாற்றிக் கொள்ளவில்லை.. பெரிய அத்தானின் காதலையும் சேர்த்துக் காப்பாற்றப் போகிறாய். உனக்கே தெரியும்.. ஏற்கெனவே பெரியத்தானுக்கு முன்னால் கருணா அத்தான் கல்யாணம் பண்ணிக் கொண்டு விட்டார். இப்போது காயத்ரிக்கு கல்யாணம் நடக்கப் போகுது... இதில் தினாவும் மாலினியை இழுத்துக் கொண்டு ஓடிவிட்டான்னு வை.. காலத்துக்கும் பெரியத்தான் கல்யாணம் பண்ணிக் கொள்ள மாட்டார். அவர் இரும்பு மனிதர். ஒன்றை நினைத்துவிட்டால் அதிலேயே நிலைத்து நிற்கும் ரகம். தினகரனைப் போல அலைகிற ரகமில்லை..''

''நீயும் கூட வாயேன் ஸ்வேதா..''

''ஊஹூம்.. நான் சொல்லிக் கொடுத்துதான் நீ பேசறேன்னு என்மேல் வீண் பழி வந்துவிடும். நான் வரலை சாமி. நான் இத்தனை சொன்னதே அதிகம். உனக்கா புத்தியிருந்து பிழைத்துக்கனும்னா பிழைத்துக்க. எனக் கெதுக்கு ஊர் வம்பு?''

வம்புக்கு அஞ்சிய அடக்கஒடுக்கமான ஸ்வேதா.. நினைத்ததை நடத்தி முடித்துவிட்ட களைப்பில் நீண்ட காலத்திற்குப் பின்னால் நிம்மதியாக தூங்கப் போனாள்.

சாவி கொடுக்கப்பட்ட பொம்மையாக பவித்ரா.. கொந்தளிக்கும் மனத்தோடு தோட்டத்தின் செடி மறைவில் ஒளிந்து கொள்ளப் போனாள்.

ஓர் இரவு.. புகழ்பெற்ற அறிஞர் அண்ணாத்துரைக்கு புகழ் சேர்த்த கதை. ஓர் இரவில் அவர் எழுதி முடித்த கதை... அந்த ஓர் இரவு தந்த திருப்பத்தைப் போல எண்ணற்ற திருப்பங்களைத் தன்னுள்ளே அடக்கிக் கொண்டிருந்த இந்த ஓர் இரவின் பதினொரு மணி.. நெருங்கிக் கொண் டிருந்தது.

செடி மறைவில் மூச்சடக்கி காத்திருந்தாள் பவித்ரா. வீட்டுக்குள் நடமாட்டம் குறைந்திருப்பது அவள் கண்ணில் பட்டது. சற்று நேரத்தில் தினகரன் வீட்டுக்குள்ளிருந்து வெளிப்பட்டான். சுற்றுமுற்றும் பார்த்தபடி தோட்டத்திற்கு வந்தான். பவித்ராவிற்கு வியர்த்துவிட்டது.

மொட்டை மாடியில் படுத்திருந்தவர்களை விசா ரிப்பது போல இருளில் மறைந்து நின்று தோட்டத்தைப் பார்த்துக் கொண்டிருந்த பிரபாகரனின் புருவம் ஏறியது. ஸ்வேதா சொன்னதைப் போல தினகரன் தோட்டத்திற்குப் போகிறானே.

என்ன செய்யலாம் என்று அவன் யோசித்தான்.



மாலினி ஒருவேளை தினகரனைப் பார்க்க தோட்டத்திற்குப் போய்விடுவாளோ.

பிரபாகரன் நெற்றிப்பொட்டைத் தட்டிக் கொண் டான். அவனுக்கு மாலினியின் மீது துளிக்கூட சந்தேக மில்லை. அவன் மாலினியுடன் வாழாமல் வாழ்ந்து பார்த்து விட்டவன். அவனிடம் தன் உடலையும் மனதையும் முழு மனதாய் ஒப்படைத்தவள் மாலினி.

அவள் போய் தினகரனை தோட்டத்துக்கு வரச் சொல்லியிருப்பாளா? ஆனால், தினகரன் தோட்டத்துக்குப் போகிறானே.

உண்மையை அறிய வேண்டுமானால் தினகரனுடன் அவன் உடனடியாகப் பேசியாக வேண்டும்.

பிரபாகரன் மொட்டை மாடியிலிருந்து இறங்கி தோட்டத்துக்குப் போனான்.

பிரபாகரன் வருவதை செடிமறைவிலிருந்து பார்த்துக் கொண்டிருந்த பவித்ராவிற்கு ஸ்வேதாவின் புத்தி கூர்மையை நினைத்து வியப்பேற்பட்டது.

குட்டி போட்ட பூனை போல நடை பழகிக் கொண் டிருந்த தினகரன், பிரபாகரனைக் கண்டதும் நின்றுவிட் டான்.

''என்ன தினா.. இந்த நேரத்தில் இங்கே என்ன செய்கிற?''

''ஜஸ்ட் வாக்கிங்.. வேற ஒண்ணுமில்லை அண்ணா..''

''நடுராத்திரியில் வாக்கிங்கா? என்கிட்ட பொய்கூட நீ சொல்லுவியா?''

''அண்ணா..''

''எனக்கு எல்லாம் தெரியும் தினா. நீ யாருக்காக காத்திருக்கிறாய்?''

பிரபாகரனின் வார்த்தைகள் கண்டிப்புடன் வெளியே வரவும், தினகரன் கைபிசைந்தான். அண்ணனுக்கு தெரிந்து விட்டது என்ற உணர்வுடன்..

''மாலினிக்காக காத்திருக்கிறேன் அண்ணா..'' என்று சொல்லிவிட்டான்.

ஒரே நேரத்தில் இடி பிரபாகரன்.. பவித்ரா.. இருவரின் தலையிலும் இறங்கியது. பவித்ரா கண்மூடி அந்த வேதனையை ஜீரணித்துக் கொள்ள முயன்றாள்.

'கடைசியில் ஸ்வேதா சொன்னது உண்மையாகி விட்டதே.. மாலினி எனக்குத் துரோகம் செய்துவிட்டாளே...' அவளுக்கு மனம் தாங்கவில்லை.

பிரபாகரனின் மனநிலையே வேறு.. அவன் தம்பி களுக்கும் தங்கைக்கும் அண்ணன் ஸ்தானத்தில் இல்லாமல் ஒரு தகப்பனின் ஸ்தானத்தில் இருப்பவன்.

அவனுக்கு மனைவியாகப் போகும் மாலினி.. தினகர னுக்கு அண்ணியாகப் போகிறவர் இல்லையா? அண்ணி யென்றால் தினகரன் அவளை தாய் ஸ்தானத்தில் வைத்துப் பார்க்க வேண்டியவன் இல்லையா?

அவன் இப்படி அறியாமல் பேசுகிறானே என்பது தான் பிரபாகரனுக்கு.

''உளறாதே தினா.. உனக்கு என்னவாயிற்று? மாலினி இந்த நேரத்தில் எதற்காக உன்னைப் பார்க்க வர வேண்டும்?''

''அதை மாலினியிடம்தான் கேட்கணும் அண்ணா..''

''உன்கிட்ட கேட்பதற்கு அவள் ஏன் பதில் சொல் லணும்.. எனக்குப் புரியலை தினா...''

''இந்தக் கடிதத்தை படித்துப் பாருங்கள் புரியும். இந்தக் கடிதத்தை என்கிட்ட கொடுத்துட்டு மாலினி வேகமா போயாச்சு.. நான் கடிதத்தில் சொன்னபடி வந்து மாலினிக் காக காத்திருக்கிறேன்..''



தினகரன் கொடுத்த கடிதத்தைப் படித்துப் பார்த்த பிர பாகரனுக்கு அழுவதா.. இல்லை சிரிப்பதா என்று தெரிய வில்லை.

97

உன் சின்னச்சிறு பார்வையிலே...
சிறகடிக்கும் என் மனதை...
என்னவென்று நான் சொல்ல...?

அந்தக் கடிதத்தை பார்த்த முதல் பார்வையிலேயே.. அதிலிருந்த கையெழுத்து மாலினியின் கையெழுத்தில்லை என்பதை புரிந்துகொண்டான் பிரபாகரன். ஆனால், இதை எப்படி தினகரனுக்கு சொல்வது என்றுதான் பிரபாகரனுக்கு புரியவில்லை.

அவன் அதைச் சொல்வதாக இருந்தால்.. அந்த அளவுக்கு மாலினியை அவன் அறிந்து வைத்திருப்பதையும் சொல்லியாக வேண்டும். மாலினி தன்னைக் காதலிக் கிறாள் என்று நம்பிக் கொண்டு நடு இரவில் தோட்டத்தில் வந்து நிற்பவனிடம் இதை எப்படிச் சொல்வது?

அதனால் வேறு வழியில் அதை எழுதியது மாலினி யல்ல என்பதை அவனுக்கு புரியவைக்க முயற்சி செய்தான் பிரபாகரன்..

''தினா.. இதை எழுதியது மாலினிதான்னு எப்படி நிச்சயமாய் நீ சொல்கிற... இதை வேறு யாராவது எழுதி யிருக்கலாமில்லையா?''

''இல்லை அண்ணா.. இதை மாலினியே நேரில் வந்து என்னிடம் கொடுத்தாள். வேறு ஒருத்தர் எழுதியிருந்தால்

இன்னார் எழுதியிருக்காங்க.. என்னிடம் கொடுத்துவிட்டாங் கன்னு மாலினி சொல்லியிருக்கலாமே. அப்படிச் சொல்ல வில்லையே. படித்துப் பாருங்க.. புரியும்னு சொல்லிவிட்டு வேகமாய் போயாச்சே..''

''இதில் மாலினியோட கையெழுத்தில்லையே..''

''வேறொருத்தங்க கையெழுத்தும் இல்லையே..''

''எது எப்படியாக இருந்தாலும்.. நீ மாலினியைச் சந்திக்க இந்த நேரத்துக்கு தோட்டத்துக்கு வரலாமா? வீடு பூராவும் நம்ம சொந்தபந்தம் நிறைஞ்சிருக்காங்க.. நம்ம ஒரே தங்கைக்கு நாளை மறுநாள் விடிஞ்சா கல்யாணம். யாராவது நீ மாலினியோடு இந்த ராத்திரி வேளையில் தோட்டத்தில் நின்று பேசிக் கொண்டிருப்பதை பார்த்தால் என்ன ஆகும் தெரியுமா.. நம்ம குடும்பத்துக்குன்னு ஒரு கௌரவம் இருக்கு. நம்ம சம்பந்தி வீட்டுக்கு இது தெரிஞ்சா கல்யாணம் நடப்பதே கேள்விக்குறியாகி விடாதா?''

வேறுவழியில்லாமல் பலவற்றையும் சொல்லி தம்பியை பயமுறுத்த ஆரம்பித்தான் பிரபாகரன்.

''தப்புத்தான் அண்ணா.. மன்னிச்சுருங்க. நானும் மாலினியுடன் அதிக நேரம் நின்று பேச நினைக்கவில்லை. என் காதலை ஏற்றுக்கொண்டால்.. ராத்திரி பதினோரு மணிக்கு தோட்டத்துக்கு வாங்கன்னு எழுதியிருக்கு.. அதனால்.. காதலை நான் ஏற்றுக்கிட்டேன் என்று காட்டவே தோட்டத்திற்கு வந்தேன். மாலினி வந்தவுடனே இதைச் சொல்லிவிட்டு உடனே போயிடுவேன்..''

இதைச் சொன்னது தினகரனாக இல்லாமல் வேறு ஒருவனாக இருந்திருந்தால் அந்த இடத்திலேயே அவனை கொன்று புதைத்திருப்பான் பிரபாகரன்.

ஆனால், சொன்னவன் உடன்பிறந்தானாகிப் போய்



விட்டதால் பல்லைக் கடித்துக் கொண்டு தன்னைக் கட்டுப் படுத்திக் கொண்டவன்..

''மாலினி வரமாட்டாள் தினா..''

''உங்களுக்கெப்படித் தெரியும்..''

''இங்கே வரத்தான் படியிறங்கிக் கொண்டிருந்தாள் போல.. நான்தான் இந்த நைட் நேரத்தில் தோட்டத்துப் பக்கம் என்ன வேலைன்னு கேட்டேன். திரும்பிப் போயிட் டாள்..''

''ஏன் அண்ணா அப்படிச் சொன்னீங்க?''

''இந்தக் கதையெல்லாம் எனக்கெப்படித் தெரியும். சரி.. சரி.. எல்லாத்தையும் விடிந்தவுடன் பேசிக்கலாம் போய் படு..''

''இல்லைன்னா... மாலினி உங்களுக்குப் பயந்து திரும்பிப் போயிருந்தாலும்.. நீங்க போனதை கன்ஃபார்ம் பண்ணிட்டு திரும்பவும் என்னைப் பார்க்க வரலாமில் லையா? அதனால் நான் இருந்து பார்த்துவிட்டுப் போகி றேன்.. நீங்க போங்க...''

''ஏண்டா.. நான் இவ்வளவு தூரத்துக்கு சொல்கிறேன்.. அது உன் மரமண்டையில் ஏறலையா.. ஏண்டா இப்படி படுத்தறே...''

முதன்முதலாக தமையனை எதிர்த்துப் பேசினான் தம்பி... முதன்முதலாக தம்பியை கடிந்து கொண்டான் தமையன்.

இதுவரை இதுபோன்ற நிகழ்வு அந்தக் குடும்பத்தில் நடந்ததில்லை.

''அண்ணா... நான் உங்க தம்பி... உங்களுக்கே தெரியும்.. நம்ம குடும்பத்தில் நாம யாரும் வாக்கு தவற மாட்டோம் என்பது..''

''இதில் வாக்கு தவற என்னடா இருக்கு?''

''என்ன அண்ணா இப்படிச் சொல்லிட்டீங்க.. மாலினி என்மேல் நம்பிக்கையாக இந்தக் கடிதத்தை எழுதியிருக்கு. அதன் கேள்விக்கு நான் பதில் சொல்லியாகணுமா வேணாமா...''

மாலினியிடம் பேசாமல் தினகரன் அந்த இடத்தை விட்டு நகரமாட்டான் என்பது புரிந்துபோக... பிரபாகரன் இந்தப் பிரச்னையை எப்படித் தீர்ப்பது என்று யோசிக்க ஆரம்பித்தான்.

''நீ மாலினியிடம் செல்போனில் உன் பதிலைச் சொல்லு...''

''எனக்கு மாலினியின் செல் நம்பர் தெரியாதே...''

இதைக் கேட்டதும் பிரபாகரனின் மனதில் சாரல் அடித்தது. அவனுடைய காதலி அவனிடம் மட்டும்தான் மணிக்கணக்காக பேசுவாள். மற்றவர்களுக்கு அவளுடைய செல் நம்பரைக்கூட கொடுக்க மாட்டாள்.

இப்படிப்பட்டவள் எதற்காக இப்படியொரு காதல் கடிதத்தை தினகரனிடம் கொண்டு வந்து கொடுத்தாள் என்பதுதான் பிரபாகரனுக்குப் புரியவில்லை.

அவன் தன் செல்போனை எடுத்தான். மாலினியின் நம்பர்களை அழுத்தினான். மறுமுனையில் மாலினியின் குரல் ஆவலுடன் ஒலித்தது.

''பிரபா.. நீங்களா.. தேங்க்ஸ் டு காட்... இன்னும் எத்தனை நாளைக்கு ஒரே வீட்டில் இருந்துக்கிட்டு உங்களைப் பார்க்கவோ பேசவோ முடியாம இருக்கணும்னு நான் தவிச்சுக்கிட்டு இருக்கேன் தெரியுமா..''

பிரபாகரனுக்கு மனம் நிறைந்தது. அவனுடைய காதலி.. அவனின் நினைவாகவே இருக்கிறாள். இங்கே



அவனுடைய தம்பி அவள் இந்த ராத்திரி நேரத்தில் தோட்டத்திற்கு வருவாள் என்று நம்பிக் கொண்டு காத்திருக்கிறான்.

என்ன நடந்தது என்று மாலினியிடம் தினகரனின் எதிரிலேயே கேட்க முடியாத பிரபாகரன்.. அறைக்குப் போனபின் அவளிடம் அதைக் கேட்டுக் கொள்ளலாம் என்ற நினைவுடன்,

''ஸாரி ஃபார் தி டிஸ்டர்ப்பென்ஸ் மாலினி.. இங்கே தினகரன் உனக்காக தோட்டத்தில் காத்திருக்கிறான்..'' என்று சொந்தமில்லாத குரலுடன் சொன்னான்.

மறுமுனையில் ஒரு வினாடி நிசப்தம் நிலவியது.

''எனக்காக காத்திருக்கிறாரா.. எதற்கு?''

''அதை நீதான் அவனிடம் கேட்க வேண்டும். ஒன் செகண்ட் மாலினி.. தினா.. மாலினி லைனில் இருக்கிறாள். பேசு..''

தினகரன் ஆவலுடன் போனை வாங்கிக் கொண்டான்.

''ஹலோ.. மாலினி..'' என்றான்.

மாலினிக்கு என்ன சொல்வது என்று புரியவில்லை. இதை அவள் எதிர்பார்த்திருக்கவில்லை. பவித்ராவின் காதலை அவளுடைய அனுமதி இல்லாமல் மற்றவர்களிடம் வெளிப்படுத்துவது நாகரிகம் இல்லை என்று மாலினி நினைத்தாள். அது பவித்ராவைக் காட்டிக் கொடுத்ததைப் போலாகும் என்பது அவளது எண்ணம்.

பவித்ரா, மாலினியிடம் தன் கடிதத்தை தினகரனிடம் கொடுத்துவிடும்படிதான் வேண்டிக் கொண்டாள். காதலை எடுத்துச் சொல்லச் சொல்லி வேண்டிக் கொள்ளவில்லை. அது மாலினியின் மனதில் பதிந்திருந்தது.

இப்போது இப்படி ஒரு பிரச்னை கிளம்பியிருக்கிறது.

தினகரன், மாலினிக்காக தோட்டத்தில் காத்திருப்பதாக பிரபாகரன் கூறுகிறான்.

இது எப்படிப்பட்ட இக்கட்டான நிலைமை?

'இந்த பவித்ரா இன்னும் தோட்டத்துக்குப் போகவில்லையா?' என்று எரிச்சல்பட்டவள்..

''சொல்லுங்க தினகரன்.. ஏன் எனக்காக காத்திருக்கிறேன்னு உங்க அண்ணனிடம் சொன்னீங்க..'' என்றாள்.

தினகரன் நிதானித்தான். தங்களது காதலை பிரபாகரனிடம் ஏன் தெரியப்படுத்தினீங்க என்று மாலினி கேட்பதாக அவன் பொருள் கொண்டு விட்டான்.

''என்ன செய்வது மாலினி.. எனக்கு அண்ணனிடமிருந்து எதையும் மறைத்துப் பேசி வழக்கமில்லையே..'' என்று சொல்லிவைத்தான்.

மறுமுனையில் கேட்டுக்கொண்டிருந்த மாலினிக்குத் தூக்கிவாரிப் போட்டது. தினகரன் பேசுவதை பிரபாகரன் கேட்டுக் கொண்டிருக்கிறான் என்ற நினைவே அவளை கொன்று தின்றது.

பவித்ராவின் காதலுக்கு உதவி செய்யப் போய்.. அவளுடைய காதல் சிக்கலில் மாட்டிக் கொள்வதா...

''நான் என்ன கேட்கிறேன்.. நீங்க என்ன பதில் சொல்கிறீங்க...'' என்று கோபத்துடன் வெடுவெடுத்தாள் மாலினி.

''ஐ ஆம் ஸாரி மாலினி.. நீ அந்தக் கடிதத்தில் எழுதியிருந்தபடி.. நான் தோட்டத்துக்கு வந்துவிட்டேன். ஆனால்.. அண்ணனைப் பார்த்ததும் நீ வராமல் திரும்பிப் போய் விட்டாய்.. நான் உன் காதலை ஏற்றுக்கொண்டதை உனக்குத் தெரியப்படுத்த வேண்டாமா? அதற்குத்தான் இந்த போன்.. ஸாரி எகெய்ன்.. என்னிடம் உன் செல் நம்பர் இல்லாததால் அண்ணனே போன் போட்டுக் கொடுத்தார்..''



தினகரன் பேசிக் கொண்டே போக.. கொஞ்சநஞ்சம் ஒட்டிக் கொண்டிருந்த தூக்கக் கலக்கமும் பறந்து போய் விட.. மனக் கலக்கத்துடன் அலறியடித்துக் கொண்டு எழுந்து உட்கார்ந்தாள் மாலினி.

'போச்சு.. சும்மாவே பிரபாகரன் சாமியாடுவான். இவன் வேறு இப்படி உடுக்கையடித்து வைக்கிறான். இனி என் காதல் என்ன கதியாகுமோ...'

''தினகரன்... உங்களுக்குப் புண்ணியமாகப் போகும். அந்த லெட்டரில் யார் கையெழுத்து இருக்குன்னு பார்த்து விட்டுப் பேசுங்க..''

''நீதான் லெட்டரில் கையெழுத்தே போடவில்லையே கண்ணம்மா...''

'ஊஹூம்..' இவனிடம பேசினால் வேலைக்கே ஆகாது...' பைத்தியம் பிடித்துவிடும் நிலைக்கு ஆளானாள் மாலினி.

''போனை உங்க அண்ணனிடம் கொடுங்க...''

''அவரிடம் பயம் வேண்டாம் மாலினி.. நானிருக்கிறேன் உனக்கு.. அண்ணனிடம் நம் காதலைப் பற்றி நான் பேசிக் கொள்கிறேன்...''

'நீ முதலில் பேசிப் பேசியே என்னைக் கொல்லாதேடா சாமி...' மாலினி தினகரனை மனதிற்குள் திட்டித் தீர்த்தாள்.

''போனை உங்க அண்ணனிடம் கொடுக்கப் போறீங்களா இல்லையா..''

''எதுக்கும்மா இவ்வளவு கோபம்? இனி இதுபோல் நடக்காது. நீயும்தான் உன் செல் நம்பரை என்னிடம் கொடுத்திருக்க வேண்டாமா.. கொடுத்திருந்தால் இப்படி நடக்குமா.. தோட்டத்துக்கு வரச் சொல்வதை விட்டுவிட்டு

செல்போனில் பதில் சொல்லுங்கன்னு சொல்லியிருக்கலாமே.. உனக்கு ஏன் இந்த ஐடியா தோன்றவில்லை?''

'இதை உன்னையெல்லாம் ஒரு மனிதன்னு நினைத்து உருகி உருகி காதலிக்கும் பவித்ராவிடம் போய் கேளு...' தலையில் கை வைத்தாள் மாலினி.

''தினகரன்.. கொஞ்சம் கருணை காட்டுங்க.. ப்ளீஸ்..''

''நான் காதலையே காட்டுகிறேன் கண்ணம்மா..''

'ஐயோ.. சாமி.. தாங்கலையே..' மாலினி அழுது விட்டாள்.

''ஏன் அழுகிற கண்ணம்மா..'' தினகரன் பதறினானே யொழிய போனை பிரபாகரனிடம் கொடுக்கவில்லை.

பிரபாகரனின் புருவங்கள் உயர்ந்தன. அவன் ஏறக் குறைய போனை தினகரனிடமிருந்து பறித்தான்.

''என்ன மாலினி?'' என்றான்.

''பிரபா.. அந்தக் கடிதத்தை நான் எழுதவில்லை பிரபா..''

'அதுதான் எனக்குத் தெரியுமே...'

''வேறு ஒருத்தர் எழுதிக் கொடுத்தாங்க..''

'அதுதான் யார்..?'

''அவங்க தினகரனை உயிருக்குயிராய் காதலிக் கிறாங்க..''

'அந்த உயிருக்குயிரான காதலி.. நேரே வந்து தினா விடம் பேச மாட்டாளாமா.. காதல் தூதுக்கு நீதான் அகப் பட்டாயா...'

''என்மேல் தப்பில்லை பிரபா...''

'உன்மேல் தப்புன்னு நான் சொன்னேனாடி?'



''அவங்க சாஃப்ட் டைப்.. கெஞ்சிக் கேட்டு அழு தாங்க.. இரக்கப்பட்டு விட்டேன் பிரபா..''

'இப்பே உன் பெயரைச் சொல்லிக்கிட்டு இவன் தோட்டத்தில் வந்து நிற்கிறானே.. இதுக்கு என்ன பண்றது?'

''ப்ளீஸ், பிரபா.. என்னைக் காப்பாத்துங்க..''

பிரபாகரன் பதில் சொல்லாமல் போனை அணைத் தான். மறுமுனையில் மாலினி திகிலடைந்தாள்.

''என்ன சொல்கிறாள் அண்ணா..''

''உன்னிடம் காலையில் பேசுகிறாளாம்..''

மாலினியை அவள்.. இவளென்று தினகரன் பேசி யதை விரும்பாத கோபத்துடன் பிரபாகரன் பதில் சொன் னான்.

''அதை என்னிடம் சொல்லியிருக்கலாமே...''

''ஏதோ வீட்டுக்குப் பெரியவன் என்ற நினைவில் என்னிடம் சொல்லிவிட்டாள். உனக்குத்தான் அந்த நினைவு இல்லாமல் போய்விட்டது..''

''ஸாரி அண்ணா..''

''இனிமேலாவது இந்த இடத்தைவிட்டுப் போகலா மில்லையா?'' தினகரன் கிளம்பப் போனவன்.. தயங்கி நின்றான்.

''என்னடா?'' என்றான் பிரபாகரன் எரிச்சலுடன்.

''மாலினியின் செல் நம்பர் எனக்கு வேணும் அண்ணா..''

''அதை நான் கொடுத்தால் நன்றாக இருக்காது.. அவ ளிடமே கேட்டு வாங்கிக் கொள்.. அதுதான் முறை...''

''அதுவும் சரிதான்.. குட்நைட் அண்ணா..''

தினகரன் உற்சாகமாக தோட்டத்தை விட்டுச்

சென்றான். சற்றுத் தொலைவுக்குப் போனதும் விசில் சத்தம் கேட்டது. பிரபாகரனுக்கு மாலினியின் மேல் கோபம் எழுந்தது.

'இவள் என்ன என்ன வினைகளையெல்லாம் இழுத்துக் கொள்கிறாள்..'

பிரபாகரன் யோசனையுடன் சுற்றுமுற்றும் பார்த்தான். யாருமில்லையென்று உறுதிபடுத்திக் கொண்டு செல்போனை கையில் எடுத்தான். மாலினியின் நம்பரை அவன் அழுத்திக் கொண்டிருந்தபோது..

''அத்தான்..'' என்ற மெலிதான குரல் அமானுஷ்யமாய் ஒலித்தது.

என்ன விவரம் என்று மாலினியிடம் கேட்பதற்காக அவளை போனில் அழைத்துக் கொண்டிருந்தவன்.. சட்டென்று போனை அணைத்துவிட்டு மீண்டும் சுற்றிலும் பார்வையை ஓட்டினான். செல்போனில் மணி இரவு பன்னிரண்டு என்று காட்டவும்.. அவனுக்கு என்னவோ போல் ஆகிவிட்டது.

இந்த ஆளரவமற்ற இருட்டில்.. தோட்டத்து செடிகளுக்கு இடையில்.. நள்ளிரவு பன்னிரண்டு மணிக்கு 'அத்தான்..' என்ற அழைப்பு வந்தால் எப்படியிருக்கும்?

'என்னடா இது.. மோகினிப் பேய் எதுவும் வந்துவிட்டதா?'

அவன் புருவங்கள் ஏற யோசித்துக் கொண்டிருக்கும் போது.. அந்த மோகினிப் பேய் செடி மறைவில் இருந்து வெளிப்பட்டது. அவன் பார்வை கூர்மையாக்கியது.

''பவித்ரா.. நீயா?'' என்றான் ஆச்சரியத்துடன்.

''நானேதான் பெரியத்தான்..''

''இந்த நேரத்தில் இங்கே என்னம்மா பண்ணிக்கிட்டு இருக்கிற?''



அவள் பதில் சொல்லாமல் விசும்பி அழுகவும்.. பிரபாகரனின் இறங்கிய புருவங்கள் மீண்டும் ஏறின.

98

உன்னைக் கண் பார்க்க முடியாமல் போனாலும்..
என் மனம் பார்க்கும் நிலையை
என்னவென்று நான் சொல்ல..?

இந்த இரவில்தான் எத்தனை ஆச்சரியங்கள் அடுக்கடுக்காய் அணிவகுத்து வருகின்றன என்று பிரமித்தான் பிரபாகரன்.

அவன் அறிந்த வாசவனின் மகள் பவித்ராவே வேறு.. அவள் பேசக்கூடப் பயப்படுவாள். மாலை மயங்கினால்.. வாசலில்கூட வந்து நிற்க மாட்டாள். பெரியவர்களின் துணையின்றி தனித்து எங்கேயும் செல்ல மாட்டாள். முக்கியமாக பிரபாகரனின் முன் நிற்கக்கூட மாட்டாள்.

மாமன் மகள் என்ற மரியாதைக்காக பிரபாகரன் நலம் விசாரிக்கும்போது.. நன்றாக இருக்கிறேன் என்று வாய் திறந்துகூடச் சொல்ல மாட்டாள். லேசான தலை அசைவுதான். குனிந்த தலை நிமிர்ந்து அவன் முகத்தைப் பார்த்ததில்லை.

அப்படிப்பட்ட பவித்ராவா.. இந்த நள்ளிரவில்.. ஆள் இல்லாத தனிமையில் கொஞ்சம்கூட அச்சமின்றி தோட்டத்தில் வந்து நிற்கிறாள்?

அதைவிட ஆச்சரியமாக பிரபாகரனை அழைத்து.. அவனுடன் பேச விரும்பி முன்னால் வேறு வந்து நின்று வைக்கிறாளே.. வந்து நின்றதும் இல்லாமல் விசும்பி அழுது வேறு வைக்கிறாளே.

பிரபாகரன் தர்மசங்கடத்துடன் சுற்றுமுற்றும் பார்த்தான். யாராவது அவனையும் பவித்ராவையும் அந்த நேரத்தில்.. தோட்டத்தின் தனிமையில் பார்த்துவிட்டால் என்ன செய்வது என்று இருந்தது அவனுக்கு.

'இந்தப் பெண்ணுக்கு என்னுடன் பேச வேறு நேரமும் இடமும் கிடைக்கவில்லையா?'

பவித்ராவைப் பார்க்கும்போது ஒரு தங்கையைப் பார்ப்பதைப் போல்தான் பிரபாகரன் பாசமாக பார்த்து வைப்பான்.

அவன் அப்படி நினைத்துக் கொண்டிருக்கிற பெண்ணுடன் அவனை இணைத்து வைத்துப் பேசிவிட்டால் அவனால் நிச்சயம் தாங்கிக் கொள்ள முடியாது. அதே சமயம்.. இந்த நடுநிசியில் அவனிடம் தோட்டத்தில் வந்து நின்று அழுபவளிடம் காரணம் கேட்காமலும் அவனால் இருக்க முடியவில்லை.

அதனால்.. வருவது வரட்டும் என்று அவள் முகம் பார்த்து கனிவாகப் பேசினான்.

''எதுக்கும்மா அழுகிற.. என்கிட்ட என்ன விஷயம்னு சொல்லு..''

''அத்தான்..'' பவித்ரா கேவினாள்.

''அழுகாமல் விஷயத்தைச் சொல்லும்மா.. நீ எப்போது இங்கே வந்தே? ஏன் வந்தே?''

''நான் தினா அத்தான் வருவதற்கு முன்னாலேயே இங்கே வந்துவிட்டேன்..''

''இந்த இருட்டு வேளையில் உனக்கு தோட்டத்தில் என்ன வேலை?''

''அத்தான்.. மாலினி எழுதியதாக தினா அத்தான் சொன்ன கடிதத்தை எழுதியது நான்தான்...''



''என்ன?''

புரியாத புதிர் விடுபட்டு விட்ட உற்சாகத்தில் பிரபாகரன் வினவினான்.

''நீயா அந்த லெட்டரை எழுதின?''

''ம்ம்ம்..''

''அதை எதுக்கு மாலினிகிட்ட கொடுத்துவிட்ட?''

''எனக்கு பயமாக இருந்தது..''

''பயப்படுகிறவள் காதல் கடிதம் எழுதக்கூடாது..''

பிரபாகரனுக்குள் கோபம் குமிழிட்டிருந்தது. அவனுடைய மனைவியாகப் போகிறவளை.. அவனது தம்பி.. காதலியாக நினைத்துவிட்டான். அந்தச் சூழ்நிலையை இந்தப் பெண் உருவாக்கிவிட்டாள் என்ற ஆத்திரம் அவனுக்கு.

''எனக்கு வேறுவழி தெரியலை அத்தான்.. எனக்கு சின்ன வயதிலிருந்தே தினா அத்தானின் மேல் உயிர்... அவரை காதலித்தேன்..''

''அதைச் சொல்லித் தொலைக்க வேண்டியதுதானே..''

''எப்படி அத்தான்.. இந்த வீடே கதின்னு வருஷக் கணக்கில் கிடந்த ஸ்வேதாவையே நீங்க தூக்கி எறிஞ்சிட்டீங்களே.. என் காதலை வெளியே சொன்னால் எனக்கும் அந்தக் கதிதானே வரும்..''

''முட்டாளா நீ.. அவளும் நீயும் ஒண்ணா?''

''இரண்டு பேருமே உங்களுக்கு மாமன் மகள்கள் தானே..''

''பைத்தியம்.. பைத்தியம்.. இப்ப தினாவின் மேல் உனக்கிருக்கும் உண்மையான காதல்.. சுட்டுப் போட்டாலும் அவளுக்கு வராது..''

''எனக்கு அதெல்லாம் தெரியாது அத்தான்.. என் மனதிலிருப்பதை தினா அத்தானிடம் சொல்லிவிட ணும்கிற வேகம் மட்டும்தான் எனக்கு இருந்தது..''

''அதுவாவது இருந்ததே.. அந்தமட்டிலும் சந்தோஷம்..''

''அவரிடம் சொல்லி.. அவர் என் காதலை ஏற்றுக் கொண்டால் இதை வெளியே சொல்வது.. அவர் ஏற்றுக் கலைன்னா.. ஒதுங்கிவிடவேண்டியதுன்னு என் மனதில் முடிவு பண்ணியிருந்தேன்..''

''உன்னைப் போய் வேண்டாமுன்னு அவன் சொல் வானா?''

''அதுதான் சொல்லிவிட்டாரே..''

பவித்ராவின் குரலில் இருந்த வெறுமை பிரபாகரனைத் தாக்கியது.

''சேச்சே.. அப்படியெல்லாம் மனம் உடைந்துவிடக் கூடாது. அவனிடம் நான் பேசுகிறேன். உன் காதலைப் பற்றி நான் சொல்லுகிறேன்..''

''இதை ஏன் பெரியத்தான் மாலினி செய்யவில்லை?''

''பவித்ரா..''

பிரபாகரன் அதிர்ந்துபோனான். இப்படியொரு கேள்வியை பவித்ராவிடமிருந்து அவன் எதிர்பார்க்க வில்லை.

''நான் பெண் அத்தான்.. என்னால் என் மனதை என்னைப் போல இருக்கும் இன்னொரு பெண்ணிடம்தான் சொல்ல முடியும். இன்றைக்கு விஷயம் கைமீறிவிட்டது.. வெள்ளம் தலைக்கு மேல் போய்விட்டது. அதனால் உங்க முன்னால் நின்று நியாயம் கேட்கும் துணிச்சல் எனக்கு வந்திருக்கிறது. இந்த துணிச்சல் முதலில் வராதே..''



''அதற்காக மாலினியின் மேல் எதுக்கு குறை சொல் கிறாய் பவித்ரா?''

''மாலினி யார் பெரியத்தான்.. உங்கள் காதலி.. எனக்கு எல்லாம் தெரியும் அத்தான்.. அப்படிப்பட்டவள் தினா அத்தானிடம் எப்படிப் பழகியிருக்க வேண்டும்.. தள்ளி நின்று பழகியிருக்க வேண்டுமா.. இல்லையா?''

பிரபாகரனின் புருவங்கள் சுளித்தன.

''இத்தனைக்கும் தினா அத்தானுக்கு மாலினியின் மேல் ஒருவித மயக்கம் இருந்தது அவளுக்கே தெரியும். இருந்தும் ஏன் பழகினாள்?''

''அவள் பழகியதை நீ பார்த்தாயா?''

''என் மேல் கோபப்படாதீங்க பெரியத்தான்.. இந்தக் கோபத்தை உங்க மாலினியிடம் காட்டுங்க. என் கடிதத் தைக் கொண்டு வந்தவள் இதை பவித்ரா கொடுத்தனுப் பினவள்னு சொல்லணுமா.. வேண்டாமா? மொட்டை யாகப் பிரித்துப் படித்துப் பாருங்கன்னு சொல்லிவிட்டுப் போனால் கையெழுத்தில்லாத கடிதத்தைப் பார்த்துவிட்டு அவர் என்ன நினைப்பார்? மாலினிதான் எழுதியிருக் கிறாள்னு நினைப்பாரா இல்லையா?''

''உன் கையெழுத்தை நீயேன் போடவில்லை..''

''ஒரு பாதுகாப்பு உணர்வுதான்.. வேறென்ன..''

''கையெழுத்தில்லாத கடிதத்தை நீ கொடுத்துவிட்டு மாலினியின் மேல் எதற்காக பழி போடுகிறாய் பவித்ரா.. இது கொஞ்சம்கூட நல்லாயில்லை.. கடிதத்தில் நீ கையெழுத்தைப் போடவில்லைன்னு அவள் கனவா கண்டாள்.. அவளுக்கு அது எப்படித் தெரியும்?''

''நீங்க சொல்வது வேடிக்கையாக இருக்கு பெரியத் தான்.. மாடியிலிருந்து என் கடிதத்தை வாங்கிக் கொண்டு

போய் தோட்டத்தில் கொடுத்தவள் இடையில் அந்தக் கடிதத்தை பிரித்துப் படிக்காமலா இருந்திருப்பாள்?

இப்படியும் கூட நன்றிகெட்டுப் போய் பேச முடியுமா என்று வெறுப்புடன் பவித்ராவைப் பார்த்தான் பிரபாகரன்.

'இத்தனை நாளாய் இவளை மென்மையான பெண் ணுன்னு தவறாய் நினைச்சிட்டேனோ..'

''அடுத்தவங்களின் கடிதத்தை.. அதுவும் காதல் கடிதத்தை பிரித்துப் படிக்கிற அளவுக்கு மாலினியை நாகரிகமில்லாதவள்னு நினைத்துவிட்டாயா பவித்ரா.. இந்த அளவுக்கு சந்தேகப்படுகிறவள் மாலினியிடம் உன் காதல் கடிதத்தை கொடுத்து விட்டிருக்கவே கூடாது..''

''விதி அத்தான்.. எல்லாம் என் தலைவிதி.. இந்த இருட்டு நேரத்தில் தோட்டத்தில் வந்து உங்களிடம் நியாயம் கேட்க இப்போது வந்திருக்கிற இந்த தைரியம் முதலி லேயே இருந்திருந்தால் என் கதி இப்படி ஆகியிருக்காது.. என் காதலை நானே பார்த்துக் கொண்டிருப்பேன்..''

''ம்த்சு.. செய்வதையும் செய்துவிட்டு இப்போது அழுது புலம்பி என்ன பிரயோஜனம்.. இப்போது காயத்ரி யின் கல்யாணம்தான் எனக்கு முக்கியம்.. மத்த பஞ்சாயத் தெல்லாம் அப்புறம்தான்..''

''அப்போ என் கதி என்னாகிறது?''

''உனக்கென்ன குறை.. நீ ஊருக்குப் போ.. நான் மெதுவாக தினகரனிடம் பேசிப் பார்க்கிறேன்..''

''கடைசி வரைக்கும்.. மாலினியைக் கண்டிக்கிறேன்னு ஒரு வார்த்தை உங்க வாயிலிருந்து வரலையே..''

''அவளைக் கண்டிக்க என்னம்மா இருக்கு?''

''இத்தனைக்கு பிறகும் இப்படிச் சொல்கிறீங்களே பெரியத்தான்.. உங்க தம்பி பினாத்தியதைக் கேட்டுக்



கிட்டுத்தானே இருந்தீங்க.. அந்த அளவுக்கு அவர் மனசை கலைத்துவிட்டாள் மாலினி..''

''எல்லாம் உன்னாலே வந்ததுதான்..''

''மாலினியால் எதுவும் வரலையா.. ஒன்றை நினைவில் வைச்சுக்கங்க பெரியத்தான்.. மாலினி நினைத்திருந்தால் என்னையும் தினா அத்தானையும் சேர்த்து வைத்திருக்க லாம். ஆனால், அவள் அதைச் செய்யவில்லை..''

''அதனால் அவளுக்கு என்னம்மா லாபம்?''

''தினா அத்தானை அவளைச் சுற்றிவரச் செய்ய லாமே... அதுதான் லாபம். பார், உன் காதலன் உன்னை விட்டுவிட்டு என்னைச் சுற்றுகிறான்னு என்னிடம் பீற்றி ருக்கலாமே.. அதுதான் லாபம்..''

''நீ அதிகமாக பேசுகிறாய் பவித்ரா..''

''நான் பாதிக்கப்பட்டவள் பெரியத்தான்.. பேசத்தான் செய்வேன். உங்க மாலினி என் காதலனை அபகரிக்கப் பார்ப்பாள். நான் அதைப் பார்த்துக்கிட்டு சும்மா இருக் கனுமா?

''பவித்ரா....''

கையை ஓங்கிவிட்டான் பிரபாகரன். அஞ்சி நடுங்கிக் கொண்டிருந்த பவித்ராவைக் கண்டதும் தன்னைக் கட்டுப் படுத்திக் கொண்டான்.

''போ.. இங்கேயிருந்து..''

''பெரியத்தான்..''

''போன்னு சொல்கிறேனா இல்லையா.. இது என் தங்கையின் கல்யாணம் நடக்கப் போகிற வீடு.. நீ அதில் கலந்துகொள்ள வந்தவள். வந்த வேலையை விட்டு விட்டு தேவையில்லாததையெல்லாம் செய்துவிட்டு..

இப்போ நடுராத்திரியில் என்னிடம் வந்து நியாயம் கேட்கி றாயா.. நியாயம்? அறைந்து பல்லைக் கழட்டிவிடுவேன் ஜாக்கிரதை.. யாரிடம் வந்து யாரைப் பற்றி என்ன பேசு கிறாய்?''

''பெரியத்தான்..''

''என்னிடம் பேசாதே.. சேச்சே.. வாசவன் மாமா நல்ல முறையில் பெண்ணை வளர்த்து வைத்திருக்கிறார்னு நினைத்தேனே.. நீ ஸ்வேதாவை நல்லவளாக்கி விட்டாயே..''

''பெரியத்தான்..''

''அவள் உன்னைப் போல அடக்க ஒடுக்கமாக வேஷம் போட மாட்டாள்.. நீ ஊமை போல இருந்துக்கிட்டு எவ்வளவு பெரிய பேச்சையெல்லாம் பேசுகிறாய். உன்னைப் போய் நல்ல பொண்ணுன்னு நினைத்தேனே..''

''பெரியத்தான்..''

''வாசவன் மாமா முகத்திற்காக பார்க்கிறேன்.. இங்கேயிருந்து போய்விடு. என்னைக் கொலைகாரனாக்கி விடாதே..''

பவித்ரா பயந்து போய் பின்வாங்கினாள். பொங்கி வந்த அழுகையைக் கட்டுப்படுத்திக் கொண்டு அங்கிருந்து ஓடிவிட்டாள்.

'ச்சே.. ஒரு சின்னப்பெண்.. என்னவெல்லாம் பேசி விட்டாள்..'

தினகரன், மாலினியை உரிமை கொண்டாடியது ஒரு புறம் மனதை போட்டு அரிக்க.. பவித்ராவின் குற்றச்சாட்டு.. மறுபுறம் அவனது மனதை போட்டு அறுத்தது. அவனது கோபம் மாலினியின் பக்கம் திரும்பியது.

ஆவேசத்துடன் செல்போனை எடுத்து மாலினியின் செல்போன் எண்களை அழுத்தினான்.



''பிரபா..'' என்றாள் அவள் தீனமான குரலில்.

தினகரன் பேசியதையெல்லாம் பிரபாகரன் கேட்டுக் கொண்டிருந்திருப்பானே என்ற அவமான உணர்வு அவளைப் பிடுங்கித் தின்றது.

''கதவைத் திறந்து வைடி..'' என்றான் அவன் அழுத்த மான குரலில்.

''பிரபா..'' அவள் புரியாமல் மீண்டும் கேட்டாள்.

''உன் ரூம் கதவைத் திறந்து வைய்யுன்னு சொன் னேன்..'' அவன் குரலில் பூகம்பம் ஒளிந்திருந்தது.

மாலினி பதறிப் போய் விட்டாள். அவன் சொல்வதை ஜீரணித்துக் கொள்ள அவளால் முடியவில்லை. அது திருமண வீடு.. மதுரையில் ஏதேனும் ஒரு இடத்தில் ஆட்கள் விழித்துக் கொண்டே இருப்பார்களாம். அதனால் அதை தூங்கா நகரம் என்று அழைப்பார்களாம்.

அதைப் போல அந்த வீடு தூங்கா வீடாக இருந்தது. அதன் ஏதாவது ஒரு மூலையில் ஆட்கள் விழித்துக்கொண்டு நடமாடிக் கொண்டிருந்தார்கள்.

அந்தச் சூழ்நிலையில்.. நள்ளிரவில்.. அவள் அறைக் குள் பிரபாகரன் வருவதை யாராவது பார்த்தால் என்ன ஆகும்?

பிரபாகரன்.. மாலினி.. இருவரின் கௌரவமும் காற்றில் பறந்துவிடாதா? அதை தினப்படி நடக்கும் இயல் பான நிகழ்வாக மற்றவர்கள் நினைத்துவிட மாட்டார்களா?

''புரிந்துதான் பேசுகிறீங்களா பிரபா..''

''உன்கூடப் பேச எனக்கு நேரமில்லை.. சொன்னதைச் செய்..''

''வேண்டாம் பிரபா.. இது கல்யாண வீடு..''

''அந்த அக்கறையும்.. நினைப்பும் உன் மனதில் இருந்திருந்தால் இந்த அர்த்தராத்திரி ஜாமத்தில் என்னை இப்படி அலைக்கழித்திருப்பாயா? பெண்ணாடி நீ? பேய்..''

''பிரபா.. நீங்களா இப்படிப் பேசுகிறீங்க?''

''நான் உன்னிடம் என்ன சொல்லியிருந்தேன்? இது என் ஒரே தங்கையின் கல்யாணம்.. இது எந்தக் குறையுமில்லாமல் நன்றாக நடக்க வேண்டும்னு சொன்னேனா.. இல்லையா?''

''ஆமாம் பிரபா..''

''நீ என்ன செய்து வைத்திருக்கிறாய்?''

''நானென்ன செய்தேன்?''

''அடித்துப் பல்லைக் கழட்டி விடுவேண்டி.. முதலில் கதவைத் திறந்து வை.. அங்கே வந்து உன்னைப் பேசிக்கறேன்...''

பிரபாகரன் செல்போனை அணைத்துவிட்டான். இயந்திரம் போல் எழுந்த மாலினி விளக்கை அணைத்து விட்டு அறைக்கதவைத் திறந்து வைத்தாள். புயல் போல பிரபாகரன் வந்து சேர்ந்தான்.

## 99

அர்த்த ஜாம வேளையிலே..
அலைக்கழிக்கும் உன் நினைவை..
என்னவென்று நான் சொல்ல..?

தலைமுடி கலைந்து.. கண்கள் சிவந்து கோபாவேசத்துடன் உள்ளே வந்த பிரபாகரனைக் கண்டதும் பதறிப்போய்



ஒடிப் பின்னே நகர்ந்தாள் மாலினி. அவன் கதவைச் சாத்தித் தாழிட்டதும் அவளுடைய பதற்றம் இன்னும் அதிகமாகியது.

''என்ன காரியம் செய்கிறீங்க..''

''நீ செய்து வைத்திருக்கும் காரியத்தைவிட இது மோசமில்லை.''

''யாரேனும் பார்த்தால் என்ன நினைப்பாங்க?''

''தினகரனும் பவித்ராவும் உன்னைப் பற்றி நினைப்பதைவிட மோசமாக நினைத்துவிட மாட்டாங்கடி..''

''பவித்ராவா.. அவளைப் பற்றி உங்களுக்குத் தெரிந்துவிட்டதா?''

''ஏன்.. இன்னும் மறைத்து வைத்து நாடகமாட ஏதாவது ஸீனை யோசித்துக் கொண்டிருந்தாயா?''

''நாடகமாடினேனா.. நானா?''

''பவித்ரா அவ மனசில் இருந்த காதலை.. இரண்டு மாசத்துக்கு முன்னாலேயே உன்னிடம் சொல்லிவிட்டாளாமே.. உண்டா.. இல்லையா?''

''சொன்னாள்தான்..''

''அதை ஏன் என்னிடம் சொல்லவில்லை?''

''அவளுடைய அந்தரங்கத்தை என்னுடன் பகிர்ந்து கொண்டிருக்கிறாள்.. அதைப் பற்றி உங்களிடம் நான் சொன்னால் அது அவளைக் காட்டிக் கொடுத்ததைப் போல ஆகிவிடாதா.. அந்தரங்கம் புனிதமானதுன்னு கண்ணதாசன் சொல்லியிருக்கிறார். அந்தப் புனிதத்தை அம்பலப்படுத்தக் கூடாதுன்னு நான் நினைத்தேன்.. அது தப்பா?''

''மத்தவங்களிடம் நீ மறைச்சதுக்கு இந்தக் காரணத்தைச் சொல்லலாம்.. என்னிடம் எப்படிடீ நீ இதை

மறைக்கலாம்? இதைப்போல எத்தனை விஷயங்களை நீ மறைத்திருக்கிறாய்?''

முதல் சாட்டையடி பிரபாகரனிடமிருந்து வெளிப் பட்டது. அதன் வீச்சின் வேதனையில் கண்மூடி கலங்கி நின்றாள் மாலினி. அவளுடைய பிரபாகரனா அவளைப் பார்த்து அப்படிக் கேட்டுவிட்டான்?

அவளுடைய அதிர்ந்த பார்வையைக் கண்டும் பிரபா கரன் அவள் மேல் இரக்கம் காட்டவில்லை.

''என் சம்பந்தப்பட்ட எதையும் உங்களிடமிருந்து நான் மறைத்ததில்லை..''

''பவித்ராவின் காதலுக்கு நீ தூது போனது உன் சம்பந்தப்பட்ட விஷயமில்லையா.. அதை நீ என்னிட மிருந்து மறைக்கவில்லையா? நீ இன்ஜினீயரிங் படித் தவள்தானே.. உன்னை யார் இந்த வேலையைப் பார்க்கச் சொன்னது?''

''நான் போவதற்கு ஒப்புக்கொள்ளவில்லை பிரபா.. முடியாதுன்னுதான் சொன்னேன். ஆனா.. அவ அழுதாள்.. இரக்கமாயிருச்சு..''

''இரக்கப்பட்டாயா.. அவள் உன்னைப் பற்றி என் னிடம் என்ன கேட்டாள்னு தெரியுமா.. நீதான் அவளுடைய காதலைக் கலைத்துவிட்டியாம்.. நீ நினைத்திருந்தால் அவளையும் அவளுடைய காதலனையும் சேர்த்து வைத்திருக்கலாமாம். நீ அதைச் செய்யாமல் தினகரனை அவளிடமிருந்து அபகரிக்கப் பார்க்கிறாயாம். தினகரனுக்கு உன் மேல் ஒரு கண் இருப்பது தெரிந்தும் நீ ஏன் அவனிடம் நின்று பேசினாய்னு கேட்கிறாள். அவனை உன் னைச் சுற்றிவரச் செய்வதில் உனக்குச் சந்தோஷமுன்னு சொல்கிறாள்..''



''பவித்ராவா இப்படிச் சொன்னாள்?''

''அவள் சொன்னதில் என்ன தப்பிருக்கு.. அவளிடத் தில் நான் இருந்திருந்தாலும் இப்படித்தான் நினைத்திருப் பேன்.. கேட்டிருப்பேன்..''

இது பிரபாகரனிடமிருந்து வெளிப்பட்ட இரண்டாவது சாட்டையடி. ஏற்கெனவே குற்றுயிராய் நின்றவளை அது வீரியத்துடன் தாக்கியது. மனதில் குருதி கொட்ட மாலினி உறைந்து போய் நின்றாள்.

''நான் பார்க்க வளர்ந்த சின்னப்பெண்.. என்னை நிற்க வைத்துக் கேள்வி கேட்கிறாள். உன் காதலி.. என் காதலனை களவாடப் பார்க்கிறாள். இது நியாயமான்னு என்னிடம் நியாயம் கேட்கிறாள். இது யாரால்.. உன்னால்.. உன்னால்தாண்டி எனக்கு இந்த நிலைமை வந்தது?''

''ஐ ஆம் ஸாரி..''

''எதுக்கு ஸாரி கேட்கிறாய்.. பவித்ரா என்னைக் கேள்வி கேட்டதற்கா.. இல்லை.. தினகரன் என் முன்னா லேயே உன்னை வார்த்தைக்கு வார்த்தை கண்ணம்மான்னு கூப்பிட்டானே.. அதை காது குளிர என்னைக் கேட்க வைத்ததற்கா?''

''உங்கள் தம்பி அப்படி உளறியதற்கு நான் எப்படி பொறுப்பாவேன்?''

''நடிக்காதேடி.. பவித்ரா சொன்னதைப் போல.. அவன் குணம் உனக்குத் தெரியாதா.. தெரிந்தும் அவனிடம் தோட்டத்தில் நின்று சிரித்து சிரித்துப் பேசினாய்.. கவிதை சொன்னாய்.. அவன் கையிலிருந்த ரோஜாப்பூவை நீ கையில் பிடித்துக் கொண்டு வந்து சேர்ந்தாய்..''

''அது அத்தை கொடுத்துவிட்ட பூ..''

''அதைப் பற்றி உனக்குத் தெரியாது இல்லையா.. அது

தினகரனின் கையில் இருந்த பூதான்.. என் அம்மா கொடுத்து விட்டதாக ஸ்வேதா கொடுத்து அனுப்பியிருக்கிறாள்..''

''அது எனக்குத் தெரியுமா?''

''எதுதான் உனக்குத் தெரிந்தது.. உன் கையில் இருந்த பூவைப் பார்த்ததும் தினகரன் முகத்தில் பல்ப் எரிந்ததே.. அது உனக்குத் தெரியவில்லையா?''

''நான் தினகரனை அவாய்ட் பண்ணினேன்..''

''எப்படி அவாய்ட் பண்ணின.. உன் மனதில் நான் இருப்பதை மறைமுகமாய் அவனிடம் சொல்லி அவாய்ட் பண்ணினாயா.. இல்லையே.. அதைச் சொல்ல உனக்கு மனமில்லை. அதைச் சொல்லியிருந்தால்.. அண்ணின்னு கூப்பிட வேண்டியவன்.. அவள் இவள்னு உன்னை உரிமையோடு என்கிட்டேயே பேசியிருப்பானா.. என்னை நீ காதலிப்பதை அவனிடமிருந்து ஏண்டி மறைத்தாய்? இதுக்கு இரண்டு காரணம்தான் இருக்க முடியும். ஒன்று.. பவித்ரா சொன்னதைப் போல அவனை நீ உன் பின்னால் சுற்ற வைக்க நினைத்திருக்க வேண்டும்.. இது தெரிந்தால் அவன் விலகி நிற்பானே. அதுக்காக.. இதை அவனிட மிருந்து நீ மறைத்திருக்கணும்.. நீ ஃப்ரீயாக இருந்தால் தானே அவன் வந்து உன்னிடம் காதல் சொல்வான். இரண் டாவது.. நீ என்னை உண்மையிலேயே காதலிக்கவில்லை.. உண்மையாக நீ என்னைக் காதலித்திருந்தா.. இதை அவனிடமிருந்து மறைக்க நினைத்திருக்க மாட்டாய்..''

இது மூன்றாவதாக பிரபாகரன் வீசிய சாட்டையடி.. ஏற்கெனவே குற்றுயிரும் குலையுயிருமாக நின்றிருந்த மாலினியை அது வேரோடு வெட்டிச் சாய்த்தது. அவள் நெஞ்சைப் பிடித்துக் கொண்டு கட்டிலில் அமர்ந்து விட்டாள்.



அவளுடைய அந்த நிலைமை கொஞ்சம்கூட பிரபாகரனைப் பாதித்ததாகத் தெரியவில்லை. அவன் மாலினியை வெறுப்புடன் பார்த்தான்.

''தினகரனும் பவித்ராவும் ஒன்றுபோல ஒரு விஷயத் தைச் சொன்னாங்கடி.. நீ தினகரனிடம் கடிதத்தைக் கொடுத்தபோது.. அதை கொடுத்தது பவித்ரான்னு சொல்ல வேயில்லையாமே.. அது ஏண்டி.. மொட்டையாக லவ் லெட்டரைக் கொடுத்து பிரிச்சு படிச்சுப் பாரு.. புரியும்னு சொல்லிவிட்டுப் போனாயாமே.. அவங்களுக்கும் உன்னைப் பற்றி புரிஞ்சுருச்சு.. எனக்கும் உன்னைப் பற்றி புரிஞ்சுருச்சு.. தினகரன் அந்தக் கடிதத்தை எழுதியது நீதான்னு தீர்மான மாய் நினைச்சுட்டான். நீ நினைக்க வைச்சிட்ட.. இதை உன்னிடமிருந்து நான் எதிர்பார்க்கலைடி. நான் முதலி லேயே உன் மனதில் தினகரனைப் பற்றி ஏதும் எண்ண மிருக்கான்னு கேட்டேனா.. இல்லையா. என்கிட்ட இல்லைன்னு சாதிச்சயேடி.. இப்ப என்ன ஆச்சு.. நீ தினகர னுக்கும் நூல் விட்டிருக்கிறாய்..''

செத்த பிணத்தை பிரபாகரனிடமிருந்து வெளிப்பட்ட சாட்டையடிகளால் என்ன செய்ய முடியும்..

மாலினி அசைவற்று அமர்ந்திருந்தாள்.

''என் அப்பா போனபோது நான் இக்கட்டான நிலைமைகளைச் சமாளிக்க வேண்டியிருந்தது. அதுக்குக் கூட நான் கலங்கி நின்றதில்லை. ஆனால், இந்த ஒரு ராத்திரியில் நான் பார்த்ததும்.. கேட்டதும்.. என்னைக் கலங் கடிச்சுருச்சுடி. புரட்டிப் போட்டு அடிச்சுருச்சு. என்கூடப் பிறந்தவன் நான் கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போகும் காதலியை அவனுடைய காதலிங்கிறான். அவனைக் காதலிக்கிறவ உன் காதலி.. என் காதலனை என்கிட்டே யிருந்து பிடுங்கப் பார்க்கிறான்னு சொல்கிறா. இதைவிட ஒரு மனுஷனுக்கு நிம்மதி கெட வேறு ஏதும் இருக்காடி?''

மாலினியிடம் மௌனம் குடிகொண்டிருந்தது.

''எங்க வீட்டுப் பெண்ணுக்கு நாளைக்கு கல்யாணம்டி. நாளைக்கு சாயங்காலம் இந்த வீட்டிலிருந்து கல்யாணப் பெண்ணா.. மண்டபத்துக்கு கிளம்பினா.. நாளைக்கு மறுநாள் இன்னொருத்தன் வீட்டுப் பெண்ணாகி மறுவீட்டு விருந்திற்குத்தான் திரும்பி வருவாடி. அவளை அண்ணனுக்கு அண்ணனா.. தகப்பனுக்கு தகப்பனா வளர்த்தேண்டி. அவ கல்யாணத்தை நிம்மதியா நான் நடத்த முடியுதா?''

மாலினியிடமிருந்து பதில் வரவில்லை.

''காதலிச்சது ஒரு பாவமாடி.. அதுக்காக நீ என்னை இந்தப் பாடுபடுத்துவாயா.. இதுக்கு முதலிலேயே தினகரனிடம் நீ பழகியிருக்கலாமேடி. எனக்கும் பவித்ராவுக்கும் இத்தனை மனவலி வந்திருக்காதே..''

வெறுமையான ஒரு பார்வையை மாலினி பார்த்தாள்.

''அன்னிக்கு அணைக்கட்டுக்கு போயிருந்தப்பவே நான் உன்னை ஆண்டிருக்கணும்டி.. விட்டு வைத்தது என் தப்புத்தான். அழகிய அசுரா.. அத்துமீற ஆசையில்லையான்னு கேட்டயே.. அத்துமீறியிருக்கணும்.. அப்படி அன்னிக்கு அத்துமீறியிருந்தேன்னா இன்னைக்கு நீ அத்து மீறியிருக்க மாட்ட...''

இப்போது மாலினியின் விழிகளில் ஒரு தீவிரம் வந்தது.

''என்னை நம்பி உன்னை நீ ஒப்படைச்சே.. கல்யாணம் பண்ணிக் கொள்ளாம.. அதிக உரிமை எடுத்துக்க கூடாதுன்னு நான் விலகி நின்னேன். அதுதான் தப்பாப் போச்சு. இப்ப அந்த உரிமையை நீ வேறு ஒருத்தனுக்கு கொடுக்கலாமுன்னு நினைச்சிட்ட போல..''



மாலினி அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

''காதலிக்கிறவளை தொட்டு அணைக்கலாம்.. அவளோடு குடும்பம் நடத்த முடியாது. குடும்பம் நடத்தவும் கூடாது. அது முறையில்லைன்னு நினைச்சு விலகிப் போனேன். அதுவே.. நீ வேறு ஒருத்தனுக்கு பச்சைக் கொடி காட்டறதுக்கான தகுதியை உனக்குக் கொடுத்துருச்சில்ல.''

மாலினியின் முகத்தில் ரத்தம் பாய்ந்து சிவந்தது தெளிவாக தெரிந்தது.

''என் அம்மாவிடம் நம் காதலைப் பற்றி நான்தான் சொன்னேன்.. நீ சொல்லலை.. அன்னிக்கே நான் யோசிச்சிருக்கணும்டி.. காதலிக்கிறவ, ஏன் காதலைப் பற்றிப் பேச பயப்படுகிறாள்னு..''

நீ எத்தனை தூரத்துக்குப் போவாயோ.. அத்தனை தூரத்துக்குப் போ என்பதைப் போல மாலினி மௌனமாக அவன் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருந்தாள்.

''உன்னிடம் நான் சொல்லியிருந்தேனேடி.. காயத்ரியின் கல்யாணம் முடிந்தவுடன் அடுத்த முகூர்த்தத்திலேயே நம்ம கல்யாணம்னு. ஒருவேளை அதற்காகத்தான் நீ அவசரப்பட்டு விட்டாயோ. இந்தக் காதல் கடித ஐடியாவே நீ கொடுத்ததுதானாமே.. காயத்ரியின் கல்யாணம் முடிந்தவுடன் நம் கல்யாணப் பேச்சை நான் எடுத்துவிடுவேன்னு திட்டம் போட்டு காய் நகர்த்தினாயா?''

பேசு.. உன்னைக் காதலித்துவிட்டதற்காக என்ன வேண்டுமானாலும் பேசு. நான் கேட்டுக் கொள்கிறேன் என்று மாலினி அமர்ந்திருந்தாள்.

''தினகரன் முடிவே பண்ணிவிட்டான்.. நீ அவனைத்தான் காதலிக்கிறாய்னு. அவன் வந்து என்னிடம்.. அண்ணா..

அண்ணா.. நான் மாலினியைக் காதலிக்கிறேன்னு சொன்னா நான் உன்னை விட்டுக் கொடுத்திடுவேன்னு நினைச் சிட்டயா. நம்ம கல்யாணத்தை நடத்தறதுக்குப் பதில் அடுத்த முகூர்த்தத்தில் அவனுக்கும் உனக்கும் கல்யாணம் பண்ணி வைத்துவிடுவேன்னு கணக்குப் போட்டாயா?''

மாலினியைக் காயப்படுத்தும் வெறியோடு கொட்டித் தீர்த்து விட்டான் பிரபாகரன். எதற்கும் அசைந்து கொடுக் காமல் எல்லாவற்றையும் மௌனமாக சகித்துக் கொண்டு அமர்ந்திருந்தாள் மாலினி.

''பவித்ரா பாவம்டி.. தினகரனை உண்மையாக காத லிச்சாள். அவ காதலை இப்படி அழிச்சிட்டயே..'' என்று கடைசியாக ஒரு அம்பை எய்துவிட்டு.. கதவைத் திறக்கப் போனான் பிரபாகரன்.

அவனது கையை இறுக்கமாகப் பிடித்துத் தடுத்தாள் மாலினி. அந்த இரும்பு மனிதனாலும் கையை உருவிக் கொள்ள முடியாத இரும்புப் பிடியாக அது இருந்தது.




*நீ விட்டுச் சென்ற வாசத்தில்...*
*என் சுவாசம் வாழ்வதையே*
*என்னவென்று நான் சொல்ல...?*

கோபத்தை வெளிப்படுத்தும் வகை அறியாமல் திட்டித் தீர்த்து விட்டான் பிரபாகரன். அவனால் சகித்துக் கொள்ள முடியாத தினகரனின் காதல் வசனம் கிளப்பிய வெறியை மாலினியைப் புண்படுத்துவதன் மூலம் சரிசெய்து கொள்ள முடியும் என்று நினைத்தான் அவன்.



ஆனால், அவனது மனம் இரு மடங்கு கனமாகி ரண மாகியது. எதையும் தாங்கும் இதயம் படைத்தவன் தவித்துப் போனான். ஏதோ ஒரு பாதுகாப்பில்லாத உணர்வு அவனை அலைக்கழித்தது.

சட்டென்று தினகரன், மாலினியின் மேல் காதல் வயப்பட்டதும்.. அதைவிடச் சட்டென்று ஒரு சொல்லை பவித்ரா சொல்லிவிட்டதும்.. பிரபாகரனை வெகுவாக பாதித்துவிட்டன.

அவன் மனது ஒரு நிலையில் நிற்காமல் அலை பாய்ந்து கொண்டிருந்தது. அவனது ஒரு செல்லத் தங்கை யின் திருமண வேலைகளில் ஈடுபட முடியாத அளவிற்கு அவன் மனம் களைத்துப் போயிருந்தான்.

மாலினியைத் திட்டித் தீர்த்தால் அது சரியாகிவிடும் என்று ஆரம்பித்தவன்.. அவன் மனதிலிருந்தவற்றை கொட்டிக் கவிழ்த்து விட்டான். அப்போதும் அவன் மனம் அமைதியடையவில்லை. அலைபாய்தல் நிற்கவில்லை. வேறுவழியின்றி கிளம்பினான்.

கதவைத் திறந்து வெளியேறப் போனவனை தடுத்து நிறுத்திய மாலினியின் கையை உதற அவனால் முடிய வில்லை.

''கையை விடுடி.. உன் விளக்கத்தைக் கேட்க எனக்குப் பொறுமையில்லை. என் காதில் பூச்சுற்ற நினைக் காதே..''

மாலினி எதுவுமே பேசவில்லை. அவன் கையைப் பற்றி இழுத்தாள். அவள் என்ன செய்ய நினைக்கிறாள் என்று புரியாதவனாக அவன் அவள் இழுத்த இழுப்பிற்கு போனான்..

''இப்ப எதுக்குடி என்னை நிறுத்தறே. புதிதாய் ஏதும் கதை சொல்லப் போகிறாயா?''

அவள் புதிதாகத்தான் கதை சொல்ல ஆரம்பித்தாள். அவன் கேட்டு வாய் மூடு முன்னால் அவன் கழுத்தை வளைத்தாள். எம்பி.. அவனது இதழ்களில் முத்தம் பதித்தாள்.

அந்த முத்தத்திற்குத்தான் எத்தனை சக்தி? பிரபாகரனின் உடலில் மின்சாரம் பாய்ந்தது. அவனையறியாமல் அவனது கரங்கள் அவளை வளைத்துக் கொண்டன. அவர்கள் கட்டிலில் சரிந்தார்கள்.

மாலினி அவனை விலக அனுமதிக்காமல் தழுவிக் கொண்டாள். ஏன் அவள் எல்லைகளைக் கடக்கிறாள் என்பதைப் புரியாதவனாக.. பிரபாகரன் தன்னை அவளிடம் ஒப்படைத்தான். அவளைப் பதிலுக்கு எடுத்துக் கொண்டான்.

அவனது பதற்றம்.. கோபம்.. அலைக்கழிப்பு.. அலைபாய்தல் அத்தனையும் அடங்கி சமனப்பட்டு விட்டன. அவள்மீது பரவிப் படர்ந்தவன் வேட்கையோடு அவளை ஆண்டு முடித்துவிட்டான்.

கலைந்து.. களைத்துப் படுத்திருந்தவளின் முடி கோதி.. எல்லையற்ற மனத்திருப்தியோடு முத்தமிட்டவனுக்கு.. இழந்த சக்தி மீண்டிருந்தது. அவன் பழைய இரும்பு மனிதனாக திடம் பெற்றுவிட்டான்.

அத்தனை நாளாக மாலினி அவனிடம் தன்னை ஒப்படைத்தபோது தள்ளி நின்று கண்ணியம் காத்தவன்.. இன்று மட்டும் ஏன் அவள் தன்னை ஒப்படைத்த அடுத்த வினாடியே அவள் மேல் படர்ந்தான்?

கல்யாணத்திற்கு பின்னால் மீறவேண்டிய எல்லைகளை காதலிக்கும்போது மீறக்கூடாது என்ற கொள்கையோடு இருந்தவன், ஏன்.. அன்று மட்டும் அத்தனை எல்லைகளையும் கடந்தான்?



தினகரன் இனி அவளிடம் சொந்தம் கொண்டாடக் கூடாது என்ற வெறியா? பவித்ரா இனி அவனைக் குற்றம் சொல்லிவிடக்கூடாது என்ற ஆவேசமா?

எதுவாக இருந்தாலும்.. அறைக்குள் வந்தபோது இருந்த ஆவேச பிரபாகரனாக அவன் அப்போது இல்லை. அவளை விட்டு விலகி.. வெளியே செல்ல மனமில்லாமல் ஒட்டிப் படுத்துக் கொண்டான்.. அவள் நகர்ந்து அவன் மார்பில் தலை வைத்துக் கொண்டாள்..

வெளிக்காற்று உள்ளே வருவதற்காக சற்று முன்னால் பிரபாகரன் திறந்து வைத்திருந்த ஜன்னலின் வழியாக ஆகாயத்தில் பவனி வந்த முழுநிலவு தெரிந்தது. தோட்டத்திலிருந்து வந்த குளுமையான காற்று.. இப்போது அவனது மனத்திற்கு இன்பத்தைத் தந்தது.

மெதுவான குரலில் மாலினியின் காதுகளில் பாடினான்.

*"அன்றொரு நாள்... இதே நிலவில்...*
*அவள் இருந்தாள்.. என்னருகே..*
*நான் அடைக்கலம் கொண்டேன்*
*அவள் அழகை...*
*நீயறிவாயே வெண்ணிலவே..."*

அவன் உடல்மேல் படர்ந்திருந்த அவளது மெல்லிய கைவிரல்களை நீவிவிட்டு முத்தமிட்டான்..

*"அந்த ஒருநாள்...*
*ஆனந்தத் திருநாள்...*
*இன்று நினைத்தால்*
*என்னென்ன சுகமோ..*
*பாதிவிழிகள் மூடித்திறந்தே..*
*பார்க்கும் வேளையிலே*
*நீயும் பார்த்தாயே வெண்ணிலவே.."*

லேசான வெளிச்சம் வெளியே பரவத் தொடங்க... பிரிய மனமில்லாமல் எழுந்தான் பிரபாகரன். அவன் மார்பில் தலை வைத்திருந்த மாலினியை விலக்கி முத்த மிட்டான்.

''போகணும்டி.. எல்லாத்துக்கும் என்னைத் தேடு வாங்க..''

மௌனமாக தலையசைத்து விடை கொடுத்தாள் மாலினி. அது நேரம் வரை அவள் ஒரு வார்த்தைகூடப் பேசாததை அப்போதுதான் உணர்ந்தான் பிரபாகரன்.

அவர்கள் கூடிக் கலந்த அந்த வேளையில்கூட அவள் எதையும் பேசவில்லை என்பது அப்போது அவனுக்கு நினைவுக்கு வந்தது.

''கோபமாடி?''

இல்லையென்று தலையாட்டினாள் அவள்.

''த்சு.. எனக்கு என்னாச்சுன்னே தெரியலைடி. அவன் என் முன்னாலேயே போனில் உன்னிடம் கொஞ்சுகிறான். அந்தப் பவித்ரா என் முன்னால் நின்று பேசக்கூடப் பயப் படுவாள். இன்றைக்கு என்னை நிற்க வைத்து அத்தனை கேள்விகள் கேட்கிறாள். மனசு தாங்கலைடி.. அதான் என்னென்னவோ பேசிட்டேன். மனசில் எதையும் வைச்சுக் காதே...''

சரியென்பதாய் தலையாட்டினாள் மாலினி.

''என்கூட பேச மாட்டியா.. இந்த ரூமுக்குள் வரு கிறப்போ நான் உன் காதலன் மட்டும்தாண்டி.. இப்போ.. உன் புருஷன்.. உன் புருஷன்கிட்ட நீ கோபப்படுவியா?''

மாலினி சிரிக்க முயன்றாள்.. அவளுக்கு சிரிப்பு வர வில்லை.

''என் கோபத்தை நான் யார்கிட்ட காட்டுவேன்னு



சொல்லு.. உன்கிட்டதான் காட்ட முடியும். நான் எங்கே போவேண்டி? அதான் உன்னிடம் வந்து கொட்டிவிட் டேன்..''

மாலினியின் கண்கள் கலங்கின. அவள் உதட்டைச் சுளித்து இமைகளைக் கொட்டி தன்னை சரிப்படுத்திக் கொண்டாள்.

''போனது போகட்டும். விட்டுவிடு. இனி எல்லாத் தையும் நான் பார்த்துக்குவேன். காயத்ரியின் கல்யாண சமயத்திலே எந்தப் பஞ்சாயத்தும் வேண்டாம். அவ கல்யாணம் முடியட்டும். தினாவிடம் நான் பேசிக்கறேன். நான் சொன்னால் அவன் கேட்டுக்குவான். பவித்ராவைப் பெண் கேட்டுப் போய்விட்டால் அவளும் சமாதான மாகிடுவா. நீ மனதைப் போட்டு உழப்பிக் கொள்ளாதே..''

மாலினியின் அமைதியான முகத்திலிருந்து பிரபா கரனால் எதையும் கண்டுபிடிக்க முடியவில்லை. சோர்வாக நின்றிருந்தவளை பரிவோடு பார்த்தான் அவன்.

''உன் தூக்கத்தை கெடுத்துட்டேனில்ல.. போகுது போ. ஆனா.. நீ என் நிம்மதியையும் அமைதியையும் மீட்டுக் கொடுத்துட்ட. நீ மட்டும் எதைப் பற்றியும் யோசிக் காமல் உன்னை என்னிடம் கொடுக்கலைன்னா நான் என்னவாகியிருப்பேன்னு எனக்கே சொல்லத் தெரிய வில்லை மாலினி. எல்லாத்துக்கும் தேங்க்ஸ்..''

சுவரில் சாய்ந்து நின்றுகொண்டிருந்தவளின் கன்னம் தொட்டு வருடி அவளது நெற்றியில் முத்தமிட்டான் பிரபா கரன். ஏதோ நினைவுக்கு வந்தவனாக.. அவள் முகம் பார்த் தான்.

''காயத்ரியின் கல்யாணத்துக்கு உனக்கும் சசிக்கும் ஒன்றுபோல ஒரே நிறத்தில் பட்டுப் புடவை எடுத்திருக் காங்க அம்மா.. உன்னிடம் கொடுத்தாங்களா?''

செந்தாமரையின் முகத்தைப் பார்த்தாள். அவள் முகத்தில் எதிர்பார்ப்பு தெரிந்தது.

''என்ன செந்தாமரை இப்படிக் குண்டடிச்சிட்ட.. விசிலை ஊதினா சத்தம் வரும். உடம்பு ஊதினா சத்தம் வருமா?'' என்று ஒரு வார இதழில் படித்த ஜோக்கை இயல்பாகக் கூறினாள்.

செந்தாமரை கேட்டது கிடைத்துவிட்ட மகிழ்வோடு வெளியேறினாள்.




*என் நெஞ்சில் எழும் நினைவலைகள்..*
*தீராமல் சுழன்றடிப்பதை...*
*என்னவென்று நான் சொல்ல..?*

நர்மதாவின் அறைக்கதவை மெதுவாக தட்டினாள் மாலினி.

''உள்ளே வாம்மா..'' என்ற அன்பான நர்மதாவின் குரல் கேட்டது.

உள்ளே போனாள். அறைக்குள் சசிரேகாவும் நின்று கொண்டிருந்தாள்.

''இந்தாம்மா..''

ஒரு தட்டில் சேலை.. பூ.. நகைப்பெட்டியுடன் நர்மதா நீட்டினாள். ஏற்கெனவே பிரபாகரன் சொல்லியிருந்தாலும் அதை வாங்கிக் கொள்ள மாலினி தயங்கினாள்.

''என்னம்மா யோசிக்கறே.. உனக்கும் சசிக்கும் ஒன்றுபோல புடவையும் நகையும் எடுத்திருக்கிறோம். வாங்கிக்க..''



''புடவை போதும் அத்தை.. நகை வேண்டாம்..''

''ஏன் வேண்டாம்.. என்கிட்ட மறுத்துப் பேசுவியா?''

சசிரேகா கண்ஜாடையில் வாங்கிக் கொள்ளச் சொல்லி அறிவுறுத்த, மாலினி வாங்கிக் கொண்டாள். அறையை விட்டு வெளியே வரும்போது..

''இன்னிக்கு சாயங்காலம்.. சித்தப்பா.. சித்தி.. அண்ணா எல்லோரும் வருகிறார்களாமே. அப்பா சொன்னார்..'' என்றாள் சசிரேகா.

'ம்ஹூம்.. ஊருக்கே தெரிந்திருக்கு. எனக்குத் தெரியலை..'

''என்னடி என்னவோ போல இருக்கே?'' சசிரேகா கவலையுடன் மாலினியின் நெற்றியில் கைவைத்துப் பார்த்தாள்.

''காய்ச்சல் அடிக்குதே..'' என்றாள் கவலையுடன்.

''லேசான காய்ச்சல்தான். டேப்லெட் போட்டால் சரியாகிடும்..'' மாலினி, சசிரேகாவை அமைதிபடுத்துவதைப் போல சிரித்தாள்.

''முதலில் அதைச் செய்.. நான் விருந்தாளிகளை கவனிக்கப் போகிறேன்..'' சசிரேகா அவசரமாய் போய் விட்டாள்..

மாலினி படியேறினாள். எதிரே தினகரன் அவசரமாக வந்தான்.

''மொட்டை மாடிக்கு வா.. உன்கூடப் பேசணும்..''

மாலினியின் பதிலை எதிர்பார்க்காமல் அவன் முன்னால் சென்றுவிட.. கையில் நர்மதா கொடுத்துவிட்ட பொருள்களை வைத்திருந்த மாலினி.. அறைக்கதவை திறந்து அவைகளை வைத்துவிட்டு வெளியே வந்தாள்.

மாடி பால்கனியில் சோகச் சித்திரமாய் பவித்ரா அமர்ந்திருப்பது அவளது கண்ணில் பட்டது. கண்களில் யோசனை படர.. மொட்டை மாடிக்குச் செல்லும் படிகளில் ஏறினாள்.

''என் பின்னாலேயே வரவேண்டியதுதானே.. எவ்வளவு நேரமாக காக்க வைக்கிறாய்?''

குட்டி போட்ட பூனையைப் போல உலவிக் கொண்டிருந்த தினகரன் படபடத்தான்.

அத்தனை நாள்களாக அவன் அந்த உரிமையையும் கோபத்தையும் காட்டியதில்லை என்பது மாலினியின் மனதில் பதிந்தது.

'கையெழுத்து இல்லாத.. காதல் கடிதத்திற்கு இத்தனை ஆர்ப்பாட்டமா?' மாலினியின் பார்வையில் ஓர் உதாசீனமும் நிமிர்வும் வந்திருந்தன.

''இந்தப் பழக்கம் எப்போதிருந்து வந்தது தினகரன்?'' என்றாள் அவள் அதட்டலாக.

''கோபமா மாலினி.. உனக்குப் பிடிக்காத பழக்கம் எது எது என்கிட்ட இருக்குன்னு சொல்லு. நான் மாற்றிக்கிறேன்..'' தினகரன் குழைந்தான்.

''சகிக்கலை..'' என்றாள் மாலினி எரிச்சலுடன்.

தினகரனின் முகம் மாறியது. காதல் கடிதம் கொடுத்தவள் பேசுகிற பேச்சாக இது இல்லையே..

''முதலில் வா.. போன்னு கூப்பிடுவதை நிறுத்துங்க. இதுக்கு முன்னால் நீங்க இப்படி என்னைக் கூப்பிட்டது இல்லையே..''

''இதுக்கு முன்னால் இதை நீ எனக்கு கொடுத்ததும் இல்லையே..''



தினகரன் காதல் கடிதத்தை நீட்டினான். அதை வாங்கிய மாலினி.. அதன் எழுதப்படாத பின்பக்கத்தை திருப்பி.. மொட்டை மாடியின் கைப்பிடி சுவரில் வைத்தாள்.

''பேனாவைக் கொடுங்க..'' தினகரனிடம் கை நீட்டினாள்.

அவன் புரியாமல் எடுத்துக் கொடுத்தான். அதை வாங்கியவள் மடமடவென நர்மதாவின் பெயரை எழுதி.. அவர்களின் வீட்டு முகவரியை எழுதினாள். தினகரனிடம் பேனாவையும் அந்தக் கடிதத்தையும் நீட்டினாள்! அவன் வாங்கிக் கொண்டான்.

''பாருங்க.. உங்க முன்னாலேதான் எழுதினேன்.. என் கையெழுத்து இதுதான்.. உங்க முட்டைக் கண்ணை முழிச்சு நல்லா பார்த்துக்கங்க..''

தினகரன் திகைப்புடன் அதைப் பார்த்தான். கடிதத்தில் இருந்த கையெழுத்தும் மாலினியின் கையெழுத்தும் வேறு வேறாக இருந்தன.

''அப்போ?''

''இதை நான் எழுதவில்லை.. யூ நோ மிஸ்டர் தினகரன். நான் வேறு ஒருத்தரைக் காதலிக்கிறேன். என் மனதையும் உடலையும் அவருக்கு சொந்தமாக்கிக்கிட்டார் அவர். நான் இன்னொருவரின் உடைமை. ஸோ.. என்னைக் காதலிக்கிறேன்னு வாயால்கூட சொல்லி வைக்காதீங்க. அது பெரிய பாவம்..''

''மாலினி..''

''நீங்க என் பெயரைக்கூடச் சொல்லக்கூடாது. இதுக்கு மேல என் காதலைப் பற்றி நான் எதுவும் சொல்ல மாட்டேன். நான் இன்னொருவரின் மனைவி. அதை மனதில் வைத்துக் கொண்டு பேசுங்க..''

''இந்தக் கடிதத்தை எழுதியது?''

''பவித்ரா..''

''பவித்ராவா?''

தினகரன் ஆச்சரியப்பட்டுப் போனான். அவனைக் கண்டதும் நாணத்துடன் தலை கவிழ்ந்து கொள்ளும் பவித்ராவின் மலர் முகம் அவனது நினைவில் எழுந்தது.

'அவளா என்னை இந்த அளவுக்கு காதலிக்கிறாள்?'

''பவித்ராவோதான்.. அவளுக்கு சிறுவயதிலிருந்தே உங்கள் மேல் பிரியமாம். அதை வெளியே சொல்ல முடியாத குடும்பச் சூழ்நிலை.. மனதில் போட்டு புதைத்துக் கொண்டு இத்தனை நாளும் இருந்திருக்கிறாள். இப்போது இரண்டு மாத காலம் உங்கள் அருகிலேயே இருந்துவிட் டவளுக்குப் பிரிந்து போக முடியவில்லை. இன்றைக்கு காயத்ரியின் கல்யாணத்திற்காக மண்டபத்துக்கு கிளம்பி னால் நாளைக்கு கல்யாணம் முடிந்த கையோடு மண்ட பத்திலிருந்தே அவளுடைய ஊருக்கு கூப்பிட்டுக்கொண்டு போய் விடுவார்களாம். அவள் என்ன ஸ்வேதாவா.. இங்கேதான் இருப்பேன்னு அடம்பிடிக்க? நேற்று உங்க ளிடம் காதலைச் சொல்ல முடியலைன்னா.. அதுக்கப்புறம் எப்போதுமே சொல்ல முடியாதுன்னு அவளுக்குள் ஒரு பயம். அதனால் என்னிடம் கெஞ்சினாள். நான் அவ ளுடைய கடிதத்தை உங்களிடம் கொடுத்து விவரம் சொல்ல வந்தேன். ஸ்வேதா வந்துவிட்டாள்.. சரி.. பவித்ராவின் கடிதத்தைத்தான் சேர்த்துவிட்டோமேன்னு எதுவும் சொல் லாமல் வந்துவிட்டேன். பவித்ரா இப்படிக் கையெழுத்தைப் போடாமல் என் கழுத்தை அறுத்து வைப்பாள்னு நான் கனவிலும் நினைத்துப் பார்க்கவில்லை தினகரன்..''

''ஐ ஆம் ஸாரி மாலினி..''



''நீங்கள் எனக்குக் கூடப் பிறந்த பிறப்பைப் போல தினகரன். உங்கள் மேல் சகோதர பாசம்தான் எனக்கு வந்திருக்கிறது. ஒரு நாள்கூட உங்களை நான் வித்தி யாசமாக நினைத்ததில்லை. பவித்ராவின் கடிதத்தை நான் பிரித்துப் பார்க்கவில்லை தினகரன். அது நாகரிகமாகுமா.. சொல்லுங்க?''

''ஷ்யூர்.. ஷ்யூர்..''

''நான் அவள் மேல் இரக்கப்பட்டேன்.. அவள் ரொம்ப நல்ல பெண் தினகரன். உங்களை உண்மையாக காதலிக் கிறாள். உயிருக்குயிராய் காதலிக்கிறாள். நீங்க அவளுக்கு கிடைக்கலைன்னா உயிரையே விட்டுவிடுவாள்..''

''ஓ... நோ..''

''இந்தக் காதல் காணக் கிடைக்காதது தினகரன். இதை கைநழுவ விட்டு விடாதீங்க. பவித்ராவைப் போன்ற ஒரு பெண்ணின் காதல் கிடைக்க நீங்க கொடுத்து வைத்திருக்க வேண்டும்..''

இதுதான் மாலினி.. சின்னத்தனங்கள் அற்றவள்.. அவளை மிகவும் தாழ்வாக பவித்ரா பேசியிருப்பதை அறிந்த பின்னாலும் அவளுடைய காதலையும் அவளை யும் உயர்த்திப் பேச மாலினியால் மட்டுமே முடியும்.

ஒரு வகையில் பவித்ராவின் கேள்வியில் நியாயம் இருப்பதை அவள் உணர்ந்தாள். அது.. பவித்ராவின் மனதையும் காதலையும் அறிந்தும் ஏன் மாலினி அதை தினகரனிடம் சொல்லவில்லை என்பதுதான்.

தினகரனிடம் இயல்பாக பேசக்கூடியவள் மாலினி. பேச முடியாதவள் பவித்ரா. அப்படியிருக்கையில் பின்ன வளின் காதலை முன்னவள் தினகரனுக்கு தெரியப்படுத்தி யிருக்கலாமே என்ற மனத்தாங்கல் பவித்ராவின் மனதில் எழுவது இயல்புதான்.

ஆனால், பவித்ரா கேட்டுக் கொள்ளாமல் அவளைப் பற்றி தினகரனிடமும் பிரபாகரனிடமும் மாலினி பேசப் பிரியப்படவில்லை.

பெரிய குடும்பத்து மனிதர்களிடையே யார் மனதில் என்ன இருக்கிறது என்று யாராலும் கணிக்க முடியாது என்ற நினைவு அவளுக்கு.

அவர்களின் குடும்ப அரசியலில் தலையிடுவது அநாகரிகம் என்று அவள் நினைத்தாள். தினகரனின் மனதில் என்ன இருக்கிறது என்று அவனைப் படைத்த பிரம்மாவே வந்து சொன்னால்தான் உண்டு.

காலையில் மாலினியை சைட் அடித்து வைப்பவன்.. வெளியே போகும்போது எதிர்படும் பெண்களையெல்லாம் சைட் அடித்துவிட்டு வீடு வந்து சேர்ந்து.. வீட்டில் இருக்கும் பவித்ராவிடமும் கடலை போட்டு வைப்பான்.

அப்படிப்பட்டவனிடம் போய் பவித்ராவின் காதலைப் பற்றி மாலினியால் எப்படிப் பேச முடியும்?

அவன் இயல்புக்கு பவித்ராவை அவன் விரும்பாமல் போய்விட்டால் பவித்ராவின் காதல் வெளிப்பட்டும் பிரயோஜனமில்லாமல் போய்விடுமே.

பிரபாகரனிடம் பவித்ராவைக் காட்டிக் கொடுக்க முடியாது. மாலினிதான் பாவம் என்ன செய்வாள்?

பவித்ரா மட்டும் ஒரு வார்த்தை.. ஒரேயொரு வார்த்தை.. என் காதலைப் பற்றி பெரியத்தானிடம் பேசு என்று மாலினியிடம் கேட்டுக் கொண்டிருந்தால் மாலினி கட்டாயம் அதைச் செய்திருப்பாள்.

பிரபாகரனுக்கு விஷயம் தெரிய வந்திருந்தால் தம்பி யிடம் பேசி அவனை சம்மதிக்க வைத்திருப்பான். எல்லாம் எளிதாக சுபமாக முடிந்திருக்கும்.



ஆனால், பவித்ரா அதைச் செய்யவில்லை. அவளுடைய காதல் வெளிப்பட்டுவிட்டால் குடும்பத்தில் உள்ள பெரியவர்கள் அவளைத் தாழ்வாக நினைத்துவிடுவார்களே என்று பயந்தாள்.

வருடக் கணக்கில் ஸ்வேதா இருக்கும் வீட்டில்.. பவித்ராவுக்கு ஆதரவாக மாலினி எதையாவது பேசி வைக்கப் போக.. அது வெளியே தெரிந்துவிட்டால் ஸ்வேதாவைப் பிடிக்காமல்தான் மாலினி அப்படிச் செய்தாள் என்ற பழி அவள் மேல் வந்துவிடாதா.. ஆனானப்பட்ட நர்மதாவே மாணிக்கவாசகத்திடம் பொறுமையாகப் போகும் போது மாலினி எந்த மூலைக்கு?

என்னதான் பிரபாகரன் அவளைக் காப்பாற்றி விடுவான் என்றாலும்.. காதலித்தவனுக்கு தர்மசங்கடத்தை உண்டுபண்ணிவிடக் கூடாது என்ற பொறுப்புணர்ச்சி மாலினிக்கு.

என்னதான் ஏழு கடல்.. ஏழு மலை தாண்டி ஓடி ஒளிந்தாலும் வருகின்ற துன்பம் வந்துதான் தீரும் என்பதைப் போல என்னதான் மாலினி யோசித்து ஜாக்கிரதையாய் செயல்பட்டாலும் பிரபாகரனுக்கு தர்மசங்கடத்தை உண்டு பண்ணாமலிருக்க அவளால் முடியாமல் போனது.

பவித்ரா கூழுக்கும் ஆசை.. மீசைக்கும் ஆசை என்ற நிலையில் இருப்பவள். அவளுக்கு தன் காதலும் நிறைவேற வேண்டும். அதேசமயம் அவளுடைய பெயரும் வெளியே வரக்கூடாது.

பவித்ராவின் மீது நட்பு பாராட்டிய ஒரே குற்றத்திற்காக மாலினி சிலுவை சுமந்துவிட்டாள்.

சுமந்த சிலுவையின் பாரத்தோடு பவித்ரா கேட்டதைச் செய்தும் விட்டாள். தினகரனிடம் பவித்ராவின் காதலைப் பற்றிச் சொல்லிவிட்டாள்.

''என்னிடம் அவள் பேசியிருக்கலாமே மாலினி..''

''பயம்.. தயக்கம்.. வெட்கம்.. வேறு என்ன?''

''ஐ ஆம் ஸாரி.. உங்களிடம் தப்பாக பேசிட்டேன்..''

''லீவ் இட்டுன்னு அதை என்னால் சொல்லிவிட முடியாது. நான் என்னவோ பிள்ளையாரைத்தான் பிடிக்கப் போனேன். அது ஆஞ்சநேயராக வந்து அமைந்துவிட்டது..''

''எங்களால் உங்களுக்கு மனவருத்தம்..''

பன்மையாக தினகரன் பேசியதிலிருந்து அவன் பவித்ராவுடன் ஒன்றுபட்டுவிட்டான் என்பதை உணர்ந்து கொண்டவளாக மாலினி லேசான தலை அசைவுடன் தினகரனிடம் விடை பெற்றுக் கொண்டாள்.

அவளையறியாமல் உருவாகிவிட்ட சூழல் சரியாகி விட்டதில் அவளுக்குள் நிம்மதி ஏற்பட்டது.

இனி பிரபாகரனுக்கு தினகரனிடம் பேச வேண்டிய சங்கடம் ஏற்படாது. தினகரன் எல்லாவற்றையும் உணர்ந்து கொண்டான்.

அவள் மொட்டை மாடியிலிருந்து கீழே செல்ல படிக்கட்டுக்கு போனபோது.. மேல் மாடியில் பவித்ரா நின்றிருந்தாள்.

'இவள் கீழே பால்கனியில் உட்கார்ந்திருந்தாளே..' என்று யோசிக்கும்போதே.. பளிச்சென்று மாலினிக்கு விஷயம் புரிந்துவிட்டது.

தினகரன் எங்கே சென்றாலும் பவித்ராவின் பார்வை அவனைப் பின்தொடரும் வழக்கமுடையது. அவள் தினகரன் மொட்டை மாடிக்குச் செல்வதைக் கவனித்திருக்க வேண் டும். அவனைப் பின்தொடர்ந்து மாலினி செல்வதைக் கண்டதும் அவர்கள் என்ன பேசிக் கொள்கிறார்கள் என்பதைக் கண்காணிக்க பின்தொடர்ந்திருக்க வேண்டும்.



'காதல் ஒரு மனுஷியை என்ன வேலைகளையெல் லாம் செய்ய வைக்கிறது...' மாலினிக்குள் எண்ணம் வந்தது.

பவித்ராவா இப்படி ஒட்டுக் கேட்க முயன்றாள் என்ற கேள்வி அவளுக்குள் எழுந்தபோதே.. முதல் நாள் இரவே அவள் அந்த வேலையை ஆரம்பித்து விட்டாள் என்பது மாலினியின் நினைவுக்கு வந்தது.

மாலினியின் பார்வையைக் கண்ட தினகரன், அவள் யாரைப் பார்த்துக் கொண்டிருக்கிறாள் என்று புருவங்களை உயர்த்தியபடி அருகே வந்தான். பவித்ராவைப் பார்த்ததும்.. காதல் பொங்க..

''பவித்ரா..'' என்று உணர்ச்சிப் பொங்க அழைத்தான்.

பவித்ரா தன் காதுகளை நம்ப முடியாமல் நிமிர்ந்து அவனைப் பார்த்தாள். அவன் கண்களில் தெரிந்த காதலைக் கண்டதும் திக்குமுக்காடி விட்டாள்.

வழக்கம் போல் பேச வார்த்தைகள் வராமல் திணறிக் கொண்டிருந்தவளிடம்..

''முட்டாள்.. என்னிடம் பேச உனக்கு என்ன பயம்? வீணாக மாலினியை ஏன் இதில் இழுத்துவிட்டாய்? பார்... அவங்களுக்கு நம்மால் எத்தனை தொந்தரவு?'' என்று உரிமையாக கடிந்து கொண்டான் தினகரன்.

''அத்தான்.. நான்... வந்து...''

''அதுதான் வந்துவிட்டாயே... என்னைப் போன்ற ஆளுக்கு உன்னைப் போல ஒரு பேசாமடந்தைக் காதலி அமைந்திருக்கிறாள் பாரேன்.. இதுதான் இறைவனின் விளையாட்டுப் போல...''

இதைக் கேட்டவுடன் பவித்ராவின் முகம் வாடி விட்டது.

''அப்போ என்னைப் பிடிக்கலையா அத்தான்..''

''ஹப்பா.. இத்தனை வருஷத்தில் நான்கு வார்த்தைகளைச் சேர்ந்தாற் போல இப்போதுதான் பேசியிருக்கிறாய். ஸோ.. நீ திக்கு வாயில்லை என்று கன்ஃபார்ம் ஆகிவிட்டது. பிழைத்தேன்..''

''போங்க அத்தான்..'' என்று பவித்ராவும் சிணுங்கவும்,

''யோசித்துச் சொல்லு பவித்ரா.. கல்யாண வீட்டில் என்னை கரெக்ட் பண்ணன்னே டீன் ஏஜ் பட்டாளம் கிளம்பி வந்திருக்குது. நீ போன்னு சொன்னால் அவங்களிடம் போய்விடுவேன்..'' என்று சொன்னான் தினகரன்.

''ஐயோ அத்தான்..'' பவித்ரா மருண்டு விழித்தாள்.

''மக்கு.. இத்தனை பயந்தாகுளியா நீ.. விளையாட்டுக்குச் சொன்னேன்..'' என்று சமாதானப்படுத்தவும் ஆரம்பித்தான் அவன்.

அவர்களை பேசவிட்டு விலகி மாலினி படிக்கட்டில் கால் வைத்தபோது பவித்ராவின் கரம்.. அவளது கரத்தைப் பற்றியது.

''மாலினி...'' நன்றிப் பெருக்குடன் பவித்ரா அழைத்தாள்.

மாலினியின் கை பவித்ராவின் கைக்குள் அகப்படாமல் விலகியது. அவள் முகம் கடினமாக இருந்தது. தினகரன் அறியாமல் தன் உதாசீனத்தையும் புறக்கணிப்பையும் பவித்ராவிற்கு உணர்த்திவிட்டு மாலினி படிக்கட்டுகளில் விரைந்து இறங்கிவிட்டாள்.

பவித்ரா விக்கித்துப் போய் விட்டாள். அவளது மனக்கண்ணில் மனம்விட்டுச் சிரித்துக் கொண்டிருக்கும் மாலினியின் முகம் தோன்றியது. நட்புடன் கை நீட்டிய அவளது கரம் தோன்றியது.

அந்த மாலினி இன்று கரம் விலக்கி இறுக்கமான முகத்துடன் பவித்ராவை விட்டு விலகிப் போகிறாள்.



இனி என்றுமே அவளது நட்பு திரும்பக் கிடைக்காது என்பதை உணர்ந்து கொண்ட பவித்ராவிற்கு கதறியழ வேண்டும் போல இருந்தது.




*உனைப் பார்க்காதபோது பேச நினைக்கும் வார்த்தைகள்*
*உனை பார்க்கின்றபோது தொண்டையில் சிக்கிக் கொள்வதை*
*என்னவென்று நான் சொல்ல..?*

ஒன்று கிடைத்தால் ஒன்றை இழக்க வேண்டும் என்பது விதி போல.. கிடைக்கவே கிடைக்காது என்று ஏங்கித் தவித்த காதல் பவித்ராவிற்கு கிடைத்துவிட்டது. கிடைப்பதற்கரிய நட்பாக கிடைத்த மாலினியின் நட்பு அவரைப் பிரிந்து போய்விட்டது.

காணக் கிடைக்காத பொக்கிஷம் மாலினி. அவள் தன் காதலனிடம்கூடச் சொல்லக்கூடாது என்று தோழியின் அந்தரங்கத்தை மறைத்து வைத்து பாதுகாத்தாள். அதுவே அவளுக்கு எதிராகத் திரும்பியது. இருந்தும் அவள் பொய்யாமொழிப் புலவரின் வாக்குப்படி..

*'இன்னா செய்தாரை ஒறுத்தல் – அவர்*
*நாண நன்னயம் செய்துவிடல்..'*

என்று பவித்ராவிற்கு நன்மை செய்துவிட்டுப் போய் விட்டாள். இப்போது மாலினியைக் குற்றம்சாட்டிய பவித்ரா தன் மனச்சாட்சியின் முன் குற்றவாளியாக தலைகுனிந்து நின்றாள்.

தினகரன், பவித்ராவுடன் மனம்விட்டுப் பேசினான். தன்னை இந்த அளவுக்கு காதலிக்கும் காதலியை அவனுக்கு மிகவும் பிடித்துப் போய்விட்டது. அவர்கள்

மொட்டை மாடியிலிருந்து இறங்கிவரும்போது மனதால் ஒன்றுபட்டவர்களாக இறங்கி வந்தார்கள்.

இதை அறியாதவளாக ஸ்வேதா.. தான் எடுத்த காரியத்தை முடித்துவிட்ட பெருமையை மாணிக்கவாசகத்திடம் பீற்றிக் கொண்டிருந்தாள்.

''ஒரே கல்லில் இரண்டு மாங்காய்களை அடித்து விட்டேன் அப்பா.. தினகரனின் வாயால் மாலினியின் மேல் அவனுக்கிருக்கும் காதலை சொல்ல வைத்துவிட்டேன். அதை பிரபாகரனும் பவித்ராவும் ஒரே நேரத்தில் கேட்கவும் வைத்துவிட்டேன். காதலில் தோற்றுப் போய் விட்ட பவித்ரா, கட்டாயம் பிரபாகரனை பிடிபிடியென்று பிடித்திருப்பாள். அவன் அந்தக் கோபத்தை அப்படியே மாலினியிடம் காட்டியிருப்பான். இனி பவித்ராவும் தினகரனின் பக்கம் திரும்ப மாட்டாள். பிரபாகரனும் மாலினியின் பக்கம் பார்க்க மாட்டான்..''

''ஏம்மா! இந்த தினகரன், மாலினியை கரெக்ட் பண்ணிவிட்டான்னா என்ன பண்ணுகிறது..?''

'கரெக்ட்' பண்ணும் விஷயத்தை பெற்ற மகளிடம் கேட்கும் உணர்வின்றி மாணிக்கவாசகம் கேட்க.. பரிமளம்..

''நல்ல அப்பன்.. நல்ல மகள்..'' என்று தலையில் அடித்துக் கொண்டாள்.

''இல்லப்பா.. மாலினி அதற்கு இடம் கொடுக்க மாட்டாள். அண்ணனை காதலித்துவிட்டு தம்பியைக் கல்யாணம் பண்ணிக்கொள்ளும் ரகம் அவளில்லை..''

ஸ்வேதா என்னவோ.. வெளிநாட்டு சதியை முறியடித்து விட்ட முக பாவனையுடன் கூறிக் கொண்டிருக்க.. பரிமளம் இடைமறித்தாள்.

''அம்மா.. ராணி மங்கம்மாதேவி.. மங்கம்மா சபதத்தை முடிச்சிட்டயா? இனியாவது பெண்ணாய்.. லட்சணமாய் எங்ககூட கிளம்பி வருகிறாயா?''



''இனிமேல் எனக்கு இங்கென்னம்மா வேலை?''

பரிமளம் நிம்மதியுடன் அப்போதே மகளின் பொருள்களை அடுக்கி வைக்க ஆரம்பித்தாள்.

காயத்ரிக்கு அழகுபடுத்த வந்திருந்த அழகு நிலையப் பெண்களுக்கு ஆலோசனைகள் கூறி... காயத்ரியை தயார் செய்து கொண்டிருந்த மாலினி.. சசிரேகா அழைக்கவும் ஹாலுக்கு வந்தாள்.

''என்ன சசி?''

''சித்தப்பா.. சித்தி.. அண்ணன்.. அண்ணியெல்லாம் வந்திருக்காங்க பாரு..''

மாலினி அவசரமாக வாசலுக்கு ஓடினாள். சென்னையிலிருந்து வாடகைக் கார் எடுத்துக் கொண்டு வந்திருந்த அவளின் குடும்பத்தார் இறங்கி.. அந்த வீட்டை ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

''அடேங்கப்பா.. சினிமாவில்கூட நான் இப்பேர்ப்பட்ட மாளிகையை பார்த்ததில்லைங்க.. உங்க பெரியப்பா மக கெட்டிக்காரிதான்..'' என்று ராதிகா.. ரஞ்சித்திடம் கூறிக் கொண்டிருந்தாள்.

''அவளா இந்த வீட்டைக் கட்டினாள்?''

''இந்த வீட்டைச் சேர்ந்தவனை கட்டியிருக்கிறாளே..''

''உனக்கு அப்படி ஒரு கெட்டிக்காரத்தனம் இல்லாமல் போய்விட்டதேன்னு வருத்தமா இருக்கா?''

''இந்த வாயைப் பிடுங்குகிற வேலையெல்லாம் வேண்டாம்..''

அவர்கள் வழக்கடித்துக் கொண்டிருக்கும்போதே...

''அண்ணா...'' என்று மாலினி ஓடிவந்து ரஞ்சித்தை கட்டிக் கொண்டாள்.

''ம்ம்.. உங்க குடும்பத்துப் பெண்களே கெட்டிக்காரங்கதான். பக்கத்தில் நான் நிற்கிறேன்.. பெத்த தாய்..

தகப்பனும் நிற்கிறாங்க. நேரா ஓடிவந்து உங்ககிட்ட பாச மலரை மலர வைக்கிறாளே. எனக்கெல்லாம் இந்தக் கெட்டிக்காரத்தனம் வராது..'' ராதிகா நொடித்தாள்.

''வந்த இடத்தில் அடக்கி வாசிடி..'' ரஞ்சித் முறைத் தான்.

''மாலினி...''

''அம்மா...''

''எப்படிம்மா இருக்க?''

''நல்லாயிருக்கேன்ப்பா...''

அவர்கள் பேசிக் கொண்டிருந்தபோது நர்மதா வாசலுக்கே வந்து விட்டாள்.

''வாங்க.. வாங்க..'' என்று அவர்களை வரவேற்றவள், ''மாலினி.. மாடியில் உன் ரூமுக்கு பக்கத்து ரூம் களில் இவங்களை தங்க வையம்மா..'' என்று அன்பொழுக கூறினாள்.

ஜானகிராமனுக்கு மகளுக்கு அந்த வீட்டிலிருக்கும் செல்வாக்கைக் கண்டு ஒரே வியப்பு ராதிகாவிற்கு மனதிற் குள் பட்சியே கூவ ஆரம்பித்து விட்டது.

'இந்த வீட்டில் கல்யாணமாகாத இரண்டு ஆண் பிள்ளைகள் இருக்கிறதா சொல்லிக்குவாங்களே.. அவர்களில் யாருக்காவது ஒரு ஆளுக்கு இவளை பிடித்துப் போய் விட்டதா?'

அவர்கள் மாடியேறினார்கள். சற்று நேரத்தில் காயத்ரியை பெண்ணழைத்துக் கொண்டு போக கார்கள் வந்துவிட.. அவர்களும் திருமண ஜோதியில் ஐக்கியமாகி.. கூட்டத்தோடு திருமண மண்டபத்திற்கு கிளம்பினார்கள்.

மறுநாள் காலையில் நடந்த திருமணத்தில் சசிரேகா வும் மாலினியும் ஒரே நிறத்தில்.. ஒரே டிஸைன் பட்டுப் புடவைகளை அணிந்து கொண்டு திருமண மண்டபத்தில்



வளைய வந்ததைக் கண்ட காவேரிக்கு மனதிற்குள் பூரிப்பு.

''என்னவோ நல்லது நடக்கப் போகுதுங்க..'' கணவ னிடம் கூறினாள்.

''எனக்கும் அப்படித்தான் தோணுது..'' நம்ப முடியாத திகைப்புடன் ஜானகிராமன் பதில் சொன்னார்.

''மார்த்தாண்டத்துக்கு அவ வேலைக்குப் போக வேணாம்னு சொன்னீங்க..''

''அதிர்ஷ்டதேவதை அழைக்குதுன்னு அப்ப எனக்குத் தெரியாமல் போச்சே..''

திருமண மண்டபத்தில் நிற்க நேரமில்லாமல் அலைந்து கொண்டிருந்தான் பிரபாகரன்.. முகூர்த்த நேரத் தில்.. காயத்ரியின் திருமணம் நல்ல முறையில் நடைபெற்ற தும் அவனது முகத்தில் நிம்மதியும் கடமையை முடித்து விட்ட நிறைவும் வந்தது. அதை அவனறியாமல் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தாள் மாலினி.

அன்று மாலையில் அவளுடைய குடும்பம் கிளம்பிய போது மாலினியும் தன் பெட்டிகளை எடுத்து வைத்தாள்.

''என்னம்மா..'' ஜானகிராமன் புருவங்களை உயர்த் தினார்.

''நானும் வருகிறேன்ப்பா..'' அமைதியாகச் சொன்னாள் மாலினி.

''உன் வேலை?''

''ரிஸைன் பண்ணிட்டேன்..''

''ஏன்?''

''பிடிக்கலைப்பா.. எனக்கு மார்த்தாண்டத்தில் இருக்க போரடிக்குது. நீங்க சொல்வதுதான் சரி. சென்னை யிலேயோ.. இல்லை.. பெரிய சிட்டிகளிலேயோ வேலை கிடைத்தால் போய்க்கறேன்.. இந்த வேலை வேண்டாம்..''

இப்படிப் பேசுபவளை எப்படி மறுத்துப் பேசுவது என்பது புரியாமல் ஜானகிராமனும் காவேரியும் விழித்தனர். கனவு கலைந்து போன ஏமாற்றம் அவர்களுக்கு. இப்படி ஒரு நொடியில் அந்த வீட்டுக்கும் அவர்களுக்கும் தொடர்பு இல்லாமல் மாலினி செய்துவிடுவாள் என்று அவர்கள் எதிர்பார்க்கவில்லை.

''நல்லா யோசித்துத்தான் இந்த முடிவுக்கு வந்தயா?'' கடைசி முயற்சியாக ஜானகிராமன் கேட்டுப் பார்த்தார்.

''ஆமாம்ப்பா.. யோசிச்சுத்தான் இந்த முடிவுக்கு வந்தேன்..'' மாலினி தெளிவாக பதில் சொல்லிவிட்டாள்.

காயத்ரியுடன் அவளது புகுந்த வீட்டிற்கு நர்மதாவும் அவளுடைய குடும்பத்தாரும் போய்விட்டதால்.. பிரபாகரனும் சசிரேகாவும் அப்போது வீட்டில் இல்லை.

ஆளவந்தார் தரப்பு.. அவரவரின் குடும்பங்களோடு கிளம்பிவிட்டதால்.. ஸ்வேதாவும் பவித்ராவும் அங்கு இல்லை.

வேலையாள்கள் மட்டும் இருந்த வீட்டில் மாலினியை தடுத்து நிறுத்த வேண்டிய ஆள்கள் யாரும் இல்லை.

''என்னம்மா நீங்களும் கிளம்புகிறீங்க..'' என்று பொன்னி திகைக்க..

''எனக்கு சென்னையில் வேலை கிடைத்திருக்கு பொன்னி.. நான் என் வீட்டு ஆள்களோடு போகிறேன். அத்தை வந்தவுடன் சொல்லிவிடு..'' என்று கூறி விடை பெற்றுக் கொண்டாள் மாலினி.

''அப்போ.. திரும்பி வர மாட்டீங்களா...'' என்று ஏக்கத்துடன் கேட்ட செந்தாமரையின் கன்னம் தட்டி..

''வரமாட்டேன்'' என்று சிரித்தாள் மாலினி.

அந்த வீட்டை விட்டுக் கார் கிளம்பியபோது.. அந்த வீட்டையும் தோட்டத்தையும் ஒரு முறை பார்த்துக் கொண்டாள் மாலினி.



வாய்விட்டு வெளிப்படையாக அழ முடியாமல் அவள் மனம் அழுதது.

''இந்த தோட்டத்தில்தான் அவரை முதன்முதலில் பார்த்தேன். இந்த நீச்சல்குளத்தின் பக்கத்தில்தான் அவரிடம் மயங்கி நின்றேன். இந்த வீட்டின் மொட்டை மாடியில்தான் என்னிடம் அவர் காதலை சொன்னார். இந்த வீட்டின் அறையில்தான் என்னை அவர் சொந்தமாக்கிக் கொண்டார்..''

மனதில் பாறாங்கல் ஏறி அமர்ந்தது.

மாலினி அந்த வீட்டை விட்டுப் போய்விட்டாள்.

இரண்டு நாள்கள் கழிந்த பின்னர்.. மறுவீட்டு விருந்திற்கு காயத்ரியையும் ஷ்யாம்சுந்தரையும் அழைத்துக் கொண்டு திரும்பி வந்த நர்மதாவின் குடும்பம் மாலினியைக் காணாமல் திகைத்தது.

''சசி.. மாலினி போகிறதுக்கு முன்னால் உன்னிடம் எதுவும் சொல்லலையா?'' பிரபாகரன், சசிரேகாவிடம் விசாரித்தான்.

''இல்லையே அத்தான்.. காயத்ரியின் கல்யாணத்துக்கு முதல் நாளில் அவளுக்கு நல்ல காய்ச்சல்.. வாடிப் போயிருந்தாள். சரியாய்ச் சாப்பிடவில்லை. பேசவில்லை. கல்யாண வேலைகளில் என்னாலும் அவளைக் கவனிக்க முடியாமல் போய்விட்டது..'' சசிரேகா கையைப் பிசைந்தாள்.

''என்ன நடந்தது பிரபா?'' நர்மதா பெரிய மகனை தனியாக அழைத்து விசாரித்தாள்..

அவன் என்னவென்று சொல்லுவான்?

''பவித்ராதான் அந்தக் கடிதத்தை எழுதியிருக்கிறாள் அண்ணா.. மறுநாள் காலையில் மாலினி என்னிடம் வந்து சொல்லிட்டாங்க. அவங்க யாரையோ காதலிக்கிறதாகவும் சொன்னாங்க. ஒருவேளை அவரைத் தேடிக்கிட்டுப் போயிட்டாங்களோ!''

தினகரன் சந்தேகம் கேட்க.. பிரபாகரனுக்கு சுவரில் முட்டிக் கொள்ளலாம் போல இருந்தது.



*நெஞ்சினிலே உன் நினைவலைகள்..*
*நித்தம் என்னைக் கொல்லுவதை...*
*என்னவென்று நான் சொல்ல..?*

''என்மேல் பவித்ரா பைத்தியமா இருந்திருக்கிறாண்ணா... எனக்குத்தான் இது தெரியலை. நான் மாலினி கிட்ட ஸாரி கேட்டுக்கிட்டேன். அவங்கதான் பவித்ராவைப் பற்றி எல்லாத்தையும் என்கிட்ட சொல்லி.. என்னையும் அவளையும் சேர்த்து வைத்தாங்க. ஷி இஸ் ஸோ கிரேட்.. என் மேல் கோபப்படாமல்.. அதேசமயம் கண்டிப்பான தோரணையில் பேசினாங்க. என்னை அவங்களோட கூடப் பிறந்தவனைப் போல நினைச்சாங்களாம். அவங்க அதைச் சொல்லவும்.. எனக்கு என்னவோ போல ஆகிவிட்டது. நான் எப்படியெல்லாம் அவங்ககிட்ட உளறிவிட்டேன்னு வெட்கமாகிவிட்டது...''

பிரபாகரனுக்கு தம்பியிடம் பேச வேண்டிய வேலையில்லாமல் மாலினி செய்துவிட்டதை பிரபாகரன் புரிந்து கொண்டான்.

''பவித்ரா அழுதுட்டாண்ணா.. மாலினிகிட்ட தேங்க்ஸ் சொன்னா..''

இனி அவள் நன்றி சொல்லி ஆகப்போவது என்ன... என்ற நினைவுடன் உதட்டைக் கடித்துக் கொண்டான் பிரபாகரன்.

மறுவீட்டு விருந்திற்கு தங்கை வந்திருக்கும்போது..



மாலினியைத் தேடிக் கொண்டு போக முடியாத சூழ்நிலையில் மாட்டிக் கொண்டான் பிரபாகரன்.

''மாலினிக்கு போன் செய்து பேசினியாம்மா..'' என்று சசிரேகாவிடம் கேட்டான்.

''ஸ்விட்ச் ஆஃப்ன்னு வருது பெரியத்தான்.. சித்தப்பாவிடம் பேசினேன். நான் பேசும்போதெல்லாம் மாலினி வெளியே போய்விட்டாள்னு சொல்லிட்டார். என்ன நடந்ததுன்னே தெரியலையே பெரியத்தான்..'' அவள் பதிலுக்கு புலம்பினாள்.

என்ன நடந்தது என்று புரிந்த பிரபாகரன், அதை வெளியே சொல்ல முடியாமல் மனதில் வைத்துக் கொண்டு அல்லாடினான்.

திரும்பத் திரும்ப மாலினியின் செல்போனிற்கு தொடர்பு கொள்ள முயன்றான்.. 'ஸ்விட்ச் ஆஃப்..' என்று வந்தது. தவித்துப் போனான்.

முதல் நாள் அவள் அவனிடம் தன்னை ஒப்படைத்ததை நினைவுக்கு கொண்டு வந்தான். அவன் மேல் கோபமிருந்தால் அவள் அதைச் செய்திருப்பாளா.. பிரிந்து போக நினைப்பவள் உடன் வாழ எப்படி நினைத்தாள்?

தலைமுடியைப் பிய்த்துக் கொள்ளாத குறையாய் அவன் பித்துப் பிடித்து அலைந்தபோது மாலினியிடமிருந்து அவனுக்கு விரைவுத் தபால் ஒன்று வந்து சேர்ந்தது.

''பிரபா.. உனக்கு ஸ்பீடு போஸ்டு வந்திருக்குப்பா..''

''வாங்கி வைத்திருக்கிறீங்களாம்மா..''

''ஊஹூம்.. நீ கையெழுத்துப் போட்டால்தான் தருவாங்களாம்..''

மில்லில் என்றால் அவனுடைய உதவியாளர்கள் கையெழுத்துப் போட்டு வாங்கியிருப்பார்கள். ஒருவேளை

அப்படி வேறு யாரும் வாங்கி வைக்கக்கூடாது என்பதற்காகத்தான் வீட்டு முகவரிக்கு கடிதம் எழுதி அனுப்பியிருக்கிறார்களோ?

'யார் அந்த புத்திசாலி?' என்று யோசித்தவனுக்கு மாலினியின் நினைவு வந்தது.

அவள்தான் இப்படியெல்லாம் யோசிப்பாள் என்ற நினைவுடன் காரில் ஏறி தபால் அலுவலகத்திற்கு பறந்தான். அவனது யூகம் பொய்க்கவில்லை. மாலினிதான் அந்தக் கடிதத்தை அனுப்பியிருந்தாள்.

வீட்டுக்கு வரும் வரை பொறுமை காக்க முடியாமல் அவசரமாக காரை சாலையின் ஓரமாக நிறுத்திவிட்டு கடிதத்தை பிரித்துப் படித்தான்.

'அன்புள்ள அத்தான்..

உங்களுக்கு நான் பெயர் சொல்லி அழைப்பதை விட.. அத்தான் என்று அழைத்தால் மிகவும் பிடிக்கும். அதனால் அத்தான் என்றே இந்தக் கடிதத்தில் அழைக்கிறேன்.

அத்தான்..! எப்போதுமே.. மனதில் இருப்பதுதான் வெளியில் வரும். அன்று கோபத்தில் உங்கள் மனதிலிருந்ததைத்தான் வெளியே கொட்டினீர்கள். அதையும் உங்கள் வாயால் நீங்களே சொன்னீர்கள்.

என்னைப் பற்றிய உங்களின் அபிப்பிராயம் அதுவாக இருக்கும்போது.. நாம் காதலிப்பதில் அர்த்தமே இல்லையே.

காதலுக்கு அடிப்படை நம்பிக்கை.. அந்த நம்பிக்கை ஆரம்பத்தில் இருந்தே உங்களுக்கு என்மீது இல்லாமல் போய்விட்டது.

தினகரனைப் பற்றிய பேச்சை நீங்கள் எடுத்தபோதே நான் என் எதிர்ப்பை காட்டிவிட்டேன். ஆறு மாத கால அளவில் உங்களிடம் மௌனித்திருந்தேன். இருந்தும் நீங்கள் அவரைப் பற்றிய சந்தேகத்தை உங்கள் மனதிலிருந்து அகற்றவே இல்லை.



பவித்ரா ஒருவகையில் சுயநலவாதி. அவளுடன் ஒப்பிடும்போது ஸ்வேதா எவ்வளவோ மேலானவள். அவள் தன்னைப் பற்றி போலியான மதிப்பீட்டை உருவாக்கியதில்லை. ஆனால் பவித்ரா.. மென்மையானவள். சாது.. பயந்தவள் என்ற போலி மதிப்பீட்டை உருவாக்கி வைத்திருந்தாள்.

நான் அவளது வெளித்தோற்றத்தில் ஏமாந்து போனேன்.

சத்தியமாக அவளது காதலை நிறைவேற்றத்தான் தினகரனைத் தேடிப் போனேன். நான் காதலிப்பவள்.. காதல் தோற்றுவிட்டால் ஏற்படும் மரண வலி எப்படிப்பட்டதாக இருக்கும் என்ற கவலையில்தான் அவளுக்கு உதவ நினைத்தேன்.

உங்களிடம் ஒரு வார்த்தை அவளைப் பற்றிச் சொல்லியிருந்தால் நீங்கள் அவளது காதலை நிறைவேற்றி வைத்திருப்பீர்கள்.

ஆனால் அத்தான்.. அவளைக் காட்டிக் கொடுத்து விடக்கூடாது என்று நான் நினைத்தேன்.. நட்பு என்பது நம்பிக்கையையும் ரகசியத்தையும் காப்பாற்றுவது.

அந்த நட்பிற்கு உண்மையாக நான் இருந்தேன். அவள் இருக்கவில்லை. அவளும் என்னைப் புரிந்துகொள்ளவில்லை.

என் அம்மா அடிக்கடி சொல்வார்கள்..

'ஒரு வார்த்தை வெல்லும்.. ஒரு வார்த்தை கொல்லும்..' என்று.

உங்கள் வாயிலிருந்த வந்த வார்த்தைகள் என்னைக் கொன்று தின்றுவிட்டன.

அப்படியிருந்தும் ஏன்.. நான் அந்த இரவில் உங்களிடம் அடைக்கலமானேன் என்று கேட்கிறீர்களா?

நீங்கள் சொன்னீர்கள் அத்தான்.. என் கற்பை நான்

காப்பாற்றிக் கொண்டது வேறு ஒருவனை மணந்து கொள் ளும் தகுதிக்காக என்று..

அந்தத் தகுதி எனக்கு வேண்டாம்.. என் மனதோடு.. உடலும்.. உங்கள் ஒருவருக்கு மட்டுமே சொந்தம் என்று அறிவுறுத்தவே நான் அதைச் செய்தேன்.

மாலினி உங்களை விட்டு பிரிந்து வந்திருப்பது.. வேறு ஒருவனை மணந்துகொள்வதற்காக இல்லை அத்தான்.

நீங்கள் அப்படியும் நினைத்து பேசி விடுகிற ஆள் தான்.

நான் பிரிந்து வந்திருக்கிறேன்.. நீங்கள் பேசிய வார்த்தைகளை மறந்து உங்களோடு வாழ என்னால் ஒரு போதும் முடியாது என்பதற்காக நான் பிரிந்து வந்திருக் கிறேன்.

உங்களுடைய சகோதரனை.. என் சகோதரனாக நான் நினைத்திருந்தும் 'நீ அவனுக்கும் நூல் விட்டாயா?' என்று கேட்டீர்கள் ஒரு கேள்வி.

அந்தக் கேள்வியைத் தாங்க முடியாமல் பிரிந்து வந்திருக்கிறேன்.

பவித்ராவின் கேள்வியில் நியாயம் இருக்கிறது என்று சொன்னவர்.. என் விளக்கத்திலும் ஒரு நியாயம் இருக்கும் என்று நினைக்காமல் போனீர்களே. அந்த அநியாயத்தைத் தட்டிக் கேட்க முடியாமல் பிரிந்து வந்திருக்கிறேன்.

என்னால் உங்களின் நிம்மதி போய்விட்டதாகச் சொன்னீர்கள். இல்லை அத்தான்.. ஒருபோதும் என்னால் உங்களுடைய நிம்மதி பறிபோய் விடாது. நான் உருவாக்கி வைத்த சிக்கலை நானே முடிவுக்குக் கொண்டு வந்து விட்டுத்தான் பிரிந்து வந்திருக்கிறேன்.

தினகரன் உங்களின் தம்பி அத்தான். அவன் ஒரு போதும் உங்களைத் தவறாக நினைத்துவிடக்கூடாது.



உங்களிடம் பயமும்.. மரியாதையும்.. மதிப்பும் வைத்திருப் பவன் அவன். அவனிடம் போய் நீங்கள் விளக்கம் சொல் வதா? ஒரு நாளும் அப்படி ஒரு நிலைமை உங்களுக்கு வர நான் விடமாட்டேன்.

அவனிடம் நான் சொல்லிவிட்டேன் அத்தான். எதை நான் செய்யவில்லையென்று.. நீங்களும் பவித்ராவும் என்னைக் கேள்வி கேட்டீர்களோ.. அதை நான் செய்து முடித்துவிட்டேன்.

என் மனதில் அவன் இல்லையென்பதை உணர்த்தி விட்டேன். உங்கள் பெயரைச் சொல்லவில்லை. ஏனென் றால், உங்களின் வாழ்க்கை என்னோடு முடிந்து போய்விடக் கூடாது. நீங்கள் வேறு ஒரு பெண்ணைத் திருமணம் செய்து கொண்டு சந்தோஷமாக வாழ வேண்டும்.

அதனால் நான் ஒருவரை உயிருக்குயிராய் காத லிக்கிறேன் என்பதாக சொல்லிவிட்டேன். தினகரன் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார். பவித்ராவும் அதையே தான் செய்தாள். இனி இவர்கள் இருவரும் உங்களிடம் கேள்வி கேட்க மாட்டார்கள்.

நான் உங்கள் வீட்டில் காலடி வைத்தபோது உங்கள் வீடு எப்படியிருந்ததோ.. அதே சூழ்நிலையை மீண்டும் உருவாக்கிவிட்டுத்தான் நான் பிரிந்து வந்திருக்கிறேன்.

என்ன ஒன்று.. தினகரனையும் பவித்ராவையும் பழைய குணங்களோடு மாற்றிவிட்டு வந்திருக்கும் நான் தான் நானாக இல்லாமல் போய்விட்டேன்.

என் நினைவுகளின் மிச்சம் மீதிகளை உங்களது நெஞ்சத்திலிருந்து தூக்கி எறிந்து விடுங்கள். உங்கள் வீடு.. உங்கள் குடும்பம்.. உங்கள் சகோதர.. சகோதரிகள்.. உங்களின் உறவினர்கள்.. என்று உங்களைச் சார்ந்த அனைத்துமே பழைய கட்டுக்கோப்புடன் இருக்கிறது. இனி

அதன் அடிப்படைகளை மாற்றி அமைக்க மாலினி வர மாட்டாள்.

கண்ணதாசனின் சினிமா பாடல் ஒன்று உண்டு..

*எல்லோரும் நலம் வாழ..*
*நான் பாடுவேன்..*
*நான் வாழ யார் பாடுவார்..?*
*என் பாடல் நான் பாட..*
*பலர் ஆடுவார்..*
*இனி என்னோடு யார் ஆடுவார்..?*

உங்கள் வீட்டில் நான் இருந்த நாள்களில் நிகழ்ந்தவைகளுக்காக என்னை மன்னித்து விடுங்கள். மாலினி இருக்கும் இடத்தில் கலகலப்புதான் இருக்கும். சலசலப்பு இருக்காது. முதன்முதலாக அது ஆரம்பித்தது உங்கள் வீட்டில்தான்.

அதையும் நான் சரிசெய்துவிட்டுத்தான் பிரிந்து வந்திருக்கிறேன்.

உங்களுக்கு என் மேலிருக்கும் அன்பின் மேல் ஆணையிட்டு கேட்கிறேன். தயவுசெய்து என்னை இனி மேல் தொந்தரவு செய்யாதீர்கள். என்னைப் பெண் கேட்டு வருவது.. என்னைப் பின்தொடர்ந்து வற்புறுத்துவது.. இது எதுவும் வேண்டாம்.. நான் விலகி வந்துவிட்டேன். நீங்களும் அதைப் போல விலகிப் போய்விடுங்கள்.

சிறுவயதிலிருந்தே எனக்கொரு சாபம் உண்டு அத்தான். நான் அதிகமாக எதை நேசித்தாலும் அது என்னிடமிருந்து விலகிப் போய்விடும். அப்படியொரு வரம் வாங்கி பிறந்தவள் நான்.

ஒன்றை வேண்டாமென்று நினைத்து தள்ளி வைத்து விட்டால்.. மாலினி ஆயுளுக்கும் அதை திரும்பிப் பார்க்க மாட்டாள். இது உங்களுக்கு தெரியாமல் போய்விட்டது.



உங்களைப் போன்ற ஒருவரை என் வாழ்வில் நான் சந்தித்தேன் என்பதே எனக்குப் போதும். குட் பை!

- மாலினி.'

ஒரு முறைக்கு பல முறை அந்தக் கடிதத்தைப் படித்துப் பார்த்த பிரபாகரனின் விழிகள் சிவந்து போயின. அவன் உன்மத்தம் பிடித்தவன் போல வீட்டை நோக்கி காரை ஓட்டினான்.




*எல்லோருக்கும் எளிதாக கிடைக்கின்ற எதுவும்...*
*என்னிடத்தில் மட்டும் அரிதாகி விடுவதையே...*
*என்னவென்று நான் சொல்ல..?*

கண்மூடி வேண்டி நின்றாள் மாலினி. தீபாராதனை ஒளியில் மலர் கண்கள் சிரிக்க.. இதழ்களில் குறுஞ்சிரிப்பு இழையோட.. அவளது மனப் போராட்டத்தை அறிந்தும் அறியாதவன் போல அந்த மணிவண்ணன் சிரித்துக் கொண்டிருந்தான்.

'ஏன் படைத்தாய் பெருமாளே.. இப்படியொரு வரத்தை கொடுத்து ஏன் என்னைப் பிறக்க வைத்தாய்.. இன்னும் எத்தனை நாள்கள்தான் நான் இந்தத் துயரத்தைப் படுவேன். ஒன்று, கொடுக்காதே. கொடுத்துவிட்டால் பிரிக்காதே. நீ எளிதாக சொல்லிவிட்டாய்.. எல்லாமே மாயைதான் என்று. எதை நான் மாயையாக எடுத்துக் கொள்ள... என்னைச் சுற்றிப் பரந்திருக்கும் இந்த உலகத்தில் இன்னும் எத்தனை காலம்தான் நான் அன்பைத் தேடி அலைவேன்... இந்தத் தேடுதலுக்கு ஒரு முடிவே கிடையாதா..'

''குங்குமம் வாங்கிக்கோங்க...''

அர்ச்சகரின் குரலில் கண் விழித்தவள் கை நீட்டி குங்குமத்தை வாங்கி நெற்றியில் இட்டுக் கொண்டாள். சந்நிதியைப் பார்த்தாள். மூலஸ்தானத்தில் அவளுடைய தோழனாக அவள் மனதில் விரித்துக் கொண்டிருக்கும் கமலக்கண்ணன் சிரித்துக் கொண்டிருந்தான். அவனது புன்னகையில் எப்போதும் மயங்குவதைப் போல இப்போதும் மனம் மயங்கினாள்.

'சிரிக்கிறாயா கண்ணா.. சிரி.. என் வேதனையைக் கண்டு உனக்கு சிரிப்பு வருகிறது. என் கண்ணீர் துடைக்க உனக்கு மனமில்லை. நான் எந்த வகையில் குறைந்து போய்விட்டேன் கண்ணா.. ஏனிந்த ஏமாற்றம் விடாமல் என்னைத் துரத்துகிறது?'

பிராகாரத்தைச் சுற்றி வலம் வரும்போது.. கடந்து போன மனிதர்களின் மத்தியில் பிரபாகரன் அவளது கண் களுக்குத் தெரிவதை போல இருந்தது.

அவசரமாக விழி கசக்கி.. கூட்டத்தின் மத்தியில் அவன் முகம் தேடினாள். அவன் இல்லை. அவள் மனம் வெறுமையானது.

'பிரமை..' மனம் வெதும்பியவளாக பிராகாரத்தை சுற்றி வலம் வந்தாள்.

*'சுகத்தில் விருப்பும்*
*துன்பத்தில்...*
*துயரம் இன்றி*
*அனைத்திலுமே...*
*அபிமானங்கள்*
*இல்லாத...*
*ஆன்றோன் ஞானம்*
*பெறுவானே...'*



சிறு வயதில் பள்ளியில் பாடிய பகவத் கீதையின் சாராம்ச பாடல் மனதில் ஒலிக்க.. மனம் கனக்க.. மெல்லடி வைத்து நடந்தாள் மாலினி.

'யாரால் முடியும்? சந்தோஷத்தையும் துன்பத்தை யும் தவிர்த்து எதனாலும் பாதிக்கப்படாமல் எந்த மனித ஜீவனால் இருக்க முடியும்?'

அவளைக் கடந்து ஓடிய சிறுமியின் குண்டுக் கன்னங்கள் அவளை வசீகரித்தன. அவள் தன் குழந்தைப் பிராயத்தை நினைத்துக் கொண்டாள். கவலைகளற்ற வயது... அந்த வயது திரும்பவும் வராதா என்றிருந்தது அவளுக்கு.

முன்னால் போனவனின் பின்புறத் தோற்றத்தைப் பார்க்கும்போது அச்சு அசலாய் பிரபாகரனைப் போலவே இருக்க.. அவள் நடையில் வேகத்தைக் கூட்டினாள். அவன் பிராகாரத்தின் பின்புறம் மறைந்துவிட.. ஓடிப்போய் எட்டிப் பார்த்தாள். அவன் இல்லை.

'எங்கெங்கு பார்த்தாலும் சிவசக்தி என்பதைப் போல.. இவன் ஏன் எங்கு பார்த்தாலும் என்முன் தோன்றுகிறான்...' அவள் மனம் சோர்ந்தாள்.

'யாதுமாகி நின்றாய்...' அவள் உடல் தளர.. பிராகாரத் தின் சுற்றுச்சுவரில் சாய்ந்து கண்களை மூடிக்கொண் டாள்.

நினைக்கக்கூடாது என்று நினைத்துவிட்டால் மனம் நினைவுகளின்றிப் போய்விடுமா.. என்ன? வானத்தைக் கூட வசப்படுத்திவிடலாம். மனத்தை தன்வசப்படுத்திக் கொள்வது ஒரு மனித ஜீவனால் இயல்கின்ற காரியமா?

*'நில்லென்று சொன்னால் மனம்..*
*நின்றா போகும்?'*

திரையிசைப் பாடலின் வரிகள் மனதில் ஒலிக்க.. நடையைத் தொடர்ந்தாள் மாலினி.

'ஏன் என்னை இப்படி ஆட்டிப்படைக்கிறாய் பெருமாளே? சந்தோஷத்தில் இன்பம் அடையாமல்.. துன்பத்தில் துயரம் அடையாமல் யாரால் இருக்க இயலும்? எனக்கும் மனம் இருக்கிறது. அதற்கு உயிரும் உணர்வும் இருந்து தொலைக்கிறது. எல்லாவற்றையும் சமமாக பாவிக்க என்னால் எப்படி முடியும்? நான் என்ன சித்தரா? சந்நியாசியா? இல்லையே...'

பிராகாரத்தை வலம் வந்தவள் அதற்கு மேல் நடக்க முடியாமல் கோயில் பிராகாரத்தின் தூணில் சாய்ந்து அமர்ந்தாள். தூரத்தில் தெரிந்த தூணில் சாய்ந்து கொண்டு பிரபாகரன் நின்றிருப்பதைப் போல் தெரிந்தது. அவசரமாக விழியுயர்த்தி பார்வையைக் கூர்மையாக்கிப் பார்த்தாள். அவன் இல்லை.. வெறும் தூணதான் இருந்தது.

'எனக்கு பைத்தியம்தான் பிடித்துவிட்டது..' அவள் மனதில் கூறிக்கொண்டாள்.

'மனுஷியாக இருந்து தொலைக்கிறேனே.. பைத்தியம் பிடிக்காமல் என்ன செய்யும்?'

பிராகாரத்தின் சுவரில் தீட்டப்பட்டிருந்த ஓவியம் அவளது கருத்தைக் கவர்ந்தது.

குருக்ஷேத்திர யுத்த களத்தில்.. படைகளின் மத்தியில் வில்லைக் கீழே போட்டுவிட்டு கரம் குவித்து மண்டியிட்டு பார்த்திபன் வணங்கிக் கொண்டிருக்கிறான்.. புரவிகள் பூட்டிய தேரின் அருகே வலக்கரத்தை உயர்த்தி அவனுக்கு ஆசியளித்து கீதோபதேசம் பண்ணியவாறு மயிலிறகைச் சூடிய கிருஷ்ணன் நின்றுகொண்டிருக்கிறான்.

'காண்டீபன் கொடுத்து வைத்தவன்..' கீதோபதேச ஓவியத்தை பார்த்தவாறு மாலினி மனதிற்குள் பொறாமைப் பட்டாள்.

'இப்படியொரு நட்பு யாருக்குக் கிடைக்கும்.. எண்ணங்களைப் பகிர்ந்துகொள்வதில் இருந்து துன்பத்தில்



சாய்ந்து கொள்ள தோள் கொடுப்பது வரை எல்லாமுமாக கண்ணன் அவனுக்கு இருக்கும் பாக்கியத்தைப் பெற்ற பாக்கியசாலியல்லவா இவன்.. 'நீயேன் கவலைப்படுகிறாய்.. உன்னை வழிநடத்த நானிருக்கிறேன் என்று வழிகாட்டிய கண்ணனின் நட்பு கிடைக்கும் பேறு பெற்றவனல்லவா அவன்..'

மாலினியின் விழிகளில் நீர் சுரந்தது. அவள் பவித்ராவை நினைத்துக் கொண்டாள்.

'எனக்கு மட்டும் ஏன் அந்த உண்மையான எண்ணங்களைப் பகிர்ந்துகொள்ளும்... தோள் கொடுக்கும் நட்பு கிடைக்கவில்லை?' அவள் மனம் கேள்வி கேட்டது.

பவித்ராவைப் பற்றிய நினைவுகளில் தன் டைரியில் எழுதிய கவிதையை நினைத்துப் பார்த்தாள் மாலினி.

*'நான் தேடிய நட்பு...*
*வள்ளுவரின் குறள் வாய்ப்பாடல்...*
*வாய்த்ததெல்லாம்*
*புருட்டன் இனம்...*
*இவ்வுலகின் முடிவேயின்றி...*
*நான் தேடும் நட்பு..'*

அவளது பார்வை.. மீண்டும் கீதோபதேச ஓவியத்தின் மீது படிந்தது. அவள் மனம் அர்ஜுனனாக ஆசைப்பட்டது.

'பேராசை..' அவளது இதழ்களில் துயரப் புன்முறுவல் மலர்ந்தது. மனம் அவசரக் கவிதையை இதயத்தின் தாள்களில் எழுதியது.

*'என் ஆசையென்னவோ...*
*அர்ஜுனன் ஆக...*
*உன் அனுமதியின் எல்லையோ..*
*நான் துரியோதனன் போல..'*

அவள் கண்மூடி தூணில் சாய்ந்து கொண்டாள். அவள் முன்னால் யாரோ வந்து நிற்பதைப் போல இருந்தது. அவள் விழி திறக்கவில்லை.

''முடிகிறதா.. உன்னால் முடிகிறதா?'' என்ற குரல் கேட்டது.

'இது.. இது.. பிரபாகரனின் குரல் அல்லவா?' அவள் திடுக்கிட்டு கண்விழித்தாள்.

பக்கத்தில் அவன் அமர்ந்திருந்தான். ஒருவேளை பிரமையாக இருக்குமோ என்று கண்கசக்கிப் பார்த்தாள். அவனேதான். அவளையே ஊடுருவிப் பார்க்கும் பார்வையோடு அசையாமல் அவன் அமர்ந்திருந்தான்.

''என்னடி பார்க்கிற.. பிரமைன்னா? அப்படித்தானே இத்தனை நேரமும் நினைச்சுக்கிட்டு இருந்த? என்னை உன் கண் தேடுச்சே.. எதுக்குடி? பிரிந்து வந்துட்ட இல்ல.. மறந்து உன்னால் இருக்க முடியுதா?''

மாலினி இதழ் கடித்து தன் உணர்வுகளைக் கட்டுப் படுத்திக் கொண்டாள்.

''உன் வேலை உனக்கு வேண்டாம்.. என் வீடு உனக்கு வேண்டாம்.. நான் கூடவா உனக்கு வேண்டாம்? என்னை நினைக்காமல் உன்னால் இருந்துவிட முடியுமாடி.. எத்தனை ஜென்மம் எடுத்தாலும் அது உன்னால் முடியாது..''

மாலினி முகம் திருப்பிக் கொண்டாள். தன்னை அவன் கண்டுகொண்டு விட்டானே என்ற தவிப்பு அவளுள் எழுந்தது.

''நான் என் அம்மாவுடன் உன்னைப் பெண் கேட்டு உன் வீட்டுக்கு வரக்கூடாதுன்னு எழுதியிருக்கிறாய். ஓகே. வரவில்லை. உன்னைப் பின்தொடரக்கூடாதுன்னு எழுதியிருக்கிறாய். இப்போதும் பின்தொடர்ந்து வர வில்லை. பேசிவிட்டுப் போக வந்தேன். இனி பின்தொடர மாட்டேன். நீ சொன்ன வார்த்தைகளை நான் மீற மாட்



டேன். ஆனால்.. என்னை இன்னொருத்திக்குக் கல்யாணம் பண்ணிக் கொள்ளச் சொல்லி சொன்னாயே.. அதை என் ஆயுள் உள்ளவரைக்கும் செய்ய மாட்டேன். ஒன்றை வேண்டாமென்று விலக்கி வைத்துவிட்டால்.. அதை ஆயுளுக்கும் திரும்பிப் பார்க்காமல் இருப்பது உன் குண மாக இருக்கலாம். ஆனால், ஒன்றை வேண்டுமென்று நினைத்துவிட்டால் அதை ஆயுளுக்கும் நிலைத்து நிற்கச் செய்வது என் குணம். நான் ஏகபத்தினி விரதன். தாலி ஊருக்காக கட்டுவது. உன் மனதறிய நீ என் பெண்டாட்டி யாகி விட்டாய். என்னுடன் வாழ்ந்து விட்டாய். இப்போது விலகி நீ வந்துவிட்டால் அன்றைக்கு நடந்தது இல்லை யென்று ஆகிவிடுமா?''

மாலினியின் முகத்தில் வெட்கச் சிரிப்பு குங்குமமாக பரவியது. அதை சொந்தத்துடன் பார்த்தபடி அவன் தொடர்ந்து சொன்னான்.

''மீதியிருக்கும் வாழ்க்கையை நீ என்னிடம் திரும்பி வந்தால் வாழ்கிறேன். இல்லையென்றால் அந்த ஒரு நாள் வாழ்க்கையே எனக்குப் போதும். உன்னைத் தொட்ட இந்த விரல்கள் இன்னொருத்தியைத் தொடாது. நான் பிரபாகரன். ஆண்சிங்கம். என்னால் மாலினிங்கிற பெண் சிங்கத்தோடுதான் வாழ முடியும்..''

இதற்குப் பதிலை என்னவென்று மாலினி சொல் வாள்? அவள் மௌனித்தாள்.

''நீயில்லாத அந்த வீட்டில் எனக்கு மட்டும் என்ன வேலை? நானும் போகிறேன்..''

மாலினி அதிர்ந்து விழித்தாள். அவனைக் கேள்வி யாக நோக்கினாள்.

''நியூயார்க்கில் என் நண்பன் தொழில் தொடங்கப் போகிறான். என்னையும் அதில் பார்ட்னராகிக் கொள்ளச் சொல்லி ரொம்ப நாளாக நச்சரிக்கிறான். நான்தான் குடும்பப்

பொறுப்பை விட்டுவிட்டு வெளிநாட்டுக்கு ஓடுவதா என்று யோசித்துக் கொண்டிருந்தேன். இப்போது என் சம்மதத்தை என் நண்பனிடம் சொல்லிவிட்டேன்..''

''அப்போ.. உங்க வீடு.. அத்தை.. காயத்ரி... இதையெல்லாம் யார் பார்த்துக்குவாங்க?'' முதன்முதலாக வாய் திறந்தாள் மாலினி.

பிரபாகரனின் கண்கள் மின்னின. அவன் பார்வை கூர்மையாகியது..

''இதைப் பற்றி உனக்கென்ன கவலை? சொல்லாமல் கொள்ளாமல் ஓடிவந்தவள் இதைப் பற்றியெல்லாம் கேட்கக்கூடாது. ஏய்ய்.. நான் உன் புருஷன்டி.. உன்னைக் கேள்வி கேட்க எனக்கு உரிமையில்லையா?''

''அதுக்காக எதைக் கேட்பது என்ற அளவுகோலில்லையா?''

''புருஷன்.. பெண்டாட்டிக்குள் எந்த அளவுகோலும் இல்லை..''

''நீங்க வாய்க்கு வந்ததைக் கேட்பீங்க.. நான் கேட்டுக்கொண்டிருக்கணுமா?''

''ஆமாண்டி.. அவன் என் கண் முன்னாலேயே உன்னைக் கண்ணம்மா என்பான்.. என்னடான்னு கேட்டால்.. என்னை மாலினி நடுராத்திரியில் தோட்டத்திற்கு வரச் சொல்லி காதல் கடிதம் கொடுத்தாள்ம்பான். அதை ஏன்னு உன்கிட்ட நான் கேட்டுவிடக்கூடாது. அந்த பவித்ரா, உன் காதலி.. என் காதலனை பிடுங்கிக்கறான்னு கம்ப்ளெயிண்ட் பண்ணுவாள். அவளுக்கெல்லாம் போய் பாவப்படுகிறாயேன்னு உன்னை திட்டிவிடக்கூடாது. உடனே வேலையை ரிசைன் பண்ணிவிட்டு வீட்டை விட்டு வந்துவிடுவாய்.. உன்னைப் பிரிந்து வந்துவிட்டேன். மறந்து வந்துவிட்டேன். துறந்து வந்துவிட்டேன்னு பக்கம் பக்கமாய் வரைந்து பிரிவுக் கடிதம் எழுதி அனுப்பி வைப்பாய். சும்மா சொல்லக்



கூடாதுடி. உன் கையில் தமிழ் கொஞ்சி விளையாடுது. என்ன ஒண்ணு.. அதை ஆக்கப்பூர்வமாக பயன்படுத்துவதை விட்டுவிட்டு.. நம் காதலை அழிக்கிறதுக்கு பயன்படுத்தப் பார்க்கிறாய்?''

''பிரபா.. வேண்டாம்.. என் கோபத்தை கேலி பண்ணாதீங்க?''

''அடச்சை.. வாயை மூடு.. நீ பண்ணி வைத்த வேலைக்கு கௌதம புத்தனுக்கே கோபம் வந்திருக்கும். எனக்கு வராதா.. நல்லவேளை.. என் சொந்தக்காரப் பயலுக எல்லாம் பயந்த ஆளுக.. ராத்திரி நேரத்தில் தண்ணீர் இருக்குமிடத்தில் பேய் உலாவும்னு நீச்சல்குளத்துக்குப் பக்கத்தில் வரலை.. அதனால் நம்ம மானம்.. மரியாதை பிழைச்சுச்சு. எவனுக்காவது தைரியம் வந்து.. தோட்டத்துக்குப் பக்கத்தில் வந்திருந்தால்.. அங்கே நடந்த நாடகத்துக்கு இந்நேரம்.. நான் கட்டிக் காப்பாற்றி வைத்திருந்த கோட்டையூர் ஜமீன் வம்சத்தின் மானம்.. காற்றில் பறந்திருக்கும்..''

மாலினி தலையில் கைவைத்துக் கொண்டு குனிந்து கொண்டாள்.

''நான் போகிறேன்.. இனி உன் வழிக்கு வர மாட்டேன்.. உன்னை மறக்கவும் மாட்டேன்..''

பிரபாகரன் போய்விட்டான். மாலினி அசைவற்று அமர்ந்திருந்தாள்.




தேடி வந்த கண்ணனின் பின்னாலே
ஓடிச் சென்ற ராதையின் மனதையே...
என்னவென்று நான் சொல்ல..?

இரவு முழுவதும் தூங்காமல் விழித்துவிட்டு.. விடியற்காலையில் அயர்ந்து உறங்கிக் கொண்டிருந்த மாலினியை காவேரி எழுப்பினாள்.

''தூக்கம் வருதும்மா..'' மாலினி கண் திறக்காமல் சிணுங்கினாள்.

''அதுதான் வேலையை விட்டுவிட்டு வந்துட்டயே.. நினைச்ச நேரமெல்லாம் தூங்கிப் பொழுதைக் கழிக்கலாம். இப்ப எழுந்து வா.. தூக்கம் எங்கேயும் ஓடிப்போய் விடாது. அதை மெதுவாய்.. அப்புறமாய்.. தூங்கிக்கலாம்..''

''இப்பவே எழுந்து நான் என்ன செய்யப் போகிறேன்?''

''நீ ஒண்ணும் வெட்டி முறிக்க வேண்டாம்.. சசி வந்திருக்கிறாள். எழுந்து வா..''

மாலினியின் தூக்கம் பறந்துவிட்டது. அவள் அவசரமாக எழுந்து கட்டிலில் அமர்ந்தாள். அதற்குள் அறைக்கதவைத் திறந்து கொண்டு சசிரேகா உள்ளே வந்தாள். அவள் விழிகள் மாலினியை குற்றம்சாட்டின.. காவேரி குறிப்பறிந்தவளாக வெளியேறி விட்டாள்.

''சசிதான் வந்திருக்கிறேன்.. என்னை உனக்கு நினைவிருக்கில்ல?''

''என்னடி சசி.. இப்படியெல்லாம் பேசுகிற?''

''நீ செய்து வைத்திருக்கும் வேலைக்கு உன்னைக் கொஞ்ச சொல்கிறாயா? உனக்கு நான் என்னடி கெடுதல் பண்ணினேன். ஏன் என் வாழ்க்கையோடு விளையாடிப் பார்க்கிறாய்.. இதுக்குத்தான் மார்த்தாண்டத்திற்கு தேடி வந்தாயா?''

''நீ ஒருத்திதான் பாக்கி. நீயும் எதையாவது பழியைத் தூக்கிப்போடு தாயே...''

''நீ உன்னைப் பற்றியே யோசி.. மற்றவங்களைப் பற்றி நினைத்துக்கூடப் பார்க்காதே. அவசரக்குடுக்கை. உன்னால் எனக்கு நிம்மதியே போச்சு..''

''எனக்கு வாழ்க்கையே போச்சு..''

''என் வீட்டு ஆள்களால் எப்பவுமே உனக்கு வாழ்க்கை போகாதுடிம்மா. உன்னால்தான் என் வீட்டின் சந்தோஷம் போகும். நீ வன்மம் பிடிச்சவடி..''

''என்ன நடந்ததுன்னு தெரியாமல் பேசாதே...''

''நீ சொன்னாயா.. எதையாவது என்னிடம் வாய் விட்டுச் சொன்னாயா? நீயும் அப்படித்தான்.. பெரியத்தானும் அப்படித்தான். உங்க மனதை வெளியில் சொல்லாமல் புதைத்து வைத்துக்கிட்டு உங்க இஷ்டம் போல ஆடிப் பார்க்கறீங்க. பெரியத்தான் வெளிநாடு போகிறார். போகிறதுக்கு முன்னால தினகரனுக்கும் பவித்ராவிற்கும் கல்யாணத்தை பண்ணி வைத்துவிட்டு போகணும்னு நினைக்கிறார். வீட்டில் எல்லோருக்கும் கல்யாணம் பண்ணி வைத்துவிட்டு அவர் தனிமரமாய் சொத்து சுகம் சொந்த பந்தத்தை விட்டுவிட்டு கண்காணாமல் போகட்டும்.. நீ உன் பிடிவாதத்தை பிடித்துக் கொண்டு தொங்கு. மன்னிக்கத் தெரிந்தவதாண்டி மனுஷி...''

சசிரேகா பொரிந்து தள்ள.. மாலினி.. ''சசி...'' என்று விம்மி அழுதாள்.

''நீயேண்டி அழுகறே.. அழவேண்டியவ நானு. இனி என்கூட பவித்ராவும் சேர்ந்துக்குவா. பெரியவர் தனிமரமாய் நிற்க.. குழந்தை பெற்றுக்கறது குற்றம்னு என் புருஷன் நினைப்பதை இப்பவே வாய்விட்டு தினகரன் சொல்லிட்டான். வேறு யாருக்காவது பவித்ராவைக் கட்டி வைத்து விடுவாங்கன்னுதான் அவ கழுத்தில் தாலியைக் கட்டப் போகிறானாம். சின்னவன் ஜொள்ளுதான் விடுவான். மத்தபடி.. அண்ணன்மார்களின் குணம் அப்படியே அவனிடமும் இருக்கும்..''

''இதெல்லாம் உன் வீட்டுப் பிரச்னை.. என்கிட்ட ஏண்டி சொல்கிற?''

''அறைஞ்சேன்னா... அத்தனை பல்லும் உதிர்ந்து விடும். என் பெரியத்தானை வீட்டை விட்டுத் துரத்தவா நீ ஊர்விட்டு ஊர் வந்த? அவர் என்னடி தப்பு பண்ணி னார்? கேப்டன் இல்லாத கப்பலின் கதிதான் நாளைக்கு என் குடும்பத்துக்கு வரப்போகுது. நீ நிம்மதியாய் எவனை யாவது கல்யாணம் பண்ணிக்கிட்டு குடித்தனம் நடத்து..''

''நான் கல்யாணமே பண்ணிக்கப் போறதில்லை..''

''அப்ப.. இந்த வீட்டின் நிம்மதியையும் குழிதோண்டிப் புதைக்கப் போகிறேன்னு சொல்லு. உன் அண்ணிகாரி நான் உள்ளே வரும்போதே ஒரு மார்க்கமாய் பார்த்தா. மார்த்தாண்டத்தில் என்ன நடந்தது.. ஏன் எங்க மாலினி வேலையை விட்டுவிட்டு வந்துவிட்டாள்னு என்கிட்டயே கேட்டா. அவ வாய்விட்டுக் கேட்டதை சித்தப்பாவும்.. சித்தியும் அண்ணனும் கண்களால் கேட்டாங்க. இப்ப நீ கல்யாணம் வேண்டாமுன்னு சொன்னா.. உன் அண்ணியே காவியம் பாடி.. ஊரெல்லாம் ஒலிபரப்புவா. அப்புறம் சித்தப்பாவும் சித்தியும் என்ன ஆவாங்களோ?''

''பயமுறுத்துகிறாயா?''

''இல்லைன்னு நான் சொல்லப் போவதில்லை. இப்ப நான் வந்தது வேறொன்றையும் உன்னிடம் சொல்லி விட்டுப் போகத்தான்..''

''என்னன்னு சொல்லித் தொலை..''

''பெரியத்தான் ஆக்ஸிடெண்டாகி ஹாஸ்பிட்டலில் கிடக்கிறார்..''

சசிரேகா கண்கள் இடுங்கக் கூற.. மாலினி பதறி எழுந்தாள். அவள் உடல் நடுங்கியது.

''என்னடி சொல்கிற.. பாவி.. இதைச் சொல்லாமல் இந்நேரம் வரைக்கும் கதையளந்தியே..''



''பொறு.. எதுக்கு இந்த குதி குதிக்கிறே. உனக்கு தகவல் சொல்லக்கூடாதுன்னு பெரியத்தான் கண்டிப்பா சொல்லிட்டார். நீ வந்தாலும் அவர் உன்னைப் பார்க்க மாட்டார்..''

''அதைச் சொல்ல நீ யாருடி. அவருக்கு என்ன ஆச்சு.. எப்படி ஆச்சு?''

''உன்னைப் பார்க்க சென்னைக்கு வந்துட்டு திரும்பிய மனிதர்.. கண் மண் தெரியாம காரை ஓட்டி யிருக்கிறார். ஆக்ஸிடெண்ட் ஆகியிருச்சு. இப்ப உனக்கு நிம்மதியா?''

''உன்னைக் கொன்றுவிடுவேன் சசி.. டாக்டர் என்ன சொல்கிறார்?''

''உயிருக்கு ஆபத்தில்லையாம். ஆனால் கை.. கால்.. தலைன்னு ஒரு இடம் விடாம அடிபட்டு கட்டுப் போட் டிருக்கு.. சாப்பாடு.. தண்ணியில்ல. குளுகோஸ் இறங்கிக் கிட்டு இருக்கு..''

''வாடி போகலாம்..'' மின்னல் வேகத்தில் மாலினி கிளம்ப.

''எங்கே.. கிளம்புகிறா?'' என்று அறைக்குள் காபி யுடன் வந்த காவேரி கேட்டாள்.

''என்கூடத்தான் சித்தி... மார்த்தாண்டம் வருகிறாள்..'', மாலினி அறியாமல் சசிரேகா கண் சமிக்ஞை செய்ய, காவேரி புரிந்துகொண்டு மௌனமாகிவிட்டாள்.

சசிரேகாவுடன் காரின் பின்ஸீட்டில் மாலினி அமர்ந்து கொள்ள, காரைக் கிளப்பினான் கருணாகரன். அப்போது தான் அவனைப் பார்த்த மாலினி ஆச்சரியத்துடன்...

''அத்தான்! நீங்க ஏன் வீட்டுக்குள் வரவில்லை?'' என்று கேட்டாள்.

''என் அண்ணன் இருக்கும் நிலையில் என்னால் மாமனார் வீட்டுக்குள் வந்து விருந்து சாப்பிட்டுக் கொண

டிருக்க முடியாது..'' கடினமான முகத்துடன் சொன்னான் கருணாகரன்.

''கேட்டுக்கடி பிசாசே.. இனி காலமெல்லாம் என் புருஷன் சிரிக்கக்கூட மாட்டார். என் அண்ணனே வெளி நாடு போயிட்டார். எனக்கு சிரிப்பு ஒரு கேடான்னு கேட்பார். நீ இருக்கும் இடத்தில் சிரிப்பிருக்குமே மாலினி.. இப்ப இப்படி என்னை அழ வச்சிட்டயே..''

சசி வராத கண்ணீரைத் துடைத்துக் கொள்ள, மாலினிக்குள் குற்ற உணர்வு எழுந்தது.

மார்த்தாண்டத்தின் பிரபலமான மருத்துவமனைக் குள் கார் சென்று நின்றது. மாலினி இறங்கி ஓடினாள். சசிரேகா பின்னால் தொடர்ந்தாள்.

''ரூம் நம்பர் இருபத்து நாலுடி..'' சசியின் குரல் காற்றில் வந்தது.

மாலினி இருபத்து நான்காம் எண் உள்ள அறையின் கதவைத் திறந்து கொண்டு உள்ளே ஓடினாள். கட்டிலில் கண் திறவாமல் உடலெல்லாம் கட்டுக்களோடு பிரபாகரன் படுத்திருந்தான். மாலினி அதிர்ந்து வாய் பொத்தி அழுதாள்.

''அத்தான்.. என் அத்தான்..'' என்று அவள் தலையில் அடித்துக் கொள்ள..

''பாட்டாடி பாடி வைக்கிற..'' என்று அவள் பின்னால் வந்த சசிரேகா கடுப்படித்தாள்..

''என்னைக் கொல்லாதே சசி.. என்னால்தானே இவருக்கு இந்த நிலைமை?''

''தெரிந்தால் சரி..'' சசிரேகா அறைக்கதவை மூடிக் கொண்டு சென்றுவிட்டாள்.

மாலினிக்கு பிரபாகரன் இருந்த நிலைமையைப் பார்த்து மனம் தாளவில்லை. உடலெல்லாம் கட்டுக்கள் போடப்பட்டிருக்க.. கட்டுக்கள் இல்லாத ஒரே இடமான



அவனது பாதங்களில் தலை வைத்து கதறியழ ஆரம் பித்தாள்.

''நான் பாவி அத்தான்.. உங்களை இந்தக் கதிக்கு ஆளாக்கி விட்டேன். நீர் அடித்து நீர் விலகுமா.. நீங்கள் அடித்தால் நான் விலகிப் போவதா.. காலமெல்லாம் உங்கள் காலடியில் கிடந்திருக்க வேண்டாமா.. நீங்கள் ஒரு சொல் சொன்னால் நான் என்ன குறைந்தா போய் விடுவேன்.. உங்களைத் தண்டித்துவிட்டேனே அத்தான். நீங்கள் அடிபட்டுக் கிடக்க.. நான் மட்டும் காயமில்லாமல் இருப்பதா? எனக்கும் இந்த வலியும் வேதனையும் வரட் டும்..''

மாலினி சுற்றுமுற்றும் பார்த்தாள். நீண்ட கைப்பிடி யோடு இருந்த கத்தி கையில் பட.. அதை எடுத்துக் கையை வெட்டிக் கொள்ளப் போனாள். கட்டுப்போடப்பட்டிருந்த பிரபாகரனின் கரம்.. அவளது கரத்தை இறுக்கிப் பிடித்து கத்தியை விழச் செய்தது. அவனது கை அவள் கையை சுண்டியிழுக்க.. அவள் அவனது மார்பில் விழுந்தாள். மறுகணம் அவனது இறுக்கிய அணைப்பில் கட்டுண்டாள். அவனது கரம் அவளை ஆக்டோபஸ் போல வளைக்க..

'அடிபட்டவனின் பிடியாக இது இல்லையே' என்ற சந்தேகம் அவளுக்கு வந்தது.

''அத்தான்..'' என்று அவள் நிமிர்ந்து பார்க்க..

''உன் அத்தான்தான்..'' என்று ஹெல்மெட்டைக் கழற்றுவதைப் போலத் தலையைச் சுற்றிப் போடப் பட்டிருந்த கட்டுக்களை.. தொப்பி போல கழட்டி வைத்துச் சிரித்தான் பிரபாகரன்.

''உடம்பில் இருக்கும் கட்டுக்கள்?'' மாலினி திகைக்க..

''இதோ அதையும் கழட்டிவிட்டால் போச்சு..'', இலகுவாகக் கூறியபடி.. சட்டையைக் கழற்றுவதைப் போல உடலைச் சுற்றியிருந்த கட்டுக்களில் இருந்து விடுபட்டு வெளியே வந்தான்.

''பார்த்துக்க.. உடம்பில் ஒரு கீறலும் இல்லை...'' பிரபாகரன் மீண்டும் அவளைத் தன்னிடம் இழுத்துக் கொண்டான்.

''அடப்பாவி.. ஹிட்லர்கூடப் பொய் சொல்வாரா?''

''காதல்னு வந்துவிட்டால் எல்லோரும் பொய் சொல் வாங்க..''

''அதுக்காக இப்படியா? என் உயிரே பறந்துருச்சு...''

''வேற என்னடி செய்யச் சொல்கிற... நீதான் பிடி வாதத்துக்கு பிறந்து தொலைச்சிட்டாயே. என்னைத் தேடி உன்னை வரவைக்கணும்னா எனக்கு வேறுவழி தெரி யலை..''

''வந்தவளுக்கு திருப்பிப் போக வழி தெரியாதா?''

''பொய்யாக நான் நடத்திய இந்த நாடகத்தை உண்மையாக நடத்திக் காட்ட எனக்குத் தெரியாதா.. நீ என்னை விட்டு விலகி ஓர் அடி எடுத்து வைத்தாலும்.. என் உயிர் என் உடலில் தங்காது. அப்புறம்.. உன் இஷ்டம்..''

''ஐயோ..'' மாலினி பதறி அவனது வாயைப் பொத்தி னாள். அவனது வாயை மூடியிருந்த அவளது உள்ளங் கையில் அவன் முத்தம் பதித்தான்.

''நான் தோற்றுவிட்டேன்..'' அவன் மார்பில் முகம் புதைத்தாள் மாலினி.

''ஊஹூம்... என்னை ஜெயித்துவிட்டாய்...'' அவளது இதழில் இதழ் பதித்தான் பிரபாகரன்..

(பாகம் - 3-ல் தொடரும்)

